# TRENCH'S NOTES

ON THE

# MIRACLES OF OUR LORD.

ADAPTED TO THE USE OF TAMIL CHRISTIANS.

First

BY

THE Rev. J. CORNELIUS, C. M. S.

Second Edition, 1,000—Total Copies, 2,000.

MADRAS:

THE RELIGIOUS TRACT AND BOOK SOCIETY.

C. K. S. PRESS, VEPERY.

1884.

நமது இரட்சகர் செய்த

# அற்புதங்களின் வியாக்கியானம்.

"குருடரின் கண்கள் திறக்கப்பட்டு, செவிடரின் செவிகள் திறவுண்டுபோம்; முடவன் மானைப்போல் குதிப்பான்; ஊமையன் நாவும் கெம்பீரிக்கும்." ஏசா. 35. 5, 6.

"அவர் எல்லாவற்றையும் நன்றாய்ச் செய்தார்; செவிடர் கேட்கவும், ஊமையர் பேசவும் பண்ணுகிறார் என்று சொல்லி, மேன்மேலும் ஆச்சரியப்பட்டார்கள்." மாற். 7. 37.

சேன்னபட்டணம்:
சன்மார்க்கப் புத்தகச் சங்கத்தாருக்காக
கி. க. அ. சங்கத்தாரது அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

௧௮௮௪.

# INTRODUCTION.

The following pages contain a free translation into Tamil of Trench's Notes on the Miracles. The two disciples who were going to Emmaus, in the intercourse they had with each other by the way, spoke of our Lord as "a prophet mighty in deed and word before God and all the people." That He was truly mighty in deed is apparent from the miracles which He performed, while that He was mighty in word will be evident from the parables He uttered. That it is absolutely necessary for all Christians to be fully acquainted with our Lord's Miracles and Parables, will not in the least be questioned. I have therefore endeavoured to give the substance of Trench's work on the Miracles, with the hope, that should this attempt meet with favour from the Native Christian Community, of following it with his other work on the Parables,* if the Lord graciously continue to bless me with the health and strength I may require.

I shall greatly rejoice if the perusal of these pages will, in any measure, conduce to make Him whose name is Wonderful, precious in the eyes of His people. That the great Head of the Church may in mercy condescend to bless this humble effort to glorify Him and benefit His Church in South India is my earnest wish and prayer.

JOSEPH CORNELIUS.

*Paneiadipatti,*
*June 24th*, 1870.

* Afterwards published.

# முகவுரை.

அன்புக்குரிய சுதேச கிறிஸ்தவர்களே!

இயேசுரக்ஷகர் வாக்கிலுஞ் செய்கையிலும் வல்லமையுள்ள தீர்க்கதரிசியாயிருந்தாரென்று, எம்மாவு என்கிற கிராமத்துக்குப் போகிற சீஷர்கள் வழியிலே பேசிக்கொண்டபடி, அவர் செய்த அற்புதங்களினாலே செய்கையில் அவர் வல்லபசாலியென்பதும், அவர் சொல்லிய உவமைகளாலே வாக்கில் வல்லவரென்பதும் நன்றாய்த் திருஷ்டாந்தப்படும். ஆகையினாலே சுவிசேஷங்களிலுள்ள அற்புதங்களையும் உவமைகளையும் கிறிஸ்தவர்கள் கூலாங்கிஷமாய் அறிந்திருக்கவேண்டியதவசியம். இதற்கு ஏதுகரமாக, ஒரு சாஸ்திரியார் இங்கிலிஷ் பாஷையில் எழுதியிருக்கிற இந்தப் பெயருடைய நூலை கொஞ்சங்கொஞ்சமாய்த் தமிழ்ப்படுத்தி, அதைப் பாளையங்கோட்டையில் மாதாந்தரம் பிரசுரஞ்செய்து வரப்பட்ட நற்போதகம் என்கிற பத்திரிகையில் காலக்கிரமமாய் அச்சிட்டுவர அது தேவகடாட்சத்தால் முற்றுப்பெற்றதுபற்றி தற்காலம் அதை ஒரு புஸ்தகமாக அமைக்க எண்ணினதில், சென்னைச் சன்மார்க்கப் புத்தகச் சங்கத்தார் அதைக் கையேந்திக்கொண்டதினால், சர்வத்திராளுக்குஞ் சந்துஷ்டியுண்டாகுமென்று நம்புகிறேன்.

முதல்நூலிலிருக்கிறபிரகாரம் இதைப் பாஷாந்தரப்படுத்தாமல், தமிழ்கிறிஸ்தவர்களுக்கு உபயோகமாயிருக்கத்தக்கதாக சிலதைக் கூட்டியும், சிலதைக் குறைத்தும், சிலதை மாற்றியும், சிலதை மறுத்தும் இந்தப் புஸ்தகம் சமைத்திருக்கிறது. அற்புதத்தைக் கிறிஸ்துமார்க்க உதாரண பீடிகையாய்க் காட்டவேண்டுமென்பது இதன் நோக்கமல்ல; பக்தி விளைகிறதற்காக அற்புதங்களின் பூராயங்களைத் தெளிய விளக்கி, விசுவாசம் ஸ்திரமடையச்செய்வதே இதன் நோக்கம். ஆனபோதிலும், இதற்கு முதலில் வைத்திருக்கிற அற்புத லட்சணாத்தியாயத்தில் சில நுண்மையான குறிப்புகள் கண்டிருக்கிறதினாலே, அவைகளைக்கொண்டு எவ்வளவாய் எவ்விதமாய் அற்புதங்களை உபயோகப்படுத்திக்கொள்ளலாகுமென்று அறிய ஏதுவுண்டு.

இதுநிற்க, சுதேசஸ்தருடைய ஆத்துமநன்மையை விரும்புகிற சகல பெரியோர்களும், பாஷைலட்சணந்தெரிந்த அறிவாளிகளும் இந்த முயற்சியை அவமதியாமல், இதில் காணும் குற்றங்குறைகளைக் கொண்டு பொறுத்து, சமயம் வாய்க்கும்போதெல்லாம் அவைகளைத் தெரியப்படுத்துவார்களானால், இன்னும் அதிக பிரயோஜனமுண்டாவதற்கு வழியாகும். சுவாமி ஜீவனோடு வைத்திருந்தால் உவமைவியாக்கியானமுஞ் செய்யலாம் என்று எண்ணியிருக்கிறேன்.

இந்தப் புஸ்தகத்தை வாசிக்கிற பேர்கள் பிசாசின் அந்தகாரத்தை விட்டு நீங்கி, ஜகத்ரட்சகருடைய பாதம்வந்தடைந்து, பேரின்பபாக்கியத்தைப் பெறும்படி தேவாசீர்வாதத்தைக் கோரிநிற்கிற

உங்கள் உத்தம சிநேகிதன்,

J. CORNELIUS.

*Paneiadipatti,*
*June* 24, 1870.

# பொருள் அட்டவணை.

## அற்புதங்களின் லட்சணவியாக்கியானம்.



## அற்புதங்கள்.

# அற்புதவியாக்கியானம்.

## கிறிஸ்து செய்த அற்புதங்களின் லட்சணவியாக்கியானம்.

## 1. அதிகாரம்.

### அற்புதங்களுக்கிருக்கப்பட்ட பெயர்கள்.

ஒரு பொருளின் தன்மையை அறியவேண்டுமானால் அதற்கிருக்கிற பெயர்களை விசாரணைசெய்யவேண்டும்; அப்போதுதான் பொருளின் தன்மை விளங்கும். அப்படிச் செய்யாவிட்டால், அதைத் திட்டமாய் அறிந்துகொள்ளக்கூடாது. அதுவே இந்தக் காரியத்திற்கும் ஏற்கும். ஒரேபெயரைக் கொண்டு இதின் தன்மையை அறிந்துகொள்வது அசாத்தியமானபடியால் இதற்கும் பல பெயர்களை வழங்கியிருக்கிறது. இவைகள் ஒவ்வொன்றும் அததற்குரிய விசேஷித்த இலக்ஷணத்தைக் காண்பிக்குமாதலால் இந்தப் பெயர்களெல்லாவற்றையும் ஒன்றாய்ச் சம்பந்தப்படுத்திப் பார்த்தால்தான் இதினுடைய தன்மை முழுவதும் அறியலாம். அதிசயங்களென்று நாம் சொல்லிக்கொள்ளுகிறவைகள் வேதவாக்கியங்களில் அற்புதங்களென்றும், அடையாளங்களென்றும், வல்லமைகளென்றும், கிரியைகளென்றும் சொல்லியிருக்கிறது. இவைகளோடே இன்னும் சில பெயர்களுமுண்டு. அவைகள் ஏகதேசம் வருகிறதானபடியால் அவைகளை மேற்கண்ட பெயர்களில் ஏதோடேயாவது சம்பந்தப்படுத்திக்கொள்ளலாம்.

அற்புதங்களின் லட்சணவிசேஷங்களைப் பார்க்குமுன் இதைச் சார்ந்த பெயர்கள் ஒவ்வொன்றினுடைய தாற்பரியத்தையும் சற்றே விஸ்தரிப்பது நல்லது.

1. **அற்புத ஆச்சரியம்.** இதில் அற்புதமாகிய காரணத்தாலுண்டாகும் காரியம் வெளிப்படுகிறது. அற்புதங்களைப் பார்க்கிறவர்கள் ஆச்சரியப்படுவார்கள். இரட்சகர் செய்த அற்புதங்களைக் கண்ட சனங்களும் ஆச்சரியப்பட்டதாகவே வாசிக்கிறோம் (மாற். 2. 12; 4. 41; 6. 51; 7. 37. அப். 3. 10, 11.). அற்புதங்களைக் காண்கிறதினால் ஆச்சரியம் பிறக்கிறது. இந்த ஆச்சரியம் மாத்திரமே அற்புதத்தினால் கண்ட பலனாயிருக்குமானால், அப்போது சன்மார்க்க சம்பந்தமாயுள்ள சபலம் அபத்தமாய்ப்போகும். மற்றவர்களை ஆச்சரியப்படும்படி செய்விக்கிறதற்காகவேயானால், எத்தனையோ அல்ப சொல்ப காரணங்களைக்கொண்டு அதை நடப்பிக்கலாமே. இவ்விடத்தில் ஆச்சரியமென்று திருப்பியிருக்கும் கிரேக்கை வார்த்தை ஒருபோதும் தனியே வழங்காமல் மற்றப் பெயர்களோடே சேர்ந்து, அடையாளங்கள் 'அற்புதங்கள்' என்று வருகிறது அப். 14. 3. ரோ. 15. 19. மத். 24. 24. எபி. 2. 4. அடையாளம் என்று திருப்பியிருக்கும் சொல் யோவா. 2. 11. அப். 8. 6. வெளி. 3. 13. வாக்கியங்களில் தனியேயும், வல்லமைகள் என்று திருப்பியிருக்கும் வார்த்தை மாற். 6. 14. அப். 19. 11. இவைகளில் தனிப்படவும் வந்தாலும், ஆச்சரியம் அல்லது அற்புதமென்று திருப்பியிருக்கும் வார்த்தையோ, தனியே வருகிறதேயில்லை. அற்புதங்களை அதிசயச்செய்கையாய் எண்ணிக்கொள்ளும் விசேஷம் மாத்திரமேயல்ல, இப்படிப்பட்ட அதிசயங்களைப் பார்க்கிறது பிரக்கினையற்ற மாதிரியான அசமந்த மனோதத்துவங்களை அருட்டிவிடுவதாயுமிருக்கிறது. இப்படித் திடுக்கிடப்பண்ணுவதினால் ஆத்துமாவுக்குரிய நன்மை நேரே உண்டாகாவிட்டாலும், ஆத்துமவிசேஷங்களை அவதானமாய்க் கேட்கிறதற்கு மனுஷர்களை எழுப்பிவிடுகிறதில் குறைச்சலில்லை. (அப். 14. 8—18.)

2. அற்புதம் ஒரு அதிசயம் மாத்திரமல்ல, அடையாளமாயும் இருக்கிறது. தேவனே கூடியிருந்து கிரியைசெய்கிறார் என்பதை இது மெய்ப்பிக்கிறது. ஞானார்த்தமான தன்மையும் போதனையும் இதினால் அதிகமாய் வெளியாகிறது. மனுஷரால் முடியாதவைகளென்பதற்கு இவைகள் அடையாளங்கள் (எசா. 7. 11; 38. 7; 7. 8.). அடையாளங்கள் என்பதில் அத்தனை விசேஷமில்லையென்றபோதிலும் அவைகளை நடப்பிக்கிறவருடைய தயவையும் வல்லமையையும் அவைகள் உணர்த்துகிறதினாலும், மேலுலகத்தோடு அவர் இவ்விதம் சம்பந்தப்பட்டிருக்கிறாரென்பதை வெளியரங்கப்படுத்துகிறதினாலும் அடையாளங்கள் மிகவும் பிரயோசனமுள்ளவைகளே. இவைகள், இவைகளைச் செய்கிற பேருடைய வல்லமைக்கு முத்திரையாயும் இருக்கிறது. தேவன் அவர்களுடனே கூடிக் கிரியைசெய்து அவர்களால் நடந்த அற்புதங்களினால் (அடையாளங்களென்று திருப்பவேண்டும்.) அவர்களுடைய வசனத்தை உறுதிப்படுத்தினார் (மாற். 16. 20. அப். 14. 3. எபி. 2. 4.). மேலும் தேவ அதிகாரம்பெற்றவனென்று சொல்லிக்கொள்ளுகிறவனுடைய செய்கைகளை இவைகளே மெய்யென்று ருசுப்படுத்துகிறது. இந்த அருத்தமே பின்வரும் வாக்கியங்களில் காணும். இயேசு தாம் செய்கிறவைகளை விசேஷ வல்லமையினால் செய்கிறேனென்று மெய்ப்பிக்கவேணுமென்கிற நோக்கமாய், யூதர்கள் இயேசுவானவரைப் பார்த்து, இதற்கு என்ன அடையாளத்தைக் காண்பிக்கிறீர் என்று கேட்டார்கள் (யோவா. 2. 18.); உம்மால் ஒரு அடையாளத்தைக் காண விரும்புகிறோம் என்றார்கள் (மத். 12. 38.). வானத்திலிருந்து ஒரு அடையாளத்தைத் தங்களுக்குக் காண்பிக்கவேண்டும் என்றார்கள் (மத். 16. 1.). பவுலும் தன்னிடத்தில் அப்போஸ்தல அந்தஸ்துக்குரிய அடையாளங்கள் அல்லது தான் அப்போஸ்தலனென்று ரூபிக்கத்தக்க குறிப்புகள் இருந்ததாகச் சொல்லுகிறான் (2 கொரி. 12. 12.). பழைய எற்பாட்டின் காலத்திலும் தேவன் இஸ்ரவேலரை விடுவிக்கும்படி மோசேயை அனுப்பினபோது பார்வோன்

அடையாளங்களைக் கேட்பானென்று சொல்லி, தான் தேவ உத்தரவுபெற்று வந்தவனென்பதை ரூபிக்க இரண்டு அடையாளங்களைச் செய்துகாட்டும்படியான வரங்கொடுத்து அனுப்பினார் (யாத். 7. 9, 10.). யெரொபெயாமுடைய தன்னிஷ்ட ஆராதனையைக் கண்டிக்கும்படி ஒரு தீர்க்கதரிசியை அனுப்புவித்தபோது தேவன் அவனுக்கும் ஒரு அடையாளங் கொடுத்தார். (1 இரா. 13. 3.)

இப்பேர்ப்பட்ட அடையாளம் எப்போதும் அற்புதமாய் இருக்கவேண்டுமென்கிற அவசியமில்லை. அற்புதமாகிய அடையாளத்தைக்குறித்தே நாம் பார்க்கிறபடியால் ஒருவன் ஏதாவது ஒன்றைச் சொல்லும்போது, அது உண்மைதானென்று ரூபிக்கும்படியாக ஒரு அடையாளமாவது ஒரு முத்திரையாவது காண்பிக்கவேண்டியதுண்டு. அப்படிப்பட்ட அடையாளம் நிசமானதாயிருக்குமேயானால் அதினால் குறிக்கப்பட்ட காரியமும் தப்பாமல் நிறைவேறுமென்று அறிந்துகொள்ளலாம். தேவதூதர்கள் மேய்ப்பர்களுக்கு பிள்ளை துணிகளில் சுற்றி முன்னணையில் கிடத்தியிருப்பதை அடையாளம் என்று சொன்னார்கள் (லூக். 2. 12. யாத். 3. 12.). தேவன் சவுலை இஸ்ரவேலின்மேல் இராசாவாக்கினாரென்று காட்டும்படி சாமுவேல் அவனுக்கு மூன்று அடையாளங்களைக் கொடுத்தபோதிலும், மூன்றாவதுமாத்திரமே அற்புதமென்று சொல்லத்தக்கது (1 சாமு. 10. 1—9.). தீர்க்கதரிசியானவன் ஏலியின் வீட்டாருக்குக் கூறின தண்டனை நடந்தேறுமென்று குறிக்கும்படி அவனுடைய இரண்டுமக்களும் ஒரேநாளில் சாவார்கள் என்னும் அடையாளத்தைக் கொடுத்தான் (1 சாமு. 2. 34. எரே. 44. 29.). கிதெயோன் செயமடைவான் என்று காட்டும்படி தேவன் அவனுக்கு மீதியானியரின் பாளையத்தில் ஓரடையாளந் தந்தரர் (நியா. 7. 9—15. 2 இரா. 7. 2, 17—20.). தேவ ஆவேசத்தினால் நடத்தப்படுகிறேனென்று எண்ணிக்கொள்ளுகிற ஒரு மனுஷன் தனக்கு அடையாளத்தைத் தானாக ஏற்படுத்திக்கொண்டு அதினாலே தேவசித்தத்தை அறிந்துகொள்ளுகிறதுமுண்டு. இதற்கு திருஷ்டாந்

திரம் ஆதி. 24. 14. நியா. 6. 36—40. 1 சாமு. 14. 8—13. இவைகளே.

3. அற்புதங்களே வல்லமைகள், பலத்தகிரியைகள் என்று சொல்வதுண்டு. அதிசயம் என்னும் வார்த்தையில் அற்புதத்திலாகிய காரியம் வெளிக்காணுகிறதுபோல வல்லமை என்னும் வார்த்தையில் அற்புதத்தின் காரணம் துலாம்பரப்படுகிறது. அற்புதத்தினால் தேவனுடைய மகிமை வெளியரங்கமாகிறபடியால், அதற்கேற்ற வேறு சில பேர்களுமுண்டு (லூக். 13. 17. யோவா. 2. 11; 11. 40. மாற். 2. 12. லூக். 1. 49. மூலபாஷையில் காண்க.) இவ்வித வல்லமையையே தேவன் தாம் அனுப்புகிற பேர்களுக்கு வரப்பிரசாதமாய் அருளுகிறார் (அப். 6. 38. ரோ. 15. 18.). சீமோன் தன்னை தேவனுடைய பெரிதான சக்தியென்று சொல்லிக்கொள்ளும்படி இடங்கொடுத்தது கொடிய தேவதூஷணம். இந்தப் பெயர் சரியானபடிக்கு இரட்சகருக்குமாத்திரமே பொருந்தியது (அப். 8. 10.). ஆகிலும் இது அந்த வல்லமை வெளிப்படும் வகையையும் சில இடங்களில் குறிக்கும். இந்த வார்த்தை இவ்விதம் வழங்கப்படுவதுமல்லாமல், அநேக அற்புதங்கள் அல்லது அதிசயங்கள் என்றும் (மத். 7. 22. 1 கொரி. 12. 10, 28. கலா. 3. 5.), பலத்த செய்கைகள் என்றும் (மத். 11. 20. மாற். 6. 14. லூக். 10. 13. அப். 2. 22.), விசேஷித்த அற்புதங்களென்றும், அப். 19. 11. எபி. 2. 4ல் அடையாளங்கள், அற்புதங்கள், பலவித பலத்தசெய்கைகள் என்றும் பன்மையில் கண்டிருக்கிறது. நாம் இருக்கிற இந்த உலகத்தில் ஏதோ ஒரு புதுவல்லமை பிரவேசித்து கிரியை செய்கிற கருத்து இதில் அமைந்திருக்கிறது.

இதுவரையில் நாம் கவனித்துவந்த இந்த மூன்றுவார்த்தைகளும் ஒரேநிரையாய் வராதிருந்தும் மூன்று இடங்களில் ஒன்றுசேர்ந்தே வருகிறது (அப். 2. 22. 1 கொரி. 11. 12. 2 தெச. 2. 9.). இந்த வாக்கியங்களிலிருப்பவை வெவ்வேறு வகையான இரண்டு கிரியைகளையல்ல, ஒரே கிரியையின் வெவ்வேறு தன்மையைக் காண்பிக்கிறது. பின்னெடுத்துச்

சொல்லும் அற்புதம் இந்த மூன்று வார்த்தைகளின் வித்தியாசத்தை துலாம்பரப்படுத்துகிறதுமல்லாமல், ஒரே அற்புதத்தில் இந்த மூன்றும் எப்படிச் சேர்ந்திருக்கிறதென்பதையும் திருஷ்டாந்தரப்படுத்தும் (மாற். 2. 1—12.). இரட்சகர் ஒரு திமிர்வாதக்காரனைக் குணமாக்கினது, இது ஒரு அதிசயம்; ஏனெனில் சகலரும் இதைப்பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். மேலும் இது ஒரு வல்லமை; எப்படியென்றால் இரட்சகர் ஒரேயொரு வார்த்தை சொன்னவுடனே அவன் எழுந்திருந்து தன் படுக்கையை எடுத்துக்கொண்டு எல்லாரும் பார்க்க நடந்து போனான். பின்னும் இது ஒரு அடையாளம்; ஏனென்றால் மனுஷனுக்கு மேற்பட்ட ஒருவர் அங்கே இருந்தாரென்றும், பூமியிலே பாவங்களை மன்னிக்க மனிதகுமாரனுக்கு அதிகாரம் உண்டென்றும் இதினால் துலங்கிற்று. (2 இரா. 1. 10. 1 இரா. 13. 3.)

4. அற்புதங்களை யோவான் சுவிசேஷகன் **கிரியைகள்** என்று சொல்லியிருக்கிறான் (யோவா. 5. 36; 7. 21; 10. 25, 32, 38; 14. 11, 12; 15. 24. மத். 11. 2ஐயும் பார்.). எபி. 3. 9ல் பழைய ஏற்பாட்டின் காலத்து அற்புதங்களும் கிரியைகளென்று கண்டிருக்கிறது. தேவனிடத்தில் சகலமும் நிறைவாய் வாசமாயிருக்கிறபடியால், அவர் செய்த ஆச்சரியங்கள் யோவானுடைய எண்ணிக்கைக்கு தேவனுடைய சகஜமான கிரியைகள்போலத்தான் இருந்தது. தேவன் மேலானவராயிருக்கக்கொள்ள அவருடைய கிரியைகளும் மனிதருடைய செய்கைகளுக்கு மேற்பட்டவைகள்தானே. தேவனிடத்திலிருந்து வெளிப்பட்டதெதுவோ, அதுவெல்லாம் ஆச்சரியமாய்த்தான் இருந்தது. தேவன் மனுஷஅவதாரமெடுத்ததே பெரிய ஆச்சரியமல்லவோ? மற்றவைகளுக்குக் கேட்கவாவேணும்? அதிலிருந்தே மற்றதெல்லாம் உற்பத்தியாயிற்றென்று சட்டமாய்ச் சொல்லலாம். அதிசயமானவர் என்னும் பேருடையவர் அதிசயங்களைச் செய்வது ஒரு அதிசயமா? அப்படிப்பட்டவர் அதிசயஞ்செய்யாமலிருந்தாலோ மெத்த ஆச்சரியமாயிருக்கும் (எசா. 9. 6.). சூரியனாகப்பட்டது ஆகாசவெளி

யில் நின்றுகொண்டு கதிர்களின் மூலமாய் வெளிச்சத்தையும், காங்கையையும் வீசுகிறது ஒரு ஆச்சரியமல்ல, அது ஆகாசத்தில் நின்றுவதே வெகு ஆச்சரியம். தேவதாரத்துக்குச் சமானமாகும் திவ்ய விருட்சத்திலிருந்து காய்க்கிற கனியாகிய இந்த அற்புதங்களை அடைமொழி சேர்க்காமல், ஒன்றுங் கூட்டாமல் கிரியைகள் என்றுமாத்திரம் சொல்லுகிறதுதான் மிகவும் தகுதி. யோவான் 17-ம் அதிகாரம் 4-ம் வசனத்தில் கிரியைகள் என்று சொல்லியிருப்பதில் அற்புதங்களை மாத்திரமல்ல, கிறிஸ்து செய்த சகல கிரியைகளையும் அடக்கி யோவான் பேசுகிறாரென்று சில வியாக்கியானிகள் உத்தேசிக்கிறார்கள். ஒருமைப்போங்காய் அந்த அருத்தங் கொண்டபோதைக்கும் பன்மையாயோ அற்புதங்களையே குறிக்குமென்று சட்டமாய்ச் சொல்லலாம்.

அற்புதங்களைக் குறிக்கப் பல சொற்கள் வழங்கியிருப்பதுபோல அதோடு சம்பந்தப்பட்ட அர்த்தமாய் சில வினைச்சொற்களும் வழங்குவதுண்டு. அவைகளைச் சுவிசேஷகர் வழங்கும் விதத்திலும் வித்தியாசங் காணலாம் (மத். 12. 3, 9; 24. 24. மாற். 8. 12. மத். 7. 22; 13. 58. மாற். 9. 39. யோவா. 2. 11; 3. 2; 4. 54. அப். 7. 36; 15. 12. வெளி. 13. 3; 19. 20. யோவா. 2. 18.). புதுத் திருப்புதலிலும் ஒரே கிரேக்கைமொழிக்கு ஒரே தமிழ்மொழியை வழங்காதிருக்குங் குறைவினால் யதார்த்தப்பொருள் விளங்காததால் மேற்கண்ட வாக்கியங்களை மூலபாஷையில் பார்த்து ஆராயவேண்டும்.



## 2. அதிகாரம்.

### அற்புதங்களுக்கும் பிரபஞ்ச இயல்புக்குமுள்ள வித்தியாசம்.



உலகத்திலே சகஜமாய் நடக்கிற சம்பவங்களுக்கும் அற்புதத்திற்குமிருக்கிற வித்தியாசம் இன்னதென்று பார்ப்போம்.

உலக இயற்கையும் வெகு அதிசயமாய்த்தானே இருக்கிறது. அது திரும்பத்திரும்ப மாறிமாறி நடக்கிறதையிட்டு நமக்கு வழக்கமான காரியமாய்ப் போகிறது. அடிக்கடி பார்த்துவருவதினால் அதுகளை நாம் அதிசயமாய் எண்ணாதேபோனபோதிலும், அது அதிசயமாயிருப்பதற்குக் குறைச்சலில்லை. சிலபேர் "உலகத்தில் நடக்கிறதெல்லாம் அதிசயந்தானே. புல் தழைக்கிறதும், விதை முளைக்கிறதும், சூரியன் உதிக்கிறதும், சகஜமாய் நடக்கிற காரியமாயிருந்தாலும், அவைகளும் தண்ணீர் இரசமாக மாறுகிறதையும், வியாதி ஒரு வார்த்தையினால் சுகமாகிறதையும், கண்ணைத் தொட்டுப் பார்வையளிக்கிறதையும்போல அதிசயந்தான். நம்மைச் சூழ்ந்திருக்கப்பட்டதெல்லாம் அதிசயமாயிருக்க, அவைகளினின்று சிலதைமாத்திரம் பிரித்து இவைகள்தான் அதிசயம், மற்றது இயல்பானதென்று சொல்வது சரியேயல்ல. சொன்னால் எல்லாம் அற்புதந்தான் என்று சொல்லவேண்டும். இல்லாவிட்டால் அற்புதமென்பதே இல்லையென்று சொல்லவேண்டும்" என்கிறார்கள்.

இப்படிப் பேசுவது பார்க்கிற அளவுக்கு நியாயம்போலத் தோன்றினாலும் முழுவதுஞ் சரியென்று கொள்ளக்கூடாது. இவ்விரண்டினுடைய தன்மையையும் அததின் நோக்கத்தையும் கவனித்தால் இரண்டிற்கும் மெத்த வித்தியாசம் உண்டு என்று காண்போம். "அற்புதகாரணத்தில் தேவன் தாமே கிரியைசெய்கிறார். மற்றமற்றக் காரணங்களோ அவர் ஏற்படுத்திய பிரமாணங்களின்படியே நடந்துவருகிறது" என்பதும் உள்ளபடியான வித்தியாசமல்ல. இப்படிச் சொல்லுகிற பேர்கள் ஏதோ ஒரு சூத்திரதன்மையாய் லோகம் நடத்தப்படுகிறது என்கிறவர்களைப்போல் இருக்கிறார்கள். இவ்விதமாய்ச் சொல்வது சரியல்லவே. எப்படியென்றால், கடிகாரஞ்செய்கிறவன் அதைச் செய்தபின் வைத்துவிடுகிறான். கப்பல் செய்கிறவன் கப்பலைச்செய்து முடித்துப்போட்டபின் வேறே பேர்கள் அதைக் கடலில் ஓட்டுகிறார்கள். இத்தன்மையாக தேவன் உலகமாகிய சூத்திரத்தை உண்டாக்கி, பிறகு அதன் பாட்டுக்கு விட்டு, சில சில வேளைகளில்மாத்திரம் அதைப்

பழுதுபார்த்துவருகிறார் என்று சொல்லவே கூடாது. நம்முடைய இரட்சகர் 'என் பிதா இதுவரைக்கும் கிரியைசெய்து வருகிறார், நானும் கிரியைசெய்து வருகிறேன்' என்றாரே (யோவா. 5. 17.). 'சருவத்தையும் தமது வல்லமையுள்ள வசனத்தினாலே தாங்குகிறவர்' என்றுஞ் சொல்லியிருக்கிறது (எபி. 1. 3.). தேவனுடைய பிரமாணம் என்று சொல்லும்போது இயற்கைப்பிரமாணம் என்கிற வசந்தை விகாரமாய்த் தோன்றி யதார்த்தபொருளை நம்மைவிட்டு மறைத்துவிடுகிறது. மனுஷராகிய நமக்குத்தான் அது பிரமாணமாகும். தேவனுக்கோ அது பிரமாணமல்ல, அது சித்தம். அவர் அன்பும், ஞானமும் நிறைவாகரமுமாய் இருக்கப்பட்டவரானபடியால், வேணுமென்று அவர் பிடிவாதமாய்ச் செய்கிறவரல்ல. திருஉளத்தின்படியே நடக்கட்டும் என்று நாம் சகலத்தையும் அவருடைய சித்தத்திற்கு ஒப்புக்கொடுக்கலாம். இதுவரையில் அவருடைய சித்தத்தின்படி நடந்துவந்த காரியங்களைப் பார்க்கையில் இனி நடக்கப்போகிறதையும் நிதானிக்கலாம். இவ்விதமாய் அவருடைய சித்தம் நமக்கு ஒரு பிரமாணமானாலும் ஒவ்வொரு நிமிஷமும் அதையே தேவசித்தம் என்று சொல்லவேண்டும். இயற்கைப்பிரமாணம் என்று சொல்வதெல்லாம் உள்ளபடி இவ்வகையான தேவசித்தந்தான். வழக்க சம்பவங்களில் இருக்கிறதைக் காட்டிலும் அற்புதகாரணத்தில் தேவசித்தம் உபரியாயிருக்கிறதென்று சொல்வதுஞ் சரியான காரியமல்ல. அப்படிச் சொல்லப்போனால் உலகத்தை ஒரு சூத்திரத்துக்குச் சமானமாக்குகிறோம். எல்லாம் அதிசயமாயிருக்கிறபடியால், இயல்பாய் அற்புதத்தில் விளங்குகிற தேவமகிமையும் சாதாரணமாய் நடக்கிறவைகளில் விளங்குகிறதுபோல்தான் என்று சொல்லாதேபோனாலும், இதின் உள்ளடக்கமாயிருக்கும் விசேஷித்த சத்தியத்தை மறுக்கப்படாது. பார்க்கிறதற்குச் சகலமும் அதிசயந்தான். செத்தவனை உயிர்கொடுத்து எழுப்புவதைப்போலவே ஒரு மனுஷனை உண்டாக்குவதும் பெரிய ஆச்சரியம். இரட்சகர் கைபட்ட அப்பம் கொடுக்க கொடுக்க வளர்ந்துகொண்டு வந்ததுபோலவே உழவுசால் பட்ட ஒரு

வித்து ஆயிரமணிகளாவதும் ஆச்சரியமே. ஆனதால் லோக இயற்கையில் தேவமகிமை வெளிப்படுகிறதிலும் அற்புதகாரணங்களின்மேல் மிச்சமாய் வெளிப்படுகிறதென்று கொள்ளாமல், அதில் வெளிப்படுகிறவிதம் வேருயிருக்கிறதென்று மாத்திரஞ் சொல்லவேண்டும். இயற்கையாய் நடந்துவருகிற சம்பவங்களின்மூலமாய் தேவன் எந்தக்காலத்திலும் உலகத்து மனிதரோடு பேசிவருகிருர்; தம்மைக்குறித்து விவரமாய்த் தெரியப்படுத்துகிருர். காணப்படாதவைகளாகிய அவருடைய நித்தியவல்லமை, தேவத்துவம் என்பவைகள் உண்டாக்கப்பட்டிருக்கிறவைகளிஞலே தெளிவாய் அறியப்படும். இப்படி இயற்கைப்பிரமாணத்தைக்கொண்டு `எக்காலத்திலும் எல்லாத் தேசங்களிலும் இருந்துவருகிற சகல மனிதரோடும் பேசுகிருர் என்பதிஞலேயே இதின் குறிப்பான நோக்கம் தப்பியும் போகும். இதிஞல் ஒருவனைக்காட்டிலும் இன்னெருவன் தேவனுக்கு அதிகப் பிரியமானவனென்ருவது, அவர் ஒருவன் வார்த்தையைவிட இன்னெருவன் வார்த்தையை அதிகமாய் உறுதிப்படுத்துகிருரென்ருவது, ஒருவனுடைய மனச்சாக்ஷியில் படுகிறதைவிட இன்னெருவன் மனச்சாக்ஷியில் அதிகமாய்ப் படுகிறதென்ருவது சொல்ல ஏதுவில்லை. இயற்கைப் பிரமாணம் எவ்வளவோ பிரயோசனகரமாயிருந்தாலும், விசேஷதன்மையான பயன் எவ்வளவேனும் அதிலே காணுகிறதில்லை. அற்புதமோ சிலபேர்மாத்திரம் பார்க்கச் செய்யப்படுகிறபடியால், அவர்களோடே மாத்திரம் தேவன் பேசுகிறதுபோலும், இவர்களை மற்றவர்களிலிருந்து அலாதியாய்ப் பிரித்து இவர்களுக்குமாத்திரம் விசேஷித்து ஏதோ ஒரு காரியம் செய்கிறதுபோலும் காணுகிறது. மேலும் இவர்கள் அவதானித்துக்கொள்ளவேண்டிய ஒரு விசேஷம் உண்டென்ருவது, இவர்கள் ஒப்புக்கொள்ளவேண்டிய போதனை இருக்கிறதென்ருவது இதின்மூலமாய்க் கர்த்தர் அவர்களுக்கு உணர்த்துவதுபோலும் இருக்கிறது.

வழக்கமான சம்பவங்களில் காணுகிறதிலும் அற்புதங்களில் விசேஷித்த தேவவல்லமை காணப்படுவதுந்தவிர, இதற்கு

முன் வெளியரங்கமாகாத வல்லமையும் வெளிப்படுகிறதென்று சொல்லலாம். மற்றமற்றக் காலங்களில் இயற்கைப்பிரமாணத்திற்குள் சுருண்டு முடங்கி மறைந்துகிடந்த அந்த வல்லமை அற்புதத்திலே வெளிப்பட்டு இதோ வல்லமையைப் பார் என்று கைநீட்டிக் காட்டுகிறதுபோலிருக்கிறது. ஆனாலும் இந்த வல்லமை மேலான இன்னொருவரிடத்திலிருந்து தோன்றுகிறதென்று காண்கிறதில்லை. அற்புதம் மேலான நோக்கங்களைக் கருதியே செய்யப்படுகிறதென்றுமாத்திரம் சொல்வதேயன்றி வேறல்ல. இவ்விதமாய் அற்புதம் ஒரு நூதனகாரியமே என்றாலும், இயற்கையான சம்பவங்கூட காலத்தின் கோளாறினாலும், சம்பவம் நிறைவேற்றப்பட்ட நோக்கத்தினாலும் நமக்கொரு அற்புதமாகலாம். ஆனபோதிலும் இயற்கையென்று சொல்லுகிற எதையும் உள்ளபடி அற்புதமென்று சொல்லவே கூடாது. மனுஷர்களுடைய சீவிய விருத்தாந்தங்களிலும் தேவனுடைய இராச்சியத்துக்குரிய மேலான விஷயங்களிலும் நேரிடும் அநேககாரியங்கள் ஒன்றுக்கொன்று சம்பந்தப்படாதவைகளாயிருந்தும், ஒரேநோக்கத்தை முடிக்கும்படிக்கு அவையெல்லாம் ஒன்றாய் நேர்ந்து சம்பவிக்கிறதைப் பார்க்கையில், அதுகள் இயல்பாய் நடக்கத்தக்கவைகள்தான் என்று நாம் சொல்லிப்போட்டாலும், முடிவைப் பார்க்கிறபோது தெய்வச்செயலால் ஆனகாரியமென்றே சொல்லுகிறோம். இயல்பான காரணங்களை ஒட்டி அவைகள் நடக்க ஏதுகரமிருந்தபடியாலும், அந்தக் காரணங்களோடு அவைகள் சம்பந்தப்பட்டிருப்பதினாலும் அந்தக் காரியங்களை அற்புதங்களென்று சொல்லக்கூடாதே போனாலும் அவைகள் நடந்தகாரணத்தையும், அவைகளால் வந்த முடிவையும் பார்க்கையில், ஆச்சரியமாகத் தோன்றுவது நிஜமே. அது உள்ளபடி ஆச்சரியமல்ல; அதைக் கவனிக்கிற நமக்கோ அது ஆச்சரியம். திருஷ்டாந்தரமாய், எகிப்திலுண்டான வாதைகளில் அநேகம் அத்தேசத்தில் இயற்கையாய் நடக்கத்தக்கவைகளே. அவைகள் அதிக கொடூரமாயும், மிகவும் பயங்கரமாயும் உண்டானதென்கிறதொன்றேயொழிய, மற்றப்படி அவைகளில் விசேஷமில்லை. திரளான ஈக்கூட்

டங்கள் மொலேரென எகிப்தெங்கும் மொய்த்ததும், வெட்டுக்கிளிகள் விழுந்து நிலத்தின் பலனை அழித்ததும், கோமாரி கண்டு மிருகங்கள் செத்ததும் அத்தேசத்தில் நடவாத ஆச்சரியமல்ல; அவைகள் இயற்கையிலே நடக்கக்கூடியவைகள்தான். ஆயினும் அவைகளில் உண்டாயிருந்த பயங்கரமும், அவைகள் ஒன்றின்பின் ஒன்று சரமாரியாய்த் தொடுத்துவந்ததும், மோசே சொன்ன சொற்படியே அதுகள் சம்பவித்ததும், அவைகளின் மூலமாய் இஸ்ரவேல் சனங்கள் பார்வோனுடைய கொடுமைக்குத் தப்பித்துக்கொண்டதும், அந்த வாதைகள் வந்துபோன ஒழுங்கும், ஆகிய இவைகளெல்லாவற்றையும் சீர்தூக்கிப் பார்க்கிறபொழுது இவைகளை எகிப்தில் நடந்த அடையாளங்களென்றும் அற்புதங்களென்றும் சட்டமாய்ச் சொல்லலாம் (சங். 78. 48. அப். 7. 36.). மீன்வாயிலிருந்து நாணயமெடுக்கிறதும் (மத். 17. 27.), சிங்கம் ஒரு மனுஷனைக் கண்டு கொல்லுகிறதும் (1 இரா. 13. 24.), அகாலமழையும் பெருங்காற்றும் உண்டாவதும் (1 சாமு. 12. 16—19.) இயற்கையாய் ஆச்சரியமல்லதான். ஆனால் விசுவாசத்தை ஸ்திரப்படுத்துகிறதற்கும், கீழ்ப்படியாமையைக் கண்டிக்கிறதற்கும், மெய்ம்மனஸ்தாபத்தை எழுப்பிவிடுகிறதற்குமான ஏற்ற சமயத்திலே செய்யப்பட்டு அவைகளால் தேவஆளுகைக்குரிய மேலான நோக்கங்கள் நிறைவேறுகிறதாய்க் காணுகிறபோது, அவைகளை இயல்பாய் நடக்கிறவைகள்தானே என்று உத்தேசியாமல், திட்டமாய் அற்புதமென்றே கொள்ளவேண்டும். இரட்சகருடைய சீவிய சரித்திரத்தில் கண்டிருக்கிற ஆச்சரியமான நடபடிக்கைகள் தற்செயலாய் நடந்தவைகளென்று சொல்லுகிறவர்களுமுண்டு. தற்செயலாய் நடக்கிறது ஒரு விசை இரண்டுவிசைக்கு இருக்கலாம். வாய்ச்சொல் வாயிலிருந்து பிறக்கிறபோதெல்லாம் இப்படிப்பட்ட ஆச்சரியங்கள் சம்பவிக்கிறது தற்செயலேயல்ல, தேவவல்லமையே என்று சொல்லவேண்டும். நடந்த ஒவ்வொரு காரியமும் இரட்சகர் உரைத்த வார்த்தையை ஊர்ஜிதப்படுத்திற்று. இதினால் திவ்விய வல்லமையோடு சம்பந்தப்பட்ட அற்புதசெய்கை காணு

விட்டாலும், நடக்கப்போகிறதை முன்னறியும் சக்தியாகிய தீர்க்கதரிசன சம்பந்தமான அற்புதவாக்கை இது ரூபிக்கத்தக்கது. தேவன் உலகத்தை ஆண்டுவருகிறார். வல்லமையோடு மாத்திரமல்ல, ஞானத்தோடும் நீதியோடும் அன்போடும் ஆளுகிறார் என்று விசுவாசிக்கிற பத்தர்களுக்குத்தான் இந்த அற்புதங்கள் அடையாளங்களாய்ப் பிரயோசனப்படும். இவ்வகையான அற்புதங்களைப் பார்க்கிற துன்மார்க்கரும் எகிப்திலிருந்த மந்திரவாதிகளைப்போல இது தேவனுடைய விரல் என்று ஒத்துக்கொள்ளவேண்டியதாயும் இருக்கும். ஆனால் இப்படிப்பட்டவர்கள் முந்திச் சொல்லியிருக்கிற அற்புதங்களை இயல்பாய் நடக்கத்தக்கவைகளென்று சொல்லி நிராகரித்துத் தள்ள இடமிருக்கிறபடியால் அவைகள் அற்புதங்களென்று ஒத்துக்கொள்ளும்படி செய்வது கூடாதகாரியமாகும்.

அற்புதமானது இயற்கையாய் நடக்கிறதற்கு வித்தியாசப்பட்டபோதிலும் இயற்கைக்கு விரோதமென்று சொல்லவே கூடாது. ஒன்று அற்புதமாய் நடக்கும்போது இயற்கைப்பிரமாணம் அதினால் புரண்டுபோகிறதென்று சொல்வது சரியல்ல. இயற்கைப்பிரமாணம் கடந்தது அதற்கு மேற்பட்டது என்று ஆனபோதிலும், அதற்கு விரோதமானதேயல்ல. இயற்கைப் பிரமாணம் கிரமம்பற்றியதானபடியால், கிரமந்தப்புதல் தேவனிடத்திலிருந்து வரத்தக்கதல்ல. இந்த உலகம் அவரால் ஒழுங்காய் நடத்தப்பட்டுவரும்போது அவருடைய வல்லமையையும், சர்வஞ்ஞத்துவத்தையும் திருஷ்டாந்தப்படுத்தும்படி செய்யும் ஒன்று ஒழுங்கீனமாயாகுமா? யதார்த்தமாய்ச் சொல்லவேண்டுமானால் அற்புதமாவது ஒரு ஒழுங்கீனமுமில்லாத மேலோகத்திலிருந்து அலசடிப்பட்ட ஒழுங்கீனம் நிறைந்த இவ்வுலகத்தில் சாடி, க்ஷணப்பொழுதுக்குள் அந்த மேலோகத்தை இந்த கீழ்லோகத்தோடு ஒன்றுபடுத்தும் சரியான இயல்புப்பிரமாணம் என்கலாம். வியாதியஸ்தனுக்குச் சுகம் வருத்துகிறது இயல்புக்கு விரோதமானதல்ல; வியாதியோ நியாயமானபடி இயற்கைக்கு விரோதமானது. சுகமல்ல, வியாதியே மனுஷதன்மைக்கு விகற்பமானது. சுகமோ முன்

இருந்தபடி ஒழுங்காகிய சிருக்கு கொண்டுவருகிறது. ஆனதால் அற்புதம் ஒரு பிரமாணத்தைக் குணங்கல்படுத்துகிறதென்று சொல்லாமல், ஒழுங்குதப்பினதை குணக்கெடுக்கிறதென்றே சொல்லவேண்டும். இதற்கேற்ற திருஷ்டாந்தங்களே தினசம்பவங்களில் சகஜமாய்க் காணலாம். எப்படியெனில், தாழ்வாகிய ஓர் இயற்கைப்பிரமாணம் அதற்கு உயர்வாகிய வேறொரு பிரமாணத்தால் மடங்கிப்போகிறதுண்டு. கைத்தொழில் யந்திரத்திற்கு அடங்கிப்போகிறதுமுண்டு. இரசவாத சம்பந்தத்தினால் அபலவஸ்துகளின் சத்து மாறிப்போகிறது. சடப்பொருள் சித்துப்பொருளுக்கு மூடங்கிக்கொடுக்கிறது. இவைகளைக் கவனிக்கையில் இயற்கைப்பிரமாணம் இற்றிறந்துபோகிறதென்றாவது, இவைகள் இயற்கைப்பிரமாணத்திற்கு எடாகோடமாய் நடக்கிறதென்றாவது சொல்லாமல், வெகு விஸ்தாரமாய் அளாவிய ஒரு பிரமாணத்திற்குள் சுருக்கமாகிய வேறொரு பிரமாணம் ஒடுங்கி அடங்கிப்போகிறதென்றுமாத்திரமே சொல்லவேண்டும். மேலும் மனுஷர்களுக்குத் தெரிந்திருக்கிற இயற்கைப்பிரமாணத்திற்கு இது மிஞ்சினதாயிருக்கிறதேயொழிய, உலகத்திலுள்ள இயற்கைப்பிரமாணம் எல்லாவற்றிற்கும் இது மேற்பட்டதென்று ஒருபோதும் சொல்லக்கூடாது. மிருகங்களுக்கும் மனுஷருக்கிருக்கிற அறிவுபோல் இருக்குமானல் அவைகளுக்கு மனுஷசெய்கைகளும் அற்புதம்போலிருக்கும். தேவதூதர் செய்கிற செய்கைகள் நமக்கு அற்புதமாகக் காணுகிறதல்லவா? இதுபோலவே ஓரறிவுள்ள வஸ்துக்களாகிய மரவர்க்கங்களுக்கு மிருகங்களுடைய சேஷ்டையும் தோன்றும். சோதிடசாஸ்திரத்தின்படி நக்ஷத்திரங்கள் பொதுவாய்த் தெரிந்திருக்கிற பிரமாணத்திற்குள் அடங்கினதாயிருந்தாலும், வால்நக்ஷத்திரங்கள் என்று சொல்லப்படுகிறவைகள் அந்தப் பிரமாணத்திற்கு உட்பட்டவைகளல்லவே. அவைகளேப் பற்றிய வேறு வகைப் பிரமாணமும் இன்னதென்று நமக்கு இதுவரைக்கும் தெரியாமலே இருக்கிறது. இன்னும் பாருங்கள்! நான் என் கையைத் தூக்குகிறபோது பூமியின் திண்மைக்கவர்ச்சிப்பிரமாணம் என் கைக்குச் சாடாததுபோல

சண்டும், திண்மைக்கவர்ச்சி இல்லவேயில்லையென்று சொல்லக்கூடாது. அந்த வேளையில் என் சுதாவாகிய இன்னொரு பிரமாணத்திற்கு அந்த கவர்ச்சிப்பிரமாணம் கீழடங்கிப்போனதென்றுமாத்திரந்தான் சொல்லவேணும். மாம்சசேர்க்கையான வஸ்துக்கள் நாறிக் கெட்டு நைந்துபோகாமல் உப்பினுல், உருப்படியாய்க் காக்கப்பட்டபோதிலும் நைந்தழியும்படியாகிய இயற்கைப்பிரமாண ரசாயனம் அவைகளில் உண்டு. இதுபோலவே குணப்பட்ட ஒரு மனுஷனில் காணும் ஆவியின் பிரமாணத்தினுல் பாவப்பிரமாணம் கீழடங்கினுலும் பின்னும் அந்தப் பாவப்பிரமாணம் அவனிடத்திலிருக்கிறது. ஒன்று அதிலும் பலத்த இன்னொரு பிரமாணம் மேலாடிக் கிரியை செய்கிறபோது அதற்குள் அடங்கினுற்போல கிடக்கிறது. பலத்தது சேஷ்டியாமல் நின்றுபோகுமேயாகுல், அடங்கிக் கிடந்தது தன் குணத்தைக் காட்டுமே. சொல்லிவந்த திருஷ்டாந்தரங்களினுலே எந்தச் சம்பவமும் விசேஷ பிரமாணத்திற்கு விகற்பப்பட்டபோதிலும், அலாதியாய் சிறப்புள்ள பிரமாணத்திற்கு வித்தியாசப்படுமேயொழிய, மற்றப்படி சகல பிரமாணங்களையும் தழுவிக்கொள்ளும் பொதுப்பிரமாணத்திற்கு வழுவத்தக்கதல்ல என்றும், எந்தப் பிரமாணமும் அலாதியாய்த் துண்டித்த பிரமாணங்களாயும், அப்படித் துண்டித்த பிரமாணங்கள் மொத்தத்திற்கு விரோதமாயிராமல் அதோடு நன்ருய்ப் பொருந்தினதாகவேயிருக்கிறது என்றும் அறிந்து கொள்ளுகிறேம். இரண்டு பிரமாணங்கள் வந்து நேரும்பொழுது வலுத்தது இளைத்ததற்கும், தாழ்ந்தது உயர்ந்ததற்கும் கீழ் அடங்கவேணுமென்பதே இருவகைப் பிரமாணங்களுக்கும் பிரமாணமானதால் ஒரு அற்புதம் நடக்கிறபோது, இந்த உலகம் மேலான வேருெரு பிரமாண ஒழுங்குக்கு உள்ளாகிப்போகிறது. இருந்த மகிமையை இழந்து கேவலமடைந்து போய் வருத்துவித்துக்கொண்ட தற்கால பிரமாணங்களுக்குக் கீழாக அல்ல, அதிக பலமும் நிறைவுமான வேறுபிரமாணங்களுக்குக் கீழாகிறது. இவைகளுக்குரிய மேலான தன்மையின்படியே இவைகள் மேலான வல்லமையைப் பிரயோகிக்கிறது. இது நன்

ருய்த் தெளிவாகும்படி ஒரு திருஷ்டாந்தரம் சொல்லுவோம். திருச்சபைச் சட்டங்கள் என்னப்படுகிறவைகளில் பண்டிகை நாட்களுமுண்டு, உபவாச நாட்களுமுண்டு. பண்டிகைநாட்களில் சந்தோஷப்படவேண்டியதும், உபவாசநாட்களில் துக்கப்படவேண்டியதும் உள்ளது. கிறிஸ்து பிறந்தபண்டிகை உபவாச தினமொன்றில் வந்தால் அந்த நாளில் உபவாசத்தை விலக்கி, அதைப் பண்டிகைநாளாகக் கொண்டாடவேண்டுமென்று சபைக்கட்டளை. இதுவிஷயத்தில் இரண்டுவிதமான ஒழுங்குகள் ஒன்றுக்கொன்று விரோதப்படுகிறதேயென்று சொல்லலாமா? அப்படியாகச் சொல்லாமல் இரண்டும் ஒன்ருய் வந்து நேரும்போது அவைகள் ஒன்றுக்கொன்று எவ்விதமாய் கீழடங்கவேணுமென்று காட்டி, பரிசுத்தமாய்த் துக்கங்கொண்டாடுகிறதைக்காட்டிலும், பரிசுத்தமான சந்தோஷமடைவது எவ்வளவோ மேலானதென்று கடைசியாய் துக்கம்வந்து சந்தோஷத்திலே முழுவதும் முழுகிப்போகுமென்கிறகாரணத்தை நோக்கி சந்தோஷத்தையே உயர்த்தியாய் வைத்து ஏற்படுத்தியிருக்கும் சபைச் சட்டத்தை மெச்சுதலாய்க் கொள்ளவேண்டுமல்லவோ.

அற்புதத்தைக்குறித்துச் சொன்ன தன்மையாய் நமக்கிருக்கிற அழிவுக்குரிய தேகத்தைக்குறித்தும் இப்பிரபஞ்சத்தைக்குறித்தும் சொல்லத்தகும். இவைகளுக்கு உண்டாகப்போகிற மாறுதல்களை நோக்கி ஏதோ ஒரு பிரமாணம் குலைக்கப்பட்டுப்போகிறதென்று சொல்லவேகூடாது. நம்முடைய சரீரம் உயிரடைந்தெழும்புவது இயல்புக்கு விரோதமானதல்ல. ஆனபோதிலும் அதை உயிர்ப்பிக்கத்தக்க சத்து இது என்று தற்காலம் நமக்குத் தெரியப்படுகிறதில்லை. தேவன் இனிமேலுக்கென்று வெளிப்படுத்தாமல் வைத்திருக்கிற வல்லமையைக்கொண்டு தான் அது நடக்கவேண்டும். இத்தன்மைபோல இந்த உலகமும் அழிய இதினின்று புதிய வானமும் புதிய பூமியும் உண்டாகும். இவைகளை உண்டாக்கத்தக்க வல்லமை இன்னதென்று நமக்கு இப்போது தோன்ருது. இதற்கான குணங் குறிகள் தற்காலமே ஆரம்பித்தும் இருக்கலாம். ஆகிலும் அது சம்பவிக்கும்போதுதான் யதார்த்தமான இயல்புப்பிரமாணம் இன்ன

தென்று திட்டமாய் வெளிப்படும். உலகத்தின் தன்மை இன்னவாயிருக்குமென்று இக்காலத்திலே நமக்குத் தெரியவே தெரியாது. அற்புதங்கள் இயற்கைப்பிரமாணத்திற்கு கடந்து நிற்கிறதாய் இருந்தபோதிலும், இயற்கைப்பிரமாணத்திற்கு விரோதப்படுகிறதல்லவென்று சொல்லுகிறதினாலே லோகத்தில் நடந்துவரும் தினசம்பவங்களைக் குறைவாய்ப் பாராட்டுகிறோம் என்று எண்ணப்படாது. உள்ள யதார்த்தப்படி கவனித்தால் இவைகளுக்கு ஆதிமூலம் இன்னதென்று அவைகள் ருசுப்படுத்துகிறதாகச்சே இவைகளை சிலாக்கியப்படுத்துகிறதென்றே கொள்ளவேண்டும். இரட்சகர் ஒரேயொரு வார்த்தையினால் வியாதியஸ்தனைக் குணமாக்கினது. தாமே மனுஷதேகத்துக்குரிய பீடையை நீக்கிச் சுகமளிக்கிற எவ்வகைச் சக்திக்கும் காரணகர்த்தன் என்று பிரத்தியட்சப்படுத்தி, "பலவிதங்களாய் வெளிப்படுகிற இப்பேர்ப்பட்ட வல்லமை எனக்குண்டென்கிற சத்தியத்தை மனுஷராகிய நீங்கள் அடிக்கடி மறந்துபோகிறதையிட்டு அதை உங்களுக்கு மெய்ப்பிக்கும்படியாகத்தான் இந்தச் சமயத்தில் ஒரே ஒரு வார்த்தையைக்கொண்டு இவனுக்குப் பூரண சௌக்கியம் அளிக்கிறேன் பாருங்கள்" என்று சொல்லுகிறதற்குச் சமதையாயிருக்கிறது. இப்படிச் சொஸ்தப்படுத்தினதினால் கிரமமாயுள்ள சுகவிருத்திப்பிரமாணத்தை அழிக்காமல் அதையும் இதோடு சம்பந்தப்படுத்திக்கொண்டார் என்றே சொல்லவேண்டும். அவர் அப்பம் அதிகப்படும்படி செய்தபோதும், தண்ணீர் ரசமாக மாறச்செய்தபோதும் அவர் சொல்லுகிற பாவனை என்னவென்றால், "இவைகளைச்செய்கிறவன் நான்தான். வெயிலெரிக்கச்செய்து மழைபெய்யப்பண்ணி, விதைப்புக்காலமும் அறுப்புக்காலமும் உண்டாகச்செய்து மனுஷனுக்கு அன்னஆகாரத்தை அளிக்கச்செய்கிறவன் நான்தான். இந்தக் காரியத்தை நீங்கள் நன்றிகெட்டவிதமாய் வெகுதடவை மறந்துபோகிறதினாலே இந்த இரண்டொரு திருஷ்டாந்தரங்களைக்கொண்டாவது கண்டுகொள்ளுங்கள். கண்ணாலே பார்த்துக் கவனியாவிட்டாலும், காதாலே கேட்டாவது அறிந்துகொள்ளுங்கள். சகல வஸ்துக்களின் சத்துக்

காரமும் எப்படி என் கையில் இருக்கிறதென்றும், என் கை பட்ட அப்பம் என்னமாய் அதிகமாகிறதென்றும், தண்ணீரானது திராக்ஷச்செடியிலேறி திராக்ஷப்பழத்திலே ரசமாய் மாறி, திராட்சத்தொட்டியில் போட்டு மிதிக்கவும்படாமல் நான் ஒரு சொல் சொன்னவுடனே எவ்வளவோ திவ்யமான இரசமாய் மாறுகிறதென்றும் பாருங்கள். நீங்கள் வலைக்குப் பலியிட்டு தூண்டிலுக்கு துபங்காட்டுகிறவர்களாய் இருக்கிறீர்களே. நீங்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டும் ஒரு மீன்குஞ்சும் பிடியாதிருக்கையில், க்ஷணப்பொழுதில் உங்களுக்கு எத்தனையோ திரளான மீன்களைக் கொடுக்கிறேனென்பதையும் பாருங்கள். இச்செய்கையினுல் மீன்களைச் சமுத்திரத்தில் நடத்துகிறவர் இன்னுரென்றும், எவ்வளவு பிரயாசப்பட்டும் உங்களை ஒன்றும் பிடியாமல்போகப்பண்ணுகிறவரும், நீங்கள் கண்ணேக்கும்போது அதிசயமானவிதமாய் உங்கள் பிரயாசத்தை வாய்க்கச்செய்கிறவரும் இன்னுரென்று அறிந்துகொள்ளுங்களேன்" என்பதுபோலாம். அத்திமரத்தைச் சபித்த விஷயத்திலும் அவர் தமது உக்கிரத்தைக் காட்டி அந்த அற்புதத்தைக்கொண்டும் இத்தன்மையாயே பேசுகிறுர். எப்படியெனில், "உங்கள் பாவங்களுக்காக உங்களை அழிக்கிறவன் நான் ஆக்கும். உங்களை எவ்வளவோ தண்டித்து குணப்படுவீர்கள் என்று பார்த்தும், நான் செய்யும் தண்டனையினுல் பிரயோசனமில்லாதேபோகிறது. ஆனதால் திரும்பத்திரும்பத் தண்டித்து உங்களுக்குப் புத்திவருத்தவேண்டியிருக்கிறது. நீங்கள் குருட்டுத்தனமாய் அப்படிப்பட்ட தண்டனையை உங்கள் துர் அதிஷ்டமென்று எண்ணிக்கொள்ளுகிறீர்கள். பூமியைச் சாபத்தால் அடிக்கிறவரும், இந்த தண்டனையை மனிதருடைய பாவங்களுக்காகவே வருத்துவிக்கிறவரும் நானே அன்றி வேறொருவருமில்லையென்று நீங்கள் அறிந்துகொள்ளும்படிக்கு இந்த அத்திமரத்திற்கு நான் செய்திருக்கிறேன் பாருங்கள்" என்று சொல்வதற்குச் சமானமே.

மேற்சொல்லியவைகளெல்லாம் எவ்வளவோ அவசியமானவைகளென்று இப்பொழுது சுளுவாய்த் தெரிகிறது. ஒருவித

மாய் உலகத்தில் நடக்கும் ஒழுங்கான இயற்கை தேவமகிமையை வெளிப்படுத்துகிறதென்றாலும் (சங். 19. 1–6.), வேறு விதமாய்ப் பார்க்கையில் அது அவருடைய மகிமையை நம்முடைய திருஷ்டிக்கு மறைத்துப்போடுகிறது. அதின்மூலமாய் அவருடைய மகிமையை எப்பொழுதும் ஞாபகப்படுத்திக்கொள்ள ஏதுகரமிருந்தபோதிலும், இவ்வுலகம் நாம் அவனைக் காணத்தக்க பிரகாசங் கொடாமல் மாசடைந்து இருண்டுபோகிறவனையும் அவனை மறந்துவிட இடமாயுமிருக்கிறது. தேவன் சுயாதீனமுள்ளவரென்றும், அவருடைய சித்தம் வழக்கம் போல எக்காலமும் வெளிப்பட்டபோதைக்கும் காரணகாரிய சம்பந்த ஒழுங்கில் ஏதாவதொன்றை பேதப்படுத்துகிறபோது அதிக துலாம்பரமாய் விளங்குகிறதென்றும், அந்தச் சித்தங் கொண்டே அவர் லோகத்தை நடப்பிக்கும் பிரகாரமே பரலோகத்தையும் தமக்குக் கீழ்ப்படுத்திவருகிறாரென்றும் காண்கிறது. அற்புதத்தினால் நமக்கு இவ்வளவுமாத்திரம் தெரியவந்தாலும் அற்புதங்களைச் செய்வதில் சபலமில்லையென்று சொல்லவேபடாது. மேலே காட்டிய அவ்வளவுமாத்திரம் அற்புதங்களால் நாம் அறிந்துகொண்டாலும் அதுவே போதும். ஆனால் இவைகள்மாத்திரமல்ல, இன்னும் அநேககாரியங்களை மனுஷனுடைய இரட்சிப்போடு சம்பந்தப்பட்டதாய் அமைத்து, தேவன் தமது திருவுள்ளத்தில் பதித்திருக்கப்பட்ட தீர்மானங்களும் அற்புதங்களால் வெளிச்சமாகிறது. அவைகள் இன்னதென்று பின்னால் சொல்லுவோம்.



## 3. அதிகாரம்.

### அற்புதங்களை எவ்வளவாய் ஏற்றுக்கோள்ளத்தக்கது என்பது.



அற்புத செய்கையைப் பார்க்கிறவர்களெல்லாரும் அக்ஷணமே அது தேவனால் ஆனதென்று ஏற்றுக்கொள்ளவேண்டுமோ?

அதைச் செய்கிறவன் தேவனால் அதிகாரம்பெற்றவனென்றும், அவன் போதிக்கிற போதனை தேவ ஆவேசத்தால் உண்டானதென்றும் ரூபிக்கிறதற்கு அற்புதமே போதுமானதா? என்றால் அப்படிச் சொல்லப்படாது. தேவனால் நிசநிசமாய்ச் செய்யப்படும் மெய்யான அற்புதமும், தன்னை தேவனென்று சொல்லிக்கொள்ளுகிறவனுடைய பொய்யான அற்புதமும் என இரண்டுண்டு. இவன் சத்தியத்திற்கு விரோதியானபடியால் சத்தியத்திற்குப் பதிலாக அசத்தியத்தை ஸ்தாபிக்கிறதும், பொய்யென்று பின் வெளியாகிறதையிட்டு மெய்யைக் குறித்தும் சந்தேகிக்க இடஞ்செய்கிறதும் இவனுடைய முக்கிய வேலையாயிருக்கிறது. இவன் நிசமே அற்புதங்களைச் செய்கிறானென்று வேதவசனத்தினால் தெரியவருகிறது. அவைகளைப் பொய்யான அற்புதங்களென்று 2 தெச. 2. 9ல் சொல்லியிருந்தாலும், அவைகள் மாயவித்தைகளல்ல. பொய்யை ஸ்தாபிக்கவேணுமென்கிற நோக்கத்தோடு அவைகள் செய்யப்படுகிறபடியால்தான் இந்தப் பெயரால் வழங்கியிருக்கிறதென்று சொல்லவேண்டும். மோசேயும் ஆரோனும் எகிப்திலே தேவனுடைய இராச்சியத்தை ஸ்தாபிக்க அற்புதம் செய்ததுபோலவே, அவ்விடத்து மந்திரவாதிகளும் பிசாசின் இராச்சியத்தை ஊர்ஜ்ஜிதப்படுத்தும்படி அற்புதஞ்செய்தார்கள் என்று வேதத்தினால் காண்கிறது. இந்தக் கருத்தாய்ப் பார்த்தால்தான் இவைகள் நமக்குச் சுளுவாய் விளங்கும். மந்திரவாதிகள் செய்தது கண்கட்டுவித்தையும், கைச்சம்பிரதாயமும் என்று சொல்லிப்போடுவோமானால் அதின் யதார்த்த பொருளை நாம் நன்றாய் அறிந்துகொண்டவர்களல்ல. அவர்கள் கைகளிலிருந்த கோல்களும் சர்ப்பமாக மாறிப்போனதே (யாத். 7. 12, 13.). அவர்கள் தண்ணீரையும் இரத்தமாக்க (யாத். 7. 22.) தாங்கள் வல்லவர்கள் என்று பார்வோனும் அவன் ஊழியக்காரரும் கண்டுகொள்ளவேண்டுமென்று மாத்திரம் இவைகளைச் செய்யவில்லை. எகிப்துதேசத்து இராசாவின் வல்லமையே தேவவல்லமையோடு போட்டி காண்பித்ததாயல்ல, அந்தகார இராச்சியத்தின் பிரபுக்களாகிய

எகிப்து தேவர்களோடே இஸ்ரவேலின் தேவன் சட்டாட்ட போராட்டம் செய்ததாகவே எண்ணவேண்டும். அவர்கள் சீக்கிரம் ஜெயிக்கப்பட்டும், அவர்களுடைய கேவலதன்மை வெளியாகியும் போனதாலும் அச்சமயத்திலே ஒளியின் இராச்சியமும், அந்தகாரத்தின் இராச்சியமும் பார்வோனுக்கு முன்பாக அதினதின் வலிமையைக் காட்டி, எதுவிதமும் அவனைக் கைவசப்படுத்தவேண்டுமென்கிற நோக்கந்தான் இதன் உள்ளான ரந்தரம். தற்காலத்திலும் இப்பேர்ப்பட்ட அதிசயங்கள் எகிப்துதேசத்திலே நடந்துவருகிறதையிட்டு, சிலர் இதை ஆக்ஷேபித்தாலும் இப்போது நடக்கிறவைகளும் அந்தப் பொல்லாத ஆவிகளுடைய சேஷ்டைகள்தானென்று சட்டமாய்ச் சொல்லலாம். இப்படிக்கில்லாவிட்டால், "கர்த்தாவே, தேவர்களில் உமக்கு ஒப்பானவர் யார்?" என்றும், "எகிப்து தேவர்களின்மேல் நீதியைச் செலுத்துவேன்; நானே கர்த்தர்" என்றும் மோசே சொல்லியிருக்கப்பட்டவைகள் எப்படி அர்த்தமாகும்? (யாத். 15. 11; 12. 12. எண். 33. 4.) அக்காலமிருந்ததுபோலவே இரட்சகர் மனுஷ அவதாரமெடுத்தபோதும் சாத்தான் வனாந்தரத்தில் அவரோடு சட்டாட்டம் பண்ணப் புறப்பட்டான். எலிமா என்பவன் பவுலை எதிர்த்தபோதும் இத்தன்மையான போராட்டம் வெளிப்பட்டது (அப். 13. 8. 2 தீமோ. 3. 8.). இந்த விஷயத்தைக்குறித்துச் சிலர் ஒருவேளை சந்தேகப்படுவார்களானாலும், உலகத்தின் முடிவிலே இப்படியே நடக்குமென்பதற்கு எள்ளளவுஞ் சந்தேகமேயில்லை (மத். 24. 24. 2 தெச. 2. 9. வெளி. 13. 13.). விசேஷ சம்பவம் நடக்கும் எந்தக்காலத்திலும் ஒளிக்கும் அந்தகாரத்திற்கும் சகஜமாயுள்ள இவ்வித போராட்டம் வெளிக் காண்பதுண்டு.

அந்திக்கிறிஸ்துவானவன் நடப்பிக்கும் இவ்வித செய்கைகளை ஜாலவித்தையேயல்லவென்று மறுத்தபோதிலும், அதைச் சரியான அற்புதமென்று சொல்லப்படாது. அற்புதத்துக்குரிய சிலசில குறிப்புகளை அவைகளில் காண்பதுண்டு. அவைகள் கைச்சித்திரமுமல்ல; உயர்த்தியான ஒரு சத்தியினால் ஆகி

றவைகள்தான். இப்படிக்கெல்லாம் இருந்தபோதிலும் அற்புதத்துக்கும் இவைகளுக்கும் மெத்த வித்தியாசமுண்டு. இவைகள்சட்டெனச் செய்யப்படுகிறவைகள்; மற்ற ஏதோடும் சம்பந்தப்படாமல் துண்டாய் அத்திக்காய்த் தூக்காய் நிற்கிறவைகள்; இணக்கம் பொருத்தமாகிய ஒற்றுமை கூடியதல்ல, கெடுதியான வேற்றுமையை உண்டாக்குகிறவைகள். தேவன் இந்த உலகத்தை அன்பும், தயவும், ஞானமுமாகிய நோக்கம் கைகூட ஆண்டுவருகிறதான சர்வவல்லபத்தைக் காண்பியாதவைகள்; இவைகள் தீமையானது கிரியைசெய்துவருகிறதென்றும், இத்தீமை தற்கால சாந்திக்கு தேவபக்தர்களாகிய பரிசுத்தவான்களை சோதிக்கவும், பூரணப்படுத்தவும் ஏதுகரமானபோதிலும் கடைசியிலே தானாய் ஒழிந்துபோமென்றும் காட்டுகிறவைகள்.

மெய்யை ஸ்தாபிக்கிறதற்கும் அற்புதங்களுண்டு, பொய்யை ஸ்தாபிக்கிறதற்கும் அற்புதங்களுண்டு என்பதினாலேயே ஒருவனுடைய போதனையை சத்தியமென்று அவன் அற்புதங்களைச் செய்கிறதையிட்டுமாத்திரம் அங்கிகரிக்கக்கூடாது. வேதவசனத்தினாலும் இப்படியேசொல்லியிருக்கிறது (உபா. 13. 5.). அற்புதமானது ஒரு உபதேசம் உண்மையென்றாவது, அற்புதஞ்செய்தவன் தேவ அதிகாரம் பெற்றவனென்றாவது ருபிக்கிறதில்லை. அவன் சொல்லுகிறதற்குச் செவிசாய்க்கவும், மோட்ச நரக லோகங்களுக்குரியது எவ்வளவென்று ஆராயவும் நம்மை ஏவிவிடுகிறதுதான் அற்புதத்தின் முதல்பிடி. உபதேசம் நல்லதென்று நமது மனச்சாட்சியில் முதலாவது படவேண்டும். அந்த உபதேசம் தேவனால் உண்டானதென்பதைப் பிறகுதான் அற்புதம் முத்திரைப்படுத்தும். துவக்கத்திலே அந்த உபதேசம் மனச்சாட்சிக்கு நேரானதாய்த் தோன்றவேண்டும்; சன்மார்க்கத்திற்கும் இசைந்திருக்கவேண்டும். தேவன் மனுஷனுக்கு ஒன்றை வெளிப்படுத்தும்போது சத்தியம் இன்னதென்று பகுத்தறிகிற திறமை அவனுக்கு இருக்கிறதென்றும், தமக்கும் அவனுக்கும் இருக்கப்பட்ட பாந்தவத்துக்குரிய குறிப்புகளை அவ்வெளிப்படுத்தலிலே

அவன் கண்டுகொள்ளும்படியான அறிவு அவனிடம் உண்டென்றும் காண்பிக்கிறார். இவ்விதம் வெளிப்படுத்துகிற அந்தச் சிநேகிதனை அவன் வெகுநாளாய் மறந்துவிட்டிருந்தாலும் இன்னாரிடத்திலிருந்து அந்த விசேஷம் வந்ததென்று அதின்மூலமாய்க் கண்டுகொள்ளுகிற அறிவு, அவனை விட்டு முழுவதும் நீங்கிப்போயிற்றென்று ஒருபோதும் சொல்லப்படாது. கர்த்தர் வெளிப்படுத்துகிறது அவனுக்கு ஒரு பொக்கிஷம் என்றாலும் அது இன்னொருத்தனல்ல, அவன் தானே போக்கடித்த பொக்கிஷமென்று நன்றாய்க் கண்டுகொள்வான். இத்தன்மையாய் சத்தியத்தைப் பகுத்தறியும் திறமை மனுஷனுக்கு இல்லையென்கிறதானால், தேவனுக்குரிய இலக்ஷணமே சுத்தமாய் அவனிடத்தில் இல்லையென்றே சொல்வதாகும். அது கூடாதே. தேவனிடத்திலிருந்து வருகிறவனே தேவனுடைய வார்த்தையைக் கேட்டு அது அப்படிப்பட்டதுதான் என்று அறிந்தேகொள்ளுவான்.

மனுஷன் இப்படிச் சத்தியத்தைத் தானாய் அறியக்கூடியவனாயிருக்க அற்புதம் என்னத்திற்கு, சத்தியத்தைக் கண்டுகொண்டபிறகு அற்புதம் அவசியமில்லையே என்று சிலர் சொல்லுவார்கள். சகல நன்மையும் தேவனிடத்திலிருந்து வருகிறதென்று ஒப்புக்கொள்வது எப்படியோ (அஞ்ஞான சாஸ்திரிகளும், கவீசுரர்களும் எழுதிவைத்திருக்கிற பிரபந்தங்களில் நன்மையும் பிரயோசனமுமானது தேவனிடத்திலிருந்து உண்டானதென்று அறிந்துகொள்ளுகிறதெப்படியோ) அப்படியே தன் மனச்சாட்சிக்கு ஒத்துவருகிற இந்தச் சத்தியமும் நன்மையானதுதானென்று ஒப்புக்கொள்ளுகிறானேயல்லாது வேறல்ல. தேவனிடத்திலிருந்து ஒருவனுக்கு நேராய் அனுப்பப்பட்ட ஒரு விசேஷித்த செய்தியென்றாவது, தேவன் தாமே விசேஷித்தவிதமாய் ஒருவனோடு பேசுகிறாரென்றாவது அவன் அறிந்துகொள்ளுகிறதற்கு அற்புதம் அவசியம் வேண்டும். அப்பேர்ப்பட்ட விசேஷ சமாசாரம் கொண்டுவருகிறவர்களுக்கு அற்புதம் ஒரு அதிகாரப்பத்திரம்போல் இருக்கிறது. மனுஷனைக் குறித்து தேவன் இன்னநோக்கங்கொண்டிருக்கிறார், அதை

இவன்மூலமாய் நமக்குத் தெரிவிக்கிறார் என்கிறதற்கு அற்பு தம் ஒரு அத்தாட்சி. சத்தியத்தை அவன் அங்கிகாரஞ்செய்து கொண்டபின், அவன் மனதும் அதை ஒப்புக்கொண்டபின் அந்தச் சத்தியத்தை வெளிப்படுத்தின மனுஷன் மற்ற மனுஷர் களைவிட தேவனோடு அதிக சம்பந்தமுடையவனென்றும், அவன் உண்மை சொல்லுகிறான் என்று மாத்திரமல்ல (மத். 11. 4, 5. யோவா. 5. 36.), சத்தியமுள்ளவரோடு ஏக ஐக்கியமா யிருக்கிற தூதன் என்றும் (1 இரா. 13. 3.), ஆனதால் அவன் சொல்வதை நம்பிக்கொண்டு அதற்குக் கீழடங்கி நடக்கவே ண்டுமென்றும் அற்புதம் ருசுப்படுத்துகிறது. மேலும் அவன் சொல்லுகிறது புத்திக்கெட்டாத இரகசியமாயிருந்தாலும் இருக் கும். சத்தியத்தை அறிந்துகொள்ள தனக்கிருக்கும் அளவுப் பிரமாணத்திற்கு அது அடங்காவிட்டாலும் அப்பிரமாணத் திற்கு விரோதமாய்க் காணாததால், அந்த இரகசியத்தையும் ஒப் புக்கொள்வான்.

தேவனிடத்திலிருந்தே ஒரு விசேஷ சமாசாரம் கொண்டு வந்திருக்கிறேனென்று சொல்லுகிற ஒருவன் தான் சொல்வதை இப்பேர்ப்பட்ட அற்புதத்தைக்கொண்டு ருசுப்படுத்துகிறது நியாயந்தான். அவன் சொல்லுகிற காரியம் நமக்கு நன்மை யானதாகக் கண்டபோதிலும் அவனிடத்தில் அதற்கொரு அடையாளம் தேடுவது அவசியமேயல்ல என்பதாய்ச் சொல் லப்படாது. அவனை அடையாளம் காண்பிக்கக் கேட்பது நமக்குக் கடமையே. அல்லாவிட்டால் மனுஷருடைய வார் த்தையை தேவவாக்கென்று நம்பி மோசப்படும்படியாகும். அவிசுவாசப்படுவது எப்படி பாவமோ, அப்படியே ஒன்றை நன்றாய் ஆராயாமல் இலேசாய் நம்பிக்கொள்ளுகிறதும் பாவந் தான். பார்வோன் மோசேயையும் ஆரோனையும் பார்த்து, உங் களுக்காக ஒரு அற்புதம் காட்டுங்கள் என்று கேட்டதினாலே அவன் அவிசுவாசப்படுகிறவன் என்று நினைக்கப்படாது (யாத். 7. 9, 10.). அவன் அப்படிக் கேட்கிறது நியாயமே. அவர்களோ தங்களை தேவன் அனுப்பினதாகச் சொன்னார் கள். அப்பேர்ப்பட்டவர்களைப் பரீக்ஷைபண்ணுவது அவன்

கடமைதான்; ஆனால் அவர்கள் ருசுக்காட்டின அத்தாக்ஷிகளைப் பார்வோன் ஏற்றுக்கொள்ளாமல்போனதே அவனுக்குப் பாவம். தீர்க்கதரிசி சொன்னதை உறுதியாக்கும்படியான ஒரு அடையாளம் கேட்கமாட்டேனென்று ஆகாஸ் ராசன் சொல்லிப்போட்டதினால் தனக்குள் அவிசுவாசமிருந்ததை வெளியாக்கினான். தீர்க்கதரிசியின் வார்த்தை அவனுக்கு அருமையாய் நடக்குங் காரியம்போல கண்டிருக்குமானால், அற்புதமாகிய முத்திரையைக்கொண்டு அதை உறுதியாக்குவதுதானே அவன் மனதுக்குத் திருப்திசெய்யும். இராசன் இவ்வித முத்திரையை சட்டைசெய்யாதபடியால் தீர்க்கதரிசி சொன்ன சொல்லையும் அவன் மெத்தப் பரவாபண்ணவில்லையென்று தாராளமாய்ச் சொல்லலாம்.

நலமானகாரியத்தை ஊர்ஜ்ஜிதப்படுத்துங்குணம் அற்புதத்தினாலுண்டாகிய முக்கிய பிரயோஜனமாய் இருக்கிறதினாலே, நம்முடைய மனச்சாக்ஷிக்குப் பொருந்தாத ஒரு போதனையை ஸ்தாபிக்கும்படி எத்தனையோ அற்புதங்களை ஒருவன் செய்தபோதிலும் அந்தப் போதனையை நாம் ஒப்புக்கொள்ளவேபடாது. அந்த அற்புதங்களையெல்லாம் ஒரு மூலையிலே தள்ளிப்போட்டு, நம்முடைய மனதுக்குப் பரிசுத்தமும் சத்தியமுமானதென்று படுகிற உபதேசத்தைமாத்திரமே நாம் அங்கிகரித்துக்கொள்ளவேண்டியது. தேவதூதனானாலுஞ் சரி, தேவதூதனை மாறின வேறுயாரானாலுஞ் சரி, வேறே ஒரு சுவிசேஷத்தை நமக்குக் கொண்டுவந்து கொடுத்தால் அதை நாம் ஒருபோதும் கொள்ளவேபடாது (உபா. 13. 3. கலா. 1. 8.). இப்பேர்ப்பட்டவர்கள் செய்யும் அற்புதங்களோ இவைகளை நாம் ஏற்றுக்கொள்ளாதபடி நமக்கு எச்சரிப்பாயிருக்கவேண்டும். இவன் சொல்லும் உபதேசம் பொய்யானதென்று எப்படி நம்முடைய மனச்சாக்ஷி வெளியிடுகிறதோ, அப்படியே இவன் செய்கிற அற்புதமும் இவன் சாமானியமான எத்தனல்ல, நன்றாய் விளைந்த வஞ்சகன், தேறின கள்ளத்தீர்க்கதரிசி, அந்திக்கிறிஸ்து; இவன் மற்ற துன்மார்க்கரைப்பார்க்கிலும் பிசாசின் இராச்சியத்தில் அதிகமாய் ஊடாடிப் புழங்

கிச் சம்பந்தப்பட்டவனுனபடியால், சாத்தான் இவனுக்கு உயர்ந்த அதிகாரம் கொடுத்து இவனை தான்செய்கிற கிரியையைச் செய்யும்படி தனது ஆளாக அனுப்பியிருக்கிருனென்று வாய்விட்டுச்சொல்லுகிறதுபோல கொள்ளவேண்டும். (வெளி. 13. 2.)

அற்புதவிஷயம் இவ்வித விகற்பங்களுக்கு இடமாயிருக்கிறபடியால், பேதைத்தனமுள்ள கல்வியில்லாத கிறிஸ்தவர்கள் இருவிதத்தில் மோசம்போவதற்கு இடமுண்டு. தேவனிடத்திலிருந்து வருகிறதை ஏற்றுக்கொள்ளாமல் போவதொன்று; பொல்லாதவனிடத்திலிருந்து வருகிறதையும் ஏற்றுக்கொள்வது இன்னென்று. இவ்விருவகை மோசத்திற்கும் அறிவாகரமில்லாத பேதைகள்மாத்திரமல்ல, மற்றவர்களுங்கூட உட்படுவார்கள். இப்படிப்பட்ட மோசத்திலிருந்து நம்மைத் தப்புவிக்கத்தக்கது சன்மார்க்க நடத்தையேயன்றி அறிவல்ல. சன்மார்க்கத்திற்கான கியானமில்லாதவர்கள்தான் சத்தியத்திற்குரிய சாக்ஷியைத் தள்ளிவிட்டுப் பொய்யான அற்புதங்களை நம்புவார்கள். சத்தியத்தின்பேரிலுள்ள அவாவினுல் மெய்யை ஏற்றுக்கொண்டிருப்பார்களானுல் பொய்யை நம்பாதபடி விலகிக்கொள்வார்கள். அநீதியின் கிரியையில் அவர்கள் பிரியப்படுகிறதினுலேயே அசத்தியத்தை நம்பிக்கொண்டு சத்தியத்தைப் புறக்கணிக்கிருர்கள். இப்படிச் செய்வது அவர்கள் மேல் ஒரு தண்டனையாயே சுமருகிறது. இதற்கு இசைவாகவே பவுல் அப்போஸ்தலனும் 2 தெசலோனிக்கேயர் 2. 9—12 வரையும் சொல்லியிருக்கிறதைப் பார்க்கலாம். அந்திக்கிறிஸ்து செய்யும் பொய் அற்புதங்களை அவனவனுடைய மனுேபாவம் இருக்கிற நேர்மைக்குத்தக்கதாக ஏற்றுக்கொண்டாலும் ஏற்றுக்கொள்வான், தள்ளிவிட்டாலும் தள்ளிவிடுவான் (யோவா. 5. 43.). இவ்வித எத்தர்கள் அநீதியினுலுண்டாகும் எல்லாவித வஞ்சகத்தோடும் தோன்றும்போது, இப்படிப்பட்டதை ஏற்றுக்கொள்ள ஏற்கனவே நோக்கியிருப்பவர்கள் எவர்களோ அவர்களே இந்த தண்டனைக்கு நேரஸ்தராகிறவர்கள். அந்தப் பொய்யான அற்புதங்

களை அப்பேர்ப்பட்டவர்கள் ஏதோ ஒரு ஆச்சரியத்துக்கும், அதிலுள்ள ஒரு பிரமைக்கும், பகட்டான வேடிக்கைக்கு மாகப் பாராட்டுகிறுர்கள். இத்தன்மையான குறிப்புகளே இது மெய்யான அற்புத சத்தியத்தைச் சேர்ந்ததல்லவென்று விளங்கக்காட்டும். இவர்கள் செய்யும் அற்புதங்களுக்கும், மற்றவைகளுக்கும் வெகு வித்தியாசமுண்டு. அவைகள் சன்மார்க்கத்திற்குரியதாய் இராததுமாத்திரமல்ல, யாதொரு நன்மையையும் பிறப்பியாமல் வெட்டிக்குச் செய்யப்பட்டதாய் முடிவிலே காணப்படும். அற்புதமானது சன்மார்க்கத்திற்குரியதாயிருப்பதோடு விசேஷித்த நோக்கங்கொண்டும் செய்யப்படுகிறபடியால், விசேஷநன்மையை உண்டாக்குகிறதாய் இருக்கவேண்டும். அது எவ்விதமும் பிரயோஜனமானதாய் இருக்குமேயன்றி வெட்டியாய்ப் போகாது. அஞ்ஞானிகளுக்குள் தபோதனரும் ஞானிகளும் என்னப்பட்ட பெரியோர் செய்தவைகள் அற்புதங்களல்லவென்று மெய்ப்பிக்கும்படி ஒரிஜன் என்பவர் அப்போதுள்ள அஞ்ஞானிகளைப்பார்த்துக் கேட்ட கேள்வியைக் கவனியுங்கள். அதாவது, "அவர்கள் நடப்பித்த அந்த அற்புதங்களாலே என்ன அனுகூலம், என்ன சபலம்? அது ஏதேனும் ஒரு சபையை ஸ்தாபித்ததுண்டா? தேவ தீர்மானத்திலிருந்து பிறந்ததென்று காட்டும்படிக்கு அது உலகத்தில் நடந்த எந்த நற்காரியத்திற்காவது உதவியாய் இருந்ததுண்டா? மோசே செய்த அற்புதங்களாலே யூதச்சபை உற்பத்தியாயிற்று; கிறிஸ்துசெய்த அற்புதங்களாலே கிறிஸ்துசபை ஏற்பாடானது பல ஜனங்களையும் ஒன்றுபடுத்த அந்த அற்புதங்கள் பிரயோஜனமாயிருந்தன. நீங்கள் அருமைபெருமையாய்த் துத்தியப்படுத்திவருகிற அப்பலோனியுஸ் எஸ்க்கியூலேப்பியுஸ் செய்த அற்புதங்களால் ஆனமான பிரயோஜனமென்ன உண்டு? அவர்கள் இப்பேர்ப்பட்ட அடையாளங்களில் எதையாவது பின் வைத்துப்போனுர்களா? கிறிஸ்துவானவரோ நன்மைசெய்ய வேணுமென்கிற நோக்கத்தினுலேயே அற்புதஞ்செய்தார். அப்படிக்கே அவைகளால் வெகு நன்மைகள் உண்டாயிற்று. தேவனுக்குப் பிரியமாக அற்புதம்செய்கிறவனே மனுஷர்

சீர்ப்படவேண்டும் என்கிற நோக்கத்தோடேயே அவைகளைச் செய்வான்; அதற்காகவே எப்போதும் பிரயாசப்படுவான். தனக்கிருக்கும் வல்லமையைப் புறத்தியாருக்குக் காட்டிக் கொண்டு திரியவேண்டுமென்கிற நோக்கமுள்ளவன் வஞ்சகம், சூதுமுதலானதின்பேரில் காரியம் கொண்டுபோகிறவனுனபடியால், தனக்கு ஆதாரமாய் இருக்கப்பட்ட சாத்தானுடைய இராச்சியத்தை அழிக்கத் தேடான். நிசநிசமாய் அற்புதங்களைச் செய்கிறவர்களோ தங்களுக்கிருக்கும் வல்லமை மற்றவர்களுக்குத் தெரியவேணுமென்கிற பெருமைக்குச் சுட்டியும், வேடிக்கைக்கென்றும் சுய பிரயோஜனத்தை நாடியும் செய்யார்கள்.” கிளெமெந்து என்பவன் எழுதினதாகச் சொல்லப்பட்ட ஒரு புஸ்தகத்திலே, நம்முடைய இரக்ஷகர் செய்த அற்புதத்திற்கும் சீமோன் மேகஸ் என்பவன் செய்த அற்புதத்திற்கும் இருக்கிற வித்தியாசத்தை, பேதுரு அப்போஸ்தலன் தெளிவாய் எடுத்துக் காண்பிக்கிறதாய்த் தெரியவருகிறது. சீமோன் மேகஸைக்குறித்து, அவன் வெண்கலத்தாலும் கல்லாலும் செய்யப்பட்ட நாய்களைக் குலைக்கச்செய்தானும்; சிலைகளை நடக்கப்பண்ணினுனும்; தானும் ஆகாசகமனமாய்ப் பறந்தானும்; சிலபோது பாம்பாகவும், சிலவேளை பள்ளையாடாகவும், சில சமயங்களில் இரண்டு முகமாயும் இப்படிப் பல வேஷங்கள் எடுத்தானும். சேதம்வராமல் அக்கினித்தணல் மேலும் உருண்டு புரண்டு அதிசயங்களைச் செய்தானும். இவைகளாலே வந்த பிரயோஜனமென்ன? என்னநன்மை உண்டாயிற்று? இவைகள் மற்ற ஏதொன்ருேடும் சம்பந்தப்பட்டதாகத் தோன்றவில்லையே. சரியான அற்புதத்திலே வல்லமை மாத்திரமல்ல, தேவகிருபையும் விளங்கும். இது மனுஷனுடைய ஆத்துமரட்சண்ய கிரியையில் விசேஷமாய்ச் சம்பந்தப்பட்டு அதற்கு அநுகூலமாயிருக்கவேண்டும்; இரட்சகர் செய்த அற்புதங்களெல்லாம் இப்பேர்ப்பட்டவைகள்தான். அவர் நிறைவேற்றும்படி வந்த விசேஷகிரியையின் தன்மைக்கேற்ற குறிப்புகளை அந்த அற்புதங்கள் ஒவ்வொன்றிலும் காணலாம். அவருடைய வல்லமை அவைகளில் விளங்கினது

மாத்திரமேயல்ல, இரக்ஷண்ய கிரியையோடுகூடிய இரக்ஷிப்பின் வார்த்தையும் அவைகளோடு சேர்ந்திருந்தது. இவைகளினுல் அவர் எவ்வளவோ வல்லமையும் அன்புமுடையவர் என்று ரூபிக்கத்தக்கதாயிருந்தது எனச் சொல்லியிருக்கிறது.

இதைப் பின்னும் விபரமாய்ப் பார்ப்போம். மனுஷன் சிருஷ்டிக்கப்பட்ட யதார்த்தமான நோக்கத்தைக் கெடுக்கிற தீமை எது? அவன் எதினின்று மீட்கப்படவேண்டியதென்று யோசித்தால், பாவமென்றே சொல்லுவோம். பாவத்தின் பலாபலன் ஆத்துமாவிலும், சரீரத்திலும் செம்மிப்போயிருக்கிறது. ஆத்துமாவுக்குப் பாவத்தினுல் நேரிட்ட குறைவுகள் என்னவேயானுல், அறிவீனம் சண்டைகள் இவைகளுக்குப் பிசாசு பிடித்தவர்கள் நல்ல திருஷ்டாந்தமாயிருக்கிருர்கள். இவர்களிடத்திலேதான் தேவன் தமது விசேஷமான அற்புதவல்லமையைக் காண்பித்தார். சரீரத்திற்குப் பாவத்தினுல் உண்டான கேடு என்னவென்ருல் சுரம், திமிர்வாதம், குஷ்டரோகம், கபோதித்தனம் முதலிய பல வியாதிகளும் கடைசியாய் மரணமுந்தான். இவைகளை நீக்கவும் தேவன் தமது அற்புத வல்லமையைப் பிரயோகித்தார். இப்படிச் செய்ததினுலேயே தம்மை மனிதருக்கு மீட்பரென்று காட்டினுர். உலகத்திலேயும் பாவத்தினுலுண்டான பல சீர்கேடுகள் வெளிப்படுகிறது. பஞ்சபூதங்களால் மனுஷருக்கு எவ்வளவோ கெடுதிநேரிடுகிறது. உயிரில்லாத சிருஷ்டிகளுங்கூட மனுஷனைச் சேர்ந்த மார்க்க நியம சங்கையோடு சம்பந்தப்பட்டவைதான். மனுஷன் பாவத்தில் விழுந்தபோது அவனேடுகூட அவைகளும் கேவலமடைந்து, அவனைப்போலவே அர்த்தநாசத்திற்கு அடிமையாய்ப் போச்சுது. இழந்துவிட்டதை மனுஷனுக்குத் திரும்பக் கொடுக்கும்படியாக இரக்ஷகர் வந்ததினுலே அவர் கடலின்மேல் நடந்தார். ஒரு வார்த்தையினுல் காற்றையும் கடலையும் அதட்டினுர். இந்தப் படைப்புகள் மனுஷனை விரோதித்து, அவனுக்கு அடிபணிந்து தொண்டுசெய்கிறதற்குப் பதிலாய் அவனை அழிக்கிறதற்கு எதுகரமாயும் இருந்தபடியால், அவைகளினின்றும் அவனை மீட்கும்படிக்கு இப்படிப்பட்ட

அற்புதங்களையும் செய்தார். இவைகளில் இரண்டு மூன்றைக் குறித்து இதுவிஷயத்தைத் தெளியக்காட்ட ஏதுவில்லாவிட்டாலும்; அவைகளினாலே தாம் மனுஷருக்கு நன்மைசெய்ய வேண்டுமென்றே ரூபித்தார். அப்பம் அதிகமாய் வளர்ந்து கொண்டிருக்கச்செய்த அதிசயத்தைக் கவனியுங்கள். பாவத்தினிமித்தம் வந்த பூர்வசாபத்தால் பூமி பலன்கொடாத பாழ் நிலமாச்சுது. மனுஷன் வேர்வைவிழ உழைத்து தனக்கு ஆகாரம் சம்பாதிக்கவும் வேண்டியதாச்சுது. இந்த அற்புதத்தைக்கொண்டு இரக்ஷகர் அந்தச் சாபத்தை நீக்கி, ஆதிகாலத்திலிருந்த அப்பத்தின் ஏராளத்தையே மனுஷனுக்கு மறுபடியும் அளித்தார். வனாந்தரத்தில் அப்பமில்லாமல்போகிறதும் கலியாணவிருந்தில் இரசமில்லாமல்போகிறதும் ஆகிய இப்பேர்ப்பட்ட குறைவும் வருத்தமும் பூர்வத்தில் மனுஷனுக்குக் குறிக்கப்பட்ட பங்கல்ல. பூமிஅடங்கலும் அவனுக்குத் தொண்டூழியம்செய்து சகலமும் சம்பூரணமாய் அவனுடைய மடியில் சொரிந்துகொண்டிருக்கச் செய்தது. பசியும் தாகமும் மற்றெந்த வருத்தமும் ஆதாமின் பாவத்தால் உண்டானபடியால் இரண்டாம் ஆதாமாகிய இவர், முதலாம் ஆதாம் போக்கடித்துவிட்டதை மீட்டுக்கொடுக்கும்படி வந்து, இவ்வித குறைவையெல்லாம் நிவிர்த்தியாக்கினார்.

அற்புதமானது சன்மார்க்கத்தைச் சார்ந்த செய்கையாதலால், இத்தன்மையோடு கூடினதாய் அது வெளிப்பட்டு திவ்வியமான பரிசுத்த உபதேசங்களுக்கு முத்திரையாகும்போதுமாத்திரந்தான் அதை ஒப்புக்கொள்ளவேண்டியது. அற்புதம் உபதேசத்திற்கு முத்திரையாக இருக்கிறது எவ்விதமோ, அவ்விதமே உபதேசமும் அற்புதத்திற்கு இருக்கவேண்டியதும் அவசியம். ஆதலால் ஒன்றைக்கொண்டு ஒன்றைச் சோதிக்கலாம். இதை விட்டுப்போட்டு ஒருவன் அற்புதஞ்செய்கிறபடியால், அதை யிட்டுமாத்திரம் அவன் சொல்லும் உபதேசம் தேவ அனுமதி பெற்று வந்திருக்கவேண்டுமென்று சொல்வது நியாயமேயல்ல. கிறிஸ்துவை அற்புதஞ்செய்ததினால்மாத்திரம் லோகரக்ஷகராக ஒப்புக்கொள்ளவேண்டுமென்று போதித்தால் அற்புதங்கள்

செய்கிற மற்றப்பேர்களை நாம் எப்படித் தள்ளலாம்? அந்திக் கிறிஸ்துவாகிறவனும் அதிசயங்களையும் அற்புதங்களையும் செய்வான் என்றே சொல்லியிருக்கிறது. இந்த நியாயப்படி அவனையும் ஏற்றுக்கொண்டு அவனுடைய உபதேசத்திற்குக் கீழ்ப்படியவேண்டும் அல்லவோ; ஒருபோதும் அப்படிச் செய்யப்படாது. அற்புதமும் உள்ளபடி சரியானதென்று அதனிடத்தே விளங்கவேண்டும்; உபதேசமும் பரிசுத்தமுள்ளதென்று தனக்குள்ளேதானே வெளிப்படவேண்டும். அப்போதுதான் உபதேசம் அற்புதத்தினால் உறுதிப்படும். அற்புதத்தைக்கொண்டு மாத்திரம் ஒரு உபதேசத்தைச் சத்தியமென்று ரூபிக்க எண்ணுகிறது தப்பிதமும் மோசடியுமாயிருக்கிறது. கிறிஸ்துமார்க்கம் சத்தியமென்பதற்கான திருஷ்டாந்தங்கள் எழுதுகிறபேர்கள் அற்புதவிஷயத்தை எடுத்துப்பேசுகையில் மேற்கண்ட நியாயத்தை நன்றாய் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும்; இல்லாவிட்டால் அநேகரைத் தப்பித அபிப்பிராயத்திற்கு உட்படுத்தவேண்டிவரும்.



## 4. அதிகாரம்.

### இரட்சகர் செய்த அற்புதங்களுக்கும் மற்றப்பேருடைய அற்புதங்களுக்கும் இருக்கப்பட்ட வித்தியாசம்.

முதலாவது: பழைய ஏற்பாட்டின் காலத்து அற்புதங்களைக் கவனிப்போம்.

நமது ரக்ஷகர் செய்த அற்புதங்களை இவைகளோடு ஒத்துப்பார்த்தால் பலவித வித்தியாசங்களைக் காணலாம். விசேஷித்த ஒரு வித்தியாசம் என்னவென்றால், பழைய ஏற்பாட்டின் காலத்து மகாத்துமாக்கள் எவ்வளவோ வருந்தி பிரயாசத்தோடு அற்புதஞ்செய்ததாகத் தோன்றும். சிலவேளைகளில் காரியம் தாமதப்பட்டபடியால் அற்புதம் நடக்குமோவென்கிற

சந்தேகமும் இருந்தது. இரக்ஷகரோ யாதொரு வருத்தமுமில்லாமல் இலகுவாய்ச் செய்துமுடித்தார். அவர் வாயிலிருந்து வார்த்தையும் பிறந்தது, உடனே காரியமும் நடந்தது. மோசே தன் சகோதரிக்கிருந்த குஷ்டரோகம் நீங்கும்படி எவ்வளவோ கருத்தாய் தேவனோடு போராடி 'ஆ தேவனே! அவளை குணமாக்கும்' என்று கெஞ்சினபோதிலும் தட்சணமே காரியம் ஆகவில்லை (எண். 12. 13—15.); கிறிஸ்துவோ ஒரு குஷ்டரோகியைத் தொட்டமாத்திரத்தில் சொஸ்தமாக்கிப் போட்டார் (மத். 8. 3.). பத்து குஷ்டரோகிகளை அவர் தொடக்கூடச்செய்யாமல் தூரமாய் நின்றுகொண்டு, தமது வல்லமையாகிய சித்தத்தினாலே அவர்களைச் சுகப்படுத்தினார் (லூக். 17. 14.). எலியா எவ்வளவோ நேரம் பிரார்த்தனைபண்ணின பின்னும், ஊழியக்காரனை எழுவிசைபோய்ப் பார்த்துவரச் செய்ததின் பின்னுமே மழைக்குறி கண்டது (1 இரா. 18. 42, 44.). அவன் இறந்துபோன பிள்ளையின்மேல் மூன்றுதரம் விழுந்து கர்த்தனை நோக்கிக் கெஞ்சினபிறகுதான் வெகு பிரயாசத்தின்பேரில் பிள்ளைக்கு உயிர்வந்தது (1 இரா. 17. 21, 22.). எலிசாவும், சூநேமியாளுடைய பிள்ளைக்காக இதைவிட அதிக பிரயாசப்பட்டும் உடனே காரியம் சித்தியாகாமல், இருக்க இருக்க உயிர்வந்ததாய் வாசிக்கிறோம் (2 இரா. 4. 35—39.). கிறிஸ்துவோ தாம் செய்த அற்புதங்களினால் தம்மைச் சீவனோடிருக்கிறவர்களுக்கும் செத்தவர்களுக்கும் ஆண்டவரென்று வெளியரங்கப்படுத்தினார். வழக்கமான காரியங்களைச் செய்கிறதுபோல மரித்தவர்களையும் பிரயாசமின்றி உயிரோடெழுப்பினார். மனுஷர்களாயிருந்தபேர்கள் செய்த அற்புதங்களினால் அவர்கள் தேவன்பேரில் வைத்த நம்பிக்கையும் விசுவாசமும் எவ்வளவோ அதிகமாய் துலங்கினபோதிலும், சிலவேளைகளில் அவர்களுக்குள்ள பெலவீனமும் வெளிப்பட்டது. அவர்கள் அவிசுவாசமும் பொறுமையின்மையும் தெளிவாயிற்று. கர்த்தருடைய வல்லமையைப் பகிரங்கப்படுத்துவதற்கு உபகரணமாயிருந்த மோசேயும், பதஷ்டமாய்ப் பேசி அவிசுவாசத்திற்கு இடங்கொடுத்தான் (எண்.

20. 11.); குமாரனிடத்திலோ பிதா தமக்கு எப்போதும் செவி கொடுப்பாரென்னும் நம்பிக்கை இருக்கவே இருந்தது. அவருடைய கிரியைகளில் மனுஷத்தன்மையான பெலவீனம் கொஞ்சமேனும் காணப்படுகிறதில்லை.

இவ்விருவகை அற்புதங்களும் சிலபோது ஒரேகண்டசீராய்த் தோன்றினாலும் நம்முடைய இரக்ஷகர் செய்ததுவோ அதிக விசேஷமுடையதும், ஆச்சரியமுமானதாய்க் காணும். எலிசா இருபது அப்பங்களைக்கொண்டு நூறுபேரைப் போஷித்தான் (2 இரா. 4. 42—44.); இரட்சகரோ ஐந்தப்பங்களைக்கொண்டு ஐயாயிரம்பேரைப் போஷித்தார். பழைய ஏற்பாட்டுக் காலத்து மகாத்துமாக்களுக்கு அற்புதஞ்செய்கிற ஏதோ ஒரு உபகரணம் கையிலிருந்தது. சிவந்தசமுத்திரத்தை அடித்தபோதும், மற்றமற்ற அற்புதங்களைச் செய்தபோதும் மேசேயின் கையில் ஒரு கோல் இருந்தது; அதில்லாவிட்டால் அவனால் ஒன்றும் ஆகாது (யாத். 7. 19; 8. 14; 9. 23; 10. 13; 14. 16. மு.). கசப்பான தண்ணீரை மாற்றுகிறதற்கு ஒரு மரமிருந்தது (யாத். 15. 25.). எலியா தன் வஸ்திரத்தைக்கொண்டு ஆற்றை இரண்டாய்ப் பிரித்தான் (2 இரா. 2. 8.). எலிசா ஒரு ஊற்றில் உப்பிட்டு அதை நல்லதண்ணீராக்கினான் (2 இரா. 2. 20.); இரக்ஷகரோ தாம் செய்த அற்புதங்களை ஒரே ஒரு வார்த்தையினாலாவது கையினால் தொட்டாவது செய்தார் (மத். 20. 34.). வேறு எதையாவது அவர் உபயோகித்திருந்தால் அதைத் தம்மிலிருந்துதானே பிரயோகித்தார் (மாற். 7. 33; 8. 23. யோவா. 20. 22.), அவர் ஒரே ஒருவிசை புறம்பான ஒரு எத்தனத்தைப் பிரயோகித்ததாகக் காணப்பட்டாலும் (யோவா. 9. 6.). அதைப்போலொத்த அற்புதங்களைச் செய்த வேறு சமயங்களில் அப்படிப்பட்டதொன்றையும் பிரயோகியாததினாலே தமதிஷ்டப்படி சகலத்தையும் செய்கிறாரென்றும், அது தமக்கு அவசியமாய் வேண்டியதல்லவென்றும் காண்பிக்கிறார். இன்னொருவிதமாயும் இது உண்மையென்று ரூபிக்கலாம். மோசே, அப்போஸ்தலர் முதலானவர்களோ

இன்னொருவருடைய நாமத்தைச் சொல்லி இவ்விதம் அவருக்கு மகிமையைச் செலுத்தி அற்புதங்களைச் செய்தார்கள். அதாவது, 'நீங்கள் நின்றுகொண்டு கர்த்தர் இன்று உங்களுக்குச் செய்யும் அவருடைய இரட்சிப்பைப் பாருங்கள்' என்றும் (யாத். 14. 13.), 'நசரேயனாகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே நீ எழுந்து நட' என்றும் (அப். 3. 6.), 'ஐநேயாவே! இயேசுகிறிஸ்து உன்னைக் குணமாக்குகிறார்' என்றும் கண்டிருக்கிறவைகள்தான் (அப். 9. 34. மாற். 16. 17. லூக். 10. 17. யோவா. 16. 10.). இயேசுவோ தம்முடைய நாமத்தினாலேயே தம்மிடத்திலிருந்த வல்லமையைக் கொண்டே அற்புத கிரியைகளை நடப்பித்தார். அதாவது 'எனக்குச் சித்தமுண்டு சுத்தமாகு' என்கிறார் (மத். 8. 3.); 'ஊமையும் செவிடுமான ஆவியே இவனைவிட்டுப் புறப்பட்டுப்போ,' என்கிறார் (மாற். 9. 25.); 'வாலிபனே எழுந்திருவென்று உனக்குக் கட்டளையிடுகிறேன்' என்கிறார் (லூக். 7. 16.). அவர் விசேஷித்த ஒரு அற்புதஞ்செய்யப்போன சமயத்தில் அவர் ஜெபம்பண்ணினது தமக்கில்லாத வல்லமையைப் பெற்றுக்கொள்ளும்படியல்ல, தாமும் பிதாவும் ஒன்றாயிருக்கிறோம் என்பதைக் காட்டும்படிக்கே அப்படிப் பிரார்த்தித்தார். இப்படியென்று அந்தச் செபத்தினாலேயே அவருடைய சீஷர் அறிந்துகொள்ளும்படி செய்தார் (யோவா. 11. 41, 42.). அவரைக்குறித்து வானத்திலிருந்து உண்டான சாக்ஷி அவர்கள்நிமித்தமே உண்டாயிற்றென்று திட்டமாய்ச் சொன்னார். மனுஷர் எவ்வளவு வல்லமைசாலிகளாயும், எவ்வளவு பரிசுத்தராயுமிருந்தாலும் இவரை அவர்களோடு கொஞ்சமும் சரிக்கட்டவேபடாது. அவர்களிலும் இவர் எவ்வளவோ விசேஷித்தவர், மேலானவர் என்று அறிந்துகொள்வது நமக்கு எவ்வளவோ அவசியம்.

இரக்ஷகர் செய்த அற்புதங்களும், பழைய ஏற்பாட்டுக் காலத்து அற்புதங்களும் சில விஷயங்களில் ஒத்திணங்கியும், சிலதுகளில் வேறுபட்டுமிருக்கின்றன என்று மேற்சொன்னவைகளினால் எண்ணத்தக்கது. எப்போது பழைய ஏற்பா

டும் புதிய எற்பாடும் சத்தியவேதத்தின் பங்குகளாய் இருக்கிற தோ, அப்போதே அவைகளிலுள்ள அற்புதங்களும் இப்படி ஒன்றுபடுமென்றும் நாம் எதிர்பார்க்கத்தக்கதுதான். தாழ்ந்த திலே மேலானதின் தன்மையை விளக்கிக்காட்டத்தக்க குறிப்புகள் இருக்கச்செய்வது தேவகற்பிதம். என்றாலும், தேவனுடைய இராச்சியமானது எக்காலத்தும் வளர்ந்தோங்குகிற தன்மையுள்ளதாகையாலும், தேவன் தம்மைக்குறித்து மனிதருக்குக் காலத்துக்குக்காலம் அதிக தெளிவான அறிவை உணர்த்துகிறவரானபடியாலும், பழைய ஏற்பாட்டில் இல்லாததை புதிய ஏற்பாட்டிலே இருக்கக் காண்கிறதும் நியாயமே. பூர்வகாலங்களில் நம்முடைய பிதாக்களிடத்தில் தீர்க்கதரிசிகளைக்கொண்டு பேசின அவரே கடைசிக்காலங்களில் தமது குமாரனைக்கொண்டு பேசுகிறார். இந்தக் குமாரன் மற்றவர்களைவிட அதிக வல்லமையுள்ளவராயிருக்கிறது அவருக்குரிய விசேஷமும், நமக்கான காரியமுமாம்.

இந்தக் காரணத்தினால் இவ்விருவகை அற்புதங்களுக்கும் இருக்கப்பட்ட வித்தியாசத்திற்கு முகாந்தரம் தெரியலாம். பழைய ஏற்பாட்டில் சொல்லியிருக்கிற அற்புதங்கள் தேவனுடைய உக்கிரகோபத்தைக் காண்பிக்கிறவைகள். இவைகளும் புதிய ஏற்பாட்டு அற்புதங்களைப்போல தேவகிருபையினால் உண்டானவைகளாயிருந்தபோதிலும், கோபத்தின் காரியார்த்தமான நியாயப்பிரமாணத்தின் அற்புதங்களாகையால், அவைகள் சகலவிதத்திலும் தேவன் பரிசுத்தத்தில் எவ்வளவோ பயங்கரமானவரென்றும், அவர் பாவத்தை எவ்வளவோ பகைக்கிறாரென்றும் மனுஷருக்கு உணர்த்தத்தக்கவைகளே. இதை நாமெல்லாரும் நன்றாய்ச் சிந்தித்துக்கொள்வது அவசியம். இல்லாவிட்டால் தேவன் பாவியினிடத்தில் வைத்த நேசத்தைக்குறித்து இரக்ஷகர் சொல்லுகிறதை அசட்டைபண்ணிப் போடுவோம். நியாயப்பிரமாணத்து அற்புதங்கள் நியாயப்பிரமாணத்தின் தன்மைக்கு இசைந்தே மனிதருடைய அக்கிரமத்துக்குத் தக்க தேவகோபாக்கினையைக் கூறுகிறது. எகிப்திலே செய்யப்பட்ட அற்புதங்களும், வனாந்தரத்தில் நடந்த

அநேக அதிசயங்களும் (எண். 14. 31. லேவி. 10. 2.), அதற்குப் பிற்காலத்திலுள்ள தீர்க்கதரிசிகள் செய்த சிலதும் (2 இரா. 1. 10—12; 2. 23—25.) அப்படிக்கொத்தவைகள்தான். அவர்கள் குஷ்டரோகத்தினால் தண்டித்தார்களேயல்லாமல் (லேவி. 12. 10. 2 நாளா. 26. 19.) குஷ்டத்தைத் தாவிளையாக்கவில்லை. நல்லகையைச் சூம்பிப்போகச்செய்தார்களேயல்லாமல் (1 இரா. 13. 4.) சூம்பின கையைச் சுகப்படுத்தவில்லை. இரக்ஷகர் செய்த அற்புதங்களெல்லாம் இரக்கத்திற்கான செய்கைகளாய் இருந்ததுபோலவே பழைய ஏற்பாட்டு அற்புதங்களில் மிச்சமானது அவ்விதமானதாய் இருந்ததென்று சொல்லலாம். இரக்ஷகர்செய்த அற்புதங்களில் அத்திமரத்தைச் சபித்தது இதற்கு விகற்பமாயிருந்தபோதிலும், யதார்த்தமாய்ப் பார்த்தால் அப்படியல்ல என்று காணும். அவர் தாம் மனுஷரை அழிக்கவல்ல, இரக்ஷிக்கவந்தேனென்று காட்டுவதற்கு இதைவிட வேறே பலத்த எந்த திருஷ்டாந்தரத்தைக் காண்பிக்கக்கூடும். தம்முடைய தயவை அசட்டைசெய்கிறதற்கு வருந் தண்டனையை வார்த்தையினால் மாத்திரமல்ல, செய்கையினாலும் காண்பிக்கவேண்டுமென்று அவருக்கு எண்ணம் வந்தபோது, தமக்குச் சமீபத்திலே நின்றுகொண்டிருந்த எந்தப்பாவியையும் தண்டியாமல் சொரணையற்ற ஒரு மரத்தினிடத்தில் அவர் தமது வல்லமையைச் சாடவிட்டு இவ்விதம் மனிதரை எச்சரித்தது வெகு இரக்கமல்லவா? இரக்ஷகர் தாம் செய்த அற்புதங்களில் தேவதயவுக்கும், அன்புக்கும் எதிரிடையானது ஒன்றும் நடப்பிக்கவில்லை. பாருங்கள், ஆசீர்வதிக்கிறபோது மனிதரை ஆசீர்வதிக்கிறார், சபிக்கிறபோது உணர்வில்லாத ஒரு மரத்தைச் சபிக்கிறார் (லூக். 9. 54.). செபதேயுவின் மக்கள் அவரை நோக்கி எலியா செய்ததுபோல வானத்திலிருந்து அக்கினியை வருத்தவேண்டுமென்று கேட்டபோது, அவர் அவர்களை "நீங்கள் இன்ன ஆவியை உடையவர்களென்று அறியீர்கள்" என்று அதட்டினார். "இப்படிச் சொன்னதினாலே நீங்கள் பழைய ஏற்பாட்டுக்கும் புதிய ஏற்பாட்டுக்குமிருக்கிற வித்தியாசத்தைக் கவ

ணிக்கிறதில்லை. பழைய ஏற்பாட்டு நோக்கத்திற்கு இசைய நீதியின்படி பழிவாங்கவேண்டும் என்கிறீர்கள். இது புதிய ஏற்பாட்டின் தன்மைக்கு உதவவே உதவாது. அன்பினால் எவப்பட்டு மன்னிக்கிறதுதான் என்னுடைய அற்புதங்களிலிருக்கவேண்டிய லட்சணம்" என்பதுபோல அவர்களுக்கு உணர்த்தினார்.

மேலும் பழைய ஏற்பாட்டு அற்புதங்கள் வெளிப்படையானவைகளாய்க் காணப்படுகிறது. எப்படியெனில் சமுத்திரம் ரண்டுபட்டது (யாத். 14. 21.); ஆறு நடுவே பிரிந்தது (யோசு. 3. 14. 2 இரா. 2. 8, 14.); பூமி பிளந்தது (எண். 14. 31.); வானத்திலிருந்து அக்கினி வந்தது (1 இரா. 18. 38 2 இரா. 1. 10, 12.); அக்கினிக்குத் தகனிக்கும் வல்லமை அற்றுப்போயிற்று (தானி. 3.); துஷ்ட மிருகங்களுக்குப் பக்ஷிக்கும் தன்மை கொஞ்சமும் இல்லாமல் போய்விட்டது (தானி. 6. 18, 22. 1 இரா. 13. 24, 28.); எல்லா அற்புதங்களும் இப்படிப்பட்டதேயென்று சொல்லுகிறதில்லை. புதிய ஏற்பாட்டு அற்புதங்கள் முக்கியமாய் மனுஷசம்பந்தமாய்ச் செய்யப்பட்டது. பழைய ஏற்பாட்டு அற்புதங்களோ சிருஷ்டிகள் சம்பந்தமாய்மாத்திரம் செய்யப்பட்டதென்று சொல்லுகிறோம். பின்னும் அவைகள் அஞ்ஞானிகளுடைய விக்கிரகங்களைவிட இஸ்ரவேலின் தேவன் அதிக வல்லமையுள்ளவரென்று மெய்ப்பிக்க பிரகிருதி சம்பந்தமான புறக்காரியங்களையடுத்தே செய்யப்பட்டது. எகிப்தில் நடந்த அற்புதங்களும், பாபிலோனில் செய்யப்பட்ட அற்புதங்களும் அந்தச் சாதியார் வணங்கிவந்த விக்கிரகங்களுக்கு விரோதமாய்ச் செய்யப்பட்டபடியால் அவைகள் தேவ வல்லமையையே உத்தண்டமாய்க் காண்பிக்கத்தக்கவைகள். அவைகளைப் பெருங்காற்றுக்கும், அக்கினிக்கும் உபமானப்படுத்துகிறதால், இரக்ஷகருடைய அற்புதங்களை மெல்லென இடும் சத்தத்திற்கு ஒப்பாக்கலாம். பழைய ஏற்பாட்டின் காலத்திலே தேவனவர் தம்முடைய சனங்களுக்கும், அவர்களோடு சம்பந்தப்பட்ட சாதியாருக்கும் தாம் மற்ற தேவர்களைப்போலொத்த ஒரு தேவனல்ல, மலைகளின் தேவனுமல்ல, மைதா

னத்தின் தேவனுமல்ல, பூலோகம் அடங்கலுக்கும் இஸ்ரவேலின் தேவனே தேவன் என்கிறதைப் படிப்பித்துக்கொடுத்தார் (1 இரா. 20. 23.). இரக்ஷகர் மனுஷாவதாரமெடுத்த காலத்தில் அவர்கள் இந்தப் பாடத்தை நன்றாய்ப் படித்திருந்தார்கள். பல தேவர்களை அநேகர் இன்னும் வணங்கிவந்தபோதிலும், அந்தத் தப்பறையான எண்ணம் அநேகரைவிட்டு ஒழிந்துபோயிற்று. இரக்ஷகர் தம்முடைய அற்புதங்களைக்கொண்டு இதைவிட உயர்ந்ததும் மேலானதுமான சத்தியங்களைப் போதித்தார். அவர் மனுஷீகத்தை எடுத்தவரானபடியால் அதற்கே நன்மைசெய்தார். மனுஷருடைய சரீரத்திற்கும் ஆத்துமாவுக்கும் அடுத்த அற்புதங்களையே செய்தார். மற்ற அற்புதங்களெல்லாம் இரண்டாம் பட்சந்தான். முன்போலவே இரக்ஷகர் பூமியையும் அதிலுள்ள யாவையும் நடத்திக்கொண்டுவருகிறார். ஆகிலும் அவருடைய வல்லமை உலக ஆளுகையிலல்ல, மனுஷரிடத்திலேயே காணப்படுகிறது. ஆதலால் பழைய ஏற்பாட்டு அற்புதங்களைப்போல புதிய ஏற்பாட்டு அற்புதங்கள் வெளியரங்கமான வேடிக்கைக்கும் ஆச்சரியத்திற்கும் ஏற்றதாயிராவிட்டாலும், அதிக ஆழ்ந்த கருத்துள்ளதும் மனுஷருக்கு அதிகப் பிரயோஜனமுள்ளதுமாய் இருக்கின்றன.

2. அப்போக்கிரிப்பா ஆகமங்களிலுள்ள அற்புதங்களைக் குறித்து:

மனிதர் சத்தியத்தைச் சொல்லாமல், தங்களுக்கு இஷ்டமானபடி கிறிஸ்துவானவருடைய தன்மையையும் செய்கையையும் குறித்து எழுதத் துணிவார்களானால், எப்படி எழுதுவார்களென்று காண்பிக்க இந்த அப்போக்கிரிப்பா ஆகமங்கள் உதவும். அபத்தத்தோடு சத்தியத்தை ஒப்பிடும்போது சத்தியத்தின் மேன்மை வெளிப்படுவதுபோல, இவைகளோடு ஒத்துப்பார்க்கும்போதுதான் நம்முடைய சுவிசேஷங்களில் உள்ள சத்தியம் விளங்கும். முக்கியமாய் இவ்விரண்டிலுமுள்ள அற்புதங்களைக் கவனிக்கும்போது, இந்த வித்தியாசம் நன்றாய்த் தெரியவரும். நம்முடைய சுவிசேஷங்களில் உப

தேசம் முதன்மையாயும், அற்புதம் இரண்டாவதாயும் வைக்கப்பட்டிருக்கிறது. அற்புதம் எவ்விதத்திலும் மனுஷருடைய சன்மார்க்க நிலைமையோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. அற்புதங்களண்டைக்கல்ல, அவைகளைச் செய்தவர் அண்டைக்கு இழுக்கப்படுகிறோம். தேவகுமாரனுடைய மகிமை அவைகளால் வெளிப்பட்டாலும் அவைகளிடத்திலல்ல; அவைகளைச் செய்தவரிடத்திலேயே நம்முடைய நம்பிக்கையை வைக்கப் படித்துக்கொள்ளுகிறோம். அவைகளால் அவருக்கு மேன்மை உண்டாகிறதில்லை, அவரால் அவைகளுக்கு கனம் கிடைக்கிறது. சுவிசேஷ அற்புதங்கள் ஆச்சரியத்தைமாத்திரம் பிறப்பிக்கிற ஒன்றோடொன்று சம்பந்தப்படாத வீண்கதைகளாயல்ல, ஏதோவொரு விசேஷித்த காரியத்தோடு முற்றிலும் சம்பந்தப்பட்டு ஒன்றோடொன்று நன்றாய் இசைந்த பங்குகளாகக் காணப்படுகிறது. அப்போக்கிரிப்பாவிலுள்ள அற்புதங்கள் அப்படியல்ல. அவைகளில் எங்கும் அற்புதமே சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அற்புதங்களும் கிறிஸ்துவின் பகிரங்க ஊழியத்தோடு சம்பந்தப்பட்டவைகளல்ல. அவைகளில் ஒன்றுவது ஞானஸ்நானம் பெற்றபிறகு அவர் செய்த அற்புதமல்ல, எல்லாம் அவர் குழந்தையாயிருந்தபோது நடப்பித்தவைகள். தமது பாலியத்தில் அவர் யாதொரு அற்புதமும் செய்யவில்லையென்று சுவிசேஷத்தினால் திட்டமாய் அறிந்துகொள்ளுகிறோம். கலிலேயாவிலுள்ள கானாவில் நடந்ததுதான் அவர் செய்த முதல் அற்புதம். (யோவா. 2. 11.)

மேலும் சொன்ன வார்த்தைக்கு அல்லது ஒரு உபதேசத்திற்கு முத்திரையாகவும் அடையாளமாகவுமல்ல, அதிசயமான வேடிக்கையாகமாத்திரம் சொல்லியிருக்கிறது. மேலான நோக்கமொன்றும் அவைகளிலில்லை. வியப்புண்டாக்கவேண்டுமென்கிற நோக்கமேயொழிய, சுவிசேஷகனைப்போல இயேசுவானவர் தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்துவென்று நீங்கள் விசுவாசிக்கும்படியாகவும், விசுவாசித்து அவருடைய நாமத்தினாலே நித்தியசீவனை அடையும்படியாகவும் இவைகள் எழுதப்பட்டிருக்கின்றனவென்று அவைகளை எழுதினவன்

சொல்லமாட்டான். மேலும் அவைகள் பக்திக்கடுத்தவைகளு மல்ல, சன்மார்க்கத்திற்குரிய குறிப்பே அவைகளில் இல்லை. இரக்ஷகனை தன்னிஷ்டப்படி நடக்கிற முரண்டுத்தனமுள்ள பிள்ளையாகவும், தனக்குத் தீங்குசெய்கிற யாவரிடத்திலும் பழி வாங்குகிற சிந்தையிருந்தபடியால் யாவரும் பயந்து ஓடத் தக்க பிள்ளையாகவும், அவர் போகிற இடங்களிலெல்லாம் மற்றப் பிள்ளைகளுக்கு துன்பத்தை உண்டாக்கினபடியால், அவர்களுடைய தாய்தந்தைகள் இவருடைய பெற்றோரிடத் தில் வந்து அவனை வீட்டிலேயே வைத்திருக்கவேண்டும், வெளியே அனுப்பக்கூடாது என்று சொன்னதாகவும் காட்டி யிருக்கிறது. கேட்கிறதற்கு முதலாய் அத்தனை நன்றாய் இரா விட்டாலும், சில திருஷ்டாந்தங்களை இங்கே எடுத்துக்காட்டு கிறோம். பிள்ளைகள் அவரோடு விளையாட மனமற்றிருந்த போது அவர்களைத் துரத்தி, அவர்களை வெள்ளாட்டுக்குட் டிகளாக மாற்றினாராம். ஒரு பிள்ளை அவர்மேல் தற்செய லாய் விழுந்து அவனைக் கீழே வீழ்த்தினபோது, 'நீ என்னை விழத் தள்ளினபடியால் நீ விழுந்து எழுந்திருக்கமாட்டாய்' என்று சொல்ல, அந்தப் பிள்ளை விழுந்து இறந்துபோயிற் றாம். எபிரெயுபாஷையின் அரிவரியிலுள்ள எழுத்துகளைப் படிக்கிற ஒழுங்கைக்குறித்து தன் உபாத்தியாயரோடு தர்க்கித்த போது உபாத்தியாயர் தன்னை அடித்தபடியால் இயேசுவான வர் அவனைச் சபிக்க, அவர் கை உலர்ந்து முகம் குப்புற விழுந்து இறந்துபோனாராம். இப்படி அடிக்கடி நடந்தபடி யால் யோசேப்பும் மரியாளைப் பார்த்து அவனை எதிர்க்கிறவ னெல்லாம் மாண்டுபோகிறான்; ஆதலால் நமது பிள்ளையை வீட்டிற்குள்ளே வைத்திருக்கவேண்டுமென்று சொன்னாராம். சிறுவயதிலேயே அவரிடத்திலே கோபமும் எரிச்சலும் அதிக மாயிருந்தது. ஐந்துவயதாய் இருக்கும்போது ஒரு சிறு குளம் வெட்டி மண்ணினால் குருவிகளைச்செய்து விளையாடிக்கொண் டிருக்கும் தருணத்தில், ஒரு வேதபாரகனுடைய சிறுபையன் ஓய்வுநாளில் இப்படிச் செய்கிறது சரியல்லவென்று கோபங் கொண்டு மடையைத் திறந்து தண்ணீரையெல்லாம் விட்டு

விட்டபடியால், இயேசு எரிச்சலடைந்து பல வார்த்தைகளைச் சொல்லி சபித்து அவனைக் கொன்றுபோட்டாராம்.

பரிசுத்த பிள்ளையாகிய இயேசுவைக்குறித்து இந்த அற்புதங்களை எழுதினவர்கள் இப்படிச் சொல்லியிருக்கிறார்கள்; தங்கள் குணத்திற்கு இசைவாகப் பேசியிருக்கிறார்கள். முற்றிலும் பரிசுத்தமுள்ளவர் எப்படிப்பட்டவராயிருப்பாரென்று அவர்களுக்கும் தெரியவில்லை. இன்னும் சில அற்புதங்கள் கைஜாலவித்தைபோல் இருக்கிறதேயொழிய, வல்லமையையும் அன்பையும் காட்டுகிறதாகத் தோன்றமாட்டாது. இயேசுவானவர் சாயக்காரனொருவனுடைய வீட்டிற்குப் போனார், அங்கே பல மனிதர் சாயத்திற்கென்று கொடுத்த வஸ்திரங்கள் இருந்தது; சாயக்காரனில்லாத சமயத்தில் அவர் அவைகளெல்லாவற்றையும் எடுத்து சாயத்தொட்டியில் போட்டுவிட்டார். சாயக்காரன் திரும்பிவந்து அவரைக் கோபித்தபோது, அவர் தொட்டியினின்று ஒவ்வொரு வஸ்திரத்தையும் அவனவன் விரும்பின சாயமுள்ளதாக எடுத்துக்கொடுத்தாராம். அவரும் இன்னும் சில பிள்ளைகளும் களிமண்ணினால் பக்ஷிகளையும் மிருகங்களையும் செய்து அவனவன் தான் செய்ததைக்குறித்துப் பெருமை பாராட்டிக்கொண்டிருந்தபோது, நான் செய்வதை நடக்கச் செய்கிறேன் பார் என்று இயேசு சொல்ல, மிருகங்கள் குதித்து, பறவைகள் பறந்து, அவர் கூப்பிட அவைகள் அவரண்டை வந்து கொடுத்ததை வாங்கித் தின்றுகொண்டிருந்ததாம். அவர் சிறுகுழந்தையாய் தாயினிடத்தில் பால்குடித்துக் கொண்டிருந்தபோது தன் தாய் கனிபறிக்க ஒரு பேரீச்ச மரத்தைத் தாழச்சொல்ல, அது அப்படியே தாழ்ந்து அவர் உத்தரவுகொடுத்தபிறகு மறுபடியும் முன்போலவே உயரப்போய் விட்டதாம். தண்ணீர்கொண்டுவர தாய் அவரைக் கிணற்றிற்கு அனுப்பினபோது பாத்திரம் உடைந்துபோக, தன் சட்டையிலே தண்ணீர்கொண்டுவந்தாராம். அவர் செய்த அற்புதங்களைப்போல அவருக்காக நடந்த அற்புதங்களும் வீணானவைகள்தான். பசுத்தொட்டியில் பிறந்திருந்த அந்தக் குழந்தையை மாடும் கழுதையும் வந்து வணங்கினதாம்.

இவைகளிலெல்லாம் மனுஷனுடைய இரக்ஷிப்புக்கடுத்தது ஒன்றுமில்லை. சொஸ்தமாக்கி தயைகாண்பித்த சில அற்புதங்களுண்டு. அவைகளிலும் இரக்ஷகரை வல்லமையும் தயவும் நிறைந்தவராகவல்ல, கோபமும் வெடுவெடுப்புமுள்ளவராகவே காட்டியிருக்கிறது. காணுகிய சீமோன் குழந்தையாயிருந்தபோது ஒரு பாம்பு அவனைக் கடிக்க, இவர் உடனே சொஸ்தப்படுத்தினராம். இந்த அற்புதங்களிலெல்லாம் விசேஷித்தது ஒன்று உண்டு. அவர் எகிப்திற்கு சிறுபிள்ளையாகக் கொண்டுபோகப்பட்டபோது, எகிப்தின் விக்கிரகங்களெல்லாம் அவரைக் கண்டமாத்திரத்தில் தரையிலே விழுந்ததாம். அவர் விக்கிரகாராதனை முற்றிலும் அகற்றிப்போடுவார் என்னும் கருத்து இதில் அடங்கியிருக்கிறது (1 சாமு. 5. 3, 4.). அவர் எகிப்திற்குப் போன வழியிலே வனாந்தரத்தில் சிங்கங்களும் காண்டாமிருகங்களும் அவரைச் சூழ்ந்துகொண்டாலும், யாதொரு தீங்குஞ் செய்யவில்லையென்று சொல்லியிருக்கிறது சுவிசேஷத்தின் கருத்துக்கு இசைவாயிருக்கிறதுமல்லாமல், காட்டுமிருகங்கள் நடுவே சஞ்சரித்துக்கொண்டிருந்தாரென்று மாற்கு சொல்லுகிறதற்கு நன்றாய் ஒத்திருக்கிறது (மாற். 1. 13.). அவர் இருந்த வனாந்தரத்தில் அநேகம் கொடிய துஷ்டமிருகங்கள் இருந்ததென்று காட்டவேண்டுமென்கிற நோக்கத்தோடுமாத்திரம் இந்த வார்த்தைகள் எழுதப்படாமல், விசுவாசிகளின் தலைவனும் இரண்டாம் ஆதாமுமாகிய இவர் மூலமாய் பரதீசின் பாக்கியம் நமக்குக் கிடைக்குமென்று காட்டவும் இப்படிச் சொல்லியிருக்கிறது (ஆதி. 1. 28.). இப்படிப்பட்ட இரண்டு மூன்று அற்புதங்களை மேற்காட்டிய நல்ல கருத்துள்ளவைகள் என்பதாகப் பாவித்துக்கொள்ளலாம். இவைகளைத்தவிர அப்போக்கிரிப்பா ஆகமங்களிலுள்ள மற்ற அற்புதங்களெல்லாம் வீண்கட்டுக்கதைகள்தான். அவைகளில் யாதொரு நல்நோக்கமும் பயனுமில்லை. இவைகளை நாம் பார்க்கும்போது சரியான அற்புதங்களுக்கு வல்லமையொன்றுமாத்திரம் போதாது; அதோடு ஞானமும் அன்பும் கலந்திருக்க வேண்டும் என்பதையும், வல்லமை ஒன்றுதான் அற்புதத்தில்

விசேஷித்ததென்று சொல்வோமானால் தேவவல்லமையைப் பரியாசம்பண்ணுகிறவர்களாய் இருப்போமென்பதையும் நன்றாய்க் கற்றுக்கொள்ளுகிறோம். இந்த அப்போக்கிரிப்பா சுவிசேஷங்களில் காட்டியிருக்கிறவரைப்போலொத்தவர் பூமியிலிருந்தது நிசமானால், அவர் ஒரு மந்திரவாதியாகவே இருந்திருக்கவேண்டும். அப்படிப்பட்டவனைக் கண்டு மனிதர் பயப்படுவார்களேயொழிய, அவன்பேரில் நம்பிக்கை வைக்கவேமாட்டார்கள்.

3. சபையில் பிற்காலங்களில் நடந்த அற்புதங்கள்.

இவைகளைக்குறித்துச் சகலத்தையும் விஸ்தாரமாய் எடுத்துக்காட்டுவதற்கு இது சமயமல்ல. ஆயினும் சபைகளில் அற்புதங்கள் நடக்கிறது அதற்கு மகிமையென்றும், அற்புதங்கள் நடவாமலிருப்பது ஒரு குறைவென்றும் அநேகர் எண்ணுகிறபடியால், இதைக்குறித்துச் சில காரியங்களைச் சொல்வது அவசியம். எப்பொழுதும் சபைகளில் அற்புதம் நடக்கவேண்டுமென்பது கர்த்தருடைய நோக்கமல்ல. ஆதலால் அற்புதம் செய்கிற வரம் சபைக்கு இருந்ததென்றும், உண்மைத்தாழ்ச்சியால் சபையானது அதை இழந்துபோயிற்றென்றும் சொல்வது சரியல்ல.

தேவன் தமது சனங்களை ஆதிமுதல் நடத்திவந்த விசத்தைப் பார்க்கும்போது, அற்புதஞ்செய்கிற வரம் எப்பொழுதும் சபையிலிருக்குமென்று நாம் எதிர்பார்க்க நியாயமில்லையென்று அறியலாம். பழைய ஏற்பாட்டிலிருந்த தேவபக்தர் எல்லாரும் அற்புதஞ்செய்யவில்லை; சிலர்மாத்திரந்தான் செய்தார்கள். அவர்களுங்கூட எப்பொழுதுமல்ல, சில விசேஷித்த தருணங்களில் மாத்திரம் செய்தார்கள். விசுவாசிகளின் தகப்பனாகிய ஆபிரகாம், தேவனால் ஏற்படுத்தப்பட்ட தாவீது இராசன், தேவனுக்கு அருமையான தானியேல் தீர்க்கதரிசி, இவர்கள் அற்புதஞ்செய்ததாக நாம் எங்கும் வாசிக்கிறதில்லை; அவர்களுக்காக தேவன் அற்புதம் செய்தது மெய்; ஆனால் அவர்களே அற்புதஞ்செய்ததாகச் சொல்லப்படவில்லை. பழைய ஏற்பாட்டின் சரித்திரத்தில் முக்கியமாய் இரண்டு விசேஷித்த காலங்களில்தான் அற்புதம் நடந்தது. மோசே,

யோசுவா என்பவர்களுடைய காலத்தில் தேவனுடைய இராச்சியத்தை ஸ்தாபிக்கிறதற்காகவும், எலியா, எலிசா என்பவர்களுடைய காலத்தில் இஸ்ரவேலின் கெட்ட இராசாக்கள் தேவாராதனையைக் கெடுத்து லேவியருடைய ஆசாரிய முறைமையைக் குலைத்துப்போட்டபோது சபையைச் சீர்திருத்தவும், தேவனுடைய ஊழியக்காரரை இஸ்ரவேலர் ஏற்றுக்கொள்ளப்பண்ணவும் அற்புதங்கள் செய்யப்பட்டது. நினைத்தபோதெல்லாமல்ல, சில விசேஷித்த சமயங்களில் அவைகள் அவசியம் வேண்டியிருந்தபொழுது மாத்திரந்தான் அற்புதங்கள் நடந்தது. கிறிஸ்துசபையின் மத்தியகாலங்களில் நடந்ததாகச் சொல்லியிருக்கும் அற்புதங்களோ அப்படியல்ல. கணக்குவழக்கில்லாமல் நடந்ததாகவும், ஒரு பரிசுத்தவானை விட வேறொருவன் அதிக அற்புதங்களைச் செய்ததாகவும், சிலர் கிறிஸ்துவைப்பார்க்கிலும் அதிகமாய்ச் செய்ததாகவும் சொல்லியிருக்கிறது. யோவான் ஒரு அற்புதத்தையும் செய்யவில்லை யென்று சொல்லியிருக்கிறவண்ணமாக, இவர்களில் ஒருவனைக்குறித்தும் சொல்லவில்லை. (யோவா. 10. 41.)

மேலும் அற்புதங்கள் என்னத்திற்காகச் செய்யப்பட்டது? சத்தியத்தை உறுதிப்படுத்தவும், அது மனுஷவாக்கல்ல, தேவவாக்கென்று ரூபிக்கவும் அவிசுவாசிகளுக்கு அடையாளங்களாகச் செய்யப்பட்டது (1 கொரி. 16. 22.). கிறிஸ்துசபையில் இவைகளுக்குச் சோலியென்ன? சபையில் அநேக அவிசுவாசிகள் உண்டென்பது மெய்தான்; ஆனாலும் அப்படிப்பட்டவர்களைக்குறித்து இங்கே பேசுகிறதில்லை. அவர்கள் சத்தியத்தை அறிந்தும் தங்கள் இருதயத்தைக் கடினப்படுத்திக்கொண்டு எப்படிப்பட்ட அத்தாக்ஷியையும் புறம்பே தள்ளுவார்கள். சபையில் சேராத புறம்பான அவிசுவாசிகளைக் குறித்தே இங்கே பேசுகிறார். அவர்கள் சத்தியத்தை அறிந்தவர்களல்ல. அப்படிப்பட்டவர்களுக்குத்தான் அற்புதம் வேண்டும். அவர்களுக்கும் சபையே ஒரு அற்புதம்போல் இருக்கிறது. அதற்கு எவ்வளவோ துன்பங்கள் நேரிட்டிருந்தும், எத்தனையோபேர் அதை அழிக்கத் தேடியும் இன்னும் அது வல்ல

மையோடு உலகத்தில் பரவி தன் சத்துவத்தைக் காண்பித்து வருகிறதே பெரிய அற்புதம்.

மேலும் கண்ணுக்குத் தோன்றுகிற சகல வஸ்துக்களையும் பாருங்கள். சகலமும் ஆரம்பத்தில் அதிசயமாயிருந்தாலும், வரவர அத்தனைக்கு அதிசயமாய்க் காணப்படுகிறதில்லை. உலக சிருஷ்டிப்பு ஒரு அதிசயம். அது பராமரிக்கப்படுகிறதோ அதிசயமாய்த் தோன்றுகிறதில்லை. சகல ஜீவப்பிராணிகளும், தாபரங்களும் உண்டாவது அதிசயம். அவைகள் தற்காக்கப்படுகிறதோ அவ்வளவு பெரிய அதிசயமல்ல. அப்படிப்போல் கிறிஸ்துசபையும் துவக்கத்தில் அற்புதங்களால் ஸ்தாபிக்கப்பட்டது; ஸ்தாபிக்கப்பட்டபிறகு அற்புதங்களில்லாமல் அது பரிபாலிக்கப்பட்டுவருகிறது. புதுச்சிருஷ்டிப்பைக்குறித்தும் இப்படியே சொல்லலாம். இருதயம் மாறுதலடையும் போது பழையசுபாவம் கீழ்ப்படுத்தப்படுகிறதும் அதிசயந்தான். அசாத்தியம் சாத்தியமாகிறது; மாமிசம் கீழடங்கி, ஆவி பலத்துப்போகிறது. ஒரு இருதயம் மாறுதலடைகிறது இவ்வளவு அதிசயமாயிருக்குமானால், அநேகருடைய இருதயம் மாறுதலடைவது அதிசயமல்லவா? இந்த அதிசயம் நடந்த பிறகு ஆவியின் கிரியை வளர்ந்தேறிவருகிறது சாதாரணமான கிரியையாய்த் தோன்றுகிறது. புல்லர் என்பவர் சொல்லுகிறபடி 'அற்புதங்கள் புதிதாய் உண்டாகிற சபைகளுக்கேற்ற போர்வையைப்போல் இருக்கிறது.' பெரிய மனுஷனுக்கேற்ற வஸ்திரமல்ல. அது இராஜா சிம்மாசனத்தில் ஏறுகிறாரென்று பிரசித்தப்படுத்துவதுபோலிருக்கிறது. அப்படி நாடோறும் செய்யவேண்டிய அவசியமில்லையே. அவர் சிம்மாசனத்திலேறி உட்கார்ந்தவுடனே பிரசித்தஞ்செய்வதை நிறுத்திவிடுவார்களல்லவா? மேலும் அற்புதமானது, சூரியன் உதயமாகிறதற்குச் சற்று முந்தித்தோன்றும் பிரகாசமான மேகம்போல் இருக்கிறது. அது உதயமாகி நன்றாய்ப் பிரகாசிக்கையில் அந்த மேகம் வேண்டியதில்லையே. அன்றியும் இது ஒரு கட்டடத்திற்கு அவசியம்வேண்டிய சாரம்போலவும், அல்லது வேறுவகையாய்ச் சொல்லவேண்டுமானால் வில்வளைவான கட்

டடத்திற்கு ஆதாரமாய் வைக்கும் கருப்போலவுமிருக்கிறது. கட்டடம் முடிவானபின் சாரத்தை இறக்கிப்போடுவார்கள்; கருவை இடித்துத் தள்ளுவார்கள். சபையின் துவக்கத்திற்கு அற்புதமும் இப்படித்தான் வேண்டியிருந்தது. அதின் ஆரம்பம் வெகு அதிசயந்தான். துவக்கத்தில் நடந்த அற்புதங்கள் நமக்குப் பிரயோஜனமாக எழுதப்பட்டிருக்கிறது. கண்ணாரக் கண்டவர்களுக்குக் கிறிஸ்துவைக்குறித்து எப்படி அவைகள் அத்தாக்ஷியாயிருந்ததோ, அப்படியே இப்போதிருக்கிற நமக்கும் இருக்கிறது. எக்காலத்திலுள்ளவர்களும் அதை விசுவாசிக்கும்படிக்கே அப்பொழுது நடந்தது. சுவிசேஷத்தை வாசிக்கிற நாம் இரக்ஷகர் புசல்காற்றை அமர்த்தினதையும், குஷ்டரோகியைக் குணமாக்கினதையும், செத்தவனே உயிரோடெழுப்பினதையும் கண்ணாரக்கண்டவர்கள்போல அவர் இன்னும் பஞ்சபூதங்களை ஆண்டுவருகிறாரென்றும், தீராதநோயைத் தீர்க்கக்கூடியவரென்றும், மரணத்திற்கும் ஜீவனுக்கும் ஆண்டவரென்றும் விசுவாசிக்கிறோம்.

பிற்காலத்தில் நடந்த அற்புதங்களை வாசிக்கும்போதே அவைகள் போலியானவைகளென்று வெளிப்படும். சபையில் நடக்கும் அற்புதங்கள் வேதவசனத்திலுள்ள அற்புதங்களைப்போல இரக்ஷகரும் அவருடைய அப்போஸ்தலரும் செய்த அற்புதங்களைப்போல இருக்கவேண்டும். விபரங்களில் வேறுபட்டாலும், பொதுவான தன்மையில் அவைகளைப்போல் இருக்கும். அவைகளுக்கு எதிரிடையாக நம்மைப் பஞ்சேந்திரியங்களுக்குக் கீழ்ப்படுத்துகிறவைகளாயிராது. அவைகள் சன்மார்க்கத்திற்குரிய நோக்கமும் கருத்தும் உள்ளதாயிருந்தது. அற்புதங்களின் மூலமாய்ச் சபைகளுக்கு நன்மைசெய்த இரட்சகர் அவைகளின் மூலமாய் ஆத்துமாக்களுக்கும் நன்மைசெய்து தமது மகிமையை வெளிப்படுத்தி மனிதனைத் தம்மண்டைக்கு இழுத்துக்கொண்டிருக்க, பிறகு நடக்கும் அற்புதங்கள் அவைகளுக்கு மாறுபாடாய் நோக்கமில்லாமல், வீணுக்கும் வேடிக்கைக்கும் செய்யப்பட்டிராது. சரியான அற்புதங்கள் சிரிக்கத் தக்கதாய் பரியாசத்திற்கு இடமாயிராமல் மதிப்பையும், பய

பக்தியையும் எழுப்பிவிடத்தக்கதாயிருக்கும். மேலும் வேத வசனத்தினாலும், தேவாவியினாலும் அறிவடைந்த மனச்சாக்ஷிக்கு விரோதமானதை ஸ்தாபிக்கத்தக்க அற்புதமாய் இராது. இந்த நல்ல குறிப்புகளில்லாத அற்புதங்களை நாம் முற்றிலும் தள்ளிப்போடலாம். சபைச்சரித்திரத்தை வாசித்திருக்கிறவர்கள் இவ்வித குறிப்புகளைக்கொண்டு பரிசோதிக்கும்போது, எத்தனை அற்புதங்கள் தேறுமென்று அறிந்துகொள்வார்கள்.

ரோமான் மார்க்கத்தைச் சேர்ந்த இரண்டு பரிசுத்தவான்கள் செய்த அற்புதத்தைக்குறித்து எங்கும் பெரும்பேச்சாயிருக்கிறபடியால், அதைச் சற்றே ஆராய்வது அவசியமென்று எண்ணுகிறேன். அவர்களில் ஒருவர் சேசுசபையைச் சேர்ந்த இன்னாசியு லாயலா என்பவர். இவர் இருநூற்றுக்கு அதிகமான அற்புதங்களைச் செய்தாராம். இரக்ஷகர் செய்த அற்புதங்களை அவைகளோடு ஒத்துப்பார்க்கும்போது வெகு அற்பமாய்த் தோன்றும். கிறிஸ்துவானவர் தமது வார்த்தைகளினாலே பிசாசுகளைத் துரத்தினார்; இன்னாசியு என்பவரோ ஒரே எழுத்தினால் அப்படிச் செய்தாராம். கிறிஸ்துவானவர் சமுத்திரத்தின்மேல் ஒரு விசை நடந்தார்; இன்னாசியு என்பவரோ ஆகாயத்தின்மேல் நடந்தாராம். கிறிஸ்துவானவர் தமது முகப்பிரகாசத்தினால் சீஷர்கள் ஆச்சரியப்படும்படி செய்தார்; இன்னாசியு என்பவரோ அநேகவிசை அப்படிச் செய்ததுமன்றி, இருட்டறைகளிலிருந்துகொண்டு தமது முகத்தை விளக்கொளிபோல் காண்பித்தாராம். இவருக்கு உயிர்போல் அருமையான கூட்டாளியாயிருந்த ஒருவர், அவர் மரித்துப் பதினைந்து வருஷங்களுக்குப் பிறகு, 1572-ம் வூத்தில் அவருடைய சரித்திரமொன்றை எழுதினார். 1587ல் இன்னாசியு என்பவரோடு இருந்து பழகின ஒருவர், கண்டதும் கேட்டதுமான அநேக காரியத்தைக் கூட்டி, அதைப் பெரிய புஸ்தகமாய் மறுபடியும் அச்சடித்தார். முந்தின புஸ்தகத்திலாவது பிந்தினதிலாவது அவர் செய்த ஒரு அற்புதத்தையாவது சொல்லாமல் விட்டுவிட்டது ஆச்சரியமாயிருக்கிறது. அற்புதங்களைச் சொல்லாமல் விட்டதுமாத்திரமல்ல, இவரைக்கொண்டு தேவன் அற்புதங்க

ளைச் செய்யாததற்கு முகாந்தரங்கள் இன்னதென்று சொல்லிக் கொண்டுபோகிறார். 1585–ஷுத்தில் சேசுசபையைச் சேர்ந்த லிவி என்னும் ஒரு குரு அவருடைய சரித்திரத்தை எழுதியிருந்தும் அவர் அற்புதம்செய்ததாக ஒன்றும் சொல்லாமல், கிறிஸ்துவானவர் அடிக்கடி அவருக்குக் காட்சியானதைமட்டும் சொல்லுகிறார். இதையும் தாம் முற்றிலும் நம்பாதவரைப் போல சொல்லுகிறார். இப்படியிருக்க இன்னுசியு என்பவர் அற்புதங்களைச் செய்தாரென்று நாம் நம்புவதெப்படி? அவை உண்மையென்று ரூபிப்பதெப்படி? சவரியார் என்பவரைக் குறித்தும் அவர் அநேக அற்புதங்களைச் செய்தாரென்று சொல்லியிருக்கிறது. இரக்ஷகர் மூன்றுவிசை செத்தவர்களை உயிரோடெழுப்பியிருக்க, சவரியார் செத்தவர்களை எழுப்பினதுக்கு கணக்குவழக்கில்லையாம். அற்புதஞ்செய்கிறது அவருக்கு அநுதின போஜனம்போலிருந்ததாம். வியாதியஸ்தரைச் சுகமாக்குவதுபோல செத்தவர்களை எழுப்பினாராம். தாம் செய்ததுமாத்திரமல்ல, தம்மிடத்தில் உபதேசிகளாயிருந்த வாலிபருக்கும் அற்புதஞ்செய்யும் வரமளித்து, அவர்களைக்கொண்டும் அற்புதங்களைச் செய்தாராம். இவைகளை ரூபிக்கும் சரித்திரம் ஒன்றுமில்லை. ஆகிலும் அவர் இந்தியா சீனுமுதலிய இடங்களிலிருந்தபொழுது அவர் எழுதின காகிதங்களையெல்லாம் மூன்று புஸ்தகங்களாக அச்சடித்திருக்கிறார்கள். அவைகளை வாசிக்கையில் அவர் எவ்வளவோ விவேகமாயும், சாக்கிரதையாயும் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து வந்தாரென்று அறிந்துகொள்ளுகிறோம். அவரைப்போல சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறவர்களுக்கு எற்ற புத்திமதிகளும் அவைகளில் அடங்கியிருக்கிறது. ஆயினும் தாமாய் யாதொரு அற்புதத்தைச் செய்ததாகவும் அல்லது சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறவர்களுக்கு அற்புதங்கள் அநுகூலமாயிருக்கிறதாகவும் அவைகளில் ஒரு வார்த்தையும் காணோம். அவர் அற்புதங்களைச் செய்தது நிசமானால் அவைகளைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் விடுவாரா? பிறகு வந்தவர்கள் தங்களுக்கு இஷ்டமானபடி இல்லாததையெல்லாம் கூட்டி, அற்புதம்செய்ததாக இப்பொழுது புளுகியிருக்

கிறார்களேயொழிய மெய்யாகவே அவர் அற்புதஞ்செய்தவர் அல்ல.

ஒருகாலத்தில் பிரபலமாயிருக்கப்பட்ட அபிப்பிராயங்களை ஏற்றுக்கொண்டவர்கள், கிறிஸ்துமார்க்க அறிவில் தேறினபிறகு அந்த அபிப்பிராயங்களைத் தப்பிதமென்று தள்ளினதுபோல, அற்புதங்களை எவ்வளவோ அதிகமாய் மெச்சிக்கொண்டவர்கள், பரிசுத்தவான்களுக்கு இது அவசியமிருக்கவேண்டிய குறிப்பென்று சொன்னவர்கள்முதலாய், பிறகு தாங்கள் கொண்ட அபிப்பிராயத்தை முற்றிலும் விட்டுவிட்டார்கள். சபையில் எக்காலத்திலுமிருந்த மகாத்துமாக்கள் தேவனுடைய பார்வையில் அற்புதங்களைவிட, பரிசுத்தமான நடக்கையே விலையேறப்பெற்றதென்றும், அன்பே பெரிய அற்புதமென்றும், கிறிஸ்துவின் ஊழியக்காரர் உலகத்தை ஜெயிக்கிறதினாலேயே கிறிஸ்துவானவர் இப்பொழுது அற்புதம் செய்து வருகிறாரென்றும் பலவகையாய்ச் சாக்ஷிசொல்லியிருக்கிறார்கள். இந்தச் சமயத்தில், கிறிசொஸ்தம் என்பவர் சொல்வதை மாத்திரம் சுருக்கிச் சொல்லுகிறேன். “கிறிஸ்துவின் அப்போஸ்தலர் பன்னிருவராயிருந்தபோது அவர்கள் எவ்வளவோ உலகத்திற்கு நன்மைசெய்திருக்க, இப்பொழுது கிறிஸ்துவின் ஊழியக்காரர் ஏராளமாயிருந்தும் உலகத்தில் அவர்கள் செய்கிற நன்மை ஏன் இவ்வளவு குறைவாயிருக்கிறது” என்று கேட்டபிறகு, “ஓர்வேளை அவர்களுக்கு அற்புதமிருந்தது என்று சொல்வீர்களாக்கும்” என்கிறார். இதற்கு மறுமொழியாக ‘நமக்கும் அற்புதமிருக்கிறது’ என்று சொல்லாமல் அவர் கொடுக்கும் மாறுத்தரவைக் கவனியுங்கள். “அவர்களுடைய அற்புதங்களை எவ்வளவுகாலம் நம்முடைய சோம்பலுக்குப் போக்காகச் சொல்லலாம். பின்னை அவர்களை அவ்வளவு பெரியவர்களாக்கினது எது என்று கேட்கிறீர்களா? நான் சொல்லுகிறேன். அவர்கள் பணத்தை அற்பமென்று தள்ளினார்கள், உலகமகிமையைக் காலால் உதைத்தார்கள், உலகத்தை முற்றிலும் வெறுத்தார்கள். அவர்கள் இப்படிச் செய்யாமல் ஆசாபாசத்திற்கு இடங்கொடுத்திருப்பார்களானால் ஆயிரம் சவங்

களை அவர்கள் உயிரோடு எழுப்பினாலும், ஒரு நன்மையும் செய்யாத எத்தரென்றே எண்ணப்படுவார்கள். யோவான் ஸ்நானன் எத்தனையோ பேரைச் சீர்ப்படுத்தினான். அவன் எத்தனை அற்புதங்களைச் செய்தான்? ஒரு அற்புதமும் செய்யவில்லையென்று சொல்லியிருக்கிறதே. செத்தவனைக் கிறிஸ்துவின் நாமத்தினாலே உயிர்ப்பிக்கிற வல்லமையையா? அல்லது கிறிஸ்துவின் நாமத்திற்காக மரிக்கிற கிருபையையா? இவ்விரண்டில் எதை நீ தெரிந்துகொள்வாய், பிந்தினதையல்லவா? ஆகிலும் முந்தினது அற்புதம், பிந்தினதோ ஒரு நற்கிரியை. உலகத்திலிருக்கிற மண்ணையெல்லாம் பொன்னாக்குகிற வல்லமையையா? அல்லது பொன்னையெல்லாம் மண்ணென்று தீட்பாய்த் தள்ளுகிற கிருபையையா? இவ்விரண்டில் எதை நீ தெரிந்துகொள்வாய்? பிந்தினதையே சந்தேகமில்லாமல் தெரிந்துகொள்வாய். அப்பொழுதுதான் அநேகரைச் சத்தியத்திற்குட்படுத்துவாய். இப்படி நானல்ல பவுல் அப்போஸ்தலனே சொல்லுகிறான். 'முக்கியமான வரங்களை நாடுங்கள், அதற்காக உத்தமமான வழியை உங்களுக்குக் காண்பிக்கிறேன்' என்று சொன்ன பிறகு எந்த வரத்தைக்குறித்துப் பேசுகிறான், அற்புதங்களைக் குறித்தா? சகல நன்மைக்கும் வேராயிருக்கிற அன்பைக் குறித்தே பேசுகிறான்."

அற்புதங்கள் எப்போது முற்றிலும் நின்றுபோச்சுதென்று திட்டமாய்க் காலத்தைக் குறிப்பது இலேசல்ல. ஏனெனில் சபை அற்புதங்களில்லாமல் ஸ்திரமாய் நிற்கத்தக்க நிலைமைக்கு வருங்காலம் தேவனொருவருக்கே தெரியும். தம்முடைய வசனத்தை அடையாளங்கள்மூலமாய் ஸ்தாபித்தாச்சுதென்று அறிந்த ஞானமுள்ள கர்த்தர் கட்டடம் முடிந்தபின் சாரத்தை இறக்கிப்போட்டார். தோட்டக்காரனானவன் ஒரு சிறு செடியை நாட்டி அதைப் பரிபாலிக்கும் விதத்தைப் பாருங்கள். அது இளஞ்செடியாயிருக்கும்போது காற்று அதைப் பிடுங்கிப் போடாமலும், ஆடுமாடு அதைத் தின்றுபோடாமலும் கம்பு முள்முதலானவைகளைச் சுற்றிலும் நட்டு அதைக் காபந்து பண்ணுவான். அது நன்றாய் வேர்போட்டு தானாய் நிற்கக்

கூடியதானவுடனே தான் வைத்த அடைப்பை எடுத்துப்போடுவான். திருச்சபையையும் ஆண்டவர் இவ்விதமாகவே பரிபாலித்துவருகிறார். அது ஆரம்பித்த சமையத்தில் அற்புதம் என்னும் அடைப்பைக்கொண்டு அதைத் தற்காக்கவேண்டியிருந்தது. அது வேர்போட்டுக் கப்பும் கவருமாய் விரிந்து உலகத்தை நிரப்பத்தக்கதானபோது அற்புதங்களை நீக்கிப்போட்டார். துவக்கத்தில் அபாத்திரமானவர்களுக்குமுதலாய் அற்புதஞ்செய்யத்தக்க வல்லமையைக் கொடுத்தார். இப்போது அவைகள் அவசியமில்லாததினாலே பாத்திரவான்களுக்குமுதலாய் அதைக் கொடுக்கிறதில்லை. உலகத்தில் நாம் கவனிக்கிற மற்றக் காரியங்களைப்போல அற்புதங்களும் திடீரென்று நின்றுபோகாமல், படிப்படியாய்க் குறைந்து கடைசியில் நின்றுபோயிற்று. கிறிஸ்துவில் அற்புதஞ்செய்யும் வல்லமை நிறைவாயிருந்தது; அப்போஸ்தலமாரில் சற்றே குறைவாய்க் காணப்பட்டது. ஆதித்திருச்சபையில் அதற்கும் குறைவாய்க் காணப்பட்டுப் பின்பு முற்றிலும் நின்றுபோயிற்று. இதற்குப் பதிலாக, கர்த்தர் ஏற்படுத்தினது வலிமையில் வளரவளர, இது வரவரச் சிறுத்துப்போயிற்று; பிஞ்சு பருக்கப்பருக்க, பூ உதிர்வதுபோலத்தான். இப்போது அற்புதங்களில்லையென்று சொல்லக்கூடாது. நிலையாயிருக்கிற திருச்சபையானது அதற்குப் பதிலாக, தானே பல அற்புதங்களைத் தனக்குள் அடக்கிக்கொண்டு வளர்ந்தேறிவருவதே பெரிய அற்புதம். தேவனுடைய ராஜ்யம் ஓயாமல் நடந்துவரும் அற்புதம்போல அநுதினமும் பரம்பிவருகிறதல்லவா? ஞானஸ்நானத்தில் குறிக்கப்படும் மறுபிறப்பு, பரிசுத்த இராப்போசனத்தால் கிறிஸ்துவின் சரீரத்தோடும் இரத்தத்தோடும் ஐக்கியப்படுதல், ஆத்துமாவில் நடந்துவரும் கிரியை உலகத்தில் விருத்தியடைந்துவரும் பரமராஜ்யம், இவைகள் யாவும் அற்புதங்களல்லவா? இவைகள் ஒரு ஒழுங்காய் நாம் அறிந்திருக்கிற தேவசட்டங்களுக்கு இசைவாய் நடந்துவருகிறதினாலே அற்புதங்களல்ல என்று சொல்லலாமா? இவைகள் அற்புதங்களல்லவென்று தள்ளுவாயானால் அகுஸ்தீன் சொல்லுகிறபடி ஒரு அற்புதமும் இல்

லாமல் பாவிகள் குணப்படுகிறார்களென்று வைத்துக்கொள். அதுவும் ஒரு அற்புதந்தானே. பாவத்தில் செத்துக்கிடக்கிற ஆத்துமாக்கள் உயிர்ப்பிக்கப்பட்டு, அவர்களுடைய புத்தியின் கண்கள் திறக்கப்பட்டு, தேவ அழைப்புக்கு அவர்கள் செவி கொடுத்துப் பரிசுத்தமாய் நடக்கிறது நமக்கு அற்புதமாய்த் தோன்றாவிட்டால், அப்போது நாம் இனிவரும் யுகத்தின் பெலன்களாகிய தேவவசனத்தையும், சாக்கிரமெந்தையும் அற்பமாய் எண்ணுகிறவர்களாயிருப்போம். வானங்கள் அநுதினமும் தேவனுடைய மகிமையை விவரிக்கிறதையும், ஆகாயவிரிவு அவருடைய கரங்களின் கிரியையைக் காட்டுகிறதையும் எப்பொழுதும் பார்த்தும், சூரியன் கிபேயோன் மீதில் நின்றபோதும், சந்திரன் ஆயலோன் பள்ளத்தாக்கில் தரித்தபோது மாத்திரந்தான் தேவனுடைய மகிமை வெளிப்பட்டதென்று சொல்லுகிறவர்கள்போலிருப்போம், இல்லை ஆத்துமாவுக்கடுத்த இந்த அற்புதங்களே மகா விசேஷித்தவைகள். இவைகளைக்குறித்துத்தான் நமது ரக்ஷகர் தம்மை விசுவாசிக்கிறவர்கள் தம்மிலும் அதிகமான கிரியைகளைச் செய்வார்கள் என்றார்.

அற்புதம் நின்றகாலத்தை அறிந்துகொள்வது பெரியகாரியமல்ல. அவைகளை நாம் எத்தனையோ மகத்தான காரியமென்று எண்ணி, அவைகளைச் செய்கிறவன் எவ்வளவோ பரிசுத்தவானாயிருக்கவேண்டும். அவைகளைச் செய்யாதவர்கள் அத்தனை விசேஷித்த கிறிஸ்தவர்களுமல்ல, அவைகள் இல்லாத சபை சரியான சபையுமல்ல என்று எண்ணாதபடி நாம் எச்சரிக்கையாயிருக்கவேண்டும். நமது கெட்ட இருதயம் இப்படிப்பட்ட வல்லமையைப் பெரிதென்று எண்ணுமேயல்லாது, பரிசுத்தத்தைப் பெரிதென்று எண்ணவேமாட்டாது. அப்படி எண்ணினோமானால் சபையின் மெய்யான மகிமை நம்முடைய கண்ணுக்கு இன்னும் மறைந்திருக்கிறது. புறம்பே காணப்படும் உடுப்பையும், தொங்கல்களையும் நாம் மெச்சிக்கொள்ளுகிறோமேயொழிய அதின் உள்ளான அலங்காரத்தை நான் இன்னும் கண்டவர்களல்லவென்று சொல்லவேண்டும். நம்மு

டைய ஆத்துமாவின் நிலைமையையும் இதினால் அறிந்துகொள்ளலாம். வெளியரங்கமான அற்புதங்கள் நம்முடைய கண்ணுக்குப் பெரிதாய்த் தோன்றி, தேவ கிருபையால் நடக்கும் இருதய மாறுதல் நம்முடைய பார்வைக்கு அற்பமாய்க் காணப்படுமானால், நாம் இன்னும் அந்த மாறுதலுக்குட்பட்டவர்கள் அல்லவென்று நன்றாய்ச் சொல்லலாம்.



## 5. அதிகாரம்.

### அற்புதங்களுக்கு விரோதமாய்ச் சொல்லப்பட்ட ஆக்ஷேபனைகள்.



I. யூதர்கள் சொன்ன ஆக்ஷேபனையை புதிய ஏற்பாட்டில் காணலாம். 'இவன் பிசாசுகளின் தலைவனாகிய பெயெல்செபூலினாலே பிசாசுகளைத் துரத்துகிறானேயல்லாமல் மற்றப்படியல்ல' என்றார்கள் (மத். 12. 24. மாற். 3. 22–27. லூக். 11. 15–22.). இரக்ஷகர் இதற்குச் சொன்ன மாறுத்தரம் நம்மெல்லாருக்கும் தெரியும். தாம் செய்த அற்புதங்கள் பிசாசினுடைய ராஜ்யத்தைக் கவிழ்க்கிறதற்கு ஏதுவானபடியால், பிசாசானவனே இவருக்கு அற்புதஞ்செய்ய உதவியாயிருப்பானாகில் தன்னையே கெடுத்து, தன் ராஜ்யத்தை அழிக்கிறதாயிருக்குமே. ஆதலால் பெயெல்செபூலினாலே பிசாசுகளைத் துரத்தவில்லையென்று காண்பித்தார். பெரிய மோசங்களை நடப்பிப்பதற்கு ஒளியின் தூதனைப்போல வேஷம்போட்டுக்கொண்டு தீமையை நன்மையாக சிலவேளை காண்பித்தபோதிலும் கட்டவேண்டிய தன் ராஜ்யத்தை தானே இடித்துக்கொள்ளுகிறது பிசாசின் செய்கையல்லவே. பிசாசின் கிரியையை அழிக்க வந்தவர் அவனுடைய ஒத்தாசையைத் தேடி அவனுடைய வல்லமையைப் பிரயோகிப்பாரென்று நினைக்கவேகூடாது. அவனைவிட பலத்தவரான இவர் அவனுடைய அரண்மனையில் பிரவேசித்து, அவனைக் கட்டி அவன் பொருளைக் கொள்

ஊயாடினதாக இந்த அற்புதங்களே சாக்ஷிசொல்லும். மேலும் அந்த அற்புதங்களில் காணப்பட்ட வல்லமையைமாத்திரம் நாம் பார்க்கக்கூடாது: அதினால் உண்டான நன்மைகளை யும் கவனிக்கவேண்டும். அந்த நன்மைகளே அது பரலோ கத்திலிருந்து வந்ததோ, அல்லது பாதாளத்திலிருந்து வந்ததோ என்று திட்டமாய்க் காண்பிக்கும். மேலும் அதினால் நன் மையுண்டாகியும் சன்மார்க்கம் விருத்தியாகியும் வருமானால், அதை நிறைவேற்றின வல்லமையும் பொய்யான ராஜ்யத் திற்குரியதாய் இராமல், சத்தியத்திற்குரியதாய் இருக்கவேண் டும். ஏனென்றால் ஆதிமுதல் பொய்யனாயிருந்தவன் சத்தியத் திற்கு அநுகூலமாகத் தன் வல்லமையைப் பிரயோகிக்கவே மாட்டான்.

ஆனால் பிசாசானவன் தேவனோடு மாத்திரமல்ல, தன்னுடன் பட்டவர்களோடும் பகையையும், விரோதத்தையும் சாதிக் கிறவனென்று சிலர் சொல்லுவார்கள்; இது ஓர்வகையில் நிசந் தான். ஆயினும் ஒரு சனக்கூட்டம் தனக்குள்ளேதானே எத் தனையோ பங்காய்ப் பிரிந்து ஒன்றுக்கொன்று விரோதப்பட் டாலும், எல்லாரும் பொதுவான சத்துருக்களுக்கு விரோத மாய் ஒன்றுகூடுவதுபோல, பிசாசும் அதின் தூதர்களும் தங்க ளுக்குள்ளே தானே எவ்வளவாய்ப் போராடினாலும் தங்கள் எல்லாருக்கும் பகையாயிருக்கிற பரமராஜ்யத்தோடு போரா டுவதில் ஒன்றுகூடிக்கொள்வார்கள். இல்லாவிட்டால் அந்த ராஜ்யம் ஒருபோதும் நிலைநிற்கவேமாட்டாது. பரிசேய ரைப்பார்த்து நமது இரக்ஷகர் சொன்னதென்ன? 'பிசாசின் ராஜ்யம் ஒன்றுண்டு. நீங்களே அப்படிச் சொல்லுகிறீர்கள். அது நிலைநிற்கிறது நிசமானால் அது தன் சத்துருவோடே ஒன்றுபடவேமாட்டாது, தன்னை நிர்மூலமாக்கிக்கொள்ளவு மாட்டாது. என் வார்த்தைகளும் என் செய்கைகளும் நான் பிசாசுக்கு விரோதியென்று திட்டமாய்க் காட்டுகிறதே, ஆத லால் அது என் பக்ஷமாயிராதென்பது மெய்' என்பதே.

யூதர்கள்மாத்திரமல்ல அஞ்ஞானிகளுங்கூட இரக்ஷகரைக் குறித்து இப்படியே சொன்னார்கள். அற்புதஞ்செய்யும் தங்

திரத்தை எகிப்திலிருந்த மந்திரவாதிகளிடத்தில் கற்றுக்கொண்டார் என்று செலுசஸ் என்பவன் சொன்னான். அவர் இரண்டு வருஷம் எகிப்திலிருந்தபோது இதைக் கற்றிருக்கவேண்டுமென்று எண்ணினார்கள். ஆகிலும், அஞ்ஞானிகள் யூதரைப் போல் இதை அவ்வளவு பெரிய ஆக்ஷேபனையாய் எண்ணாமல் மாந்திரிய வித்தையைப்போல பாவித்தார்கள் என்று தோன்றுகிறது.

II. அஞ்ஞானிகள் சொன்ன ஆக்ஷேபனைகள்.

யூதர்கள் ஒரேதேவனை வணங்கி அவருக்கு நல்ல தூதர் ஊழியஞ்செய்துவருகிறார்களென்று சொன்னபடியால், அந்த தேவனால் செய்யப்படாதது சாத்தானால் செய்யப்பட்டிருக்க வேண்டுமென்று தைரியமாய்ச் சொன்னார்கள். ஏனெனில் அவ்விருவருக்கும் நடுவே அவர்கள் ஒன்றையும் வைக்கவில்லை. அவர் மோட்சத்திலிருந்து வராவிட்டால் நரகத்திலிருந்தே உற்பத்தியாயிருக்கவேண்டும் என்றார்கள். அநேக தேவர்கள் உண்டென்று சொன்ன அஞ்ஞானிகளோ ஒரு தேவன் செய்யாவிட்டால் வேறொரு தேவன் செய்திருப்பான் என்றார்கள். "மேலான தேவர்கள் அவைகளை நடப்பிக்கவில்லை, இடையில் இருக்கப்பட்ட தேமோன்கள் இந்த அற்புதங்களைச் செய்ய இரக்ஷகருக்கு உதவிசெய்திருக்கலாம். அவைகளை நாங்கள் ஒப்புக்கொள்ளவேண்டியதுமில்லை, அவைகளைச் செய்தவரை நாங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டியதுமில்லை. இயேசுவானவரைப் போல எங்களில் அநேகர் இப்படிப்பட்ட அற்புதஞ்செய்திருக்கிறார்கள். எஸ்கியுலேப்பியு என்பவன் ஆச்சரியமானவிதமாய் அநேகரைக் குணமாக்கினான்; அப்பல்லோனியு என்பவன் வியாதியஸ்தரைக் குணமாக்கிப் பேய்களைத் துரத்திச் செத்தவர்களை உயிரோடெழுப்பினான். அரிஸ்தே என்பவன் கிறிஸ்துவைப்போல இருந்தாற்போலிருந்து காணாதே போனான்" என்கிறார்கள். செல்சஸ் என்பவன் இரக்ஷகர் செய்த அற்புதங்கள் சரியானவைகளல்லவென்று காட்டும்படிக்குப் பூர்வீகத்திலிருந்த அநேக கட்டுக்கதைகளையும், பிற்காலத்தில் தோன்றின அநேக மாந்திரியக்காரருடைய செய்கைகளை

யும் எடுத்துச்சொல்லி, இவைகளைப்போலத்தான் அது என்கிறான். அவன் எடுத்துச்சொன்னவைகளைத் தானும் நம்பவில்லையென்பது நிச்சயம். நம்பினால் இரண்டையும் நம்பவேண்டும், தள்ளினால் இரண்டையும் தள்ளவேண்டுமென்று சொன்னான். பித்தீனியாதேசத்தை ஆண்டுவந்த ஐரோக்களே என்பவன் தீயோக்கிளீஷியன் காலத்தில் கிறிஸ்தவர்களை அதிகமாய் துன்பப்படுத்தினவன். பட்டயத்தினால் அவர்களைத் துன்பப்படுத்தினதுமாத்திரமல்ல, புஸ்தகங்களை எழுதி அவைகளில் அவர்களை அதிகமாய் விரோதித்துப் பேசினான். அப்பலோனியு செய்த அநேக அற்புதங்களை இவனும் செல்சஸ் என்பவனைப்போல் எடுத்துச் சொன்னபிறகு என்னசொல்லுகிறான்? 'இப்படிப்பட்ட காரியங்களைச் செய்கிறவனை நாங்கள் தேவனென்று சொல்லுகிறதில்லை, தேவர்களுக்குப் பிரீதியானவன் என்றுமாத்திரம் சொல்லுகிறோம். கிறிஸ்தவர்களோ தங்கள் கிறிஸ்து சில அற்பசொற்ப அற்புதங்களைச் செய்தாரென்று சொல்லி, அவரை தேவனென்று வணங்கவேண்டிய முகாந்தரமில்லை' என்கிறான். வேறோரிடத்தில் இரக்ஷகர் செய்த அற்புதங்கள் நம்பப்படத்தக்கதல்லவென்றும், அவை அப்பலோனியு செய்த அற்புதங்களுக்கு மிகவும் தாழ்ந்ததென்றும் சொல்லுகிறான். நல்லநாணயமிருக்கிறதினால் கள்ளநாணயமும் நல்லநாணயமாகத் தோன்றுவதுபோல இரக்ஷகர் செய்த இந்த மெய்யான அற்புதமிருக்கிறதினாலேயே பொய்யான அற்புதங்களும், மெய்யான அற்புதங்களாக எண்ணப்பட்டது. அஞ்ஞானப்புராணங்களில் இருக்கப்பட்ட கதைகளை வாசிக்கும்போதே அது முழுவதும் பொய்யென்று விளங்கும்.

அப்பலோனியு என்பவன் இருந்தது மெய்தான். அவன் கப்பதோக்கியாவிலுள்ள தீயானாவில் இரக்ஷகர் பிறந்தகாலத்தில் பிறந்தவன். நேர்வாராயனுடைய காலத்தில் 97-ம் வருஷம்வரையில் உயிரோடிருந்தானென்று தோன்றுகிறது. பிலேஸ்திரேத்து என்பவன் இவனுடைய சரித்திரத்தை எழுதியிருக்கிறான். அது தத்துவசாஸ்திரவகையாய் எழுதப்பட்ட கட்டுக்கதைபோல் இருக்கிறது. கிறிஸ்துமார்க்கத்திற்கு விரோ

தமாய் எழுதவேண்டுமென்கிற நோக்கமாய் எழுதாவிட்டாலும் அஞ்ஞானிகளுக்குள்ளும் அற்புதஞ்செய்யத்தக்க வல்லவர்கள் இருந்தார்களென்று அதிலே காட்டியிருக்கிறது. இரக்ஷகருடைய சரித்திரத்திற்கு இசைவாய் அதில் அநேககாரியங்கள் சொல்லியிருந்தாலும், அவரைத் தள்ளி அப்பலோனியுவை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று சொல்லவில்லை. அல்லது பரியாசமாக அதிலொன்றும் எழுதவில்லை. பிற்பாடு அதைச் சிலர் பரியாசமாக எண்ணினதுண்டு. அதில் சொல்லப்பட்ட நியாயங்கள் பல தெய்வவணக்கத்தோடு முற்றிலும் அழிந்துபோயிற்று. இப்பொழுது அதிலுள்ள அற்புதங்களை இரக்ஷகர் செய்ததோடு ஒத்துப்பார்க்கிறதினால் இவைகளின் உண்மையும் மகிமையும் அதிகமாய்த் துலங்கும்.

III. கிறிஸ்துவானவர் செய்த அற்புதங்கள் உற்பத்தியான வகையைக்குறித்து யூதர்கள் ஆக்ஷேபித்து அவைகள் சாத்தானால் உண்டானவைகளென்று சொன்னபோதிலும், மெய்யாகவே அது அற்புதங்கள்தான் என்று ஒத்துக்கொண்டார்கள். அஞ்ஞானிகளும் கிறிஸ்துவானவர் அற்புதங்கள் செய்ததினிமித்தம் அவரை தேவனென்று ஒப்புக்கொள்ளலாகாதென்று சொன்னார்களேயொழிய, அந்த அற்புதங்கள் நடக்கவில்லையென்று ஒருபோதும் ஆக்ஷேபிக்கவில்லை. சமஸ்தமும் தெய்வமென்று சொன்ன அத்வைதிகளோ, அற்புதங்களை வேரோடே பிடுங்கவேண்டுமென்று எண்ணங்கொண்டவர்கள்போல அற்புதமே நடக்கக்கூடியதல்ல; தேவனொருவர் உண்டென்பதற்கு அது முற்றிலும் விரோதமென்று சாதித்தார்கள். இது சற்றேறக்குறைய நாஸ்திகருடைய கொள்கைக்கு ஒத்திருக்கிறது. மனிதன் விதிவசத்திற்கு முற்றும் கீழ்ப்பட்டிருக்கிறானென்றும், உலகத்தின் ஒழுங்கு ஒருகண்டசீராய் எப்பொழுதும் நடந்துவருகிறதென்றும் சாதித்தார்கள். உலக இயல்பே ஒருவகையாய் தேவன் என்று இவர்கள் சொன்னபடியால், அது மாறாமல் இருந்தவிதமாகவே எப்பொழுதுமிருக்கவேண்டும் என்றும், அதை மாற்றும்பொழுது தேவன் தம்மிடத்தில் குறைவுண்டென்றும் விகற்பமுண்டென்றும்

காட்டுகிறாரென்றும், அற்புதமானது இயல்பான ஒழுங்கைக் கெடுக்கிறபடியால் அது நடக்கவேகூடாதென்றும் சொன்னார்கள். இதற்கு முன்னாலேயே சமாதானம் சொல்லியிருக்கிறோம். அற்புதமானது உலக ஒழுங்கைக் கெடுக்காமல் அதை மேலான வேறொரு ஒழுங்குக்கு உட்படுத்துகிறதென்று முன் ரூபித்தோம். இந்த அத்வைதிகள் தேவன் ஆதியிலே வெளிப்படுத்தினதே நிறைவும் பூரணமுமுள்ளதாயிருந்ததென்றும், புதிதாய் ஆண்டவர் ஒன்றை ஏற்படுத்தவேண்டுவதில்லையென்றும், அப்படிச் செய்வாரானால் அது தேவதன்மைக்கு விரோதமாய் இருக்கிறதென்றும் சொல்லி, புதிதாய் ஒன்றை வெளிப்படுத்துவது அவசியமில்லையென்று நிராகரித்ததுபோல, அதற்கு அநுகூலமாய் அதை ஸ்தாபிக்கத்தக்க அற்புதங்கள் வேண்டியதில்லையென்று ஆக்ஷேபித்தார்கள். ஆனால் தேவன் மனிதருக்குத் தம்மைப்பற்றின அறிவை முந்தி இயல்வேதத்தினாலும், பிந்தி அருள்வேதத்தினாலும் தந்து, அந்த அருள்வேதத்தை ஸ்தாபிக்க அற்புதங்கள் செய்யும் வரத்தையும் கொடுத்தாரென்பது நம்முடைய கொள்கை. இயல்வேதத்தை மாத்திரம் பெற்றிருந்த அறிவாளிகள், ஞானிகள்முதலாய் எவ்வளவு குருட்டாட்டம் பிடித்து அலைந்தார்களென்று நம்மெல்லாருக்கும் நன்றாய்த் தெரியுமே. அப்படியிருக்க இயல்வேதத்தில் இல்லாததொன்றையும் தேவன் வெளிப்படுத்தவேண்டிய அவசியமில்லையென்பது எவ்வளவு மதியீனம். மேலும் இந்த அத்வைதிகள் மனுஷன் உலகத்திற்காக உண்டாக்கப்பட்டானேயொழிய, உலகம் மனுஷனுக்காக உண்டாக்கப்படவில்லையென்று சாதித்து உலகத்தில் மற்ற வஸ்துக்களைப்போல் இருக்கப்பட்ட மனுஷனுக்காக அதின் ஒழுங்கை தேவன் மாற்றுவாரென்று சொல்வது நடவாத காரியம்போல் பாவிக்கிறார்கள். ஆனால் மனிதனுக்காகவே தேவன் சகலத்தையும் படைத்திருக்கிறாரென்றும், அவனுக்குத் தமது சாயலை அளித்துச் சகலத்தையும் ஆண்டு நடத்தத்தக்க அதிகாரத்தைக் கொடுத்தாரென்றும், தம்முடைய நடத்துதலினாலே அவனை இவ்வுலகத்திலே மறுமைக்குத் தகுதியுள்ளவனாக்குகிறாரென்றும் நாம் சொல்வது நிசமாயிருக்குமானால்,

அப்பொழுது உலகத்தையும் அதிலுள்ளவைகள் எல்லாவற்றையும் அவனுக்காகப் படைத்தவர், அவனுக்கு உபயோகமாகத் தக்கதாக அவைகளை மாற்றவும் செய்வாரென்று நாம் சொல்வது தப்பிதமா?

'படைத்தான் படைப்பெல்லா மனுவுக்காக
மனுவைப் படைத்தான் தன்னை வணங்க'

என்ற வாக்கியம் பொய்யா? இந்த நியாயங்களைக் கவனிக்கும் போது சர்வமும் தேவன்தான் என்று சொல்லும் அத்வைதிகள் அற்புதங்களுக்கு விரோதமாய்ச் சொல்லும் ஆக்ஷேபனைகள் எவ்வளவு வீணனதென்று அறிந்துகொள்ளுகிறோம்.

IV. அற்புதங்கள் நடக்கக்கூடியதல்லவென்று முந்தின பக்ஷத்தார் சாதித்ததுபோல தேவனும், வேதமும், மறுமையும் இல்லையென்று சொன்ன வேதவிரோதிகள் அற்புதங்கள் நம்பக்கூடியதல்லவென்று சாதித்தார்கள். இவர்களுக்கு ஹியூம் என்பவன் தலைவனயிருந்தான். இவன் 'அற்புதம் உண்மையென்று சொல்லுகிறதைவிட அபத்தமென்று சொல்லலாம். அதை ரூபிக்கிறதே கூடாததாயிருக்க அதைக்கொண்டு மற்றென்றை ஸ்தாபிப்பது முற்றும் அசாத்தியம்' என்றான். இதை அவன் விளக்கிக் காட்டின வகையைப் பாருங்கள். "நாம் விசாரிக்கவேண்டிய இரண்டு காரியங்களில் ஒன்றுக்கு அத்தாட்சி இருபதும், மற்றென்றுக்குப் பதினைந்துமாயிருக்குமானல், இருபதில் பதினைந்துபோக ஐந்து அத்தாக்ஷிகள் அதிகமாயிருப்பதையே நாம் உண்மையென்று சொல்லவேண்டும். அற்புதம் நடந்ததை ரூபிக்கச் சாக்ஷிகள் உண்டு. அது நடக்கவில்லையென்று காட்ட இதற்கு முன்னிருந்த சகலருடைய அநுபவம் மாத்திரமல்ல, உலகத்தின் மாறாத ஒழுங்கும் இருக்கிறது. இவ்விரண்டையும் சீர்தூக்கிப்பார்த்தால், சாக்ஷிகள் சொல்லுகிறது சகலருடைய அநுபவத்தையும் மேற்கொள்வது கூடாதகாரியம். அப்படியிருக்குமானல் அவர்கள் நடந்ததாகச் சொல்லுகிற அற்புதத்தைவிட இதுவே பெரிய அதிசயமாயிருக்கும். அற்புதம் நடக்கவில்லையென்பதற்கு அத்தாக்ஷிகள் நிறைவானது. நடந்ததென்பதற்குச் சாக்ஷிகளுடைய

அத்தாக்ஷி அவ்வளவு நிறைவாயிருந்தாலும், இருபக்ஷமும் சமமாயிருக்கிறதென்று சொல்லி அற்புதம் நடந்தது மெய்யோ பொய்யோவென்று சந்தேகத்திற்கு இடங்கொடுக்கலாமேயொழிய, அற்புதம் நடந்ததென்று துணிந்து சொல்வதற்கு எதுவில்லை. ஆனால் அற்புதம் நடந்ததென்கிற சாக்ஷிகளுடைய அத்தாக்ஷி அவ்வளவு பலமாயிருப்பது கூடாது. அற்புதம் நடந்திருக்கலாமென்று சொல்வதைவிட சாக்ஷிசொல்லுகிறவர்கள் மோசம்போக்குகிறவர்களாயிருக்கலாம், அல்லது மோசம்போனவர்களாயிருக்கலாமென்று நாம் எண்ணலாமே. எத்தனை சாக்ஷிகளிருந்தபோதிலும், உலகத்தின் ஒழுங்கு மாறாமல் ஆதிமுதலிருந்தபடி நடந்துவருகிறதென்று சொல்லுகிறவர்களே அதிகமாயிருப்பார்கள். அந்தச் சாக்ஷிகளும் தங்கள் சுயபக்ஷத்தைக் காண்பிக்கப் பலவித தப்பிதங்களுக்கு இடங்கொடுக்கலாம். ஆதலால் எந்தவிஷயத்திலும் அற்புதங்கள் நடக்கவில்லையென்று காட்டுகிற அத்தாக்ஷிகளைவிட அற்புதங்கள் நடந்ததென்று காட்டும் அத்தாக்ஷிகள் அதிக பலமுள்ளதாய் இருக்கவேமாட்டாது." இதுவே ஹியூம் என்பவன் சொன்ன ஆக்ஷேபனை. அற்புதங்கள் நடக்கத்தக்கதல்லவென்று அவன் சாதிக்கவில்லை. நமக்கு அதை மெய்ப்பிக்கத்தக்க அத்தாக்ஷிகளிருப்பது கூடாதகாரியமென்று சொன்னான். இரண்டுகாரியங்களில் அத்தாக்ஷியில் குறைவுள்ளது உண்மையாய் நடந்திருந்தாலுமிருக்கலாம். ஆகிலும் அதிக பலத்த அத்தாக்ஷியோடு வருகிறதையே நாம் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றான்.

ஆனால் ஹியூம் என்பவனைப்போல அனுபவத்திற்கு எதிரிடையான சாக்ஷிகளுடைய அத்தாக்ஷியைமாத்திரமல்ல, இயல்புக்கு மேலாக மறுமைக்கேற்றவிதமாய் மனுஷனை நடப்பித்துவருகிற கர்த்தா, தாம் உண்டாக்கின இயல்பையே தமக்கு அவசியமாய்த் தோன்றும்போது மாற்றுவாரென்கிற அனுமானத்தையும், அற்புதத்தினால் விளங்குகிற தேவமகிமையையும், அதினாலுண்டாகும் நன்மையையும் ஒன்றாய்ச் சேர்த்துப்பார்க்கும்போது, நம்முடைய மனச்சாக்ஷிக்கு அற்புதமானது தேவனுடைய கிரியைதானென்று ஒத்துக்கொள்ளத்தக்க பலத்த அத்

தாக்ஷியாகும். சன்மார்க்கத்திற்குரியவகையாய் அற்புதத்திற்கிருக்கும் அத்தாக்ஷியை ஹியூம் என்பவன் முற்றிலும் விட்டுவிட்டான். வேதவசனத்திலிருக்கும் அற்புதம் உண்மையோ அல்லவோ என்று விசாரிப்பதில், நம்முடைய அறிவுமாத்திரமல்ல, நம்முடைய சன்மார்க்கநிலையும் சம்பந்தப்பட்டிருக்கவேண்டும்.

மனிதனுடைய மேலான நன்மைக்காக தேவன் கவலைப்படுகிறாரென்றும், நாம் இப்போது பார்க்கும் இயல்பின் பிரமாணத்திற்கு மேலாக வேறொரு விசேஷித்த பிரமாணம் இருக்கிறதென்றும், அது நம்முடைய உலகத்தில் நடந்தேறுவதனால் அதிக நன்மை உண்டாகிறதென்றும் நாம் மெய்யாகவே சுகஜீவிகளாயிருக்கவேண்டுமானால், நாமாய் நீக்கிக்கொள்ளக்கூடாதபடிக்கு இப்பொழுது நம்மைக் கட்டியிருக்கிற பாவக்கட்டும், மரணக்கட்டும் அறவேண்டும் என்றும் அபிப்பிராயங்கொண்டிருக்கிறவன், தேவன் மாமிசத்தில் வெளிப்பட்டு, மரணத்தினின்று உயிர்த்தெழுந்ததினால் தேவகுமாரனென்று விளங்கின இந்தப் பெரிய அற்புதத்தை யாதொரு வருத்தமின்றி விசுவாசிப்பான். தன்னுடைய விருப்பம் நிறைவேறுமென்று அவன் கனவிலும் நினையாதிருந்தபோதிலும், அப்படிப்பட்ட மீட்பருக்காக அவன் எவ்வளவோ ஆசையோடு காத்துக்கிடப்பான். அந்தப் பெரிய அற்புதத்தை விசுவாசிக்கிறவன் மற்ற அற்புதங்களையும் இலேசாய் விசுவாசிப்பான். கிரகங்கள் சூரியனிலிருந்து தங்கள் ஒளியைப் பெற்றுக்கொள்வதுபோல மற்ற அற்புதங்கள் இந்த அற்புதத்தினாலே பலமாய் ரூபிக்கப்படுகிறது. உலகமே தனக்குச் சதமென்று எண்ணி, பரலோகத்தை மறந்து தேவனுடைய ராஜ்யம் இன்னதென்று சற்றாகிலும் அறியாதவனோ, இயற்கைஅறிவினால் உண்டாகும் மனப்பெருமையினால் எந்த அற்புதத்தையும் தகாதென்று தள்ளுவான்; அவன் அற்புதத்தையும் ஏற்றுக்கொள்ளமாட்டான்; அந்த அற்புதம் ஸ்தாபிக்கும் உபதேசத்தையும் ஏற்றுக்கொள்ளமாட்டான். மனிதனை தேவன் ஏதோ ஒரு மகிமையான நிலைமைக்கு ஆயத்தப்படுத்துகிறாரென்று கொஞ்சமாவது எண்ணாதவன், தண்ணீரில் கப்பல் இங்குமங்கும் புசலால் அடிபட்டு கடைசியில்

முழுகிப்போவதுபோல, உலகத்தில் மனுஷனும் கொஞ்சக்காலம் இப்படியேயிருந்து அழிந்துபோகிறவனென்று எண்ணுகிறான். விசுவாசத்தை ஸ்தாபிக்கத்தக்க அஸ்திபாரமே இல்லையென்று சொல்லுகிறவர்களோடு நமது விசுவாசத்தைக்குறித்து தர்க்கிப்பது விருதா.

V. இரட்சகர் செய்தது சரியானபடி அற்புதமல்லவென்றால், பின் அதை எப்படிப்பட்டதென்று சொல்லலாம்? வேதவிரோதிகள் இந்தக் கேள்விக்கு உத்தரவுசொல்லத் திகைத்து, இதற்கு ஒரு உபாயம் கண்டுபிடித்திருக்கிறார்கள். அவர்கள் சொல்லுகிறதென்னவென்றால், கொஞ்ச அறிவுள்ளவனுக்கு அதிக அறிவுள்ளவன் காட்டும் காரியங்கள் அதிசயமாகத் தோன்றும். நாகரீகமற்ற பாமரர்களுக்கு தூரதிஷ்டிக்கண்ணுடியைக் காண்பித்து, அவர்கள் ஒருபோதும் காணுத வஸ்துக்களை காணச்செய்யும்போது அவர்கள் அதை அற்புதமென்று சொல்லார்களா? அறிவுள்ளவனுக்கோ அது அதிசயமாய்த் தோன்ருது. அமெரிக்காதேசத்தை முதலாவது கண்டுபிடித்தவர்களில் ஒருவர், அத்தேசத்தாரைப் பயப்படுத்தும்படி தான் குறித்தவேளையில் சந்திரனை இருண்டுபோகச் செய்வேன் என்ருராம். சந்திரகிராணம் உண்டாகும் நேரத்தையறிந்து அவர் முந்திச்சொன்னபடியே நடந்ததைக் கண்ட அந்த அறிவீனர் ஆச்சரியப்பட்டார்கள். காரியத்தை அறிந்தவர்களோ இது சாதாரணமாய் நடக்கும் காரியமேயொழிய அற்புதமென்று சொல்ல ஒருபோதும் துணியார்கள். அந்த அறிவீனருக்கு அவர்களைவிட அறிவாளிகள் செய்தது ஆச்சரியமாயிருந்தது. கிறிஸ்து நம்மைவிட அதிக அறிவுள்ளவரானபடியால், நமக்குத் தெரியாத அநேககாரியங்கள் அவருக்குத் தெரிந்திருக்கிறபடியால், நமக்கு அற்புதமாய்த் தோன்றுகிறவைகளை அவர் செய்தபோதிலும் சரியானபடி அவைகள் அற்புதங்களல்ல. அந்த அறிவு நமக்குண்டாகும்போது நாமும் அவைகளைச் சாதாரணமாய் நடக்கும் சம்பவமாக எண்ணுவோமேயொழிய, அற்புதமாக எண்ணவேமாட்டோம். காலம் செல்லச்செல்ல, அறிவு பெருகப்பெருக, இந்த அதிசயங்கள்

அதிசயங்களாக எண்ணப்படமாட்டாது என்கிறார்கள். இப்படிச் சொல்வதினால் அற்புதங்களை முற்றும் வியர்த்தமாக்குகிறார்கள். இது உண்மையாயிருக்குமானால் இரக்ஷகர் செய்த அற்புதங்களில் யாதொரு சாரமுமில்லை, யாதொரு விசேஷமுமில்லை. ஆனால் இரக்ஷகர் அற்புதங்கள் செய்து எத்தனையோ வருஷங்கள் சென்றுபோச்சுது. கிட்டத்தட்ட ஈராயிரம் வருஷங்களாகிறது. அப்போதிருந்ததைவிட இப்போது எவ்வளவோ அறிவு மிகுத்திருக்கிறது. சாஸ்திரவிகிதமான அறிவைக்கொண்டு மனிதர்கள் எத்தனையோ நூதனகாரியங்களைச் செய்திருக்கிறார்கள். ஆகிலும் இரக்ஷகர் செய்த அற்புதங்களில் ஒரு சிறிய அற்புதத்தையாவது இயல்பாய் நடக்கக்கூடியதென்று இன்னும் சொல்லக்கூடாததாயிருக்கிறதே. இந்த ஆக்ஷேபனையைக்கொண்டு வருகிறவர்கள் அகுஸ்தீன் என்பவர் தங்களுக்கு அனுகூலமாக இப்படியே எழுதியிருக்கிறார் என்கிறார்கள். அவர் அஞ்ஞானிகளோடு தர்க்கிக்கும்போது 'உங்கள் அநுபவத்தில் விகற்பமாயுள்ள அநேககாரியங்களை நம்புகிறீர்களே. பகலில் குளிர்ச்சியும், இரவில் சூடுமுள்ள ஊற்றுகள் உண்டென்றும், எரிகிற தீவட்டிகளை அணைக்கிறதும், அணைந்த தீவட்டிகளை எரியச்செய்வதுமான தண்ணீர்கள் உண்டென்றும் ஒருதரம் கொளுத்தினால் ஒருபோதும் அணையாத கற்களுண்டென்றும் ஊசியை இழுக்கத்தக்க காந்தம் இருக்கிறதென்றும் சொல்லுகிறீர்களே. மெய்யும் பொய்யுமான இவைகளை நம்புகிற நீங்கள் கிறிஸ்துவின் அற்புதங்களை மாத்திரம் என் நம்புகிறதில்லை' என்று கேட்கிறாரேயொழிய, 'இரக்ஷகருடைய அற்புதமும் இப்படிப்பட்டதுதான். மனுஷன் அறிவிலே வளரவளர இவைகளெல்லாம் இயல்பாய் நடக்கக்கூடியதென்பதை அறிந்துகொள்வான்' என்று அவர் ஒருபோதும் சொல்லவில்லை. தேவன் தமது சர்வவல்லமையினாலே இதைச் செய்யக்கூடும் என்றே அடிக்கடி சொல்லியிருக்கிறார். அற்புதங்கள் இயல்பின் பிரமாணத்திற்கு விரோதமாய்க் காணப்பட்டாலும், தேவன் தமது சித்தத்திற்கு விரோதமாக அல்ல, மேலான வேறொரு பிரமாணத்திற்கு இசைவாகவே

இவைகளை நடப்பித்திருக்கிறுரென்று திட்டமாய்ச் சொல்லி யிருக்கிறுர்.

VI. கிறிஸ்துவானவரை சாதாரண மனுஷனுக எண்ணு கிறவர்கள் அவர் தேவகுமாரனுகையால் அவர் அற்புதஞ்செ ய்ய வல்லமையுள்ளவரென்று ஒப்புக்கொள்ள மனமில்லாததி ஞல் இரக்ஷகர் அற்புதஞ்செய்யவுமில்லை, கிறிஸ்துவானவரும் மற்ற லோகோபகாரிகளைப்போல சுகமளித்து, நன்மைசெய்து கொண்டு திரிந்தாரேயொழிய ஒரு அற்புதமும் செய்யவில்லை என்கிறுர்கள். வேதவசனத்தில் சொல்லியிருக்கிறது உண் மையென்று ஒப்புக்கொண்டாலும், அதில் சொல்லப்பட்டிருக் கிறது அற்புதமேயல்லவென்று சாதிக்கிறுர்கள். இரக்ஷகர் மற்ற வர்கள்பேரிலுள்ள சிநேகத்திஞலும், இரக்கசிந்தையிஞலும், வைத்தியத் திறமையிஞலும் மற்றவர்களைப்போல அநேக ருக்கு நன்மைசெய்தாரேயொழிய, தற்செயலாய் அவருடைய நல்ல அதிஷ்டத்திஞல் அது பலித்ததேயொழிய வேறல்ல. இவைகளைத்தான் சுவிசேஷகர் அற்புதமென்று எழுதியிருக்கி றுர்கள் என்கிறுர்கள். பெதஸ்தாகுளத்தில் வியாதியாயிருந்த ஒரு மனுஷனைக் குணமாக்கினபோது ஒரு எத்தனைக் கண்டுபிடித் தார். காஞவூர் கலியாணவீட்டில் தண்ணீரை ரசமாக்கிக் கொடுத் தபோது எங்கேயோவிருந்து அதிக ரசத்தை வருவித்தார். ஐயா யிரம்பேருக்குப் போசனங்கொடுத்தபோது அவரும் அவரு டைய சீஷரும் தங்களுக்கிருந்த போசனத்தை உதாரமாய்க் கொடுத்ததைக் கண்ட சனங்கள், தங்களிடத்தில் இருந்ததை யெல்லாம் உதாரமாய்க் கொடுத்தபடியால் அவ்வளவு அதிகமாய் இருந்தது என்கிறுர்கள். பார்வையளித்தபோது, நயனவைத் தியன்போல கண்ணைச் சொஸ்தமாக்கிஞரேயொழிய வேறல்ல என்று சொல்லி, இதற்கு ஆதாரமாக 'பகற்காலமிருக்குமட் டும் நான் என்னை அனுப்பினவருடைய கிரியையைச் செய்ய வேண்டும், ஒருவரும் கிரியைசெய்யக்கூடாத இராத்திரி வரு கிறது' என்று இரக்ஷகர் சொன்ன வார்த்தைகளை இப்படிப் பட்ட நுண்ணிமையான வைத்தியாப்பியாசத்திற்கு அதிக வெளிச்சம் தமக்கு வேண்டுமென்று சொன்னதாக அர்த்தம்

பண்ணுகிறார்கள். அவர் கடலின்மேலல்ல, கரையில் நடந்தா ரென்றும், மீன்வாயிலிருக்கும் பணத்தையல்ல, அவ்வளவு பணத்திற்கு விற்கத்தக்க மீன்களைப் பிடிக்கச்சொன்னாரென் றும், லாசரு மரித்தபின்னல்ல, அவன் அரையுயிராயிருந்த போதுதான் எழுப்பினாரென்றும் சொல்லி, இரக்ஷகர் செய்த அற்புதங்களையெல்லாம் கவைக்குதவாததாக்குகிறார்கள்.

இந்த கொள்கை முதலாவது 1800–ம் வருஷத்தில் தோன் றிற்று. அதுமுதல் இதை யாவரும் விரோதித்தபடியால் இப் போது இது சுத்தமாய் அற்றுப்போயிற்றென்று சொல்லலாம். இந்தக் கொள்கைப்படி பார்த்தால் வார்த்தைகளில் யாதொரு பொருளேயில்லை. வேதவசனம் உண்மையென்று சொல்லிக் கொண்டு அதின் பொருளை இவ்விதமாய்க் கெடுக்கப்பார்க்கிற வர்களிலும், வேதவசனம் சொல்லுகிறதெல்லாம் பொய்யென்று முற்றிலும் தள்ளுகிறவர்களே நல்லவர்கள். இந்த விபரீதமான கொள்கையைக்குறித்து நான் அதிகமாய்ச் சொல்லவேண்டிய அவசியமில்லை. அது முற்றிலும் ஒழிந்துபோயிற்று. ஆகிலும் ஐயாயிரம்பேருக்குப் போசனம்கொடுத்த அற்புதத்திலும், மீன் வாயினின்று நாணயமெடுத்த அற்புதத்திலும் இதைக்குறித்து சில குறிப்புகளைக் காணலாம்.

VII. ஏறக்குறைய 200 வருஷங்களுக்கு முன்னே இங்கி லாந்து தேசத்திலே உல்ஸ்றறன் என்பவனும் அவனைச் சேர்ந்த சிலரும் அற்புதங்களுக்கு விரோதமாகவும், பிறகு கிறிஸ்து மார்க்கத்திற்கு விரோதமாகவும் அதிகமாய் எழுதத்துணிந்தார் கள். இவர்கள் ஒருத்துவமார்க்கத்தார். இவர்கள் சொன்ன தென்னவென்றால், அற்புதங்களைப் பார்க்கும்போது அவைகள் அவ்விதமாகவே நடந்திருக்கலாமென்று சொல்லத்தக்க இல க்ஷணங்கள் அவைகளிலில்லை; மேலும் ஒரு சுவிசேஷகன் சொ ல்லியிருக்கிறது வேறொரு சுவிசேஷகன் எழுதியிருக்கிறதற்கு விகற்பமாயிருக்கிறது, ஆகையால் இது நடக்கவே இல்லை. ஞானக்கருத்தாய் இவைகளை ஏற்றுக்கொண்டு அர்த்தம்பண்ண லாமேயொழிய, சரித்திரப்போக்காய் இது இப்படியே நடந்த தென்று சொல்லவேகூடாது என்றார்கள். அவர்களுடைய

கருத்தை நன்றாய் அறிந்துகொள்ளும்படி மாற். 2. 1—12 வரை யுமுள்ள திமிர்வாதக்காரனைப்பற்றிய அற்புதத்தைக்குறித்து அவர்கள் சொல்வதைச் சற்று ஆராய்ந்துபார்ப்போம். கப்பர் நகூமூரார் இயேசுவானவரை நன்றாய் அறிந்திருந்தபடியால், அவரை மதிப்போர் அங்கே சிலர்மாத்திரமிருக்க, அவர் பிர சங்கத்தைக் கேட்க அத்தனை ஏராளமான சனங்கள் எப்படிக் கூடிவருவார்கள்? அவ்வளவு சனங்கள் கூடிவந்தது நிசமா யிருந்தாலும் அந்தத் திமிர்வாதக்காரனைக் கொண்டுவந்தவர்கள் ஏன் அத்தனைக்கு ஆத்திரப்பட்டார்கள்? சனங்கள் கலையும் வரையில் இரண்டொருமணிநேரம் காத்திருக்கலாமே. அவர் கள் விசுவாசம் அவ்வளவு பொறுமையை உண்டாக்கலாமே. சனங்கள் வழிவிடும்படிக்கு ஏன் இரக்ஷகர் சொல்லவில்லை? ஒரு அற்புதத்தைப் பார்க்கவேண்டுமென்று ஆசையோடு காத் திருக்கிறவர்கள் உடனே அப்படிச் செய்வார்களே. நோயாளி யை மேலே கொண்டுபோகிறதற்கு கயிறு, கப்பி முதலானது வேண்டியிருக்குமே. அவைகளெல்லாம் எப்படி ஹாஜராயிரு ந்தது? கைமரங்களையும் உத்திரங்களையும் பிளக்கிறதற்கு கோடரி முதலிய ஆயுதங்கள் வேண்டுமே, சகலமும் அவர்களுக்குத் தயாராயிருந்தது ஆச்சரியந்தான். வீட்டிற்கு முதலாளியானவன் தன் வீடு சேதப்படுவதைக்குறித்து ஒன்றுஞ் சொல்லாமலிருந் தது மெத்தஆச்சரியம். ஓடு, சுண்ணாம்பு முதலியவை விழுவதினால் வீட்டிற்குள் இருக்கிறவர்கள் சேதப்படாமல் எப்படித் தப்பி னார்கள்? மேல்மெத்தையில் கதவு இருந்ததென்று சிலர் சொல் வது நிசமானால், இரக்ஷகர் ஏன் அங்கே போய் ஒரு வார்த்தை சொல்லி அவனைச் சொஸ்தப்படுத்தவில்லை? அப்பொழுது இந் தத் தொந்தரையும் வருத்தமுமிராதே என்கிறார்கள். சொல்ல வேண்டுமானால் எந்தச் சரித்திரத்தைக்குறித்தும் இப்படிக் கேள் விகேட்கலாமே. நடந்ததைக் குற்றப்படுத்த அது வேறுவிதமாய் இப்படியப்படி நடக்கலாமேயென்று சொல்லுகிறதே இவர் களுடைய வேலை. இப்படிக்கொத்த பல கேள்விகளைக் கேட்டு, காரியம் இவ்விதமாய் நடந்திராதென்று சொன்னபிறகு, வேறே காரியங்களுக்கு இதெல்லாம் குறிப்புகள் இதில் வேறொரு

ஞானக்கருத்திருக்கிறது, அந்தக் கருத்தாகவே இவைகள் எழுதப்பட்டிருக்கிறது என்று காண்பிக்க, தங்களிஷ்டப்படி இதை அர்த்தம்பண்ணுகிறூர்கள். இந்த மனிதனுக்கிருந்த திமிர்வாத வியாதி மனுஷரிடத்திலிருக்கும் துன்மார்க்க நடக்கையாம். இதை நீக்க இரக்ஷகருடைய ஒத்தாசை வேண்டுமாம். அவனைக் கொண்டுவந்த நான்குபேரும் நாலு சுவிசேஷகர்களாம். அவர்களுடைய உபதேசத்தின் மூலமாய்த்தான் நாம் கிறிஸ்துவண்டைக்குப் போகலாம். வீட்டுக்கூரை உலக அறிவாகிய ஞானமாம், அல்லது வேதவசனத்தின் உள்ளான கருத்தாம். இதைத் திறக்கும்போதுதான் இரக்ஷகரண்டைக்குப்போய் அவருடைய அறிவைப் பெற்றுக்கொள்ளலாம் என்கிறூர்கள்.

இப்படி அவர்கள் சொல்லுகிற ஆக்ஷேபனையையும், வியாக்கியானத்தையும் பார்க்கும்போதே இது எவ்வளவு கேவலமானதென்று விளங்குகிறது. இப்படி வேதவசனத்தைப் புரட்டி, அர்த்தம்பண்ணினவர்கள் ஒருவருமில்லை. ஓரிஜன் என்பவர் ஞானக்கருத்துகளைக்கொண்டு அதிகமாய் வியாக்கியானம்பண்ணினபோதிலும், சரித்திரத்தையோ அவர் தப்பென்று தள்ளவில்லை. சரித்திரம் உண்மையாய் நடந்ததென்று ஒத்துக்கொண்டு அதற்கு இசைவான ஞானக்கருத்தின்னதென்று காட்டினூர். இதைக் கவனிக்கும்போது நாம் படித்துக்கொள்ளுகிறதென்ன? மனுஷன் தன் சுயபுத்தியில் சாயும்போது எவ்வளவாய்ச் கெட்டுப்போகிறுன். தன் அறிவையே பெரிதென்று எண்ணுகிறவன் மதிமயங்கிப் புத்தியீனத்திற்கு இடங்கொடுத்து வீண் அலப்பனுவான். நமக்கு வேண்டிய அறிவையும் ஞானத்தையும் பெற்றுக்கொள்ள நாம் கிறிஸ்துவானவரண்டையிலே போகவேண்டும். அவர்தான் நமக்கு ஞானம். நம்முடைய ஆத்தும ஆசை அவராலேதான் தீரும். அப்படிச் செய்யாமல் நமது இஷ்டப்படியே சகலத்தையும் நமது குறைந்த புத்திக்குத்தக்கதாக அர்த்தப்படுத்தினுல் வேதவசனம் நமக்குப் பைத்தியமாய்த் தோன்றும். உல்ஸ்ற்றன் என்பவனைப்போல ஸ்ற்றிராஸ் முதலானவர்களும் கிறிஸ்துவானவர் செய்த அற்புதங்களைக்குறித்து ஆக்ஷேபித்தார்கள். இவர்கள் சொன்னது ஒன்

றுக்கொன்று சற்றே வித்தியாசப்பட்டாலும் மொத்தப்பொருளில் ஒன்றுபோலதான் இருந்தது.

——»»«««——

## 6. அதிகாரம்.

### அற்புதங்களினுல் உண்டாகும் பிரயோஜனம்.

வேதவசனத்தின் உண்மையை ரூபிக்கவேண்டியதற்கு அவசியமான உதாரணங்களில் அற்புதங்களை எவ்வளவாய்ப் பிரயோகிக்கலாம். இதுவிஷயத்தில் அற்புதங்கள் எவ்வளவாய்ப் பிரயோஜனப்படும் என்பதை நாம் கடைசியாக ஆராயவேண்டியிருக்கிறது. இதை நாம் நன்ருய் அறிந்துகொள்ளவேண்டும். யுஸ்தின் மார்ட்டர் என்பவர் கிறிஸ்துமார்க்கத்திற்கு உதவியாக எழுதின நியாயங்களில் இதைச் சுத்தமாய்ப் பிரயோகிக்கக் காணும். ஆர்நோபியு என்பவரோ இதையே முக்கியமாய்ப் பிரயோகிக்கிருர். அந்தக்காலங்களில் மற்ற அற்புதங்களுக்கும் கிறிஸ்துவானவர் செய்த அற்புதங்களுக்கும் அதிக வித்தியாசம் தோன்றவில்லே. இக்காலத்திலோ கிறிஸ்துமார்க்கத்தின் உண்மையை ரூபிக்க இதையே முக்கியமாய்ப் பிரயோகிக்கிருர்கள். வல்லமைக்குரிய அற்புதங்களை மாத்திரமல்ல, அறிவுக்குரிய அற்புதங்களாகிய தீர்க்கதரிசனங்களேயும் அதிகமாய் கையாடிவருகிறதைப் பார்க்கிருேம். எத்தனேயோ நல்ல உதாரணங்களிருக்க அவைகளெல்லாவற்றையும் தள்ளிப்போட்டு இதையே விசேஷித்துப் பிடிக்கிறது அத்தனேக்கு நன்ருயில்லே. வீட்டிற்குள் இருக்கிறவர்கள் அதினுள்ளிருப்பதைக் காபந்துசெய்கிறதற்குப்பதிலாக, கள்ளன் கள்ளனென்று சொல்லிக்கொண்டு உள்ளேயிருக்கும் விலேயேறப்பெற்ற ஆஸ்திகளே வெளியே போடுகிறதுபோல இவர்கள் செய்கிறது கிறிஸ்துமார்க்கத்திற்குப் பிரதிகூலமாயிருக்கிறதேயொழிய அத்தனேக்கு அநுகூலமாய்த் தோன்றவில்லே. கிறிஸ்துமார்க்கம் உண்மையென்று ரூபிக்க அதினுள் அநேக நியாயங்களிருக்க, வெளியேறிப் புறம்பானவைகளேத் தேடுவானேன்.

"நாங்கள் வீணான கட்டுக்கதைகளைப் பின்பற்றவில்லை; இன்னதை விசுவாசித்திருக்கிறோமென்று எங்களுக்குத் தெரியும். அவைகள் நிச்சயமாகவே உண்மையுள்ளதென்பதை இரக்ஷகரே அறிவார்" என்று நாம் திட்டமாய்ச் சொல்லலாமே. வேத வசனத்தினால் மனிதருடைய இருதயங்களிலுண்டாகிற மாறுதல்கள், அதை உண்மையாய் விசுவாசிக்கிறவனிடத்தில் தோன்றுகிற மேலான குணங்கள், இவைகள்தான் கிறிஸ்துமார்க்கத்தின் உண்மையை ரூபிக்கப் போதுமான அத்தாக்ஷிகளாயிருக்கின்றன. அவருடைய சித்தத்தின்படி செய்ய மனமுள்ளவனெவனோ அவன் இந்த உபதேசம் தேவனால் உண்டாயிருக்கிறதை அறிந்துகொள்வான் என்று இரக்ஷகர் சொன்ன நியாயத்தை நாம் அற்பமாய் எண்ணக்கூடாது. இவைகளையெல்லாம் விட்டுவிட்டு கிறிஸ்துமார்க்கம் உண்மையுள்ளது, ஏனென்றால் அது அற்புதங்களால் ஸ்தாபிக்கப்பட்டது என்று சொல்லுகிறது வீண். புது இருதயத்தைச் சிருஷ்டிக்கிறதைவிட பெரிய அதிசயம் எது? கிறிஸ்துமார்க்கம் தொடங்கி, எங்கும் பரம்பி இப்போது ஸ்தாபகமாயிருக்கிறது. அது பூமியில் நடத்தியிருக்கிற பலத்த மாறுதல்கள், அதினால் எங்கும் உண்டாயிருக்கிற திவ்ய நன்மைகள், பூமிக்குரிய கல்வியோடும் சாஸ்திரத்தோடும் அது இசைந்திருக்கிற தன்மை, இவைகளெல்லாம் கிறிஸ்துமார்க்கம் உண்மையுள்ளதென்று ரூபிக்கவில்லையா? அற்புதத்தைக் கொண்டே கிறிஸ்துமார்க்கத்தின் உண்மையை ரூபிக்க எழுதின புஸ்தகங்கள் உண்மையாய்க் கிறிஸ்துமார்க்கத்தை ருசித்த அநேகருக்குள்ளே பல சந்தேகங்களை எழுப்பிவிட்டதுண்டு. எப்படிப்பட்ட சந்தேகங்களென்றால், என்னுடைய ஆத்தும இரக்ஷிப்பு இப்படிக்கொத்த அஸ்திபாரத்தின்மேல்தானா கட்டப்பட்டிருக்கிறது? எனக்குள்ளிருக்கும் விசுவாசத்திற்கு ஆதாரம் இவைகள்தானா? அப்படியானால் இவைகளில் யாதாமொன்று ஸ்திரமில்லாததாகக் காணப்பட்டால், அஸ்திபாரம் அடியோடே போய்விடுமே. அற்புதங்கள் நடக்கக்கூடியதா, நடந்தாலும் நம்பக்கூடியதா என்று பலரும் ஆக்ஷேபிக்கிறார்களே. ஓர்வேளை சாக்ஷிகள் இலேசாய் மோசம்போயிருக்கலாமே.

அப்படி மோசம்போகாவிட்டாலும், கண்ணாரக்கண்டவர்களுக்கு இவ்வித அத்தாட்சி உதவுமேயொழிய எனக்கெப்படி இது பிரயோஜனமாகும், என்கிற இப்படிக்கொத்த அநேக சந்தேகங்களுக்கு இடங்கொடுக்கலாமே. விசுவாசமென்னும் கோட்டையைத் தகர்க்க அநேகர் பார்க்கும்பொழுது புறம்பான இந்த அத்தாக்ஷிகளைவிட, உள்ளான ஆவியின் அத்தாக்ஷியினாலும், தன் இருதயத்தின் மெய்யான நம்பிக்கையினாலும் தான் பிடித்திருக்கிறது சத்தியமென்று தனக்குள்ளே தானே உணருகிறவனே பாக்கியவான். அப்படி உண்மையாய் விசுவாசியாதவனுக்கு அற்புதங்களைப்போலொத்த இவ்வளவு பலத்த நியாயங்களைக் காட்டினாலும் அவன் விசுவாசிக்கவுமாட்டான். கிறிஸ்துவானவர் செய்த அற்புதங்களைப் பார்த்த எல்லாரும் விசுவாசித்தார்களா? அவர் செத்தவனை உயிரோடெழுப்பினார். அதைக்கண்ட யாவரும் விசுவாசித்தார்களா? சிலர் மாத்திரம் விசுவாசித்தார்கள்; வேறு சிலர் பரிசேயரிடத்திற்குப் போய் அறிவித்தார்கள் (யோவா. 11. 45, 46.). வானத்திலிருந்து சத்தமுண்டாச்சுது, சிலர் அது இடிமுழக்கம் என்றார்கள். அவர்களுக்கு அதில் யாதொரு உபயோகமில்லை. விசுவாசித்தவர்களோ, அது பிதா தமது குமாரனைக் குறித்துக்கொடுத்த அத்தாக்ஷி என்றார்கள்.

இதினால் அற்புதம் அவசியமில்லையாவென்று கேட்பீர்கள். அப்படி நான் சொல்லுகிறதில்லை; அவைகள் சுவிசேஷங்களில் இராவிட்டால், நாம் மயங்கவேண்டியது வரும். இரக்ஷகர் உலகமீட்பரென்று ரூபிக்கிறதற்கு இது அவசியம் வேண்டியதுதான். அப்படியிராவிட்டால் அதிசயமானவர் ஏன் அதிசயம் நடப்பிக்கவில்லையென்ற கேள்விக்கிடமாகும். சீவனாக வந்தவர் மரணத்தை ஏன் ஜெயிக்கவில்லையென்று கேட்கவேண்டியது வரும். நன்மைசெய்ய வந்தவர் தாம் பார்த்த குறைகளை நீக்காமல் போனதென்ன என்று விசாரிக்கவேண்டியதாயிருக்கும். அற்புதங்கள் அவசியமில்லையென்று நான் சொல்லுகிறதில்லை. அவருடைய பரிசுத்த நடத்தையினின்றும், உபதேசத்தினின்றும், அற்புதங்களைப் பிரித்து அதைக்

கொண்டு வேதவசனத்தின் உண்மையை ரூபிக்கப் பார்க்கிறதே தப்பிதமென்று சொல்லுகிறேன். கிறிஸ்துவின் சிரசின்மேல் அநேக கிரீடங்களிருக்க அவர் கர்த்தாதி கர்த்தன், இராசாதி இராசன் என்று ரூபிக்க ஒரு முடியைமாத்திரம் விசேஷித்துக் காண்பிக்கவேண்டியதென்ன (வெளி. 19. 12.)? உபதேசங்களால் அற்புதங்களுக்கு யாதொரு பிரயோஜனமுமில்லையென்றும், அற்புதங்களால் உபதேசங்களுக்குமாத்திரம் பிரயோஜனமுண்டென்றும் சொல்லுகிறது சரியா? அற்புதங்கள் உபதேசத்தை உறுதிப்படுத்துகிறதுபோல உபதேசம் அற்புதத்தையும் உறுதிப்படுத்துகிறது. இரண்டும் இரக்ஷகரிடத்தில் ஒன்றுபடுகிறது. அவர் வார்த்தைகளினால் உபதேசித்து கிரியைகளினால் அற்புதஞ்செய்துவந்தார். தமது பரிசுத்த நடத்தையினாலும் அளவற்ற இரக்கத்தினாலும், தம்முடைய தன்மை இப்படிப்பட்டதென்று ரூபித்தார். கிறிஸ்துவானவருக்காக அவருடைய அற்புதங்களை ஏற்றுக்கொள்ளவேண்டுமேயொழிய, அற்புதங்கள் செய்ததினாலே கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளவேண்டியதில்லை. மொத்தமாய்ச் சொல்லவேண்டுமானால் அவருடைய உபதேசமும், அற்புதமும், பரிசுத்த நடத்தையும் சகலமும் நமது இரக்ஷிப்புக்கு அனுகூலமாயிருக்கிறது.



# அற்புதங்கள்.

## 1. தண்ணீரை இரசமாக்கினது.

யோவான், 2. 1—11.

"மூன்றாம்நாளிலே கலிலேயாவிலுள்ள கானாஊரிலே ஒரு கலியாணம் நடந்தது; இயேசுவின் தாயும் அங்கேயிருந்தாள். இயேசுவும் அவருடைய சீஷரும் அந்தக் கலியாணத்துக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள்.

திராட்சரசங் குறைவுபட்டபோது, இயேசுவின் தாய் அவரைநோக்கி: அவர்களுக்குத் திராட்சரசம் இல்லை என்றாள். அதற்கு இயேசு: ஸ்திரீயே, எனக்கும் உனக்கும் என்ன, என் வேளை இன்னும் வரவில்லை என்றார். அவருடைய தாய் வேலைக்காரரை நோக்கி: அவர் உங்களுக்கு என்ன சொல்லுகிறாரோ, அதின்படி செய்யுங்கள் என்றாள். யூதர்கள் தங்களைச் சுத்திகரிக்கும் முறைமையின்படியே, ஒவ்வொன்று இரண்டு மூன்று குடம் தண்ணீர் கொள்ளத்தக்க ஆறு கற்சாடிகள் அங்கே வைத்திருந்தது. இயேசு வேலைக்காரரை நோக்கி: ஜாடிகளிலே தண்ணீர் நிரப்புங்கள் என்றார்; அவர்கள் அவைகளை நிறைய நிரப்பினார்கள். அவர் அவர்களை நோக்கி: நீங்கள் இப்பொழுது மொண்டு, பந்திவிசாரிப்புக்காரனிடத்தில் கொண்டுபோங்கள் என்றார்; அவர்கள் கொண்டுபோனார்கள்.

அந்தத் திராட்சரசம் எங்கேயிருந்து வந்ததென்று தண்ணீரை மொண்ட வேலைக்காரருக்குத் தெரிந்ததேயன்றி பந்திவிசாரிப்புக்காரனுக்குத் தெரியாததினால், அவன் திராட்சரசமாய் மாறின தண்ணீரை ருசிபார்த்தபோது, மணவாளனை அழைத்து: எந்த மனுஷனும் முன்பு நல்ல திராட்சரசத்தைக் கொடுத்து, ஜனங்கள் திருப்தியடைந்தபின்பு, ருசிகுறைந்ததைக் கொடுப்பான், நீரோ நல்ல ரசத்தை இதுவரைக்கும் வைத்திருந்தீரே என்றான்.

இவ்விதமாக இயேசு இந்த முதலாம் அற்புதத்தைக் கலிலேயாவிலுள்ள கானாஊரிலே செய்து, தம்முடைய மகிமையை வெளிப்படுத்தினார்; அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள்.

நம்முடைய இரட்சகர் சொன்ன உவமைகளில் விதைக்கிறவனுடைய உவமை முதலாவதாயிருக்கிறதுபோல இந்த அற்புதம் அவருடைய அற்புதங்களில் முந்தினது. மேலும்

இது அவருடைய கிரியையின் தன்மை முழுவதையும் விளக்கிக் காட்டுகிறதென்று சொல்லலாம். ஏனெனில் சாதாரணமும் அற்பமுமானதை மேன்மைப்படுத்தி அதிக பிரயோசனமுள்ள தாக்குகிறதே அவருடைய கிரியை. இது மூன்றாம்நாளில் நடந்ததாகச் சொல்லியிருக்கிறது. அதாவது இரட்சகர் பிலிப்பையும் நாத்தான்வேலையுங் கண்ட மூன்றாம் நாளென்று அர்த்தம்பண்ணலாம். கன்னிமரியாளும் நம்முடைய இரட்சகரும் இந்தக் கலியாணத்துக்குப் போயிருந்தபடியால் இது அவர்களுடைய இனத்தில் நடந்த கலியாணமாயிருக்கலாம். மரியாள்மாத்திரம் அங்கே போயிருந்ததாகச் சொல்லியிருப்பதினால், அவளுடைய புருஷனாகிய யோசேப்பு இதற்குமுந்தி இறந்துபோயிருக்கவேணும். இரசம் குறைந்தபொழுது அவருடைய தாய் அவரைநோக்கி அவர்களுக்குத் திராட்சரசம் இல்லையென்று சொன்ன நோக்கமென்ன? வெளியரங்கமாகத் தம்முடைய மகிமையை வெளிப்படுத்த நம்முடைய இரட்சகர் செய்த அற்புதங்களில் இது முதலாவதாக இருந்தபோதிலும், தம்முடைய ஊழியத்தைத் தொடங்குமுன்னே தம்முடைய குடும்பத்தில்தானே பல சமயங்களில் தமக்கு அற்புதங்கள் செய்ய வல்லமையுண்டென்று அவர் காண்பித்திருப்பார். அதைப் பார்த்திருந்த மரியாள் இரசம் குறைந்ததைக் கண்டு தம்முடைய வல்லமையைக் காண்பிப்பதற்கு இது நல்ல சமயமென்று எண்ணி இப்படிச் சொல்லியிருப்பாள். இரட்சகர் மாறுத்தரமாக ஸ்திரீயே என்று அவளை அழைத்தது மரியாதைக் குறைவென்று எண்ணக்கூடாது. யோவா. 19. 26ல் இரட்சகர் தம்முடைய தாயாரோடே பேசின கடைசிவார்த்தைகள் என்ன? "ஸ்திரீயே, அதோ, உன் மகன்" என்று சொல்லி அவளை யோவானுக்கு ஒப்புக்கொடுத்தார். கண்யமுள்ள ஸ்திரீகளைப் பார்த்து மரியாதையாய்ப் பேசும்பொழுதும் இப்படிப் பேசுகிறது அத்தேசத்திற்கும் அக்காலத்துக்குமுரிய வழக்கம். இரட்சகர் பின்வரும் வார்த்தைகளை அதட்டுகிற பாவனையாகச் சொன்னாலும், மரியாள் அந்த அதட்டுதலினாலே முற்றிலும் அவநம்பிக்கைக்கு இடங்கொடாமல் இன்னும் இந்தச் சமயத்தில்

தம்முடைய அற்புத வல்லமையைக்கொண்டு உதவிசெய்வா ரென்று எண்ணினபடியால், வேலைக்காரரை நோக்கி "அவர் உங்களுக்கு என்ன சொல்லுகிறரோ, அதின்படி செய்யுங்கள் என்றாள்." என்னுடைய நேரம் என்று இரட்சகர் இங்கே சொல்லுகிற வார்த்தை அடிக்கடி அவருடைய மரணவேளை யைக்குறித்துச் சொன்ன வார்த்தையாயிருந்தாலும், இங்கே அதின் பொருள் வேறே. "நீர் கேட்கிற உதவியை நான் செய் கிறதற்கேற்ற சரியான நேரம் இன்னும் வரவில்லை. இப்பொழு துதான் ரசம் குறைந்துவருகிறது. முற்றிலும் இல்லாமல்போகும் பொழுது நான் செய்யவேண்டியதைச் செய்வேன். அதுதான் என்னுடைய நேரம்" என்கிற கருத்தாய் அப்படிச் சொன்னார். ஏனென்றால் கொஞ்சமாவது ரசமிருக்குமானால் அந்த அற்புதம் முழுவதும் உண்மையாய் நடந்ததென்று நன்றாய் விளங்கமாட் டாது. இந்த ஆறு கற்சாடிகள் அங்கே இந்த நோக்கத்தையிட் டல்ல, யூதர்களுடைய வழக்கத்தின்படி வருகிறவர்கள் தங்க ளைச் சுத்திகரித்துக்கொள்வதற்காக வைக்கப்பட்டிருந்தது (மத். 15. 2. மாற் 7. 2–4.). இந்தச் சாடிகளைத் தண்ணீரால் நிரப் பினதுமாத்திரம் இங்கே சொல்லியிருக்கிறது. அற்புதம் நடந்த விதம் செய்தவருக்குமாத்திரந்தான் தெரியும். இரட்சகர் ஒரு வார்த்தை பேசினதாகவாவது, எதையாவது கலந்ததாகவாவது சொல்லக்காணோம். ஊற்றினது தண்ணீர், அதிலிருந்து வார்த் ததும் சாப்பிட்டதும் நல்ல ரசம். இது எப்பொழுது மாறினது, என்னவிதமாய் மாறினது என்று தெரியாவிட்டாலும் இரட்சக ராலே மாறினது என்றும், அதை யாவரும் சாப்பிட்டுத் திருத்தி யடைந்தார்கள் என்றும் தெளிவாகச் சொல்லியிருக்கிறது. இந்த அற்புதத்தினாலே இரட்சகர் தம்முடைய மகிமையை வெளிப் படுத்தினார். அதைக் கண்ட சீஷர் அவரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள்.

இதை வாசித்து சிந்திக்கிற நமக்கு இதினால் உண்டாகும் பிரயோசனமென்ன? பரிசுத்தஆவியானவர் இதைக்கொண்டு போதிக்கிற போதனைகளென்ன?

இரட்சகர் கலியாணவீட்டுக்குப் போயிருந்தார், கலியாணத்

துக்கு வந்தவர்களோடு சந்தோஷப்பட்டார், கலியாணவிருந்தில் தம்முடைய சீஷர்களோடு சாப்பிட்டார், அந்த விருந்துக்குக் குறைவுவராதபடி தம்மால் கூடிய உதவியைச் செய்தார். இது அவருடைய தன்மைக்கு விரோதமல்ல. கிறிஸ்து மார்க்கம் நம்முடைய சரியான சந்தோஷங்களைக் குறைத்துப் போடுகிறதுமில்லை, எடுத்துப்போகிறதுமில்லை. அவைகளை சுத்திகரித்து நிறைவும் நிலையுள்ளதுமாக்குகிறதே அதினுடைய நோக்கம். அநேகர் கிறிஸ்துமார்க்கத்தில் சந்தோஷமேயில்லை என்றும் மற்றவர்களைத் துக்கமாயிருக்கச் செய்கிறதே அதின் தன்மையென்றும் தப்பாய் எண்ணுகிறார்கள். இந்த எண்ணம் கிறிஸ்துமார்க்கத்தின் சரியான தன்மைக்கு எவ்வளவு விகற்பமானதென்று நம்முடைய இரட்சகருடைய மாதிரி நன்றாய் ரூபிக்கிறது. கானாவூரிலே கலியாணவீட்டுக்குப் போனவர், பெத்தானியாவூரிலே இழவுவீட்டுக்கும் போனார். இங்கே சந்தோஷப்பட்டவர் அங்கே துக்கப்பட்டார். இவ்விதமாக நாமும் நம்முடைய இரட்சகரைப்போல சந்தோஷப்படுகிறவர்களுடனே சந்தோஷப்பட்டு அழுகிறவர்களுடனே அழுது கிறிஸ்து இயேசுவினிடத்திலிருந்த சிந்தையே நம்மிடத்திலும் இருக்கிறதென்று காண்பிப்போமாக.

ரோமான்மார்க்கத்தார் மரியாளைக்குறித்து கொண்டிருக்கிற எண்ணம் வேதவசனத்துக்கு எவ்வளவு விரோதமானதென்று இதினால் அறிந்துகொள்ளுகிறோம். அவள் இயேசுவின் தாயானபடியால் ஸ்திரீகளுக்குள்ளே ஆசீர்வதிக்கப்பட்டவளாயும் கனம்பெற்றவளாயும் இருந்தபோதிலும் இயேசுவானவரைப் போல நாம் அவளை வணங்கவும் ஸ்தோத்திரிக்கவும் கூடாது. அப்படியானால் நம்முடைய இரட்சகரும் அவளுக்குச் செவி கொடுத்திருப்பாரே. அப்படிச் செய்யாமல் "எனக்கும் உனக்கும் என்ன" என்று என் அவளைக் கண்டித்தார்? மனுஷ தன்மையின்படியே அவர் அவளுடைய மகனாயிருந்தபடியால் அவளைக் கனம்பண்ணி அவளுக்குக் கீழ்ப்படியவேண்டியிருந்த போதிலும், தேவதன்மையின்படியே அவளுக்கும் கர்த்தரான படியால் தம்முடைய பிதாவின் காரியத்தில் அவள் தலையிட்டுக்

கொள்ளுகிறது அவருக்குப் பிரியமில்லாதிருந்தது. இதை யாவரும் சரியானபடி அறிந்துகொள்வார்களாகில் மரியம் மாளைப் பார்த்து செபம்பண்ணமாட்டார்கள். பூமியிலிருந்த பொழுதே அவளுடைய விண்ணப்பம் உடனே செல்லாதிருக்க, இப்பொழுது பரமண்டலத்திலிருக்கிற அவளைப் பார்த்து எங்களுக்காக வேண்டிக்கொள்ளும் என்று எப்படிக் கேட்கலாம்?

நம்முடைய இரட்சகர் தண்ணீரை ரசமாக்கினார். ருசி இல்லாததற்கு ருசி கொடுத்தார், அற்பமான பொருளை மேன்மையுள்ளதாக்கினார். அதுபோல பூமிக்குரிய இந்த சரீரத்தை அவர் மகிமையுள்ளதாக்கிப் பாவத்தால் கறைப்பட்டதும் நரகத்துக்கு ஏதுவானதும் தேவனுடைய கோபாக்கினைக்கு உட்பட்டதுமான நம்முடைய ஆத்துமங்களை அவர் தம்முடைய ஆவியினாலே சுத்தமாக்கி சீர்ப்படுத்தி நம்முடைய இருதயங்களைத் தமக்கேற்றதாக மாற்றி, நித்திய மோட்சராச்சியத்தில் தம்மோடும் தம்முடைய பிதாவோடும் நித்தியகாலமாய் மகிமையோடு வாழ்ந்திருக்கும்படி செய்கிறார். புதிய உடன்படிக்கையின் மத்தியஸ்தராகிய இவரை நியாயப்பிரமாணத்தின் மத்தியஸ்தனாகிய மோசேயோடே சற்றே ஒத்துப்பாருங்கள். இரட்சகர் தண்ணீரை ரசமாக்கினார், மோசேயோ தண்ணீரை இரத்தமாக்கினான், அது பிரயோசனமுள்ளது, இது பிரயோசனமற்றது. அது சீவனுக்கேதுவானது. இது அழிவுக்கேதுவானது. மெய்யாகவே குற்றப்படுத்துகிறதும் சாபத்துக்குள்ளாக்குகிறதுமான நியாயப்பிரமாணம் மோசேயினால் வந்தது. "கிருபையும் உண்மையுமோ நம்முடைய இரட்சகராலே உண்டானது." பழைய உடன்படிக்கைக்கு புது உடன்படிக்கை எவ்வளவு மேலானது, எவ்வளவு சிறந்ததென்று இதினாலே பாருங்கள். தண்ணீரை ரசமாக்கினவர் கொஞ்சநஞ்சமாகவல்ல, ஆறு கற்சாடிகள் நிறைய குறைவில்லாமல் தாராளமாக இடுக்கமில்லாமல் பரிபூரணமாக வேண்டியதற்கும் அதிகமாக, கேட்டதற்கும் மிச்சமாகத் தருகிறார். அவர் இராசனைபடியால் ராசாவைப்போல கொடுக்கிறார். நாம் கேட்கிறதுகொஞ்சமாகக் கேட்டாலும் அவர்

கொடுக்கிறதிலே தாழ்வில்லை. அவர் கிருபாசமுத்திரமான படியால் அவரிடத்திலிருந்து எவ்வளவு மொண்டுகொண்டாலும் அவருடைய கிருபை ஒருபோதும் குறையாதென்று எண்ணி, கிருபாசனத்தினிடத்திலே தைரியமாய்ச் சேரக்கடவோம்.

இவ்விதமாய் இரட்சகர் ரசம் சாப்பிட்ட இடத்தில் போயிருந்ததும், அது குறைந்தபொழுது இவ்வளவு தாராளமாய் அதை உண்டுபண்ணிக்கொடுத்ததும் மற்றவர்களைக் குடிக்கவும் வெறிகொள்ளவும் ஏவிவிடுமே என்பார்கள். ஆனால் இரசத்தைக்குறித்து இப்படிச் சொல்லுவோமானால் கர்த்தரிடத்திலிருந்து நாம் பெற்றனுபவித்துவருகிற எல்லா நன்மைகளையும் குறித்து அப்படிச் சொல்லலாமே. அவர் தாராளமாய்க் கொடுப்பதினாலே நாம் மட்டுமிஞ்சி சாப்பிட்டுப் பாவஞ்செய்யலாமென்ற பொருளா? அப்படிச் செய்து நாம் நம்மைக் குற்றவாளிகளாக்கிக்கொண்டால் அது நம்முடைய பாவமேயொழிய கர்த்தர்பேரில் சுமத்தத்தக்க குற்றமல்ல. அப்படியானால் குடியரும் வெறியரும் தேவனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கமாட்டார்களென்று ஏன் திட்டமாக தம்முடைய வேதத்தில் சொல்லியிருக்கிறார்? (1 கொரி. 5. 11; 6. 10. கலா. 5. 21.)

கடைசியாக அந்தப் பந்திவிசாரிப்புக்காரன் சொன்னதைக் கவனியுங்கள். எந்த மனுஷனும் முன்பு நல்ல திராட்சரசத்தைக் கொடுத்து ஜனங்கள் திருப்தியடைந்தபின்பு, ருசிகுறைந்ததைக் கொடுப்பான். உலகத்தின் தன்மை இதுதான். அது முதலாவது கனத்தையும் ஆடம்பரத்தையுங் காட்டும்; அதற்குப் பிறகு வருகிறது கசப்புத்தான். எந்தப்பாவமும் முந்தி இனிமையாயிருக்கும்; அதின் முகத்தில் பிரகாசமும் அதினுடைய உதட்டில் தேனும் இருக்கிறதாகத் தோன்றும். அதைச் சாப்பிட்டபிறகோ, மனச்சாட்சியின் வேதனையும் வெட்கமும் துக்கமும் கண்ணீருமாகிய ருசிகுறைந்த பங்குதான் கிடைக்கும். ஆனால் நாம் மெய்க்கிறிஸ்தவர்களாக முந்தி குடங்களைத் தண்ணீரால் நிரப்புவோமானால், அதாவது, நம்முடைய கட்டிலையும் முகத்தையும் மெய்மனஸ்தாபத்தின் கண்ணீரால் நனைப்போமானால், அப்பொழுதுதான் கிறிஸ்துவானவர் நம்

முடைய கண்ணீரை ரசமாக மாற்றுவார். துக்கத்தின் கண்ணீர் இருதயத்தைப் பூரிப்பாக்குகிற ரசமாகும். ஏனெனில் கிறிஸ்துவானவர் எப்போதும் முந்தி ருசிகுறைந்ததை வார்த்து நல்ல ரசத்தைக் கடைசிவரைக்கும் வைத்திருக்கிறார். நாம் இப்படிப்பட்ட மெய்யான மனஸ்தாபத்தை முந்தி அடைந்து, பிறகு மெய்யான சந்தோஷத்திற்குப் பங்காளிகளாவோமாக.



## 2. தலைவனுடைய மகனைச் சொஸ்தமாக்கினது.

யோவான், 4. 46—54.

*"பின்பு, இயேசு தாம் தண்ணீரைத் திராட்சரசமாக்கின கலிலேயாவி லுள்ள கானாஊருக்கு மறுபடியும் வந்தார்; அப்பொழுது கப்பர்நகூமி லே ராஜாவின் மனுஷரில் ஒருவனுடைய குமாரன் வியாதியாயிருந்தான். இயேசு யூதேயாவிலிருந்து கலிலேயாவுக்கு வந்தாரென்று அந்த மனுஷன் கேள்விப்பட்டபோது, அவரிடத்திற்குப்போய், தன் மகன் மரண அவஸ் தையாயிருந்தபடியினாலே, அவனைக் குணமாக்கும்படிக்கு வரவேண்டு மென்று அவரை வேண்டிக்கொண்டான்.*

*அப்பொழுது இயேசு அவனை நோக்கி: நீங்கள் அடையாளங்களையும் அற்புதங்களையும் காணாவிட்டால் விசுவாசிக்கமாட்டீர்கள் என்றார். அதற்கு ராஜாவின் மனுஷன்: ஆண்டவரே, என் பிள்ளை சாகிறதற்கு முன்னே வரவேண்டும் என்றான். இயேசு அவனை நோக்கி: நீ போக லாம், உன் குமாரன் பிழைத்திருக்கிறான் என்றார். அந்த மனுஷன், இயேசு சொன்ன வார்த்தையை நம்பிப்போனான். அவன் போகையில், அவனுடைய ஊழியக்காரர் அவனுக்கு எதிர்கொண்டுவந்து, உம்மு டைய குமாரன் பிழைத்திருக்கிறான் என்று அறிவித்தார்கள். அப்பொ ழுது: எந்தமணிநேரத்தில் அவனுக்குக் குணமுண்டாயிற்று என்று அவர்களிடத்தில் விசாரித்தான். அவர்கள்: நேற்று ஏழாமணிநேரத் தில் ஜுரம் அவனை விட்டது என்றார்கள். உன் குமாரன் பிழைத்திருக் கிறான் என்று இயேசு தன்னுடனே சொன்ன மணிநேரம் அதுவே என்று தகப்பன் அறிந்து, அவனும் அவன் வீட்டாரனைவரும் விசுவாசித் தார்கள்.*

*இயேசு யூதேயாவிலிருந்து கலிலேயாவுக்குத் திரும்பிவந்தபின்பு, இது அவர் செய்த இரண்டாம் அற்புதம்.*

---

இராசாவின் மனிதரில் ஒருவனென்று அழைக்கப்பட்டி ருக்கிற இவன் இன்ன அந்தஸ்துடையவனென்று திட்டமாய் அறிந்துகொள்ளுகிறது லேசான காரியமல்ல. இராசாவின் மனிதனென்று சொல்லும்போது அந்த வார்த்தையை இராச பட்சத்தைச் சேர்ந்தவனென்றாவது, இராசவமிசத்தில் பிறந்தவ னென்றாவது, இராச அரண்மனையில் ஒரு பெரிய உத்தியோ கஸ்தனென்றாவது அர்த்தம்பண்ணலாம். மத். 8லும் லூக். 7லும் சொல்லப்பட்டிருக்கிற அற்புதமும் இந்த அற்புதமும் ஒன்றுதானென்று சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் இந்த

இரண்டு அற்புதங்களைச் சேர்ந்த சங்கதிகளை நன்றாய் ஒத்துப் பார்த்தோமானால், இவைகள் இரண்டும் ஒன்றல்லவென்பது வெளியாகும். அங்கே சொல்லப்பட்டிருக்கிற நூற்றிற்குச் சேர்வைக்காரன் ஒரு அஞ்ஞானி, இவனோ யூதன். அவன் தன் வேலைக்காரனுக்காக மன்றாடுகிறான், இவன் தன் மகனுக்காக மன்றாடுகிறான். அது நம்முடைய இரட்சகர் கப்பர்நகூமூரில் பிரவேசித்தபொழுது நடந்தது: இது அவர் கானாவிலே இருந்தபொழுது நடந்தது. அவன் மற்றவர்கள்மூலமாய் மன்றாடுகிறான், இவன் தானே வருகிறான். அந்த வேலைக்காரனுடைய வியாதி திமிர்வாதம், இவனுடைய மகனோ சுரத்தினால் வருத்தப்பட்டான். இன்னும் நாம் கவனிக்கவேண்டிய ஒரு விசேஷித்த வித்தியாசமுண்டு. அந்த நூற்றிற்குச் சேர்வைக்காரன் பலத்த விசுவாசத்தைக் காண்பித்தான், இவனுடைய விசுவாசமோ பெலவீனமுள்ளதாயிருந்தது. அவன் இரட்சகர் ஒரு வார்த்தைமாத்திரம் பேசினால் தன் வேலைக்காரன் சொஸ்தமடைவானென்று நம்பினான். இவன் இரட்சகர் தானே வந்தால்தான் தன்னுடைய மகன் சுகமடைவான் என்றெண்ணி இரட்சகருடைய வல்லமையை மட்டுத்திட்டப்படுத்தினான். அவனை இரட்சகர் புகழ்ந்துகொண்டார், இவனையோ கடிந்துகொண்டார். இத்தனை காரியங்களில் வித்தியாசப்படுகிற அற்புதங்கள் இரண்டு மூன்று சங்கதிகளில் ஒன்றுபோலிருப்பதினால், அதாவது மரணத்துக்கேதுவாய் வியாதிப்பட்டதும், தூரத்திலிருந்து ஒரு வார்த்தையால் சொஸ்தமாக்கினதும், திரும்பிவந்து சுகப்பட்டதைக் கண்டதுமாகிய இவைகளில் வித்தியாசப்படாதினாலே இரண்டும் வேறல்ல, ஒன்றுதான், என்று சொல்லுவது சரியல்ல.

இந்த மனிதன் லூக். 8. 3ல் சொல்லியிருக்கிற கூசாதான் என்று சிலர் எண்ணுகிறார்கள். இவன் கப்பர்நகூமில் தன்னுடைய மகனை வியாதியாக விட்டு, எருசலேமிலிருந்து கானாவூருக்கு வந்த இரட்சகரிடத்திற்போய் மரணத்துக்குச் சமீபமாயிருந்த அவனைக் குணமாக்கும்படிக்கு வரவேண்டுமென்று அவரை வேண்டிக்கொண்டான். இரட்சகர் மாறுத்தர

மாகச் சொன்ன வார்த்தைகளில் கொஞ்சம் வெறுப்புத் தோன்று கின்றது. "நீங்கள் அடையாளங்களையும் அற்புதங்களையும் காணுவிட்டால் விசுவாசிக்கமாட்டீர்கள் என்ருர்." இதினுல் இவன் அன்பினுல் ஏவப்பட்டு மனதார இரட்சகரிடத்தில் வராமல் ஒரு பெரிய அவசரத்தினிமித்தம், அகத்தியம் நேரிட்ட படியால் வந்ததாகத் தோன்றுகிறது. ஏசா. 26. 16ல் சொல்லி யிருக்கிறபடி "கர்த்தாவே, நெருக்கத்தில் உம்மைத் தேடினுர் கள்; உம்முடைய தண்டனை அவர்கள்மேலிருக்கையில் அந்த ரங்கவேண்டுதல் செய்தார்கள்." இது இயல்புக்குரியதாய் இருந் தபோதிலும் கர்த்தருடைய உண்மையுள்ள பிள்ளைகளுக்கு இது லட்சணமல்ல. அவர்கள் வருத்தமான காலங்களில் அவரை அதிகமாய்த் தேடினபோதிலும், மற்றவேளைகளிலும் அவரை நோக்கிக் கெஞ்சுகிறதே அவர்களுக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கும். இந்தச் சங்கதிக்குமுன் சொல்லப்பட்டிருக்கிற சமாரியரைப் பார்க்கும்பொழுது, அவர்கள் அற்புதத்தைக் காணு விட்டாலும் அவர்பேரில் விசுவாசம்வைத்தார்கள் என்று விளங் கும் (யோவா. 4. 42.). யூதர்கள்தான் ஒரு அடையாளத்தைத் தேடுகிருர்கள். (1 கொரி. 1. 22.)

இந்த மனுஷனுடைய விசுவாசம் எவ்வளவு பெலவீன முள்ளதென்று பாருங்கள். அவரே வரவேணுமென்று கேட் கிறுன். அவர் தூரத்திலிருந்து ஒரு வார்த்தை சொன்னுல் அதி னுலே காரியம் முடியாதென்றும், இரட்சகர் தானே வந்தால் தான் தன் மகன் சொஸ்தமடைவானென்றும் எண்ணினது போலிருந்தது. மேலும் என் பிள்ளை சாகிறதற்குமுன்னே வாரும் என்ருன். செத்தபிற்பாடு வந்தால் அவரால் ஒன்றும் ஆகாதென்றும், வியாதியாயிருக்கிறவனைச் சொஸ்தமாக்க அவ ரால் கூடுமேயொழிய செத்தவனை உயிரோடெழுப்புகிறது அவ ருடைய வல்லமைக்கு மிஞ்சினதென்றும் அவன் நினைத்தான். அந்த நூற்றிற்கு சேர்வைக்காரனுக்கும் இவனுக்கும் இதிலே எவ்வளவு வித்தியாசமிருந்தது. அவன் ஒரு வார்த்தைமாத்திரம் சொன்னுல் என் வேலைக்காரன் சொஸ்தமடைவான் என்று உறுதியாய் விசுவாசித்தான். இரட்சகர் இவனுக்குச் சொன்ன

உத்தரவிலே இவன் விசுவாசத்தைச் சோதித்து இவனை உறுதிப்படுத்துகிறார். இதில் இரட்சகருடைய இரக்கத்தைப் பாருங்கள். இவனிடத்திலிருந்த அவிசுவாசத்தினாலே இவனைக் கோபித்துத் துரத்திவிடாமல் இவனுக்கிரங்கி நன்மைசெய்ததுமல்லாமல், இவனுடைய விசுவாசக்குறைவையும் நீக்குகிறார். தாம் போகாமல் (தாமே வரவேணுமென்று எவ்வளவாக வேண்டிக்கொண்டபோதிலும்) தமது வார்த்தையை அனுப்புகிறார். ஒரு வார்த்தையைமாத்திரம் பேசச்சொன்ன சேர்வைக்காரனுடைய வீட்டிற்கோ தாமே போகிறார். இவனுடைய பெலவீன விசுவாசத்தைப் பெலப்படுத்துகிறார். அவனுடைய உறுதியான விசுவாசத்தையோ மெச்சிக்கொள்ளுகிறார். போகாததினால் இவனுடைய விசுவாசம் அதிகரிக்கிறது, போனதினால் அவனுடைய தாழ்மை வெளிப்படுகிறது. மேலும் இரட்சகர் முகமாட்டம் பார்க்கிறவரல்ல என்று இதினால் விளங்கும். இராசாவின் மனிதனுடைய மகனைச் சொஸ்தமாக்க ஒரு வார்த்தையை அனுப்புகிறார்; நூற்றுக்குச் சேர்வைக்காரனுடைய வேலைக்காரனைக் குணமாக்கத் தாமே போகிறார். (2 இரா. 5. 10, 11.)

இந்த மனுஷனுடைய விசுவாசம் எத்தனை சீக்கிரம் ஸ்திரப்பட்டதென்று பாருங்கள். இரட்சகர் சொன்னவுடனே விசுவாசித்துப் போனான். கப்பர்நகூமூர் அதிகத் தூரமாயிராவிட்டாலும் மறுநாள்தான் அங்கே போய்ச்சேர்ந்தான். சாவகாசமாய்ப் போனான். ஏனென்றால் "விசுவாசிக்கிறவன் பதறான்." (ஏசா. 28. 16.) அவன் வேலைக்காரரைப் பார்த்துக் கேட்கிற கேள்வியைக் கவனியுங்கள். எந்த மணிநேரத்தில் அவனுக்குக் குணமுண்டாயிற்று, அல்லது அவன் சுகப்படத் தொடங்கினான் என்பதுபோலக் கேட்டான். உடனே முற்றிலும் சொஸ்தமடையாமல் கொஞ்சங்கொஞ்சமாக சுகமடைவான் என்று எண்ணினான். அவனுக்குக் கிடைத்த மாறுத்தரவு என்ன? ஏழாம் மணிநேரத்திலே சுரம் அவனை விட்டது என்றார்கள். அதாவது அந்தச் சமயத்தில் முற்றிலும் அவனை விட்டுப் போச்சுது. சீமோனுடைய மாமியின் சுகத்தைக்குறித்தும் இப்படித்

தான் சொல்லியிருக்கிறது (லூக் 4. 39.). நாம் எவ்வளவு குறைவுள்ளவர்களாய் இருந்தபோதிலும், நம்முடைய விசுவாசம் எவ்வளவு பெலவீனமாயிருந்தாலும் கர்த்தர் நமக்குச் செய்கிற நன்மையில் குறைவு வைக்கிறதில்லே. அவர் இரக்கத்தில் ஐசுவரியமுள்ளவரானபடியால் நமக்கு வேண்டிய எல்லா நன்மைகளேயுந் தருகிறூர்; நிறைவாகத் தருகிறூர். இதைக் கவனிக்கிற நாம் நம்முடைய அவிசுவாசத்தைக்குறித்து வெட்கப்பட்டு நம்முடைய முழு இருதயத்தையும் கர்த்தருக்கு ஒப்புக்கொடுக்கக்கடவோம்.

இத்தனைபெரிய ஆச்சரியத்தைக் கண்ட இந்த மனுஷனேக் குறித்து என்னசொல்லியிருக்கிறது. அவனும் அவன் வீட்டாரனைவரும் விசுவாசித்தார்கள். அவன்மாத்திரமல்ல, அவன் குடும்பத்தைச் சேர்ந்த யாவரும் இந்த ரட்சண்ய பாத்திரத்தில் பங்குபெற்றூர்கள் (அப். 16. 15, 34; 18. 8.). ஆனுல் அவன் முன்னே அவனை விசுவாசிக்கவில்லேயா? விசுவாசத்தினுல் அல்லவா அவன் திரும்பிப்போய் தன் மகன் சுகமடைந்ததைக் கண்டான். இங்கே சொல்லியிருக்கிற பொருளென்ன? வெளியரங்கமாக அவருடைய சீஷர்களுடைய தொகையைச் சேர்ந்து, வரப்போகிற மேசியா அவர்தான் என்று விசுவாசித்துத் தன்னே அவருக்கு ஒப்புக்கொடுத்தான். அல்லது அந்த விசுவாசம் அவனுக்குள்ளே அதிகரித்துவந்ததென்று அர்த்தம் பண்ணலாம். "விசுவாசத்தை வர்த்திக்கப்பண்ணவேண்டும்" (லூக் 17. 5.). "விசுவாசிக்கிறேன் ஆண்டவரே, என் அவிசுவாசம் நீங்கும்படி உதவிசெய்யும்" (மாற். 9. 24.). தன் மகன் சொஸ்தமாகவேணுமென்று இரட்சகரிடத்தில் வந்தபோது அவனுக்குள் விசுவாசம் ஆரம்பித்தது. உன்னுடைய குமாரன் பிழைத்திருக்கிறுன் என்று இரட்சகர் சொன்னபோது, அந்த விசுவாசம் அதிகரித்தது. வேலேக்காரர் அவனுக்கு வந்து செய்தியை அறிவித்தபோது அந்த விசுவாசம் நிறைவடைந்ததென்று ஒரு பரிசுத்தவான் சொல்லுகிறூர் (யோசு. 2. 11. 1 இரா. 17. 24. யோவா. 11. 15.). அற்புதங்கள் அவிசுவாசிகளுக்குள் விசுவாசத்தை உண்டாக்கும்படிக்கல்ல, விசுவாசிகளுடைய விசுவாசத்தைப் பெலப்படுத்தும்படிக்கே முக்கியமாய்ச் செய்யப்பட்டன. ஆகையினுல்தான் மத். 12. 39ல் யூதர்கள் கேட்டபடி இரட்சகர் ஒரு அற்புதத்தைச் செய்ய மனமற்றவராயிருந்தார். (மத். 16. 1—4.)



## 3. மீன்கள் திரளாய்ப் பிடிபட்ட அதிசயம்.

---

லூக்கா, 5. 1—11.

"பின்பு அவர் கெனேசரேத்துக் கடலருகே நின்றபோது, திரளான ஜனங்கள் தேவவசனத்தைக் கேட்கும்படி அவரிடத்தில் நெருங்கினார்கள். அப்பொழுது கடற்கரையிலே நின்ற இரண்டு படவுகளைக் கண்டார். மீன்பிடிக்கிறவர்கள் அவைகளை விட்டிறங்கி, வலைகளை அலசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது அந்தப் படவுகளில் ஒன்றில் ஏறினார், அது சீமோனுடையதாயிருந்தது; அதைக் கரையிலிருந்து சற்றே தள்ளும்படி அவனைக் கேட்டுக்கொண்டு, அந்தப் படவில் உட்கார்ந்து, ஜனங்களுக்குப் போதகம்பண்ணினார்.

அவர் போதகம்பண்ணி முடித்தபின்பு, சீமோனை நோக்கி: ஆழத்திலே தள்ளிக்கொண்டுபோய், மீன்பிடிக்கும்படி உங்கள் வலைகளைப் போடுங்கள் என்றார். அதற்குச் சீமோன்: ஐயரே, இராமுழுவதும் நாங்கள் பிரயாசப்பட்டும் ஒன்றும் அகப்படவில்லை; ஆகிலும் உம்முடைய வார்த்தையின்படியே வலையைப் போடுகிறேன் என்றான். அந்தப்படியே அவர்கள் செய்து, தங்கள் வலை கிழிந்துபோகத்தக்கதாக மிகுதியான மீன்களைப் பிடித்தார்கள். அப்பொழுது மற்றப் படவிலிருந்த கூட்டாளிகள் வந்து தங்களுக்கு உதவிசெய்யும்படிக்குச் சைகைகாட்டினார்கள்; அவர்கள் வந்து, இரண்டு படவுகளும் அமிழத்தக்கதாக நிரப்பினார்கள்.

சீமோன் பேதுரு அதைக் கண்டு, இயேசுவின் பாதத்தில் விழுந்து: ஆண்டவரே, நான் பாவியான மனுஷன், நீர் என்னை விட்டுப் போகவேண்டும் என்றான். அவர்கள் திரளான மீன்களைப் பிடித்ததினிமித்தம், அவனுக்கும் அவனோடேகூட இருந்த யாவருக்கும் பிரமிப்புண்டானபடியினால் அப்படிச் சொன்னான். சீமோனுக்குக் கூட்டாளிகளான செபெதேயுவின் குமாரராகிய யாக்கோபும் யோவானும் அந்தப்படியே பிரமித்தார்கள். அப்பொழுது இயேசு சீமோனை நோக்கி: பயப்படாதே, இது முதல் நீ மனுஷரைப் பிடிக்கிறவனாயிருப்பாய் என்றார். அவர்கள் படவுகளைக் கரையிலே கொண்டுபோய் நிறுத்தி, எல்லாவற்றையும் விட்டு, அவருக்குப் பின்சென்றார்கள்."

---

இந்தச் சங்கதியும் மத். 4. 18. மாற். 1. 16–20ல் அடங்கிய சங்கதியும் வெவ்வேறான சமயங்களில் நடந்ததென்று சிலர் எண்ணுகிறார்கள். ஆனால் இவைகளை நன்றாய் வாசித்துக் கருத்தாய் ஒத்துப்பார்க்கும்போது அப்படி நினைக்க முகாந்தரம் இல்லையென்று தோன்றும். இந்த அப்போஸ்தலர்கள்

அழைக்கப்பட்ட விதத்தைக்குறித்து இம்மூவரும் சொல்லிய சங்கதி ஒன்றுபோலிருந்தாலும் லூக்காமாத்திரம் மற்றவர்களை விட இதை அதிக நிறைவாகவும் தெளிவாகவும் எழுதியிருக்கிறதும் அல்லாமல், "உங்களை நான் மனிதரைப் பிடிக்கிறவர்கள் ஆக்குவேன்" என்று இரட்சகர் சொன்ன வாக்குத்தத்தத்திற்குக் காரணம் இன்னதென்றும் சொல்லுகிறார். இவர்கள் பிற்காலத்தில் செய்யப்போகிற தம்முடைய ஊழியத்தைத் தீர்க்கதரிசனமாக இந்த வார்த்தைகளினால் முன்னுரைத்ததுமல்லாமல், தம்முடைய வழக்கத்தின்படியே அப்பொழுது தமது கண்ணுக்கு முன்பாக நடந்த ஒரு சங்கதியினின்றே இப்படிச் சொல்ல ஏவப்பட்டிருப்பாரென்று எண்ண இடமுண்டு. ஆனால் இந்தச் சரித்திரத்தை யோவா. 1. 40–42 வரையில் அடங்கியிருக்கும் சரித்திரத்தோடு ஒத்துப்பார்க்கும்பொழுது இது வெவ்வேறான சமயங்களில் நடந்ததென்று தெளிவாய்க் காணலாம். யோவான் சொல்லியிருக்கிறபடி அவர்கள் அவரைப் பின்செல்லும்படி அதாவது, அவருடைய மார்க்கத்தில் சேர்ந்து அவருடைய சீஷர்களாகும்படி அழைக்கப்பட்டபிறகு மீன் பிடிக்கிற தங்கள் வழக்கமான தொழிலையே செய்துவந்தார்கள். கொஞ்சக்காலத்திற்குப்பிறகு லூக்காவில் கண்டிருக்கிறபடி மறுபடியும் அழைக்கப்பட்டார்கள். அவருடைய சீஷராயிருக்கும்படிக்கல்ல, அப்போஸ்தலராய்த் தம்முடைய ஊழியத்தைச் செய்யும்படிக்கே அழைக்கப்பட்டார்கள். உம்முடைய சொல்லின்படியே வலையைத் தாழவிடுகிறேனென்று பேதுரு சொன்னதினால் இவன் இரட்சகரை முன்னே அறிந்து அவரோடு பழகியிருக்கவேண்டுமென்று நினைக்கலாம். இதில் கர்த்தர் மனிதர்களை அழைக்கும் விதத்தைப் பார்க்கிறோம். அவர் தம்முடைய சித்தத்தைப் பலவிதமாய் நிறைவேற்றுகிறார். சில சமயங்களில் கொஞ்சம் கொஞ்சமாக, கிரமம் கிரமமாக ஒருவனைச் சீர்ப்படுத்துகிறார்; சில சமயங்களில் ஒரேமட்டாக ஒரு சமயத்தில்தானே அப்படிச் செய்துபோடுகிறார். சிலபேரை வெண்கலத்தை உருக்கிவார்க்கிறதுபோல ஒரே நேரத்தில் தமக்கேற்றவர்களாக்குகிறார். சிலபேரையோ கல்

லைப் பிளந்து கிரமம் கிரமமாக வெட்டிச் செதுக்கி உருவேற் படுத்துகிறதுபோல படிப்படியாக தம்முடையவர்களாக்கிக் கொள்ளுகிறார். சிலரைப் பவுல் அப்போஸ்தலனைப்போல ஒரேநேரத்திலே கிறிஸ்தவர்களும் அப்போஸ்தலருமாக்குகிறார். சிலரை உடனே அப்படிச் செய்யாமல் தாம் குறித்தநேரம் வருமட்டாகப் பொறுத்து மெதுவாய் அப்படி ஏற்படுத்துகிறார். இரண்டாம் வசனத்தில் இவர்கள் வலைகளை வீசிக்கொண்டிருந் ததாக வாசிக்கிறோம். மனிதரைப் பிடிக்கிற யாவருக்கும் இதில் ஒரு நல்ல படிப்பனை இருக்கிறது. அவர்கள் தங்கள் ஊழியம் பிரயோசனப்படவேண்டுமானால் அந்த ஊழியத்தை நடத்தும்போது அணுகும் பெருமை, அசட்டை, சவலையீனம் முதலிய அசுத்தங்களிலிருந்து தங்களைச் சுத்திகரித்துக்கொள் வது அவசியம். அப்போதுதான் அவர்கள் இரட்சகருடைய கையினால் மனிதரைப் பிடிக்கிற வலைகளாகப் பிரயோகிக்கப் படுவார்கள்.

சனங்கள் தம்மை நெருக்கியிருந்ததைக் கண்ட இரட்சகர் சீமோனுடைய படவிலேறி அதைக் கரையிலிருந்து சற்றே தள்ளும்படிக்கு அவனைக் கேட்டு அதிலுட்கார்ந்து சனங்களு க்கு உபதேசித்தபின்பு, பேதுரு தனக்குச் செய்த உபகாரத் துக்குப் பதிலுபகாரம்செய்ய வலைகளைத் தாழவிடச் சொன் னார். மீன்பிடிக்கிறவர்களை முந்தித் தம்முடைய வலையிலகப் படுத்தப் பார்த்தார். பெலவான்களை வெட்கப்படுத்தும்படிக்கு பெலவீனரானவர்களையும், இழிகுலத்தாரானவர்களையும், அற்ப மாயெண்ணப்பட்டவர்களையும் தேவன் தெரிந்துகொண்ட விதத்தைப் பாருங்கள்! தம்முடைய சபை மனிதருடைய வல் லமையின்மேலும் ஞானத்தின்மேலும் நிற்கிறதில்லையென்று யாவரும் அறிந்துகொள்ளும்படிக்குப் படியாதவர்களும் அறிவீ னருமான இந்த ஏழை செம்படவரைத் தெரிந்துகொள்ளுகிறார். பழைய ஏற்பாட்டிலும் ஆமோஸ், எலிசா என்கிற தீர்க்கதரிசி களை அவர் தெரிந்துகொண்டதைப்பற்றிச் சொல்லியிருக்கிற தைப் பாருங்கள் (ஆமோ. 7. 14, 15. 1 இரா. 19. 19.). இரக்ஷகர் சொன்னதற்குப் பேதுரு சொன்ன மறுஉத்தரவு

என்ன? மீன்பிடிக்கிறதற்குத் தகுந்த சமயமாகிய இராமுழு வதும் பிரயாசப்பட்டும் ஒன்றும் கிடையாமல்போனதைப் பற்றி முறையிட்டாலும் இன்னும் அவனுக்குள்ளிருந்த விசுவாசம் முற்றிலும் அற்றுப்போகாதபடியால் உம்முடைய சொல்லின்படி வலையைத் தாழவிடுகிறேன் என்றான். "எங்களுடைய பிரயாசம் வீணாயிருந்தபோதிலும் உம்முடைய சொல் வீணாயிராது. நாங்கள் வீணாய்ப் பிரயாசப்பட்டுத் தவித்துப் போனபோதிலும் உம்முடைய கட்டளை விருதாவாய் முடியாது. நீர் தாழவிடச் சொல்லுகிறபடியால் காரியம் வாய்க்குமென்று நம்பி வலையைத் தாழவிடுகிறேன்" என்ற பாவனையாகப் பேசினான். இந்த விசுவாசத்திற்குக் கிடைத்த பலன் என்ன? அவர்களுடைய வலை கிழிந்துபோகத்தக்க மிகுந்த மீன்களைச் சேர்த்துக்கொண்டார்கள். அந்த அற்புதம் எவ்வளவாய் பலித்ததென்று காட்டும்படிக்கு மற்றப் படவுகளிலிருந்த பங்காளிகள் வந்து அவர்களுக்கு உதவிசெய்யவேண்டியிருந்ததாக சொல்லியிருக்கிறது. இதை நன்றாய்க் கவனிக்கிற அநேக போதகமாரும் உபதேசிமாரும் இலேசாய்த் தங்கள் ஊழியத்தில் இளக்கரித்துப்போகமாட்டார்கள். எத்தனையோபேர் எவ்வளவோ உண்மையாக உழைத்தபிற்பாடும் இராமுழுதும் நாங்கள் பிரயாசப்பட்டும் ஒன்றும் அகப்படவில்லையென்று முறையிடவேண்டியிருக்கிறது. இந்த அந்த ஊரிலே எத்தனையோ வருஷம் உழைத்தும், புத்திசொல்லியும், பிரசங்கம் பண்ணியும், செபத்தில் போராடியும் பலனொன்றும் காணோமே என்று அநேகர் சோர்ந்துபோகிறதுண்டு. அப்படிப் பட்டவர்களுக்கு இரக்ஷகர் சொல்லுகிறதென்ன? இன்னும் உங்கள் வலைகளைத் தாழவிடுங்கள் என்றுதான் சொல்லுகிறார். நம்முடைய பிரயாசமும் பிரசங்கமும் செபமும் கர்த்தருடைய ஆசீர்வாதமில்லாவிட்டால் வீணாய்த்தான் இருக்கும் (சங். 127. 1.). கர்த்தர் கட்டளையைக் கொடுத்தாரானால், நாம் சோர்ந்துபோகாமல் விடாமுயற்சியோடு அவர் கட்டளைக்குக் கீழ்ப்படிவோமானால், விசுவாசத்தோடு நம்முடைய வலைகளைத் தாழவிடுவோமானால், நம்முடைய வலை கிழிந்துபோகத்தக்க

அநேக மீன்களைப் பிடிப்போம். இதை நினைத்து இளக்கரியாமல் நன்மைசெய்வோமாக.

இந்த அற்புதத்தில் இரட்சகரிடத்தில் காணப்படுகிற வல்லமை எவ்வளவு பெரிது. சருவஞ்ஞராய் மீன்களெல்லாம் இருந்த இடத்தை அறிந்திருந்தது மாத்திரமல்ல, தம்முடைய வல்லமையினாலே தம்முடைய சித்தத்தின்படியே சகல சிருஷ்டிகளையும் நடத்துகிற அதிகாரமுடையவராயும் இருக்கிறார். சங். 8. 6–8ல் சொல்லியிருக்கிறதும், இரண்டாம் ஆதாமாகிய இவரில்தான் நன்றாய் நிறைவேறியிருக்கிறது. இந்தச் சங்கதியிலும், மத். 17லும், யோவா. 21லும் சொல்லியிருக்கிற மீனைக் குறித்த மற்ற இரண்டு அற்புதங்களிலும் நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டியது இரட்சகருடைய வார்த்தைக்கும் நடந்த சங்கதிக்கும் இருந்த இசைவுதான். அதிக மீன்களைப் பிடிக்கிறதும் மீன் வாயில் ஒரு நாணயம் அகப்படுகிறதும் அற்புதங்களல்ல, ஆனால் இரட்சகர் கட்டளைகொடுக்கிறதும் அந்தக் கட்டளையின்படியே அப்படி நடக்கிறதுந்தான் ஆச்சரியம்.

இந்த அற்புதத்தைக் கண்ட பேதுரு, தனக்குள்ளே தானே ஆச்சரியப்பட்டு பயந்து இரட்சகருடைய மகிமையைக் கண்ட மாத்திரத்திலே அவருடைய முழங்கால்களினருகே விழுந்து, "ஆண்டவரே, நான் பாவியான மனுஷன், நீர் என்னை விட்டுப் போகவேண்டும்" என்றான். தன் வலையைக் கொண்டு மீன்களைப் பிடித்தவன் தானே கிறிஸ்துவின் வலையில் அகப்பட்டுக்கொண்டான். இரட்சகர் ஆத்துமாக்களைத் தம்மிடத்தில் இழுக்கிற விதத்தைப் பாருங்கள். அவனவனுடைய நிலைமைக்கும் அறிவுக்கும் ஆசைக்கும் ஏற்ற எத்தனங்களையே பிரயோகிக்கிறார். மீன்பிடிக்கிறவர்களை மீனைக்கொண்டிழுக்கிறார். வானசோதிகளைக் கவனிக்கிற சாஸ்திரிகளை நட்சத்திரத்தைக்கொண்டு இழுக்கிறார். ஆடுகளை மேய்த்த தாவீதை தமது சனங்களை மேய்க்க ஏற்படுத்துகிறார். அழிந்துபோகிற போசனத்தைத் தேடி தம்மைப் பின்சென்ற சனங்களுக்கு ஜீவ அப்பத்தைக்குறித்துப் போதிக்கிறார். கிணற்றில் தண்ணீர் மொண்டுகொள்ள வந்த சமாரியா ஸ்திரீயுடனே ஜீவதண்ணீரைக்குறித்துப் பேசுகிறார். இது எவ்வளவு ஆச்சரியம்!

விசேஷித்த காட்சிகளைக் கண்டவுடனே தேவனுக்கும் தங்களுக்குமிருக்கிற வித்தியாசம் எவ்வளவு பெரிதென்று பார்த்துப் பயந்து, பேதுருவைப்போல தங்கள் பாவத்தை உணர்ந்து திகைக்கிறது ஆத்துமாவில் எழுப்புதலுண்டானதற்கு லட்சணம் (யாத். 20. 18, 19. நியா. 6. 22, 23; 13. 22. தானி. 10. 17. ஏசா. 6. 5.). இதற்கு முந்தின நிலைமை பாவத்திற்கும் பரிசுத்தத்திற்கும், பாவமுள்ள மனிதனுக்கும் பரிசுத்தமுள்ள தேவனுக்கும் வித்தியாசமில்லாததுபோல் எண்ணிப் பேசி, ஏனோதானோவென்று அசட்டையாய் நடக்கிற நிலைமை. இதற்குப் பிந்தினதுதான் கிருபையினாலுண்டாகிற நிலைமை; தேவனுக்கும் மனிதனுக்கும் எவ்வளவோ தூரமிருந்தபோதிலும், இருவரும் சந்திக்கிறது கூடாதகாரியமாயிருந்தபோதிலும், மனிதன் தேவனோடு ஒப்புரவாகி அவருடைய மகிமையைக் கண்டு அவருக்கொப்பாகி அவரோடே என்றென்றைக்கும் வாழ்கிற நிலைமை. இந்த பாக்கியமான நிலைமைக்குத்தான் இரட்சகர் பேதுருவை அழைக்கிறார். மற்றவர்கள் அவரைத் தங்களைவிட்டுப் போக வேண்டிக்கொண்டபோது உடனே அவர்களை விட்டுப்போனார் (மத். 8. 34; 9. 1.). பேதுருவைப் பார்த்து அவர் சொல்லுகிறதென்ன? நீ பயப்படவேண்டாம் என்கிறார். பாவத்தைக்குறித்து உணர்ந்து நடுங்குகிற பாவிகளுக்கு அவர் அடிக்கடி சொல்லுகிற ஆறுதலான வார்த்தை இதுதான் (யோவா. 6. 20. மத். 28. 5—10. வெளி. 1. 17.). இப்படி அவனை ஆறுதல்படுத்தினபிறகு தம்முடைய ஊழியத்துக்கு அழைக்கிறார். இதுமுதல் நீ மனிதர்களைப் பிடிக்கிறவனாயிருப்பாய் என்றார். இப்போதுதான் அவனையும் அவனுடைய தோழனையும் அப்போஸ்தலராக்குகிறார். ஒருவன் தான் ஒன்றுமில்லையென்றும் அற்பனென்றும் அசுத்தனென்றும் முன் ஒருபோதும் பாராதவிதமாய்ப் பார்த்துத் தன்னைத் தாழ்த்தும்போதுதான் தம்முடைய மகிமையை வெளிப்படுத்தத்தக்கவனாக கர்த்தர் அவனை ஏற்படுத்துகிறார் (யாத். 4. 10—17. ஏசா. 6. எரே. 1. 4—10. எசே. 1. 2; 3. அதி. நியா. 6. 11—23. அப். 9. 3—9. தானி. 10.). மனிதனைப்

பிடிப்பாயென்று சொல்லும்போது பேதுருவுக்கு நன்ருய் விள ங்கத்தக்க வார்த்தைகளையே பிரயோகிக்கிருர். தாவீது ஆடு மேய்த்தவனுனபடியால், சங். 78. 71, 72ல் அவன் தம்முடைய சனங்களை மேய்க்கிறதாகச் சொல்லியிருக்கிறது. அதுபோல கூடாரங்களைச் செய்த பவுலை நித்தியவாசஸ்தலங்களாகிய கூடாரங்களைக் கட்டும்படியாக ஏற்படுத்துகிருர் (2 கொரி. 5. 1.). இரட்சகர் பேதுருவுக்குச் சொன்ன வார்த்தையில் இரண்டு விதமான மேன்மை அடங்கியிருக்கிறது. "முன்னே மீன்களைப் பிடித்தாய், இனிமேல் மீன்களையல்ல, மனிதரைப் பிடிப்பாய். முன்னே அழிக்க அல்லது கொல்ல மீன்களைப் பிடித்தாய், இனிமேல் அழிக்கும்படிக்கல்ல, உயிரோடே காக்கும்படிக்கு மனிதரைப் பிடிப்பாய்." மூலபாஷையில் இங்கே வழங்கி யிருக்கிற வார்த்தையின் பொருள் இதுதான். இதை அறியாத யூலியான் என்பவன் இந்த வார்த்தைகளைக்குறித்து பரவர் மீன் களை அவைகள் சவுக்கியமாயும் சந்தோஷமாயுமிருக்கிற தண் ணீரிலிருந்து சாகத்தக்கவிடத்தில் கொண்டுவந்து போடுகிறது போல இவர்களும் மனிதர்களை அழித்துப்போடுவார்களென்று இரட்சகர் சொன்னுரென்று பரியாசமாக எழுதியிருக்கிருன். மெய்தான், சுவிசேஷவலையினுல் பிடிபடுகிற மனிதர்கள் பாவத்துக்கும் உலகத்துக்கும் மாமிசத்துக்கும் செத்துத்தான் போகிருர்கள். அப்படிச் சாகிறவர்கள் ஆத்துமசீவனையடைந்து நித்தியமாய்ப் பிழைப்பார்களல்லவா? ஆம் கிறிஸ்துவின் ஊழி யக்காரரெல்லாரும் மனிதரைப் பிடிக்கிற பரவரைப்போல்தான் இருக்கிருர்கள். வலையில் அகப்படுத்தும்பொழுது சபையில் சேர்க்கிருர்கள். தரையில் வைக்கும்பொழுது கிறிஸ்துவின் இராச்சியத்துக்கு உட்படுத்துகிருர்கள் (மத். 13. 48.). இன்னும் அநேகவகையிலும் இவர்கள் பரவரைப்போல்தான் இருக்கிருர் கள். பரவர் வலையை வீசும்பொழுது எப்படிப்பட்ட மீன் அகப் படும், கொஞ்சம் அகப்படுமோ அதிகம் அகப்படுமோ, ஏதாவது கிடைக்குமோ ஒன்றுங் கிடையாமல்போகுமோ என்று அறி யாதிருக்கிறதுபோல, இவர்களும் தங்கள் பிரயாசத்துக்கு இன்ன பலன் கிடைக்குமென்று கொஞ்சமாவது அறியாதவர்

களாய் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் வேட்டைக்காரருக்கல்ல, பரவருக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறதில் ஒரு யுத்தி உண்டு. வேட்டைக்காரன் கொன்று தன் வேட்டையைப் பிடிக்கிறான்; பரவனோ மீனை உயிரோடே பிடிக்கிறான். வேட்டைக்காரன் தான் வேட்டையாடுகிறதைத் தன்னை விட்டுத் துரத்துகிறான்; பரவனோ மீனைத் தன்னண்டைக்கு இழுக்கிறான். தன்னண்டைக்கு மாத்திரமல்ல, பலவிடங்களில் சிதறுண்டிருந்த மீன்களை ஒன்றாய்ச் சேர்க்கிறான். அதுபோல கிறிஸ்து மார்க்கத்தைப் போதிக்கிற உண்மையுள்ள போதகமாரும் பல பாஷைக்காரரையும் பல கோத்திரத்தாரையும் ஒன்றாக ஐக்கியப்படுத்தி விரோதப்பட்ட மனதுகளை நேர்ப்படுத்தி பிதாக்களுடைய இருதயங்களைப் பிள்ளைகளண்டைக்கும், பிள்ளைகளுடைய இருதயத்தைப் பிதாக்களண்டைக்கும் திருப்புகிறார்கள். மேலும் பரவர்களுடைய வேலையில் பலவந்தமும் கட்டாயமுமல்ல, தந்திரமும் உபாயமும் காணப்படும் (எரே. 16. 16.). இது பழைய ஏற்பாட்டில் பயமுறுத்துதலாகச் சொல்லியிருந்த போதிலும் வாக்குத்தத்தமாக பொருள்படுத்தலாம். பழைய ஏற்பாட்டில் சாபமாகக் கூறப்பட்டிருக்கிறது. புதிய ஏற்பாட்டில் ஆசீர்வாதமாக அர்த்தமாகிறதுண்டு. கர்த்தருடைய கரங்களில் விழுகிறது என்பது பழைய ஏற்பாட்டில் துன்பத்தைக் குறித்தபோதிலும், ஒரு பெரிய ஆசீர்வாதத்தைக் குறிக்கிறதாக இப்பொழுது அர்த்தப்படுத்தலாம். அதுபோல பாவத்தைவிட்டு தேவனுக்கு அடிமையாகிற பாக்கியமான அடிமைத்தனமும் உண்டு. அதுபோலவே எரேமியாவிலிருக்கிற பயமுறுத்துதலை வாக்குத்தத்தமாக அர்த்தம்பண்ணுகிறதற்கு, எசே. 47. 9, 10. போந்த ஆதாரமாயிருக்கிறது. மேலும் போதகமார் யாவரும் பரவருக்கு ஒப்பாயிருக்கிறதுபோல மேய்ப்பருக்கு ஒப்பாயிருக்கவேண்டியதும் அவசியம். ஏனெனில் பிடிக்கப்பட்டவர்களைப் பத்திரப்படுத்திக் காக்காவிட்டால் அவர்கள் எப்படிப் பிழைப்பார்கள். இதை அறிந்த இரட்சகர் முந்தி பேதுருவை மனிதரைப் பிடிக்கிறவனாக்கி, கடைசியில் தாம் பரமண்டலத்துக்குப் போகுமுன்னே மேய்ப்பனாகவும் இருக்க உத்தரவுகொடுத்துப்போனார். (யோவா. 21. 15—17.)

கடைசியாக இந்தச் சீஷர்கள் எல்லாவற்றையும் விட்டுப் பின் சென்றதாகச் சொல்லியிருக்கிறதே; எதைக்குறித்து இப்படிச் சொல்லியிருக்கிறது (மத். 19. 27.)? இந்த பேதுருவே இதைக் குறித்துச் சற்று பெருமைபாராட்டிப் பேசுகிறான். அவர்களுக்கிருந்ததெல்லாம் சில படவுகளும் வலைகளுந்தான், ஆகிலும் அவைகளை விட்டபோது தங்களுக்குண்டான எல்லாவற்றையும் விட்டுவிட்டபடியால் அவர்கள் செய்தது அதிகந்தான். மேலும் அவர்கள் எதை விட்டுவிட்டபோதிலும் நல்ல மனதோடு அவைகளை விட்டுவிட்டபடியால் அதுவே பெரியகாரியமென்று நினைக்கவேண்டியது. தங்கள் ஆஸ்திகளை விட்டபொழுது அவர்கள் கொஞ்சத்தைத்தான் விட்டார்கள். தங்கள் ஆசையை விட்டபொழுதோ அதிகத்தை விட்டார்களென்று சொல்லவேண்டும்.



# 4. கடலின் கொந்தளிப்பை அமர்த்தினது.

மத்தேயு, 8. 23—27.

"அவர் படவில் ஏறினபோது அவருடைய சீஷர்கள் அவருக்குப் பின்சென்று ஏறினார்கள். அப்பொழுது படவு அலைகளினால் மூடப்படத்தக்கதாய்க் கடலில் பெருங்காற்று உண்டாயிற்று. அவரோ நித்திரையாயிருந்தார். அப்பொழுது, அவருடைய சீஷர்கள் வந்து, அவரை எழுப்பி: ஆண்டவரே! எங்களை இரட்சியும், மடிந்துபோகிறோம் என்றார்கள். அதற்கு அவர்: அற்பவிசுவாசிகளே! ஏன் பயப்படுகிறீர்கள் என்று சொல்லி; எழுந்து, காற்றையும் கடலையும் அதட்டினார். உடனே, மிகுந்த அமைதல் உண்டாயிற்று. அந்த மனுஷர்கள் ஆச்சரியப்பட்டு: இவர் எப்படிப்பட்டவரோ, காற்றும் கடலும் இவருக்குக் கீழ்ப்படிகிறதே! என்றார்கள்."

மாற்கு, 4. 35—41.

"அன்று சாயங்காலத்தில், அவர் அவர்களை நோக்கி: அக்கரைக்குப் போவோம் வாருங்கள் என்றார். அவர்கள் ஜனங்களை அனுப்பிவிட்டு, அவர் படவிலிருந்தபடியே அவரைக் கொண்டுபோனார்கள். வேறே படவுகளும் அவரோடேகூட இருந்தது.

அப்பொழுது பலத்த சுழல்காற்று உண்டாகி, படவு நிரம்பத்தக்கதாக, அலைகள் அதின்மேல் மோதிற்று. கப்பலின் பின்னணியத்தில் அவர் தலையணையை வைத்து நித்திரையாயிருந்தார். அவர்கள் அவரை எழுப்பி: போதகரே, நாங்கள் மடிந்துபோகிறது உமக்குக் கவலையில்லையா என்றார்கள். அவர் எழுந்து, காற்றை அதட்டி; கடலைப்பார்த்து: இரையாதே, அமைதலாயிரு என்றார். அப்பொழுது காற்று நின்றுபோய், மிகுந்த அமைதல் உண்டாயிற்று. அவர் அவர்களை நோக்கி: ஏன் இப்படிப் பயப்பட்டீர்கள்? ஏன் உங்களுக்கு விசுவாசம் இல்லாமற்போயிற்று என்றார். அவர்கள் மிகவும் பயந்து: இவர் யாரோ? காற்றும் கடலும் இவருக்குக் கீழ்ப்படிகிறதே என்று, ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்."

லூக்கா, 8. 22—25.

"பின்பு ஒருநாள் அவர் தமது சீஷரோடுங்கூடப் படவில் ஏறி: கடலின் அக்கரைக்குப் போவோம் வாருங்கள் என்றார்; அப்படியே புறப்பட்டுப் போனார்கள். படவு ஓடுகையில் அவர் நித்திரையாயிருந்தார். அப்பொழுது கடலிலே சுழல்காற்றுண்டானதால், அவர்கள் மோசமடையத்தக்கதாய்ப் படவு ஜலத்தினால் நிறைந்தது. அவர்கள் அவரிடத்

தில் வந்து, ஐயரே, ஐயரே, மடிந்துபோகிறோம் என்று அவரை எழுப்பினார்கள்; அவர் எழுந்து, காற்றையும் ஜலத்தின் கொந்தளிப்பையும் அதட்டினார்; உடனே அவைகள் நின்றுபோய், அமைதலுண்டாயிற்று. அவர் அவர்களை நோக்கி: உங்கள் விசுவாசம் எங்கே என்றார்? அவர்கள் பயந்து ஆச்சரியப்பட்டு: இவர் யாரோ, காற்றுக்கும் ஜலத்துக்கும் கட்டளையிடுகிறார், அவைகளும் இவருக்குக் கீழ்ப்படிகிறதே என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.''



இந்த மூன்று சுவிசேஷகரும் கதரேனர் தேசத்தில் பிசாசு பிடித்தவனை சொஸ்தப்படுத்துமுன்னே இந்த அற்புதம் நடந்ததாகச் சொல்லுகிறார்கள். மத்தேயு 13-ம் அதிகாரத்திலிருக்கிற உவமைகளை நம்முடைய இரட்சகர் சொன்ன அந்நாள் சாயந்தரத்திலேயே இந்த அற்புதத்தைச் செய்திருக்கலாம். சனங்களை அனுப்பிவிட்டுக் கடலின் அக்கரைக்குப்போய் மனிதர் சந்தடியின்றி சற்றே தனித்து அமைதலாயிருக்கவேண்டுமென்று படவில் ஏறினார். ஆனால் உலகரட்சகர் இருந்த படவுக்குப் பெரிய மோசம் சம்பவிக்க ஏதுவாயிருந்தது. மோசம் பெரிதாயிருந்திருக்கவேண்டும். ஏனென்றால் அவரோடுகூட இருந்த சீஷர்கள் தங்கள் வாலிபமுதல் இந்தக் கடலிலேயே மீன்பிடித்துத் திரிந்து அடிக்கடி அதைக் கடந்தவர்களானபடியால் அற்ப மோசத்தைக் கண்டு இவ்வளவாய் பயப்படமாட்டார்கள். படவை அலைகள் மூடத்தக்கதாய்க் கடலிலே பெருங்காற்று உண்டாயிற்று. அந்நாளிலே செய்த வேலையினால் இரட்சகர் சடைவடைந்து நித்திரைசெய்தார். மாற்கு சொல்லுகிறபடி அவர் படவின் பின்பக்கத்திலே ஒரு தலையணையை வைத்து நித்திரைபண்ணிக்கொண்டிருந்தார். கடலின் இரைச்சலும் படவிலிருந்தவர்களுடைய கூக்குரலும் அந்த நித்திரையைக் கலைக்கவில்லை. இதிலே யோனாவுக்கும் இவருக்கும் இருந்த பெரிய வித்தியாசத்தைப் பாருங்கள். யோனாவின் மனச்சாட்சி செத்துப்போனபடியால் நித்திரைசெய்தான்; இரட்சகருடைய மனச்சாட்சியோ சுத்தமுள்ளதானபடியால் அவருக்கு நித்திரை வந்தது. யோனா இருந்ததினாலே மோசம் வந்தது; இரட்சகர் இருந்ததினாலே வந்த மோசம் நீங்கிற்று.

இயேசுவானவருடைய வல்லமையை முற்றிலும் அறியாத சீஷர்கள் முதலாவது அவரை எழுப்பச் சற்று பின்வாங்கின போதிலும் மோசம் அதிகரிக்கிறதைக் கண்டபோது ஆண்டவரே, ஆண்டவரே என்று இரண்டுதரம் அவரைக் கூப்பிட்டுத் தத்தளிப்போடே அவரை எழுப்பினார்கள். மாற்கு சொல்லுகிறதைப் பார்க்கும்பொழுது இவர்கள் மடிந்துபோகிறது அவருக்குக் கவையில்லாததுபோல எண்ணி சற்று விசனத்தோடு பேசினதாகத் தோன்றுகிறது. "போதகரே, நாங்கள் மடிந்து போகிறது உமக்குக் கவையில்லையா என்றார்கள்." அப்போது கர்த்தர் எழுந்திருந்தார். மத்தேயு சுவிசேஷத்தைப் பார்க்கும் பொழுது முந்தி அவர்களைக் கடிந்துகொண்டு பிறகு புசலை அமர்த்தினதாகத் தோன்றுகிறது. மற்றச் சுவிசேஷங்களிலே முந்தி சமுத்திரத்தின் கோஷ்டத்தை அமர்த்திப் பிறகு அவர்களைக் கடிந்துகொண்டதாகச் சொல்லியிருக்கிறது. இரண்டு விசையும் இரட்சகர் அவர்களைக் கடிந்திருக்கலாம். முந்தி அவிசுவாசத்தினலே அவர்கள் மனதிலே தோன்றின பயம் என்னும் புசலை அமர்த்தி வெளியரங்கமாய்ப் போர்செய்து கொண்டிருந்த பூதங்களை சாந்தப்படுத்தி, பிறகு அவர்களிடத்தில் காணப்பட்ட அவிசுவாசத்திற்காக அவர்களைக் கடிந்து கொண்டார். அவர்களுக்கு விசுவாசமிருந்தது, ஆனால் பலத்த உயிருள்ள விசுவாசமல்ல; உங்கள் விசுவாசம் எங்கேயென்று இரட்சகர் கேட்டபடியால் அவர்களிடத்திலிருந்த விசுவாசம் சமயத்துக்கு உதவத்தக்கதாயிராமல் போர்ச்சேவகனிடத்தில் ஆஜராயிராத அவசரவேளைக்கு உதவாத ஆயுதம்போலிருந்தது. அவர்களுடைய அவிசுவாசம் அவர்களை பயப்படப் பண்ணினபடியால் இப்படி ஏன் பயப்பட்டீர்களென்று இரட்சகர் கேட்டார். இரட்சகர் இருந்த கப்பலுக்கு மோசம் சம்பவிக்குமென்று அவர்கள் எண்ணினது தப்பிதம்.

அவர் எழுந்து காற்றையும் கடலையும் அதட்டினார். அதட்டினார் என்கிற வார்த்தை மூன்று சுவிசேஷங்களிலும் இருக்கிறது. மாற்கு அதோடேகூட "இரையாதே, அமைதலாயிரு" என்று கட்டளையிட்டதாகச் சொல்லுகிறார். உலகத்திலுண்டா

கும் எல்லாத் தாறுமாறுகளுக்கும் ஒழுங்கீனங்களுக்கும் கலகங்களுக்கும் சாத்தானும் அவனுடைய பொல்லாத தூதரும் காரணமாயிருக்கிறதாக இரட்சகர் எண்ணி இப்படிப் பேசினாரென்று ஒருவர் சொல்லியிருக்கிறார். லூக். 4. 39ல் இரட்சகர் சுரத்தை அதட்டினதாகச் சொல்லியிருக்கிறது. மோசே செய்ததுபோல அவர் ஒரு கோலை நீட்டவேண்டியிருந்ததில்லை (யாத். 14. 16, 21, 27.), அவருடைய வார்த்தை மாத்திரம் போதுமானதாயிருந்தது. உடனே காற்று நின்றுபோக மிகுந்த அமைதலுண்டாயிற்று.

இதினால் அந்த சனங்களுக்குள்ளே உண்டான மாறுதல் என்ன? அவர்கள் ஆச்சரியப்பட்டு இவர் எப்படிப்பட்டவரோ, காற்றுக்கும் சலத்திற்கும் கட்டளையிடுகிறாரே என்றார்கள் (சங். 79. 8, 9.). இதற்கிசைவாக இருக்கும் வாக்கியங்களைப் பார். இந்த அற்புதம் செய்யப்பட்ட நோக்கத்தை நாம் கவனிக்கவேண்டும். இரட்சகருடைய மகிமை இதிலே விளங்கினதென்றுமாத்திரம் நாம் சொல்லக்கூடாது. அவருடைய சீஷர்கள் அவரைக்குறித்து மேலான எண்ணங்கொண்டு அவருக்குச் சமீபமாயிருந்தால்தான் தாங்கள் சகல மோசங்களுக்கும் விலகியிருக்கலாம் என்று எண்ணும்படி இரட்சகர் இந்த அற்புதத்தைச் செய்தார். அவர்களுடைய விசுவாசம் இப்படி முயற்சிக்கப்படவேண்டியது அவசியமாயிருந்தது; இல்லாவிட்டால் அது பலப்படமாட்டாது.

இப்படிப்பட்ட ஒரு செய்கையைக்குறித்துத்தான் சங்கீதக்காரன் 107. 23ல் எழுதியிருக்கிறார். வியாக்கியானிகளில் ஒருவர் இரட்சகர் இப்படி அற்புதஞ்செய்வாரென்று சங்கீதக்காரன் அந்த வாக்கியங்களில் தீர்க்கதரிசனம் உரைத்ததாகச் சொல்லுகிறார். நாம் ஆத்துமகாரியங்களைக்குறித்து இதை வியாக்கியானப்படுத்தி பிரயோசனத்தை அடையலாம். நமக்குள்ளே எழும்புகிற உள்ளான பயங்களையும் சோதனைகளையும் எரிச்சல்களையும் சமாதானக்குறைச்சல்களையும் இந்த சமாதானப்பிரபுதான் நீக்கக்கூடும் (எசா. 9. 6.). அகுஸ்தீன் என்பவர் இந்த அற்புதத்தைக்குறித்துச் சொல்லியிருக்கிறதை

நாம் நன்ருய்க் கவனிப்பது அவசியம். "நாம் இந்த உலகத்திலிருக்கிறது ஒரு சமுத்திரத்தில் பிரயாணம்பண்ணுகிறது போல் இருக்கிறது. நமக்குள்ளே தோன்றுகிற பாவச்சோதனைகள் காற்றைப்போல கொந்தளித்து நம்முடைய சமாதானத்தை எடுத்துப்போடுகிறது. இயேசுரட்சகர் நமக்குள்ளே தூங்குகிறதுதான் இதற்குக் காரணம். அவர் தூங்காமல் உனக்குள்ளே விழித்திருப்பாராகில் உனக்குள்ளே சந்தோஷமும் அமைதலும் இருக்கும். ஆனல் இரட்சகர் உனக்குள்ளே தூங்குகிருரென்ருல் அதின் பொருளென்ன? இரட்சகர் உனக்குக் கொடுத்த விசுவாசம் உன் இருதயத்தில் மயங்குகிறதுதான். மோசத்துக்குத் தப்ப என்னசெய்யவேண்டும்? அவரை எழுப்பி ஆண்டவரே! நாங்கள் கெட்டுப்போகிருேம் என்று சொல்லு, அவர் எழுந்திருப்பார். அதாவது உன்னிலுள்ள விசுவாசம் உறுதிப்பட்டு உனக்குள்ளே அதிகரிக்கும். கிறிஸ்துவானவர் விழித்திருக்கும்பொழுது புசல் உன் கப்பலுக்குள்ளே மோதினலும் உன் கப்பலை நிரப்பாது. காற்றுகளையும் அலைகளையும் உன் விசுவாசம் அமர்த்திப்போடும். அப்பொழுது மோசமும் நீங்கிப்போம்."

இந்த அற்புதத்தினின்று நாம் படித்துக்கொள்ளவேண்டிய இன்னெரு படிப்பினை உண்டு. பழைய சிருஷ்டிப்பின் வித்து நோவாவும் அவன் குடும்பமும் அடங்கிய பேழையில் காணப்பட்டதுபோலப் புதுச்சிஷ்டிப்பின் வித்தாகிய கிறிஸ்துவும் அவருடைய அப்போஸ்தலரும் இந்தக் கப்பலுக்குள் இருக்கிறதாக நாம் பாவிக்கவேண்டும். கிறிஸ்துவின் சபை புசலில் அகப்பட்ட ஒரு படவுபோல்தான் இருக்கிறது. உலகமும் பிசாசும் அதைக் கவிழ்க்க எத்தனையாகப் பிரயாசப்பட்டாலும் அதற்கு யாதொரு சேதமும் வராது. கிறிஸ்துவானவர் அதற்குள்ளே இருக்கிருர். அவருடைய ஊழியக்காரர் தங்களுடைய ஜெபத்தினலும் கெஞ்சுதலினலும் அவரை எழுப்புகிருர்கள். அவர் சகல அபாயங்களையும் நீக்கி அமைதல் உண்டாக்குகிருர். பழைய ஏற்பாட்டில் எசேக்கியேல் தீர்க்கதரிசி ஒரு உலகராச்சியத்தை ஒரு பெரிய கப்பலுக்கு உப

மானப்படுத்தி அதினுடைய மகிமையையும் அழகையும் எவ்வளவோ சிறப்பித்துக் காட்டி, பிறகு அது சமுத்திரத்தின் நடுவிலே கீழ்காற்றினால் உடைபட்டு அதிலிருந்தவர்கள் தங்களுக்குண்டான அபாயத்தையிட்டு அழுது கூக்குரலிட்டதாகச் சொல்லுகிறார் (எசே. 27. 49; 26. 36.). தேவனுடைய இராச்சியமாகிய இதுவோ மீன்பிடிக்கிற படவுக்கு ஒப்பாய் அற்பமாயிருந்தபோதிலும் எல்லாக் காற்றுகளையும் செயித்து எல்லா அலைகளையுங் கடந்து கடைசியில் யாதொரு சேதமுமின்றி சேமமாய்த் துறைவந்துசேரும்.



## 5. கதரேனர் தேசத்திலே பிசாசுகளைத் துரத்தினது.

மத்தேயு, 8. 28—34.

"அவர் அக்கரையிலே கெர்கெசேனர் நாட்டில் வந்தபோது, பிசாசு பிடித்திருந்த இரண்டுபேர் பிரேதக்கல்லறைகளிலிருந்து புறப்பட்டு, அவருக்கு எதிராக வந்தார்கள்; அவர்கள் மிகவும் கொடியராயிருந்தபடியால், அந்த வழியாக ஒருவனும் நடக்கக்கூடாதிருந்தது. அவர்கள் அவரை நோக்கி: இயேசுவே, தேவனுடைய குமாரனே, எங்களுக்கும் உமக்கும் என்ன? காலம் வருமுன்னே எங்களை வேதனைப்படுத்த இங்கே வந்தீரோ என்று கூப்பிட்டார்கள். அவர்களுக்குக் கொஞ்சதூரத்தில் அநேகம் பன்றிகள் கூட்டமாக மேய்ந்துகொண்டிருந்தன. அப்பொழுது, பிசாசுகள்: நீர் எங்களைத் துரத்துவீரானால், நாங்கள் அந்தப் பன்றிக்கூட்டத்தில் போகும்படி உத்தரவு கொடும் என்று அவரை வேண்டிக்கொண்டன. அதற்கு அவர்: போங்கள் என்றார். அவைகள் புறப்பட்டு, பன்றிக்கூட்டத்தில் போயின; அப்பொழுது, பன்றிக்கூட்டமெல்லாம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலிலே பாய்ந்து, ஜலத்தில் மாண்டுபோயின.

அவைகளை மேய்த்தவர்கள் ஓடி, பட்டணத்தில் சென்று, இந்தச் சங்கதிகள் எல்லாவற்றையும், பிசாசுபிடித்திருந்தவர்களுக்குச் சம்பவித்தவைகளையும் அறிவித்தார்கள். அப்பொழுது, அந்தப் பட்டணத்தார் யாவரும் இயேசுவுக்கு எதிர்கொண்டுவந்து, அவரைக் கண்டு, தங்கள் எல்லைகளை விட்டுப் போகும்படி அவரை வேண்டிக்கொண்டார்கள்."

மாற்கு, 5. 1—20.

"பின்பு அவர்கள் கடலுக்கு அக்கரையிலுள்ள கதரேனருடைய நாட்டில் வந்தார்கள். அவர் படவிலிருந்து இறங்கினவுடனே, அசுத்த ஆவியுள்ள ஒரு மனுஷன் பிரேதக்கல்லறைகளிலிருந்து அவருக்கு எதிராக வந்தான். அவனுடைய குடியிருப்பு கல்லறைகளிலே இருந்தது; அவனைச் சங்கிலிகளினாலும் கட்ட ஒருவனாலும் கூடாதிருந்தது. அவன் அநேகந்தரம் விலங்குகளினாலும் சங்கிலிகளினாலும் கட்டப்பட்டிருந்தும், சங்கிலிகளை முறித்து, விலங்குகளைத் தகர்த்துப்போடுவான்; அவனையடக்க ஒருவனாலும் கூடாதிருந்தது. அவன் எப்பொழுதும் இரவும் பகலும், மலைகளிலும் கல்லறைகளிலும் இருந்து, கூக்குரலிட்டு, கல்லுகளினாலே தன்னைக் காயப்படுத்திக்கொண்டிருந்தான்.

அவன் இயேசுவைத் தூரத்திலே கண்டபோது, ஓடிவந்து, அவரைப் பணிந்துகொண்டு: இயேசுவே, உன்னதமான தேவனுடைய

குமாரனே, எனக்கும் உமக்கும் என்ன? என்னை வேதனைப்படுத்தாதபடிக்கு தேவன்பேரில் உமக்கு ஆணையென்று மிகுந்த சத்தமிட்டுச் சொன்னான். ஏனெனில் அவர் அவனை நோக்கி: அசுத்தஆவியே, இந்த மனுஷனை விட்டுப் புறப்பட்டுப்போ என்று சொல்லியிருந்தார். அப்பொழுது அவர் அவனை நோக்கி: உன் பேர் என்னவென்று கேட்டார். அதற்கு அவன்: நாங்கள் அநேகராயிருக்கிறபடியால் என் பேர் லேகியோன் என்று சொல்லி, தங்களை அந்தத் திசையிலிருந்து துரத்திவிடாதபடிக்கு அவரை மிகவும் வேண்டிக்கொண்டான்.

அப்பொழுது, அவ்விடத்தில் மலையருகே அநேகம் பன்றிகள் கூட்டமாக மேய்ந்துகொண்டிருந்தது. அந்தப் பிசாசுகளெல்லாம் அவரை நோக்கி: பன்றிகளுக்குள்ளே போகும்படி, அவைகளுக்குள்ளே எங்களை அனுப்பும் என்று அவரை வேண்டிக்கொண்டன. இயேசு அவைகளுக்கு உத்தரவு கொடுத்தவுடனே, அசுத்தஆவிகள் புறப்பட்டுப் பன்றிகளுக்குள் போயின; உடனே ஏறக்குறைய இரண்டாயிரம் பன்றிகளுள்ள அந்தக் கூட்டம் உயர்ந்த மேட்டிலிருந்து ஓடி, கடலிலே பாய்ந்து, கடலில் அமிழ்ந்து மாண்டது.

பன்றிகளை மேய்த்தவர்கள் ஓடி, இதைப் பட்டணத்திலும் சுற்றுப்புறங்களிலும் அறிவித்தார்கள். அப்பொழுது சம்பவித்ததைப் பார்க்கும்படி ஜனங்கள் புறப்பட்டு; இயேசுவினிடத்தில் வந்து, லேகியோனாகிய பிசாசுகள் பிடித்திருந்தவன் வஸ்திரந்தரித்து, உட்கார்ந்து புத்திதெளிந்திருக்கிறதைக் கண்டு, பயந்தார்கள். பிசாசுகள் பிடித்திருந்தவனுக்கும் பன்றிகளுக்கும் சம்பவித்ததைக் கண்டவர்களும், அவர்களுக்கு விவரமாய்ச் சொன்னார்கள். அப்பொழுது தங்கள் எல்லைகளை விட்டுப் போகும்படி அவரை வேண்டிக்கொள்ளத் தொடங்கினார்கள்.

அப்படியே அவர் படவில் ஏறுகிறபொழுது, பிசாசு பிடித்திருந்தவன், அவரோடேகூட இருக்கும்படித் தனக்கு உத்தரவுகொடுக்க அவரை வேண்டிக்கொண்டான். இயேசு அவனுக்கு உத்தரவுகொடாமல்: நீ உன் இனத்தாரிடத்தில் உன் வீட்டிற்குப்போய், கர்த்தர் உனக்கு இரங்கி, உனக்குச் செய்தவைகளையெல்லாம் அவர்களுக்கு அறிவியென்று சொன்னார். அந்தப்படி அவன் போய், இயேசு தனக்குச் செய்தவைகளையெல்லாம் தெக்கப்போலி என்னும் நாட்டில் பிரசித்தம்பண்ணத் தொடங்கினான்; எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.''

லூக்கா, 8. 26—39.

“பின்பு கலிலேயாவுக்கு எதிரான கதரேனருடைய நாட்டில் சேர்ந்தார்கள். அவர் கரையிலிறங்கினபோது, நெடுநாளாய்ப் பிசாசுகள் பிடித்தவனும், வஸ்திரந்தரியாதவனும், வீட்டில் தங்காமல் பிரேதக் கல்லறைகளிலே தங்கினவனுமாயிருந்த அந்தப் பட்டணத்து மனுஷன் ஒருவன் அவருக்கு எதிராக வந்தான். அவன் இயேசுவைக் கண்டபோது கூக்குரலிட்டு, அவருக்கு முன்பாக விழுந்து: இயேசுவே,

உன்னதமான தேவனுடைய குமாரனே, எனக்கும் உமக்கும் என்ன? என்னை வேதனைப்படுத்தாதபடிக்கு உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன் என்று மகா சத்தத்தோடே சொன்னான். அந்த அசுத்த ஆவி அவனை விட்டுப் போகும்படி இயேசு கட்டளையிட்டபடியினாலே அப்படிச் சொன்னான். அந்த அசுத்தஆவி வெகுகாலமாய் அவனைப் பிடித்திருந்தது; அவன் சங்கிலிகளினாலும் விலங்குகளினாலும் கட்டுண்டு காவல்பண்ணப்பட்டிருந்தும் கட்டுகளை முறித்துப்போட்டு பிசாசினால் வனாந்தரங்களுக்குத் துரத்தப்பட்டிருந்தான்.

இயேசு அவனை நோக்கி: உன் பேர் என்னவென்று கேட்டார்; அதற்கு அவன்: லேகியோன் என்றான்; அநேகம் பிசாசுகள் அவனுக்குள் புகுந்திருந்தபடியால் அந்தப் பேரைச் சொன்னான். தங்களைப் பாதாளத்திலே போகக் கட்டளையிடாதபடிக்கு அவைகள் அவரை வேண்டிக்கொண்டன.

அவ்விடத்தில் அநேகம் பன்றிகள் கூட்டமாய் மலையிலே மேய்ந்துகொண்டிருந்தது. அந்தப் பன்றிகளுக்குள் போகும்படி தங்களுக்கு உத்தரவு கொடுக்கவேண்டும் என்று அவரை வேண்டிக்கொண்டன; அவைகளுக்கு உத்தரவுகொடுத்தார். அப்படியே பிசாசுகள் அந்த மனுஷனை விட்டு நீங்கி, பன்றிகளுக்குள் புகுந்தன; அப்பொழுது அந்தப் பன்றிக்கூட்டம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலிலே பாய்ந்து, அமிழ்ந்து, மாண்டது. அவைகளை மேய்த்தவர்கள் சம்பவித்ததைக் கண்டு, ஓடிப்போய், பட்டணத்திலும் சுற்றுப்புறங்களிலும் அறிவித்தார்கள். அப்பொழுது, சம்பவித்ததைப் பார்க்கும்படி ஜனங்கள் புறப்பட்டு, இயேசுவினிடத்தில் வந்து, பிசாசுகள் விட்டுப்போன மனுஷன் வஸ்திரந்தரித்து இயேசுவின் பாதத்தருகே உட்கார்ந்து புத்தி தெளிந்திருக்கிறதைக் கண்டு, பயந்தார்கள். பிசாசுகள் பிடித்திருந்தவன் சொஸ்தமாக்கப்பட்டதைக் கண்டவர்களும் அதை அவர்களுக்கு அறிவித்தார்கள். அப்பொழுது கதரேனருடைய சுற்றுப்புறத்திலுள்ள திரளான ஜனங்கள் எல்லாரும் மிகவும் பயமடைந்தபடியினாலே, தங்களைவிட்டுப் போகும்படி அவரை வேண்டிக்கொண்டார்கள். அந்தப்படி அவர் படவில் ஏறி, திரும்பப்போனார்.

பிசாசுகள் நீங்கின மனுஷன் அவரோடேகூட இருக்கும்படி உத்தரவுகேட்டான். இயேசு அவனை நோக்கி: நீ உன் வீட்டுக்குத் திரும்பிப்போய், தேவன் உனக்குச் செய்தவைகளையெல்லாம் அறிவி என்று சொல்லி, அவனை அனுப்பிவிட்டார். அந்தப்படி அவன் போய், இயேசு தனக்குச் செய்தவைகளையெல்லாம் பட்டணத்தில் எங்கும் பிரசித்தப்படுத்தினான்.''

---

இந்த அற்புதத்தை வியாக்கியானப்படுத்துமுன் பிசாசு பிடித்திருக்கிறது இன்னது என்று காண்பிப்பது அவசியம். சிலர் இதை ஒருவிதமான பயித்தியமென்று சொல்லுகிறார்கள், வேறு சிலர் சரீரத்துக்கடுத்த வியாதிகளைச் சேர்ந்ததென்கிறார்கள்

(மத். 4. 24; 8. 16. மாற். 1. 34.). இந்த வாக்கியங்களைப் பார்க்கும்போது, இது வியாதிகளோடு சேர்த்துச் சொல்லப் பட்டிருந்தாலும் வியாதிகளிலிருந்து வித்தியாசப்படும்படி காட்டியிருக்கிறதென்று அறிந்துகொள்ளலாம். நம்முடைய இரட்சகரும் அப்படிப்பட்டவர்களைப் பார்த்துப் பேசும்பொழுது அவர்களைப் புத்திமயங்கினவர்களாக அல்ல, வேறொரு வல்லமையின்கீழ் அகப்பட்டவர்களாக எண்ணிப் பேசுகிறார். அசுத்தஆவியை அது பிடித்திருந்த மனுஷனிலிருந்து வித்தியாசப்படுத்திப் பேசுகிறார். நீ பேசாமல் இவனை விட்டுப்போ என்கிறார் (மாற். 1. 25.). இப்படிப் பேசினபொழுது அக்காலத்து மனிதரிடத்திலிருந்த தப்பான எண்ணத்துக்கிசைவாக பேசினாரென்று சொல்லக்கூடாது. சிஷர்களோடு தனித்துப் பேசும்பொழுதும் இப்படித்தான் சொல்லுகிறார். மத். 17. 21ல் செபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி இந்தச் சாதியைத் துரத்தப்படாதென்றார். சத்தியமென்று பேர்கொண்டு, தப்பறைகளினின்று மற்றவர்களை விடுவிக்கவந்தவர் மற்றவர்களுடைய தப்பிதங்களில் தானே விழுந்து, சத்தியத்துக்கு விரோதமாய் அவைகளுக்கிணங்கிப் பேசுவாரென்று சற்றாவது எண்ணலாமா? (லூக் 11. 17—29.). இதை வாசிக்கும்போது அவர் அப்படிப் பேசவில்லையென்று திட்டமாக அறியலாம்.

மனுஷனிலிருந்த குறைவுகளெல்லாம் பிசாசினாலேதான் உண்டாயிற்றென்றும், பிசாசுபிடித்திருக்கிறானென்று சொல்லும்போது அப்படிப்பட்ட குறைவுள்ளவர்களைத்தான் யூதர்கள் அந்தப் பேரால் அழைத்தார்களென்றும் சொல்வது சரியல்ல. மத். 9. 32; 12. 22லும் இரண்டுவிசை ஊமையான இரண்டுபேரைக் கிறிஸ்து அண்டையில் கொண்டுவந்ததாக வாசிக்கிறோம். இந்த இரண்டு இடங்களிலும் அப்படி ஊமையாயிருந்தது பிசாசினாலுண்டானதென்று சொல்லியிருக்கிறது. மாற். 7. 32ல் செவிடனும் ஊமையனுமான ஒரு மனுஷனைக் குறித்துச் சொல்லப்பட்டிருந்தாலும் அந்தக் குறைவு பிசாசினால் உண்டானதாகக் காட்டுகிற ஒரு வார்த்தையாவது இல்லை.

ஆகையால் இப்படிப்பட்ட குறைவுகள் எப்பொழுதும் பிசாசினாலுண்டானதென்று சொல்லுகிறதற்கு இடமில்லையே.

பின்னை இது பைத்தியமுமல்ல, வியாதியுமல்லவென்றால் இதின் தன்மையென்ன? மனிக்கேயரைப்போல நன்மைக்கும் தீமைக்கும் ஏதுவான இரண்டு தேவர்கள் உண்டென்று நாம் சொல்லாவிட்டாலும், நன்மைக்குக் காரணராகிய தேவன் ஒருவருண்டென்றும், அவருக்கு விரோதமாகிய தீமையை நடப்பிக்கிற பிசாசானவன் ஒருவனிருக்கிறானென்றும், இந்தப் பிசாசை செயிக்கிறதற்கு தேவன் எப்பொழுதும் வகைபார்த்துக் கொண்டிருக்கிறாரென்றும் வேதவசனத்தில் வாசிக்கிறோம். இந்தப் பிசாசுக்கு ஒரு இராச்சியமிருக்கிறதாகவும், அவனுக்கு உதவிசெய்ய தூதர்களிருக்கிறதாகவும் சொல்லியிருக்கிறது. நம்முடைய உலகம் நன்மைநிறைந்த தேவனுடைய இராச்சியத்தோடு மாத்திரமல்ல, தீமையைப் பிறப்பிக்கிற பிசாசின் இராச்சியத்தோடும் சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆதலால் மனிதன் செய்கிற பாவத்துக்கு சாத்தானே காரணமென்று வாசிக்கிறோம். "பரிசுத்தஆவியினிடத்தில் பொய்சொல்லும்படிக்கு சாத்தான் உன்னிருதயத்தை நிரப்பினதென்ன" (அப். 5. 3.)? அப்படியே, யோவா. 13. 2ல் பிசாசானவன் சீமோனுடைய குமாரனாகிய யூதாஸ்காரியோத்தின் இருதயத்திலே அவரைக் காட்டிக்கொடுக்கும்படிக்கான யோசனையை வைத்தான் என்றிருக்கிறது (1 யோவா. 3. 8: யோவா. 8. 44. பார்.). இதினால் பாவஞ்செய்கிறவன் குற்றமற்றவனென்று சொல்லுகிறதில்லை. சத்துரு வராதபடிக்குத் தடைசெய்ய நமக்கு சுயாதீனசித்தம் இருந்தும், மனதார அவன் கெட்ட யோசனைக்குச் சம்மதிக்கிறது குற்றந்தான். ஆகிலும் அப்படி மனிதனைப் பாவஞ்செய்ய ஏவிவிடுகிறதற்கு தீமைக்குக் காரணனாகிய பிசாசு ஒருவன் இருக்கிறானென்பது நிச்சயம். காரியம் இப்படியிருக்க பிசாசு பிடித்தவர்களென்று ஆரைக்குறித்துச் சொல்லலாம்? பாவஞ்செய்து அதினாலுண்டாகும் கொடிய வியாதிகளையும் துன்பங்களையும் பெற்று சரீரத்தில் வருத்தப்படுகிறவர்களையா? அல்லது பிசாசுக்கு முழுமனதோடே

ஊழியஞ்செய்து அவனுக்கென்று தங்கள் முழுப்பெலனையும் செலவழிக்கிற பெரிய பாவிகளேயா? பிசாசு பிடித்திருக்கிறது என்று சொல்லும்போது இந்த இரண்டும் ஒன்ருய்ச் சேர்ந்திருக்குமென்று எண்ணலாம். ஆத்துமத்தைக் கறைப்படுத்துகிற அக்கிரமமும், சரீரத்துக்குண்டாகிற உபாதியும் இவ்விரண்டும் சேர்ந்து வருத்துவிக்கிற துன்பத்தினுல் வேதனைப் படுகிறவர்கள்தான் பிசாசுபிடித்தவர்களென்று ஒருவகையாய் அர்த்தம்பண்ணலாம். ஆனுல் அவர்கள் எந்தவகையாய் இந்த பரதபிக்கப்படத்தக்க நிலைமைக்குள் அகப்பட்டிருப்பார்கள்? பிசாசுபிடித்தவர்கள் மற்ற எல்லாப் பாவிகளிலும் பெரிய பாவிகளென்று நாம் எண்ணுவது தப்பிதம். மற்றெல்லாரிலும் அதிகக் குற்றவாளிகளாயிராவிட்டாலும் அவர்கள் மற்றெல்லாரிலும் அதிக நிர்ப்பாக்கியரென்று சொல்லலாம். பிசாசுக்கு முக்கிய ஊழியக்காரராகிய கள்ள தீர்க்கதரிசிகள், அந்திக்கிறிஸ்துக்கள் பிசாசுபிடித்தவர்களென்று அழைக்கப்படுகிறதில்லை. யூதாஸ்காரியோத்தினிடத்தில் பிசாசு புகுந்ததினுல் அவனைப் பிசாசுபிடித்தவனென்று சொல்லியிருக்கவில்லை. ஆதலால் பிசாசுபிடித்தவர்களை எல்லாரிலும் மகா கெட்ட பாவிகள் என்று சொல்வதும் சரியல்ல. பிசாசுபிடித்தவன் தனக்குள்ளிருக்கும் நிர்ப்பாக்கியத்தை உணருகிருன். தானும் அறியாத வேருெரு ஆவி தன்னை ஆளுகிறதென்று அறிகிருன். தனக்கு நியாயமானபடி எசமானுயிருக்கிறவருடைய சுதந்தரத்துக்குள் வேருெரு அன்னியன் அதிகாரஞ்செலுத்திவருகிறதைக் கவனிக்கிருன். ஆதலால் இந்தப் பரதபிக்கப்படத்தக்க நிலைமையிலிருந்து விடுதலையாக வருத்தத்தோடு அழுது கூக்குரலிடுகிருன். ஆகையால்தான் இரட்சகர் அவர்களுக்குச் சமீபமாய் வந்து அவர்களைச் சுகப்படுத்தினுர். மேலான சீவனுக்குரிய குறிப்புகள் முற்றிலும் அவர்களை விட்டுப்போகவில்லை. சரீரத்துக்கடுத்த தீமைகளாகிய வியாதிகளினின்றும் ஆத்துமாவுக்குரிய தீமைகளாகிய பாவங்களினின்றும், மனிதர்களை இரட்சிக்கவந்த தேவகுமாரன் இந்த இரண்டுவித தீமையுங் கலந்த இந்தத் துன்பத்தினின்றும் மனிதனை இரட்சிக்க வல்லவராயிருந்தார்.

ஒருவேளை அப்படிக்கொத்த பேய்பிடித்தவர்கள் இக்காலத்தில் ஏன் இல்லையென்று சிலர் ஆட்சேபிக்கலாம். முற்றிலும் இல்லையென்று சொல்லுகிறது உண்மையல்ல. முன்னிருந்ததுபோல அவ்வளவு அதிகமாயில்லையென்று சொல்லலாம். இரட்சகர்காலத்திலும் அவருக்குப் பிந்தின தலைமுறையிலுந்தான் பிசாசின் வல்லமையும் மூர்க்கமும் அதிகமாகக் காணப்பட்டது. ஆதியில் உலகமிருந்ததுபோல அப்போது இருந்த மனிதருடைய உள்ளங்களெல்லாம் ரூபமற்றதும், வெறுமையும், அந்தகாரமுமாயிருந்தது. வெளிச்சமுண்டாகக்கடவது என்று சொல்வதற்கேற்ற வேளை வந்தது. பிசாசின் கிரியைகளை இரட்சகர் அழிக்கவந்தபடியால் பிசாசின் கிரியைகள் வெளியரங்கமாகவேண்டிய அவசியம் இருந்தது. அவர் மாமிசத்தில் வெளிப்பட்டபடியால் பிசாசின் வல்லமை குறைந்து, அவனுடைய அதிகாரம் எடுபட்டுப்போவதற்கு காலம் சமீபமாயிற்று. இரட்சகர்தாமே சொன்னதைப் பாருங்கள். "சாத்தான் வானத்திலிருந்து மின்னலைப்போல விழுகிறதைக் கண்டேன்" என்றார். அவர் சிலுவை விட்டபொழுது பிசாசின் தலையை நசுக்கினார். இப்பொழுதும் வேதவசனம் உண்மையாய்ப் பிரசங்கிக்கப்பட்டு சாக்கிரமெந்துகள் ஒழுங்காய்க் கொடுக்கப்பட்டுவருகிற இடங்களில் பிசாசினுடைய அதிகாரம் வெகுவாய்க் குறைந்துவருகிறதைக் காணலாம். அஞ்ஞானம்நிறைந்த இடங்களிலுங்கூட இயேசுவின் நாமம் கூறப்படும்பொழுது பிசாசினுடைய கிரியை ஒழிந்துவருகிறதில்லையா?

நாம் இப்பொழுது வாசித்த அற்புதம் இப்படி பேய்பிடித்த ஒரு மனுஷனைப்பற்றினதுதான். அதிலுள்ள சில சங்கதிகளை இப்பொழுது கவனிப்போமாக. இதற்கும் இதற்குமுந்தின அற்புதத்துக்கும் ஒரு நேர்த்தியான இசைவுண்டு. அந்த அற்புதத்தில் நம்முடைய இரக்ஷகர் சுபாவீக முறைமைகளில் தோன்றும் கலகங்களையும் அமர்த்துகிறவராகக் காணப்பட்டார். காற்றையும் கடலையும் ஒரு வார்த்தையினால் அதட்டி அமைதலுண்டாகும்படிச் செய்தார். ஆனால் காற்றுகளையும் அலைகளையும் விட, அதிக மூர்க்கமுள்ள வேறொரு வஸ்து

உண்டு. அது கிறிஸ்துவினால் சீரடையாத ஆத்துமந்தான். ஆதலால் அதைவிட இந்த அற்புதத்தினால் இரட்சகருடைய வல்லமை விசேஷித்தவிதமாக விளங்குகிறதைப் பார்க்கலாம். இந்த அற்புதத்தை மூன்று சுவிசேஷகர் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லுகிறதில் சில விகற்பங்களுண்டு. மத்தேயு பிசாசு பிடித்தவர்கள் இரண்டுபேர் என்று சொல்லுகிறார். மாற்கும் லூக்காவும் ஒருவன் என்று சொல்லுகிறார்கள். ஒருவேளை இவர்களில் ஒருவன் அதிகப் பிரசித்தியடைந்தவனாய் இருக்கலாம். பிசாசுக்குரிய குணங்கள் இவனிடத்தில் மிகவும் அதிகமாகத் தோன்றினபடியால் அவனுக்கு இவன் அதிகமாக வேறுபட்டிருக்கலாம். மத்தேயு எழுதியிருக்கிறதைவிட, மாற்கும் லூக்காவும் எழுதியிருக்கிற சங்கதிகள் அதிக நிறைவுள்ளவைகளாயிருக்கிறபடியால், ஒருவன்மாத்திரம் இருந்ததாக பாவித்துக்கொண்டு பின்வரும் காரியங்களைச் சிந்திப்போமாக.

இவனைக்குறித்து மாற்கு சொல்லியிருக்கிறது அதிக பயங்கரத்தைக் கொடுக்கத்தக்கது. அவன் கல்லறைகளில் வாசம் பண்ணினான். அங்கே செத்த மனிதர்களுடைய எலும்புகள் இருந்தபடியால் அவைகள் தீட்டான இடங்களென்று யூதர்கள் எண்ணினார்கள் (எண். 19, 11, 16. மத். 23. 27. லூக். 11. 47.). இந்தக் கல்லறைகள் ஊருக்குப் புறம்பே சற்று தூரத்திலிருந்தபடியால், தனிமையாயிருக்க விரும்புகிறவர்களுக்கு எற்ற இடமாயிருந்தது. பிசாசுபிடித்தவர்களுக்கு அதிக பெலனிருந்ததாக, அப். 19. 16ல் விளங்கும். அப்படியே இந்த மனுஷனைக்குறித்து, மாற். 5. 4ல் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த வழியே மனிதர்கள் பிரயாணம்பண்ணக் கூடாதிருந்ததாக மத்தேயு சொல்லுகிறார்; லூக்கா அவன் வஸ்திரம் தரியாதவனாயிருந்ததாகச் சொல்லுகிறார். அவன் தன் நிர்ப்பாக்கியத்தை உணர்ந்தபடியால் கூக்குரலிட்டு தன்னைத்தானே கல்லுகளால் காயப்படுத்திக்கொண்டிருந்தான். இப்படிப்பட்ட மனிதனைத்தான் இரட்சகர் முதலாவது இங்கே கண்டார். தனிமையாயிருந்த தன்னைக் கலைக்கவந்ததாக எண்ணி கோபமாய் அவரிடத்தில் வந்தானோ, அல்லது இவர் தனக்கு

சகாயம்செய்வாரென்று எண்ணி அவரிடத்தில் வந்தானோ தெரியவில்லை. இயேசுவானவர் அவனைக் கண்டவுடனே அந்த ஆவி அவனை விட்டுப்போகும்படி கட்டளையிட்டார். அவர் கட்டளைகொடுக்கத் தகுந்தவரென்றும், அவரை எதிர்க்கிறதில் யாதொரு பிரயோசனமுமில்லையென்றும் இந்த அசுத்தஆவி ஒத்துக்கொண்டதாகத் தோன்றுகிறது. ஏனென்றால் அவன் கூக்குரலிட்டு அவருக்குமுன்பாக விழுந்து "இயேசுவே, உன்னதமான தேவனுடைய குமாரனே, எனக்கும் உமக்கும் என்ன? என்னை வேதனைப்படுத்தாதபடிக்கு உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்" என்றான். மற்றவர்களைத் துன்பப்படுத்தக்கூடாமலிருக்கிறதைத் தனக்குத் துன்பமாக எண்ணிக்கொள்ளுகிறது பிசாசுக்குரிய லட்சணம். காலம் வருமுன்னே எங்களை வேதனைப்படுத்த இங்கே வந்தீரோ என்று கூப்பிட்டதாக மத்தேயு சொல்லுகிறார். காலம்வருமுன்னே என்று சொன்னபடியால், பிசாசின் ராச்சியம் முற்றிலுமழிய, அவனும் அவனுடைய தூதரும் பாதாளத்தில் தள்ளப்பட, குறித்தகாலம் சீக்கிரம் வருகிறதென்று அவன் ஒத்துக்கொண்டான். மற்ற வேதவாக்கியங்களிலும் இப்படித்தான் சொல்லியிருக்கிறது. (1 கொரி. 6. 3. யூதா. 6. வச.)

இரட்சகர் முதலாவது கட்டளையிட்டபோது பிசாசு உடனே அவனைவிட்டுப் போகவில்லை. இரட்சகருக்கு மனமானால் உடனே அதைப் போகும்படி செய்யலாம். ஆனாலப்படிச் செய்வதினால் அந்த மனுஷனுக்கு வருத்தமுண்டாகாமல் இரக்கமுள்ளவரானபடியால் மெதுவாக அதைத் துரத்தப் பார்க்கிறார். முதலாவது உன் பேரென்ன என்று கேட்டார். அதற்கு அவன் நாங்கள் அநேகராயிருக்கிறபடியால் என் பேர் லேகியோன் என்று சொன்னான். இது உண்மைதான். அநேகவிதமான கெட்ட குணங்கள் அவனை ஆண்டுகொண்டு வந்தது. அவனை ஆண்டு வந்த பாவக்குணங்களுக்கு கணக்கில்லாதபடியால் தான் பார்த்திருக்கும் ரோமருடைய சேனைக்குரிய பேரால் லேகியோன் என்று தன்னைத்தானே அழைத்துக்கொண்டான். மகதலே ஊராளாகிய மரியாளைக்குறித்தும் அவளை ஏழு பிசாசுபிடித்த

தாகச் சொல்லியிருக்கிறது (லூக். 8. 3. மத். 12. 45. பார்.). அப்படிப் பேரைச் சொன்னதோடேகூட பாதாளத்துக்குப் போகும்படிக்குக் கட்டளையிடாதபடிக்கு அல்லது மாற்கு சொல்லியிருக்கிறபடி அத்திசையிலிருந்து அவைகளை ஓட்டிவிடாதபடிக்கு மிகவும் வேண்டிக்கொண்டான். யூதர்கள் ஒவ்வொரு தேசத்திலும் சில இடங்கள் நல்ல ஆவிகளுக்கும் சில இடங்கள் பொல்லாத ஆவிகளுக்கும் தங்குமிடமாக இருந்ததென்றும், அவைகள் ஒரு இடத்தைவிட்டு ஒரு இடத்துக்குப் போகக் கூடாதென்றும் அபிப்பிராயங்கொண்டிருந்தார்கள். ஆதலால் அத்திசையைவிட்டுப் போகிறதும் பாதாளத்துக்குப் போகிறதும் அவைகளுக்கு ஒன்றுபோலிருந்தது. அதினுல்தான் காலம் வருமுன்னே தங்களை வேதனைப்படுத்தாதபடிக்கு இரட்சகரைக் கேட்டுக்கொண்டன.

பலவானைவிட அதிகப் பலவான் வந்து பலவானுடைய உடைமைகளை தன்னுடையதாக்கிக்கொள்ளவேண்டியகாலம் சமீபித்தபடியால், பன்றிகளுக்குள் தங்களை அனுப்பும்படி வேண்டிக்கொண்டன. ஏறக்குறைய (2000) பன்றிகள் அங்கே மேய்ந்துகொண்டிருந்ததாக மாற்கு சொல்லுகிறுர். சிலவேளைகளில் பரிசுத்தவான்களும் தேவனுடைய ஊழியக்காரரும் கேட்கிற காரியம் அவர்களுக்குக் கிடைக்கிறதில்லை. அப்படிக் கிடையாமலிருப்பதே அவர்களுக்கு ஆசீர்வாதமாகிறது (2 கொரி. 12. 8, 9.). சாத்தானும் அவனுடைய தூதர்களும் கேட்கிற காரியமோ அவர்களுக்குக் கிடைக்கிறது (யோபு. 1. 11.). அப்படிக் கிடைக்கிறதே அவர்களுக்கு அழிவாக மாறுகிறது. அப்படியே இப்பொழுது நடந்தது. இரட்சகர் பன்றிகளுக்குள் போகும்படி உத்தரவுகொடுத்தார். அந்தப் பன்றிக் கூட்டம் முழுவதும் கடலிலே பாய்ந்து மாண்டது. அந்தப் பிசாசுகளும் தங்களுக்கு மனமில்லாத இடமாகிய பாதாளத்திலேயே சென்றன.

மத். 21. 19ல் இரட்சகர் அத்திமரத்தைச் சபித்ததாகச் சொல்லியிருக்கிற அற்புதத்தைக்குறித்து ஆட்சேபிக்கிறதுபோல இந்த அற்புதத்தைக்குறித்தும் இத்தனை பன்றிகளை அழித்து சேதப்

படுத்தினது நீதியா என்று சிலர் ஆட்சேபிப்பார்கள். ஒரு மனுஷன் அநேக பன்றிகளைவிட மேலானவன். இந்தப் பிசாசுகள் கேட்டுக்கொண்டபடி பன்றிகளுக்குள் அவைகளைப் போக விட்டது அந்த மனுஷன் சுகமாகிறதற்கு ஏதுகரமாயிருந்ததால் அதுவே அப்படிச் செய்வதற்குப் போந்த காரணம். அல்லது இவனை ஆண்டுவந்த இவன் சத்துருக்களாகிய இந்தப் பிசாசுகள் இவ்விதமாக தங்களிடத்தைவிட்டுப் பேர்ந்து அழிவுக்குள்ளானதைக்கொண்டு இவன் விடுதலையானதைக் காட்டவேண்டிய அவசியமிருக்கலாம். இஸ்ரவேலர் சிவந்த சமுத்திரத்தைக் கடந்தபிறகு அந்த எகிப்தியர் மறுபடியும் தங்களை அடிமைகளாக ஆளமாட்டார்களென்று அவர்கள் விசுவாசிப்பதற்கு அவர்களுடைய பிரேதங்களைப் பார்க்கவேண்டியதிருந்தது போல இந்த மனுஷனும் நிச்சயமாகவே தான் விடுதலையாக்கப்பட்டேனென்று விசுவாசிப்பதற்கு இப்படி அவைகள் வெளியரங்கமாய் அழிந்ததைப் பார்க்கவேண்டியிருந்தது. இதினால் உண்டான நஷ்டத்தைக்குறித்து ஆட்சேபிப்பது நியாயமல்ல. கன்மழையினாலும் வெள்ளத்தினாலும் கொடிய வியாதிகளினாலும் மிருகங்கள் சாகும்படிசெய்து நிலத்தின் பலன்களையழித்து தேவன் தம்முடைய பிள்ளைகளையும் திருத்தித் தண்டிக்கிறதுண்டு. எதையாவது ஆண்டவர் எடுத்துக்கொள்ளும்போது நாம் எடுத்துக்கொண்டதைவிட சிலவேளைகளில் மேலானதைக் கொடுக்கிறதுண்டு. அற்பமான காரியத்தை அவர் எடுத்துப் போடும்போது மேலான காரியத்தைப் பெற்றுக்கொள்வதற்கு இதுதான் சமயமென்று எண்ணவேண்டும். யோசேப்புஸ் சொல்லுகிறபடி, இவர்கள் யூதர்களாயிருப்பார்களானால், மோசேயின் நியாயப்பிரமாணத்துக்கு விரோதமாய் இப்படி பன்றிகளை வளர்த்தபடியால் அவர்களைத் தெண்டிக்கிறது நியாயம். ஆகிலும் தெக்கப்போலியில் வாசம்பண்ணினவர்கள் அநேகர் புறச்சாதியாராயிருந்தார்கள். இந்த அசுத்த ஆவிகள் பன்றிகளுக்குள் பிரவேசித்ததும் பிரவேசித்தவுடனே அழிந்ததும் சற்று விகற்பமாகத் தோன்றலாம். இந்தப் பிசாசுகள் வேண்டுமென்று இப்படிச் செய்தனவோ இல்லையோ என்பதைப்பற்றி

சந்தேகமிருந்தாலும் கிறிஸ்துவுக்கு அவைகள் விரோதியான படியால் இப்படி அத்தேசத்தாருக்கு அவரை விரோதியாக்கிப் போட்டால் அவருடைய நற்கிரியை அங்கே நடந்தேறாத படிக்கு தடுக்கலாமென்று விரோதத்தினுல் இப்படிச் செய்திருக்கலாம். அப்படியே நடந்ததென்று பின் சரித்திரத்தினுல் தெரியவருகிறது. அவ்விடத்து சனங்கள் இப்படி தங்களுக்கு நஷ்டம் வராதபடிக்கு அந்த திசையை விட்டுப் போகவேண்டுமென்று இயேசுவை வேண்டிக்கொண்டார்கள்.

சமாரியர், இரட்சகர் தங்களிடத்திலிருக்கும்படி கேட்டுக்கொண்டார்கள் (யோவா. 4. 40.). இவர்களோ அவர் தங்களை விட்டுப்போகவேண்டுமென்று விரும்புகிறுர்கள். இப்படி இவர்கள் பேதுருவைப்போல தாழ்மையால் ஏவப்பட்டுச் சொன்னுர்களென்று சொல்லக்கூடாது. தங்களுக்கு நஷ்டம் வருமென்று பயந்துதான் இப்படி அவரைப் போகும்படிக் கேட்டுக் கொண்டார்கள். இந்தப் பன்றிகளழிந்தது அவர்களுக்கு ஒரு சோதனையாயிருந்தது. அவர்கள் தேவனுடைய இராச்சியத்தை முக்கியமாக எண்ணி அதற்காக தங்கள் உலக ஆஸ்திகளையெல்லாம் நஷ்டமாகத் தள்ளுவார்களோ இல்லையோவென்று ஆண்டவர் அவர்களைச் சோதித்தார். இந்தச் சோதனையில் அவர்கள் விழுந்தார்கள். ஒரு மனுஷன் பிசாசின் அடிமைத்தனத்தினின்று நீங்கி இயேசுவானவருடைய பாதத்தினருகே போதனை கேட்கும்படி (லூக். 10. 39.), வஸ்திரம் உடுத்திக் கொண்டு உட்கார்ந்து புத்தியடைந்திருக்கிறதை அவர்கள் ஒரு சந்தோஷமான காரியமாக எண்ணவில்லை. தங்களுக்கு வந்த நஷ்டமே அவர்களுக்கு பெரிதாகத் தோன்றிற்று. அவர்களுடைய அசுத்தமான பாவங்களுக்கு தேவனுடைய பரிசுத்தர் அங்கேயிருக்கிறது ஒத்துவராதென்று அவர்கள் கண்டு தங்கள் பாவங்களை விட்டுவிட மனமில்லாதபடியால் பயந்து தங்களை விட்டுப்போகும்படிக்கு வேண்டிக்கொண்டார்கள். அவர்கள் கேட்டுக்கொண்டபடியே இரட்சகரும் உடனே அவர்களைவிட்டுப் போனுர். (லூக். 8. 37.)

இரட்சகர் போகிறதைப் பார்த்த இவன் தானும் அவரோடே

கூடப் போக உத்தரவு கேட்டான். தன்னுடைய இரட்சகர் தன்னை விட்டுப்போனால் மறுபடியும் பிசாசுகள் தன்னை ஆண்டு கொள்ளுமென்று பயந்து இப்படி வேண்டிக்கொண்டதாக ஒருவர் சொல்லுகிறார். அல்லது தனக்கு இவ்வளவு நன்மை செய்தவருக்கு நன்றியறிதலாக அவரைப் பின்செல்லவேண்டு மென்று இப்படிக் கேட்டிருப்பான். எந்த நோக்கத்தோடே கேட்டிருந்தாலும் அவர் அவனுக்கு உத்தரவுகொடுக்கவில்லை. இந்தக் கதரேனர் தாம் அவ்விடத்திலிருக்கிறதற்கு சம்மதியா விட்டாலும் தமக்கேற்ற ஒரு சாட்சியை அவர்கள் நடுவே வையாமல் அவர்களை விட்டுப்போக அவருக்கு மனமில்லை. அவருடைய கிருபைக்கும் வல்லமைக்கும் இவன் பலத்த அத் தாட்சியாயிருந்ததுமல்லாமல், அவனைக் குணப்படுத்ினது போல அவர்களுடைய ஆத்தும வியாதிகளையும் நீக்கிக் குணப் படுத்த மனமுள்ளவராயிருந்தாரென்று அவர்களுக்கு ரூபிக்க ஒரு நல்ல திஷ்டாந்தமாயிருந்தான். நீ உன் வீட்டில் உன் இனத்தாரிடத்திற்குப்போய் கர்த்தர் உனக்கு இரங்கி உனக்குச் செய்த மிகுந்த விசேஷங்களை அவர்களுக்கு அறிவிப்பாயாக என்றார். அந்தப்படி அவன் போய் தனக்கு இயேசுவானவர் செய்த விசேஷங்களை தெக்கப்போலியென்னும் தேசத்திலே பிரசித்தப்படுத்தினான். யாவரும் ஆச்சரியப்பட்டார்கள் (மத். 8. 4. லூக். 8. 36.). வேறு பல சமயங்களில் இரட்சகர் தம் மால் சொஸ்தமானவர்களுக்கு அதை ஒருவருக்கும் சொல்ல வேண்டாமென்று கட்டளையிட்டார். இவனுக்கோ அதை யாவருக்கும் பிரசித்தம்பண்ணும்படி சொன்னார். தாம் செய்த நன்மையை அடிக்கடி சொல்லிக்கொண்டு திரிவதினால் அவர் களிடத்திலிருக்கவேண்டிய நல்லெண்ணம் குறைந்துபோகும், அல்லது நீங்கிப்போகுமென்று யாரைக்குறித்து எண்ணினாரோ அப்படிப்பட்டவர்களைச் சொல்லவேண்டாமென்று கட்டளை யிட்டார். எங்கே சொல்லாமலிருப்பதினால் அந்த நல்லெண் ணம் தன்னிலேதானே குறைந்து கடைசியில் ஒன்றுமில்லாமல் அற்றுப்போகுமென்று கண்டாரோ அங்கே அந்த நல்லெண் ணம் வளரும்படி அதை யாவருக்குஞ் சொல்லவேண்டுமென்று கட்டளையிட்டார். அந்தந்த மனுஷர்களுடைய குணங்களுக் கும் நிலைமைகளுக்கும் தக்கதாய் அவரவர்களுடைய நன்மைக் கேற்றவிதமாய் அவரவர்களை நடத்திவருகிறாரென்று இதினாலே விளங்குகிறது.



## 6. யவீரினுடைய மகளை உயிரோடே எழுப்பினது.

*மத்தேயு,* 9. 18, 19, 23—26.

*"அவர் இவைகளை அவர்களுக்குச் சொல்லிக்கொண்டிருக்கையில், தலைவன் ஒருவன் வந்து அவரைப் பணிந்து: என் மகள் இப்பொழுது தான் மரித்துப்போனாள்; ஆகிலும், நீர் வந்து அவள்மேல் உமது கையை வையும், அப்பொழுது பிழைப்பாள் என்றான். இயேசு எழுந்து, தம்முடைய சீஷரோடுகூட அவன் பின்னேபோனார்.*

*இயேசுவானவர் தலைவனுடைய வீட்டிலே வந்து, தாரை ஊதுகிறவர்களையும், இரைகிற ஜனங்களையும் கண்டு: விலகுங்கள், இந்தச் சிறு பெண் மரிக்கவில்லை, நித்திரையாயிருக்கிறாள் என்றார். அதற்காக அவரைப் பார்த்து நகைத்தார்கள். ஜனங்கள் வெளியே துரத்தப்பட்ட பின்பு, அவர் உள்ளே பிரவேசித்து, அந்தச் சிறுபெண்ணின் கையைப் பிடித்தார்; உடனே அவள் எழுந்திருந்தாள். இந்தச் சங்கதி அத்தேசமெங்கும் பிரசித்தமாயிற்று."*

*மாற்கு,* 5. 22—24, 35—43.

*"அப்பொழுது, ஜெபஆலயத் தலைவரில் ஒருவனாகிய யவீரு என்பவன் வந்து, அவரைக் கண்டவுடனே, அவர் பாதத்தில் விழுந்து: என் குமாரத்தி மரண அவஸ்தைப்படுகிறாள், அவள் ஆரோக்கியம் அடையும்படிக்கு நீர் வந்து, அவள்மேல் உமது கைகளை வையும், அப்பொழுது பிழைப்பாள் என்று அவரை மிகவும் வேண்டிக்கொண்டான். அவர் அவனோடேகூடப் போனார். திரளான ஜனங்கள் அவருக்குப் பின் சென்று, அவரை நெருக்கினார்கள்.*

*அவர் இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், ஜெபஆலயத்தலைவனுடைய வீட்டிலிருந்து சிலர் வந்து: உம்முடைய குமாரத்தி மரித்துப்போனாள், இனி ஏன் போதகரை வருத்தப்படுத்துகிறீர் என்றார்கள். அவர்கள் சொன்ன வார்த்தையை இயேசு கேட்டவுடனே, ஜெபஆலயத் தலைவனை நோக்கி: பயப்படாதே, விசுவாசமுள்ளவனாயிரு என்று சொல்லி; பேதுருவையும், யாக்கோபையும், யாக்கோபின் சகோதரன் யோவானையும் தவிர, வேறொருவரும் தம்மோடே வருகிறதற்கு இடங்கொடாமல்; ஜெபஆலயத்தலைவனுடைய வீட்டிலே வந்து, சந்தடியையும் மிகவும் அழுது புலம்புகிறவர்களையும் கண்டு, உள்ளே பிரவேசித்து: நீங்கள் சந்தடிபண்ணி அழுகிறதென்ன? பிள்ளை மரிக்கவில்லை, நித்திரையாயிருக்கிறாள் என்றார். அதற்காக அவரைப் பார்த்து நகைத்தார்கள். எல்லாரையும் அவர் வெளியே போகப்பண்ணி, பிள்ளையின் தகப்பனையும் தாயையும் தம்மோடே வந்தவர்களையும் அழைத்துக்கொண்டு, பிள்ளையிருந்த இடத்தில் பிரவேசித்து, பிள்ளையின் கையைப் பிடித்து: தலீத்தாகூமி என்றார்; அதற்கு, சிறுபெண்ணே எழுந்திரு என்று உனக்குச்*

சொல்லுகிறேனென்று, அர்த்தமாம். உடனே சிறுபெண் எழுந்து நடந்தாள்; அவள் பன்னிரண்டு வயதுள்ளவளாயிருந்தாள். அவர்கள் மிகுந்த ஆச்சரியப்பட்டு பிரமித்தார்கள். அதை ஒருவருக்கும் அறிவியாதபடி அவர்களுக்கு உறுதியாகக் கட்டளையிட்டு, அவளுக்கு ஆகாரம் கொடுக்கும்படிச் சொன்னார்.''

லூக்கா, 8. 41, 42, 49—56.

"அப்பொழுது ஜெபஆலயத்தலைவனாகிய யவீரு என்னும் பேருள்ள ஒருவன் வந்து, இயேசுவின் பாதத்தில் விழுந்து, பன்னிரண்டு வயதுள்ள தன்னுடைய ஒரேகுமாரத்தி மரண அவஸ்தையாயிருந்தபடியால், தன் வீட்டிற்கு வரும்படி அவரை வேண்டிக்கொண்டான். அவர் போகையில் திரளான ஜனங்கள் அவரை நெருக்கினார்கள்.

அவர் இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், ஜெபஆலயத்தலைவனுடைய வீட்டிலிருந்து ஒருவன் வந்து, அவனை நோக்கி: உம்முடைய குமாரத்தி மரித்துப்போனாள், போதகரை வருத்தப்படுத்தவேண்டாம் என்றான். இயேசு அதைக் கேட்டு: பயப்படாதே; விசுவாசமுள்ளவனாயிரு, அப்பொழுது அவள் ரட்சிக்கப்படுவாள் என்றார்.

அவர் வீட்டில் வந்தபோது, பேதுருவையும் யாக்கோபையும் யோவானையும் பெண்ணின் தகப்பனையும் தாயையுந்தவிர வேறொருவரையும் உள்ளே வரவொட்டாமல், எல்லாரும் அழுது அவளைக்குறித்து துக்கங்கொண்டாடுகிறதைக் கண்டு: அழாதேயுங்கள், அவள் மரித்துப்போகவில்லை, நித்திரையாயிருக்கிறாள் என்றார். அவள் மரித்துப்போனாளென்று அவர்கள் அறிந்ததினால், அவரைப்பார்த்து நகைத்தார்கள். எல்லாரையும் அவர் வெளியே போகப்பண்ணி, அவளுடைய கையைப் பிடித்து: பிள்ளையே எழுந்திரு என்றார். அப்பொழுது அவள் உயிர் திரும்ப வந்தது; உடனே அவள் எழுந்திருந்தாள்; அவளுக்கு ஆகாரங்கொடுக்கக் கட்டளையிட்டார். அவள் தாய்தகப்பன்மார் ஆச்சரியப்பட்டார்கள். அப்பொழுது நடந்ததை ஒருவருக்கும் சொல்லாமலிருக்கும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டார்.''

---

மாற்கும் லூக்காவும் நம்முடைய இரட்சகர் கலிலேயாக் கடலின் கீழ்பக்கத்திலிருந்து திரும்பிவந்தவுடனே இந்த அற்புதம் நடந்ததாகச் சொல்லுகிறார்கள். மத்தேயுவோ திமிர்வாதக்காரன் சொஸ்தமடைந்ததையும் தான் அழைக்கப்பட்டதையும் பரிசேயரோடே நம்முடைய இரட்சகர் பண்ணின சில சம்பாஷணைகளையும் ஊடே எழுதியிருக்கிறார். மாற்கும் லூக்காவும் யவீரென்கிற பேரைச் சொல்லியிருக்கிறார்கள். மத்தேயு இவனைத் தலைவன் ஒருவனென்று மாத்திரம் குறித்திருக்கிறார். மாற்கும் லூக்காவும் தலைவன் என்று மாத்திரமல்ல, செபஆலயத்தலைவரில் ஒருவனென்று அழைக்கிறார்கள். சில செப

ஆலயங்களில் தலைவன் ஒருவன்மாத்திரம் இருப்பான் (லூக். 13. 14.). சில செபஆலயங்களிலோ அநேக தலைவர்களிருக்கிறதுண்டு. அப். 13. 25; 28. 17ல் சொல்லியிருக்கிற யூதரில் பிரதானமானவர்கள் இப்படிப்பட்ட தலைவராய் இருந்திருக்கவேண்டும். இது கப்பர்நகூமிலிருந்த செபஆலயம். பிறகு நூற்றுக்குச் சேர்வைக்காரனுக்காக இரட்சகரிடத்தில் வந்து பேசின யூத மூப்பரில் யவீரொருவனென்று சிலர் எண்ணுகிறார்கள். அப்பொழுது மற்றவர்களுக்காக இரட்சகரிடத்தில் வந்தவன் இப்பொழுது தன் அவசரத்தினிமித்தமாக வருகிறான். என் மகள் இப்பொழுதுதான் மரித்துபோனாள்; ஆகியும் நீர் வந்து அவள்மேல் உமது கையை வையும்; அப்பொழுது பிழைப்பாள்" என்று கெஞ்சினதாக மத்தேயு சொல்லுகிறார். மாற்கு 5. 23ல் குமாரத்தியென்று திருப்பியிருக்கிற வார்த்தையை மூலபாஷைக்குச் சரியாய் சிறு குமாரத்தியென்று திருப்பவேண்டும். லூக்கா இவருக்குப் பன்னிரண்டு வயதுள்ள ஒரே குமாரத்தியிருந்ததாகவும் அவள் மரணத்துக்கேதுவாயிருந்ததாகவும் சொல்லுகிறார். மத்தேயு எழுதியிருக்கிறதற்கு இது விகற்பமல்ல. அவள் பிழைக்கிறது வருத்தமென்றும் கொஞ்சநேரத்துக்குள்ளாக அவள் உயிர் போய்விடுமென்றும் அவன் நிச்சயமாய் அறிந்தபடியால் ஒரு சமயத்தில் மரித்துப்போனதாகவும் ஒரு சமயத்தில் மரிக்கிறதற்கு ஏதுவாயிருந்ததாகவும் சொல்லியிருக்கலாம். இரக்கமுள்ள இரட்சகரோ இந்தத் துயரமான செய்தியைக் கேட்டு எழுந்திருந்து தம்முடைய சீஷரோடுங்கூட அவன் பின்னே போனார். அவருடைய போதனையைக் கேட்டுக்கொண்டிருந்த சனங்களும் இது எப்படி முடியுமென்று பார்க்க பிறகே போனார்கள். போகிறவழியில் இரத்தஊறலால் வருத்தப்பட்ட ஸ்திரீயை சொஸ்தமாக்கினார். அந்த அற்புதத்தைப் பிறகு சிந்தித்துக் கொள்ளலாம். தன் மகளுடைய சீவனைக்குறித்து கவலைகொண்டிருந்த யவீருக்கு அந்த அற்புதத்தால் நேரிட்ட தாமதம் அதிக வருத்தத்தைக் கொடுத்திருக்கலாம். லாசருவினுடைய சகோதரிகளும் தங்கள் சகோதரன் மரிக்கிறதற்குச் சமீபமாயிருந்தும்

இரட்சகர் வராமலிருந்ததைக் கண்டு இப்படித்தான் வருத்த மடைந்திருப்பார்கள். ஆகிலும் யவீரென்பவன் ஆத்திரப்ப டாமல் பொறுமையோடு காத்திருந்தான். நம்முடைய இரட்ச கர் அந்த ஸ்திரீயோடு பேசிக்கொண்டிருக்கும்போது தலைவ னுடைய வீட்டிலிருந்து சிலர் வந்ததாக மாற்கு சொல்லுகிறார். லூக்கா, ஒருவன் வந்து "உம்முடைய குமாரத்தி மரித்துப்போ னாள், போதகரை வருத்தப்படுத்தவேண்டாம்" என்று சொன்ன தாக எழுதியிருக்கிறார். அவளுக்குள்ளிருந்த குறை உயிரை நன் றாய் பலப்படுத்த அவர் வல்லமையுள்ளவரென்று விசுவாசித் தார்கள். அந்த உயிர் முழுதும் போய்விட்டபிறகும் அவளை உயிரோடெழுப்ப வல்லமையுள்ளவரென்று விசுவாசியாதே போனார்கள். அவர்கள் விசுவாசியாமல் போனதுபோல யவீ ரும் அவ்விசுவாசத்துக்கிடங்கொடுத்திருப்பானாகில் இந்த அற்பு தம் நடந்தேறாமல்போம். ஆனால் அவனுக்குள் எழும்பின சந்தேகங்களைக் கண்ட இரட்சகர் அவனைப் பார்த்து பயப் படாதே விசுவாசமுள்ளவனாயிரு; அப்பொழுது அவள் இரட் சிக்கப்படுவாள் என்றார். அவர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டவுடனே யவீருக்குள் கொஞ்சமாவது சந்தேகம் தோன்று கிறதற்கு இடமிராதபடிக்கு உடனே இரட்சகர் இப்படி அவனை தைரியப்படுத்தினார்.

இரட்சகர் தம்மோடு மூன்று அப்போஸ்தலரை மாத்திரம் கூட்டிக்கொண்டு போனதாக வாசிக்கிறோம். இன்னும் சில சமயங்களில் இவர்களையே தம்மோடிருக்கக் கூட்டிக்கொண் டுபோனார். (மத். 17. 12; 26. 37.). இந்தச் சமயத்தில் சிலரை இப்படி விசேஷித்த விதமாகத் தெரிந்துகொள்வதற்கு ஒரு காரணமிருந்தது. இரட்சகர் ஒரு பெரிய கிரியையை நடப்பிக்கப்போகிறார், விசேஷித்தவிதமாய் தம்முடைய வல்ல மையைக் காண்பிக்கப்போகிறார். மரித்தவர்களை உயிரோடே எழுப்பின அற்புதங்களில் இது முதலாவதானபடியால் தம்மு டைய அப்போஸ்தலரில் முக்கியமான இவர்களைச்சாட்சிகளாக ஏற்படுத்தினார். இவர்களையும்அந்தப் பிள்ளையினுடையபெற்றோ ரையுந்தவிர வேறொருவரையும் அவர் உள்ளே வரவிடவில்லை.

மற்ற இடங்களில் செய்ததுபோல இங்கேயும் அமைதலுண்டாக்குகிறார். "அழாதேயுங்கள், அவள் மரித்துப்போகவில்லை, நித்திரையாயிருக்கிறாள்" என்றார். இந்த வார்த்தைகளை சிலர் அந்தப் பிள்ளை இறந்துபோகாமல் ஒருவிதமான மயக்கங்கண்டு மூர்ச்சையாய் சாகாமல், செத்தவள்போலக் கிடந்ததாக அர்த்தம்பண்ணுகிறார்கள். அப்படியிருக்குமானால் பிள்ளை இறந்துபோயிற்றென்று செய்தி வந்தபோது சருவத்தையும் அறிந்திருந்த இரக்ஷகர் அவள் இறந்துபோகவில்லையென்று உறுதியாகச் சொல்லலாமே. அப்படிச் சொல்லாமல் நீர் பயப்படவேண்டாம். விசுவாசமாகவேயிரும் என்று ஏன் சொன்னார்? இங்கே பேசினவிதமாகவே லாசருவினுடைய மரணத்தைக்குறித்தும் பேசினார் (யோவா. 11. 11.). ஆனால் லாசருவைக்குறித்து பிறகு லாசரு மரித்தானென்று தெளிவாகச் சொன்னாரேயென்று ஆட்சேபித்தால், சீஷர்கள் தம்முடைய கருத்தை அறிந்துகொள்ளவில்லையென்று அவருக்குக் காணப்பட்டதினால்தான் அப்படித் தெளிவாய் அந்தச் சமயத்தில் சொல்லவேண்டியிருந்தது. அவர்கள் அப்படி சாதாரண நித்திரையைக்குறித்து அர்த்தம்பண்ணிவிட்டால் அவர் அப்படி தெளிவாய்ச் சொல்லவேண்டிய அவசியமிராது. இரக்ஷகர் சீக்கிரம் லாசருவை எழுப்ப எண்ணங்கொண்டிருந்தபடியால் லாசருவினுடைய மரணம் நித்திரையாகத்தானிருந்தது. அப்படியே இவளைக்குறித்தும் சொல்லவேண்டும். மேலும் நம்முடைய வேதபுத்தகத்தில் மரணம் நித்திரைக்கொப்பாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. மரிக்கிறதிலே யாதொரு சந்தேகமுண்டென்றல்ல. மரணத்துக்குப்பிறகு உயிர்த்தெழுதல் சம்பவிப்பதால் மரணம் நித்திரைபோலிருக்கிறது. மேலும் இந்தச் சமயத்தில் இரக்ஷகர் இப்படிச் சொன்னதினால் விழுகிறதற்கேதுவான தகப்பனுடைய விசுவாசம் உறுதிப்படுகிறதற்கேதுவாயிருந்தது. "பயப்படாதே, விசுவாசமுள்ளவனாயிரும்" என்று மறுபடியும் சொன்னதுபோலிருந்தது. மேலும் தம்முடைய கிரியைகளெல்லாவற்றையும் மற்றவர்கள் அறிந்துகொள்ளவேண்டுமென்று இரக்ஷகர்

விரும்பாதவரானபடியால் இரண்டு அர்த்தம்கொள்ளுகிற வார்த்தையினால் தாம் செய்யப்போகிற அற்புதத்தை ஒருவிதமாய் மறைத்தாரென்று எண்ணலாம்.

இப்படிப் பேசி சந்தடிபண்ணிக்கொண்டிருந்த எல்லாரையும் வெளியே துரத்தினார். இப்படிப்பட்டவர்கள் அந்த இடத்திலிருக்க தகுந்தவர்களல்ல. அவர்கள் மரித்தவர்களுக்காக துக்கிக்கிறவர்கள். மரணம் சீவனாக மாறுகிற இடத்தில் அவர்களுக்கு அலுவலென்ன? மேலும் அவர்கள் பரியாசக்காரராய் இருந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் இப்படிப்பட்ட பரிசுத்தமும் மேலானதுமான காட்சியைக் காணப் பாத்திரரல்ல. பன்றிகளுக்குமுன் முத்துகளைப்போடுவது நியாயமல்லவே. வீட்டில் சந்தடியில்லாமல் எல்லாம் அமைதலாயிருந்தது. இரண்டு ஆத்துமாக்கள் இறந்துபோன பிள்ளையின் சமீபத்தில் விசுவாசத்தோடும் நம்பிக்கையோடும் காத்து நிற்கிறார்கள். இவர்களார்? அதின் தாயும் தகப்பனுந்தான். திருச்சபைக்குக் குறிப்பாக மூன்று அப்போஸ்தலரும் அங்கே இருக்கிறார்கள். சீவனின் அதிபதி தம்முடைய ஆச்சரியமான கிரியையைத் தொடங்குகிறார். பிள்ளையின் கையைப் பிடித்துச் சிறுபெண்ணே எழுந்திரு என்றார். இரக்ஷகர் வாயிலிருந்து வந்த தலீத்தா கூமியென்கிற வார்த்தைகளைப் பேதுருவின் மூலமாய் மாற்கு அறிந்திருக்கலாம். இன்னொரு சமயத்தில் எப்பத்தா என்கிற வார்த்தையை இரக்ஷகர் உச்சரித்து ஒரு அற்புதத்தைச் செய்தார் (மாற். 7 34.). அவள் கையைப் பிடித்து இந்த வார்த்தையைச் சொன்னவுடன் அவளுடைய ஆவி திரும்பிவந்தபடியால் அவள் எழுந்திருந்து நடந்தாள். உடனே அவளுக்கு வந்த உயிர் திடப்படவும் அது ஒரு ஆவேஷமல்ல, மெய்யாகவே உயிர்தானென்று யாவரும் நிச்சயமாய் அறிந்துகொள்ளவும் அவளுக்குச் சாப்பாடு கொடுக்கச் சொன்னார். (லூக். 24. 41. யோவா. 21. 5. அப். 10. 41.)

நம்முடைய இரக்ஷகர் செய்த எல்லா அற்புதங்களிலும் மரித்தோரை எழுப்பினதுதான் மிகவும் ஆச்சரியமானது. வியாதியை சொஸ்தமாக்குகிறதும் புசலை அமர்த்துகிறதும் அவ்வ

ளவு பெரிய ஆச்சரியமாகத் தோன்றமாட்டாது. தண்ணீரை இரசமாக்குகிறதும் அப்பத்தை வர்த்திக்கப்பண்ணுகிறதுங்கூட, போனஉயிரைத் திருப்பி இல்லாத மனிதனை எழுப்பி இருக்கச்செய்கிற அதிசயத்துக்கு நிகரல்ல. இப்படி இரக்ஷகர் மூன்றுதரம் மரித்தவர்களை எழுப்பியிருந்தாலும் மூன்றும் ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட்டு ஒன்றைவிட ஒன்று அவருடைய வல்லமையை அதிகமதிகமாய்க் காட்டுகிறதாயிருக்கிறது. மரித்து சற்றுநேரத்துக்குப்பிறகு உயிரோடெழுப்பின இந்தச் சங்கதியில் காணப்பட்டதைவிட இரக்ஷகருடைய வல்லமை நாயீனென்னும் ஊரில் அவர் உயிரோடெழுப்பின அந்தச் சங்கதியில் அதிகமாய்க் காணப்பட்டது. அதிலும் அதிகமாய், செத்து நாலுநாளாகி நாற்றமெடுத்த லாசருவின் பிரேதத்தை உயிரோடெழுப்பின சங்கதி இரக்ஷகருடைய வல்லமையை விளக்கிக் காண்பிக்கும். அதனிலும் அதிகமாய் அநேக வருஷங்களாய் மரணத்தூளில் படுத்திருக்கிற யாவரும் இரக்ஷகருடைய சத்தத்தினால் உயிரோடெழும்பும் அந்தநேரத்தில் அவருடைய வல்லமையும் மகிமையும் விசேஷித்தவிதமாய் வெளிப்படும். (யோவா. 5. 28, 29.)



# 7. பெரும்பாடுள்ள ஸ்திரீயைக் குணமாக்கினது.

---

மத்தேயு, 9. 20–22.

"அப்பொழுது, பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீ: நான் அவருடைய வஸ்திரத்தையாகிலும் தொட்டால் சொஸ்தமாவேன் என்று தன் உள்ளத்தில் எண்ணிக்கொண்டு, அவர் பின்னாலே வந்து, அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள். இயேசு திரும்பி, அவளைப்பார்த்து: மகளே, திடன்கொள், உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்றார். அந்நேரமுதல் அந்த ஸ்திரீ சொஸ்தமானாள்."

மாற்கு, 5. 25—34.

"அப்பொழுது பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீ, அநேக வைத்தியர்களால் மிகவும் வருத்தப்பட்டு, தனக்கு உண்டானவைகளையெல்லாம் செலவழித்தும், சற்றுகிலும் குணமடையாமல் அதிக வருத்தப்படுகிறபொழுது, இயேசுவைக்குறித்துக் கேள்விப்பட்டு: நான் அவருடைய வஸ்திரங்களையாகிலும் தொட்டால் சொஸ்தமாவேன் என்று சொல்லி; ஜனக்கூட்டத்துக்குள்ளே அவருக்குப் பின்னாக வந்து, அவருடைய வஸ்திரத்தைத் தொட்டாள். உடனே அவளுடைய உதிரத்தின் ஊறல் நின்றுபோயிற்று; அந்த வேதனை நீங்கி ஆரோக்கியமடைந்ததை அவள் தன் சரீரத்தில் உணர்ந்தாள்.

உடனே இயேசு தம்மிலிருந்து வல்லமை புறப்பட்டதைத் தமக்குள் அறிந்து, ஜனக்கூட்டத்துக்குள்ளே திரும்பி: என் வஸ்திரங்களைத் தொட்டது யார் என்று கேட்டார். அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி: திரளான ஜனங்கள் உம்மை நெருக்கிக்கொண்டிருக்கிறதை நீர் கண்டும், என்னைத் தொட்டது யார் என்று கேட்கிறீரே என்றார்கள். இதைச் செய்தவளைக் காணும்படிக்கு அவர் சுற்றிலும் பார்த்தார். தன்னிடத்திலே சம்பவித்ததை அறிந்த அந்த ஸ்திரீயானவள் பயந்து, நடுங்கி, அவர் முன்பாக வந்து விழுந்து, உண்மையையெல்லாம் அவருக்குச் சொன்னாள். அவர் அவளைப் பார்த்து: மகளே, உன் விசுவாசம் உன்னை ரட்சித்தது, நீ சமாதானத்தோடே போய், உன் வேதனை நீங்கி, சுகமாயிரு என்றார்."

லூக்கா, 8. 43—48.

"அப்பொழுது பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ளவளாயிருந்து, தன் ஆஸ்திகளையெல்லாம் வைத்தியர்களுக்குச் செலவழித்தும், ஒருவனாலும் சொஸ்தமாக்கப்படாதிருந்த ஒரு ஸ்திரீ, அவருக்குப் பின்னாக வந்து, அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள்; உடனே

அவளுடைய பெரும்பாடு நின்றுபோயிற்று. அப்பொழுது இயேசு: என்னைத் தொட்டது யார் என்று கேட்டார். எங்களுக்குத் தெரியாதென்று எல்லாரும் சொன்னபோது, பேதுருவும் அவனுடனேகூட இருந்தவர்களும்: ஐயரே, திரளான ஜனங்கள் உம்மைச் சூழ்ந்து நெருக்கிக்கொண்டிருக்கிறார்களே, என்னைத் தொட்டது யார் என்று எப்படிக் கேட்கிறீர் என்றார்கள். அதற்கு இயேசு: என்னிலிருந்து வல்லமை புறப்பட்டதை அறிந்திருக்கிறேன்; ஆதலால் ஒருவர் என்னைத் தொட்டதுண்டு என்றார். அப்பொழுது அந்த ஸ்திரீ தான் மறைந்திருக்கவில்லையென்று கண்டு, நடுங்கிவந்து, அவர் முன்பாக விழுந்து, தான் அவரைத் தொட்ட காரணத்தையும் உடனே தான் சொஸ்தமானதையும் எல்லா ஜனங்களுக்கும் முன்பாக அவருக்கு அறிவித்தாள். அவர் அவளைப்பார்த்து: மகளே, திடன்கொள், உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது, சமாதானத்தோடே போ என்றார்.''

---

யவீரின் மகளை உயிரோடே எழுப்பப்போன வழியில் இரக்ஷகர் இந்த அற்புதத்தைச் செய்தார். இதிலே இரக்ஷகரிடத்திலிருந்த கிருபையின் பெருக்கைப் பாருங்கள். இருக்கும்பொழுது மாத்திரமல்ல, நடக்கும்பொழுதும் நன்மைசெய்கிறார். மத்தேயு இந்த அற்புதத்தைச் சுருக்கமாயெழுதினபோதிலும் மாற்கும் லூக்காவும் நடந்த சங்கதிகளை விபரமாய்ச் சொல்லியிருக்கிறார்கள். ஒரு சுவிசேஷகன் விட்டதை இன்னொருவன் எழுதியிருப்பதினால் நிறைவான சரித்திரம் வெளியாகிறது. இரக்ஷகர் செய்யப்போகிறதைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையினால் சனங்கள் நெருக்கமாய் அவரைப் பின்தொடர்ந்தபொழுது ஒரு ஸ்திரீயானவள் ஆசையினாலல்ல, அவசியத்தினால் ஏவப்பட்டு அவர் பிறகாலே வந்து அவருடைய வஸ்திரத்தைத் தொட்டாள். இவள் லாசருடைய சகோதரியாகிய மார்த்தாளென்று சிலர் சொல்லுகிறார்கள். இவள் பன்னிரண்டு வருஷம் இந்த வியாதியினால் வருத்தப்பட்டும் வைத்தியரால் யாதொரு நன்மையும் அடையவில்லை. சுகத்துக்குப் பதிலாக அதிகமான நோவையும் பொருள்நஷ்டத்தையும் சம்பாதித்துக்கொண்டாள். தனக்குண்டான யாவையும் செலவழித்தும் சற்றாகிலும் சுகமடையாமல் அதிக வருத்தப்பட்டதாக வாசிக்கிறோம். இரக்ஷகர் இவளைப்பார்த்து உன் விசுவாசத்தினால் உனக்குச் சுகமுண்டாயிற்று என்று சொன்ன

படியால் இவளிடத்தில் மெய்யான விசுவாசம் இருந்ததென்பதற்குச் சந்தேகமில்லை. ஆகிலும் இவளுடைய விசுவாசத்தோடு ஒரு தப்பிதமான எண்ணமும் கலந்திருந்தது. சுகமாக்குகிறதற்கேற்ற வல்லமைமாத்திரமல்ல, மனமும் இரக்ஷகரிடத்தில் இருந்ததென்று இவள் எண்ணவில்லை. அவரைத் தொடுகிறது இவள் பார்வைக்கு ஒரு காப்புபோலிருந்தது. அவருடைய வஸ்திரங்களைமாத்திரம் தொட்டால் சுகமடையலாம் என்று எண்ணினாள். மேலும் இலேசாய்த் தொடக்கூடியதாயிருந்தபடியால் அந்தக் காரணத்தையிட்டுமாத்திரம் அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாளென்று நாம் எண்ணக்கூடாது. வஸ்திரத்திலே தொங்கல்களை உண்டாக்கும்படிக்கு தேவன் தாமே இஸ்ரவேல் சனங்களுக்குக் கற்பித்தார். இது அவர்கள் அவருடைய சொந்தச் சனம் என்பதற்கு ஒரு அடையாளம் (எண். 15—37, 40. உபா. 22. 12.). யூதர்களுக்குள்ளே அதிக பக்திமான்களென்று எண்ணப்பட்டவர்கள் இந்தத் தொங்கல்களை விஸ்தாரமாக்கினதாக மத். 23. 5ல் வாசிக்கிறோம். இதினாலே அவள் நமது இரக்ஷகருடைய வஸ்திரத்தின் ஓரத்திலேயே ஒரு விசேஷித்த நன்மையுண்டென்று எண்ணியிருப்பாள். இப்படிப்பட்ட தப்பிதமான எண்ணங்கள் அவளிடத்திலிருந்தாலும் அவள் உண்மையான விசுவாசத்தோடே வந்தாளென்று திட்டமாகச் சொல்லலாம். இந்த விசுவாசத்தின் மூலமாய் அவள் தேடிவந்த பாக்கியமும் அவளுக்குக் கிடைத்தது. தொட்டமாத்திரத்தில் அவளுடைய இரத்த ஊறல் நின்றுபோயிற்று. அந்த வேதனை நீங்க தான் ஆரோக்கியம் அடைந்ததை அவள் சரீரத்தில் உணர்ந்தாள். சுவிசேஷகர்கள் மூவரும் இயேசுவானவர் தம்மிலிருந்து வல்லமை புறப்பட்டதைத் தமக்குள் அப்போதுதான் அறிந்ததாகச் சொல்லியிருந்தபோதிலும், இரக்ஷகர் முழுமனதோடே இதற்குச் சம்மதியாமல் இந்த வல்லமை அவரைவிட்டு புறப்பட்டதென்று நாம் எண்ணவே கூடாது. அவருக்கும் தெரியாமல் அவர் சம்மதியின்றி இந்த அற்புதம் நடந்ததென்று நாம் நினைப்பது சரியல்ல. லூக். 6. 17ல் வல்லமை அவரிலிருந்து புறப்

பட்டு எல்லாரையும் குணமாக்கினபடியினாலே சனங்கள் எல்லாரும் அவரைத் தொடப்பார்த்தார்கள் என்று சொல்லியிருக்கிறது. இதுவும் இரக்ஷகருடைய சம்மதியோடுதான் நடந்திருக்கவேண்டும். அத்திமரத்தின் கீழ் நாத்தானுவேலைக் கண்டவர் மனிதர் உள்ளத்திலிருப்பதை அறிகிறவரானபடியால் மனிதரைக்குறித்து ஒருவரும் அவருக்கு அறிவைக் கொடுக்கவேண்டியதில்லை (யோவா. 2. 25.). அந்த இரக்ஷகருக்கு இவள் சரீரத்தில் பட்ட வருத்தமும் அந்த வருத்தம் நீங்கத்தக்கதாக இவளிடத்திலிருந்த விசுவாசமும் நன்றாய்த் தெரிந்திருந்தது. அப்படியானால் இரட்சகர் திரும்பிச் சனங்களைப்பார்த்து என்னைத் தொட்டவர் யாரென்று கேட்கவேண்டிய அவசியமென்ன என்று சிலர் ஆட்சேபிப்பார்கள். வல்லமை புறப்பட்டதை இவர் அறிந்திருந்தும், அந்த ஸ்திரீ சொஸ்தமாக்கப்பட்டது இவருக்கு நன்றாய்த் தெரிந்திருந்தும், இந்தக் கேள்வியை இரட்சகர் கேட்டதில் ஒரு நோக்கமிருந்தது. அவள் விரும்பினபடியே இரகசியத்திலே இந்த நன்மையைப் பெற்றுப்போயிருப்பாளானால் அவளுக்கு அதிக ஆறுதல் இருக்கமாட்டாது; அவள் ஆத்துமாவுக்கு ஒரு பிரயோசனமும் இருக்கமாட்டாது. இரட்சகர் இப்படிக் கேட்டதினால் அவள் வெளியரங்கமாக வந்து யாவருக்குமுன்பாகத் தான் பெற்றுக்கொண்ட நன்மையை அறிக்கையிட்டது அவளுக்குப் பெரிய ஆசீர்வாதமாக இருக்கலாம். இதையெல்லாம் நன்றாயறிந்திருந்தும் என்னைத் தொட்டவர் யாரென்று இரட்சகர் கேட்டது உண்மையோடு ஒத்திருக்குமா என்று பின்னும் ஆட்சேபிக்கலாம். ஒரு தகப்பன் தன் பிள்ளைகளில் ஒருவன் செய்த தப்பிதத்தை நன்றாய் அறிந்திருந்தும், செய்தவன் தானே தன் வாயினால் மற்றவர்களுக்கு முன்பாகத் தான் செய்த தப்பிதத்தை அறிக்கையிட வேண்டுமென்று விரும்பி அவர்கள் எல்லாரையும் பார்த்து இந்தத் தப்பிதத்தைச் செய்தவன் எவனென்று கேட்கிறது உண்மைக்கு விரோதமென்று சொல்லலாமா? எலிசா கேயாசியைப் பார்த்துக் கேயாசியே, எங்கேயிருந்து வந்தாயென்று கேட்கவில்லையா? அவன் போனபோதும் திரும்பினபோதும் இவர்

இருதயமும் அவனோடேகூட நடந்ததென்று சொல்லியிருக்கிறதே (2 இரா. 5. 25, 26.). தேவன் ஆதாமைப்பார்த்து நீ எங்கேயென்றும், காயீனைப்பார்த்து உன் சகோதரன் எங்கேயென்றும் கேட்டபொழுது நடந்ததை அறியாமலா கேட்டார்? தப்பிதத்தை அறிக்கையிடவேண்டுமென்கிற நோக்கத்தோடே கேட்ட இந்தக் கேள்விகளுக்கு இவர்கள் சரியான உத்தரவுகொடாவிட்டாலும், இந்த ஸ்திரீ தனக்குக் கொடுக்கப்பட்டிருந்த கிருபையினாலே தாராளமாகத் தான் செய்ததை வெளியிட்டாள். என்னைத் தொட்டவர் யாரென்று இரட்சகர் கேட்ட கேள்வியில் நமக்கேற்ற ஒரு படிப்பனை அடங்கியிருக்கிறது. அநேகர் அவரை நெருக்கியிருந்தாலும் ஒருத்திமாத்திரம் விசுவாசத்தோடே அவரைத் தொட்டாள்; மற்றவர்களும் தொட்டிருப்பார்கள்; ஆனால் விசுவாசத்தோடே அப்படிச் செய்யவில்லை. அதுபோல்தான் கிறிஸ்துவின் சபையிலும் அநேகர் இரட்சகரை நெருக்கியிருக்கிறார்கள்; அவருடைய பேரால் அழைக்கப்படுகிறார்கள்; சாக்கிரமெந்துக்களில் அவருக்குச் சமீபமாகிறார்கள்; ஆனாலும் விசுவாசமில்லாதவர்களாயிருப்பதினாலே அவரைத் தொடாமல்போகிறார்கள். அதினால் அவரிடத்திலிருந்து தங்களுக்கு வேண்டிய ஆத்தும சுகத்தையும் சீவனையும் பெற்றுக்கொள்ளாமல்போகிறார்கள். அவருடைய சீஷரும் விசேஷமாகப் பேதுருவும், இரட்சகர் கேட்டதைக்குறித்து ஆச்சரியப்பட்டுச் சனங்கள் உம்மைச் சூழ்ந்து நெருக்கிக்கொண்டிருக்கிறார்களே, என்னைத் தொட்டவர் யார் என்று எப்படிக் கேட்கிறீர் என்றார்கள். இரட்சகர் மறுபடியும் என்னிலிருந்து வல்லமை புறப்பட்டதை அறிந்திருக்கிறேன்; ஆதலால் ஒருவர் என்னைத் தொட்டதுண்டு என்றார். எங்களுக்குத் தெரியாதென்று எல்லாரும் சொன்னதாகச்சொல்லியிருக்கிறது (லூக். 8. 45.). ஆகிலும் மாற். 5. 32ல் இதைச் செய்தவளைக் காணும்படிக்கு அவர் சுற்றிலும் பார்த்தார் என்றிருப்பதினால் தன்னிடத்தில் நடந்ததை அறிந்த ஸ்திரீ இனி மறைந்திருக்கிறது சரியல்லவென்று எண்ணி பயந்து, நடுங்கிவந்து அவரைச் சாஷ்டாங்கமாய் வணங்கி, தான் அவ

ளைத் தொட்ட காரணத்தையும் உடனே தான் சொஸ்தமான தையும் எல்லா சனங்களுக்கும் முன்பாக அவருக்கு அறிவித்தாள். சரீரத்துக்கு வேண்டிய சுகத்தோடேகூட ஆத்துமாவுக்கும் நன்மைசெய்ய விரும்புகிறார். இரக்ஷகருடைய அன்பையும் கிருபையையும் இதிலே பாருங்கள். அவள் தான் பெற்றுக்கொண்ட நன்மையை வெளிப்படுத்தாமல் இரகசியமாய்ப் போய்விடுவாளாகில் அது அவளுக்குப் பாக்கியமாய் இராது. அவள் அப்படியே கூச்சத்துக்கிடங்கொடுத்து மறைந்திருக்கப் பார்த்தபோதிலும் இரக்ஷகர் அவளை வெளியே இழுத்து வாயினாலறிக்கையிடும்படி செய்கிறார். ஆகிலும் சொஸ்தம் அடைந்தபிறகுதான் இப்படி அவளுடைய ஆத்துமநன்மைக்காக இடுக்கமான வாசல்வழியாய் அவளை நடக்கச்செய்தார்.

இரக்ஷகர் அவளை அனுப்பிவிடும் வகையைப் பாருங்கள்: "மகளே, திடன்கொள், உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது, சமாதானத்தோடேபோ" என்றார். இரக்ஷிப்பை விரும்பி விசுவாசத்தினால் அதைப் பெற்றுக்கொள்ளப் பார்த்தும் இன்னும்வெளியரங்கமாக இயேசுகிறிஸ்துவைக் கர்த்தரென்று அறிக்கையிடமனமற்றிருக்கிற யாவருக்கும் இவள் தகுந்த திருஷ்டாந்தமாயிருக்கிறாள். உள்ளான விசுவாசமாத்திரமல்ல, வெளியரங்கமான அறிக்கையும் அவசியமென்று ரோ. 10. 9ல் விளங்கும். அவளுடைய விசுவாசம் அவளைக் குணமாக்கிற்று. இரக்ஷகருடைய வல்லமைதான் அவளைக் குணமாக்கிற்று. விசுவாசம் ஒரு கருவிபோல இந்த நன்மை அவளுக்கு கிடைக்கிறதற்குக் காரணமாயிருந்தது.

விசுவாசமென்னும் வலதுகையினாலே அவளுடைய ஆத்துமம் இரக்ஷகரைப் பிடித்துக்கொண்டது. நீ சமாதானத்தோடே போய், உன் வேதனை நீங்கி சுகமாயிரு என்று இரக்ஷகர் அவளை அனுப்பிவிட்டார்.

கடைசியாக நாம் இதில் ஒரு படிப்பனையைக் கவனிக்கவேண்டியிருக்கிறது. இந்த ஸ்திரீயினுடைய வியாதி எப்பொழுதும் ஓயாமல் ஓடிக்கொண்டிருக்கிற பாவஊற்றைக் குறிக்கும். எல்லாச் சாஸ்திரிகளும் உலகஞானிகளும் தங்களுடைய அறி

வினாலும், திறமையினாலும் எவ்வளவாகப் பிரயாசப்பட்டா லும் இந்த வியாதியை நீக்கமாட்டார்கள். கிறிஸ்துவானவரு டைய வஸ்திரத்தைத் தொட்டால்தான் அதாவது, நமக்காக அவர் சிந்தின இரத்தத்தை விசுவாசத்தின்மூலமாய்ப் பற்றிக் கொண்டால்தான் நம்முடைய ஆத்துமா சுகப்படும். பாவமா கிய அசுத்தம் நம்மைத் தீட்டுப்படுத்தியிருப்பதினால் நாம் துணி கரத்தோடேயல்ல, பயத்தோடும் நடுக்கத்தோடும் கிருபாசனத் தண்டையில் சேரவேண்டியிருக்கிறது. அங்கே சேர்ந்தோமா னால் நம்முடைய கலக்கங்களும் சந்தேகங்களும் நீங்கி, நிலை வரமான சமாதானத்தைப் பெற்று ஆறுதலடைவோம்.



## 8. இரண்டு குருடருக்குப் பார்வை அளித்தது.

மத்தேயு, 9. 27—31.

"இயேசு அவ்விடம் விட்டுப் போகையில், இரண்டு குருடர் அவர் பின்னே சென்று: தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும் என்று கூப்பிட்டார்கள். அவர் வீட்டிற்கு வந்தபின்பு, அந்தக் குருடர் அவரிடத்தில் வந்தார்கள். இயேசு அவர்களை நோக்கி: இதைச் செய்ய எனக்கு வல்லமை உண்டென்று விசுவாசிக்கிறீர்களா என்று கேட்டார். அதற்கு அவர்கள்: ஆம் விசுவாசிக்கிறோம், ஆண்டவரே! என்றார்கள். அப்பொழுது, அவர்களுடைய கண்களை அவர் தொட்டு: உங்கள் விசுவாசத்தின்படி உங்களுக்கு ஆகக்கடவது என்றார். உடனே அவர்களுடைய கண்கள் திறக்கப்பட்டது. இதை ஒருவரும் அறியாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள் என்று இயேசு அவர்களுக்குக் கண்டிப்பாய்க் கட்டளையிட்டார். அவர்களோ புறப்பட்டு, அத்தேசமெங்கும் அவருடைய கீர்த்தியைப் பிரசித்தம்பண்ணினார்கள்."

குருடர் பார்வையடைந்ததாக சுவிசேஷங்களில் அடிக்கடி வாசிக்கிறோம் (மத். 12. 22. யோவா. 9. 6. மத். 11. 5.). இப்படிப்பட்ட அற்புதங்களில் நாம் இப்போது கவனிக்கப்போகிறதுதான் முதலாவது.

கீழ்த்திசை தேசங்களில் காற்று அதிகமாய் அடிப்பதினால் தூசி எழும்பி கண்ணுக்குட்பட்டு கண் சிவந்து ஒளி மங்கி கடைசியில் முற்றிலும் பார்வையற்றுப்போகிறதுண்டு. மேலும் வெளியே படுப்பதினால் பனிமுதலிய காரணங்களால் பார்வைக்குச் சேதமாகிறதுண்டு. காயிரோ என்னும் பட்டணத்தில்மாத்திரம் ஏறக்குறைய 4000 குருடர் இருந்ததாக ஒருவர் சொல்லுகிறார். குடிகளில் ஐந்தில் ஒரு பங்கு கண்தெரியாதவர்களென்று வேறொருத்தர் எழுதியிருக்கிறார். சீரியாமுதலிய தேசங்களில் குருடர்கள் அத்தனை அதிகமாயிராவிட்டாலும் மேல்திசை தேசங்களைவிட அதிகமாயிருந்தார்கள். குருடருக்கென்று வேறு சட்டங்களும் மோசேயின் நியாயப்பிரமாணத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றது. (லேவி. 19. 14. உபா. 27. 18.)

இந்த இரண்டு குருடரும் நம்முடைய இரட்சகர் யவீரி னுடைய வீட்டிலிருந்து திரும்பிவரும்போது அவரைப் பின் சென்றிருக்கலாம். இரட்சகர் கானான் ஸ்திரீயை சோதித்தது போல இவர்களுடைய விசுவாசத்தையும் சோதித்தார். அவர் கள் கேட்டதை உடனே கவனியாதவர்போலிருந்தார். அவர் களோ தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும் என்று கூப் பிட்டார்கள். தாவீதின் குமாரனே என்று அவரை அழைத்த படியால் பழைய ஏற்பாட்டில் வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட மேசியா இவர்தானென்று அவர்கள் விசுவாசித்ததாகத் தோன்று கிறது. இரட்சகர் உடனே அவர்கள் விண்ணப்பத்துக்குச் செவிகொடாவிட்டாலும் அவர்கள் அவரைவிட்டுப் போகாமல் கூடவே அவர் இருந்த வீட்டுக்கு வந்தார்கள். இதினால் அவர் கள் எப்படியாவது தங்களுக்கு வேண்டிய நன்மையைப் பெற் றுக்கொள்ள முழு ஆசையும் கருத்துமுள்ளவர்களாய் இருந்தார் களென்று காண்பித்தார்கள். இப்படி அவர்களைத் தம்முடைய செய்கையினால் சோதித்தபிறகு தம்முடைய வார்த்தையினாலும் சோதித்தார். இதைச் செய்ய எனக்கு வல்லமை உண்டென்று விசுவாசிக்கிறீர்களா என்றார். அவர்கள் இருதயத்தில் விசுவாச மிருந்தபோதிலும் அந்த விசுவாசத்தை அவர்கள் வெளியரங்கமா ய்க் காட்டும்படிக்கு இந்தக் கேள்வியைக் கேட்டார். அதற்கு "அவர்கள்: ஆம் விசுவாசிக்கிறோம் ஆண்டவரே" என்று சொன் னபிறகுதான் அவர்கள் கண்களைத் தொட்டார். இந்தச் சம யத்தில் செய்ததுபோல இன்னொரு சமயத்திலும் இரட்சகர் குருடருடைய கண்களைத்தொட்டு பார்வை அளித்தார் (மத். 20. 34.). வேறு சமயங்களில் அவர் உமிழ்நீரினால் சேறுண் டாக்கி கண்களின்மேல் பூசினதாகவும் (யோவா. 9. 6, 7.), கண் களில் உமிழ்நீரைத் தடவினதாகவும் (மாற். 8. 23.) வாசிக் கிறோம். தமது வார்த்தையினாலே கண்களைத் திறக்க அவருக்கு வல்லமையிருந்தும் அப்படி அவர் செய்ததாக எங்கும் சொல்ல வில்லை. கண்களைத் தொட்டபொழுது இரட்சகர் சொன்ன வார்த்தைகள் மிகவும் கவனிக்கப்படத்தக்கவைகள். இதினாலே தேவனுடைய ஈவுக்கும் மனிதருடைய விசுவாசத்துக்கும்

இருக்கிற சம்பந்தத்தைப் பார்க்கிறேம். விசுவாசம் தன்னிலே ஒன்றுமில்லாமலிருந்தாலும் இன்னும் எல்லாவற்றையும் பெற்றுக்கொள்ளுகிற கருவியாயிருக்கிறது. மனிதருடைய குறைவையும் தேவனுடைய நிறைவையும் ஒன்ருய் இணைக்கிற சங்கிலி இதுதான். இதினுல்தான் இது அவ்வளவு மேன்மையாக எண்ணப்படுகிறது. தேவனுடைய கிருபையை மொண்டு கொள்ளுகிற பாத்திரம் இதுவே. மனிதனை ஐசுவரியவாளுக்குகிற பொக்கிஷம் அடங்கிய பை இதுதான்.

இவ்விதமாய்த்தான் இரட்சகர் அடிக்கடி நம்மிடத்தில் பேசுகிருர். நாம் செபம்பண்ணினுலும், விசுவாசத்தோடே செபம் பண்ணுவிட்டால் எதையும் பெற்றுக்கொள்ளமாட்டோம். நம்முடைய விசுவாசத்தின் அளவுக்குத்தக்கதாகத்தான் நாம் பெற்றுக்கொள்வோம். நாம் எவ்வளவு செபம்பண்ணியும் நமக்கு யாதொரு நன்மையும் கிடையாமல்போகிறதற்கு காரணம் நம்முடைய விசுவாசக்குறைவென்று உணர்ந்துகொண்டோமானுல் நல்லது. இவர்கள் இரட்சகரை உண்மையாய் விசுவாசித்தபடியால் அவர்களுடைய கண்கள் திறக்கப்பட்டன. இப்படி இவர்களுக்கு இந்தப் பெரிய நன்மையைச் செய்தபிறகு, நீங்கள் இதை ஒருவருக்கும் அறிவிக்கவேண்டாமென்று கட்டளையிட்டார். இந்தக் கட்டளைக்கு அவர்கள் கீழ்ப்படியாமல் அவர் சொன்னதற்கு விரோதமாக அத்தேசத்திலெங்கும் அவர் கீர்த்தியை பிரசங்கம்பண்ணினுர்கள் என்றும் சொல்லியிருக்கிறது. இப்படி அவர்கள் செய்தது தப்பிதமல்லவென்று சிலர் நினைக்கிறதுமல்லாமல், அவ்வளவாக தங்கள் நன்றியைக் காட்டினதினுல் அவர்களைப் புகழ்ந்துமிருக்கிருர்கள். ஆனுலும் தேவன் சுயசித்த ஆராதனையையல்ல, தம்முடைய கற்பனைக்குக் கீழ்ப்படிகிறதையே விரும்புகிருர். பலியிடுவது கர்த்தருக்கு கண்யத்தை உண்டுபண்ணினுலும் அவர் சத்தத்துக்குக் கீழ்ப்படிவதே பலிகளைவிட அவருக்குப் பிரியமாயிருக்கிறது (1சாமு. 15. 21.). ஆதலால் இரட்சகர் கொடுத்த கட்டளைக்கு விரோதமாக இவர்கள் நன்றியறிதலால் ஏவப்பட்டு அப்படிச் செய்தாலும் அதைத் தப்பிதமென்றுதான் சொல்லவேண்டும்.



# 9. திமிர்வாதக்காரனைச் சொஸ்தமாக்கினது.

---

*மத்தேயு,* 9. 1—8.

*"அப்பொழுது, அவர் படவில் ஏறி, இக்கரைப்பட்டு தம்முடைய பட்டணத்திற்கு வந்தார்.*

*அங்கே படுக்கையிலே கிடந்த ஒரு திமிர்வாதக்காரனை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். இயேசு அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மகனே, திடன்கொள், உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்றார்.*

*அப்பொழுது, வேதபாரகரில் சிலர்: இவன் தேவதூஷணம் சொல்லுகிறான் என்று தங்கள் உள்ளத்தில் சொல்லிக்கொண்டார்கள். இயேசு அவர்கள் நினைவுகளை அறிந்து: நீங்கள் உங்கள் இருதயங்களில் பொல்லாதவைகளைச் சிந்திக்கிறதென்ன? உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்று சொல்வதோ, எழுந்து நடவென்று சொல்வதோ, எது எளிது? பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறியவேண்டும் என்று சொல்லி, திமிர்வாதக்காரனை நோக்கி: நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ என்றார். உடனே அவன் எழுந்து, தன் வீட்டுக்குப் போனான்.*

*ஜனங்கள் அதைக் கண்டு ஆச்சரியப்பட்டு, மனுஷருக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்தவராகிய தேவனை மகிமைப்படுத்தினார்கள்."*

*மாற்கு,* 2. 1—12.

*"சிலநாட்களுக்குப் பின்பு அவர் மறுபடியும் கப்பர்நகூமுக்குப் போனார்; அவர் வீட்டிலிருக்கிறாரென்று ஜனங்கள் கேள்விப்பட்டு; உடனே வாசலுக்கு முன்னும் நிற்க இடம்போதாதபடிக்கு அநேகர் கூடிவந்தார்கள்; அவர்களுக்கு வசனத்தைப் போதித்தார்.*

*அப்பொழுது நாலுபேர் ஒரு திமிர்வாதக்காரனைச் சுமந்துகொண்டு அவரிடத்தில் வந்தார்கள்; ஜனக்கூட்டத்தினிமித்தம் அவருக்குச் சமீபமாய்ச் சேரக்கூடாமல், அவர் இருந்த வீட்டின் மேற்கூரையைப் பிரித்துத் திறப்பாக்கி, திமிர்வாதக்காரன் கிடக்கிற படுக்கையை இறக்கினார்கள். இயேசு அவர்கள் விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மகனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்றார்.*

*அங்கே உட்கார்ந்திருந்த வேதபாரகரில் சிலர்: இவன் இப்படி தேவதூஷணம் சொல்லுகிறதென்ன? தேவன் ஒருவரேயன்றி பாவங்களை*

மன்னிக்கத்தக்கவர் யார் என்று தங்கள் இருதயங்களில் சிந்தித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்களுக்குள்ளே இப்படிச் சிந்திக்கிறார்களென்று இயேசு உடனே தம்முடைய ஆவியில் அறிந்து, அவர்களை நோக்கி: நீங்கள் உங்கள் இருதயங்களில் இப்படிச் சிந்திக்கிறதென்ன? உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டதென்று சொல்வதோ, எழுந்து உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடவென்று சொல்வதோ, எது எளிது? பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறியவேண்டும் என்று சொல்லி திமிர்வாதக்காரனை நோக்கி: நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார். உடனே, அவன் எழுந்து, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு எல்லாருக்குமுன்பாகப் போனான். அப்பொழுது எல்லாரும் ஆச்சரியப்பட்டு: நாம் ஒருக்காலும் இப்படிக் கண்டதில்லையென்று சொல்லி, தேவனை மகிமைப்படுத்தினார்கள்.''

## லூக்கா, 5. 17—26.

"பின்பு ஒருநாள் அவர் உபதேசித்துக்கொண்டிருக்கிறபோது, கலிலேயா யூதேயா நாடுகளிலுள்ள சகல கிராமங்களிலும், எருசலேம் நகரத்திலுமிருந்து வந்த பரிசேயரும் நியாயசாஸ்திரிகளும் உட்கார்ந்திருந்தார்கள்; அப்பொழுது பிணியாளிகளைக் குணமாக்கத்தக்கதாகக் கர்த்தருடைய வல்லமை விளங்கிற்று.

அப்பொழுது சில மனுஷர் திமிர்வாதக்காரன் ஒருவனைப் படுக்கையோடே எடுத்துக்கொண்டுவந்து, அவனை உள்ளே கொண்டுபோகவும் அவர் முன்பாக வைக்கவும் வகைதேடினார்கள். ஜனக்கூட்டம் மிகுதியாயிருந்தபடியால் அவனை உள்ளே கொண்டுபோகிறதற்கு வகைகாணாமல், வீட்டின்மேல் ஏறி, தட்டோடுகள் வழியாய் ஜனங்களின் மத்தியில் இயேசுவுக்கு முன்பாக அவனைப் படுக்கையோடே இறக்கினார்கள். அவர்களுடைய விசுவாசத்தை அவர் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மனுஷனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்றார்.

அப்பொழுது வேதபாரகரும் பரிசேயரும் யோசனைபண்ணி, தேவதூஷணம் சொல்லுகிற இவன் யார்? தேவன் ஒருவரேயன்றி பாவங்களை மன்னிக்கத்தக்கவர் யார் என்றார்கள்.

இயேசு அவர்கள் சிந்தனைகளை அறிந்து, அவர்களை நோக்கி: உங்கள் இருதயங்களில் நீங்கள் சிந்திக்கிறதென்ன? உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்று சொல்வதோ, எழுந்து நடவென்று சொல்வதோ, எது எளிது? பூமியிலே பாவங்களை மன்னிக்க மனுஷகுமாரனுக்கு அதிகாரம் உண்டென்பதை நீங்கள் அறியவேண்டுமென்று சொல்லி, திமிர்வாதக்காரனை நோக்கி: நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார். உடனே அவன் அவர்களுக்கு முன்பாக எழுந்து, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு, தேவனை மகிமைப்படுத்தி, தன்

*வீட்டுக்குப் போனான். அதினாலே எல்லாரும் ஆச்சரியப்பட்டு, தேவனை மகிமைப்படுத்தினார்கள்; அல்லாமலும், அவர்கள் பயம் நிறைந்தவர்களாகி, அதிசயமான காரியங்களை இன்று கண்டோம் என்றார்கள்.''*

---

இந்த அற்புதம் கப்பர்நகூமூரில் நடந்தது. எருசலேம் பட்டணத்திலிருந்தும் கலிலேயா யூதேயா நாடுகளிலுள்ள பல கிராமங்களிலுமிருந்து வந்த பரிசேயரும் நியாயசாஸ்திரிகளும் இதைக் கண்டார்கள். மேலும் வாசற்படிக்கு வெளியிலும் இடமில்லாதிருக்கத்தக்கதாக மிகுதியான சனங்கள் கூடிவந்திருந்தபடியால், திமிர்வாதக்காரனைக் கொண்டுவந்தவர்கள் இரட்சகரிடத்தில் சேர இடமில்லாதிருந்தது. மாற்கும் லூக்காவும் வியாதிக்காரனைக் கொண்டுவந்த நாலுபேர் அவனை இரட்சகருக்கு முன்பாக இறக்கின அதிசயமான வகையைச் சொல்லியிருக்கிறார்கள். விசுவாசம் உயர ஏறும்; அன்போ எங்கே இடம் இருக்கிறதென்று பார்த்து நுழையுமென்று ஒருவர் நன்றாய்ச் சொன்னார். ஆனால் இவர்கள் செய்தது அத்தனை வருத்தமான காரியமல்ல. ஏனெனில் வெளியே இருந்து வீட்டின்மேலே போகிறதற்கு படிகளிருந்திருக்கலாம். நம்முடைய இரட்சகர் வேறொரு சமயத்தில் அப்படிச் சொல்லியிருக்கிறார். "வீட்டின் மேலிருப்பவன் தன் வீட்டிலுள்ளவைகளை எடுத்துக்கொண்டு போகும்படிக்கு இறங்காமற்போகக்கடவன்.'' அதாவது வீட்டிற்குள்ளே போகாமல் கூடிய சீக்கிரத்தில் ஓடிப்போகக்கடவன். சிலர் 2 இரா. 1. 2-ம் வசனத்தில் இருக்கிற கிராதியைப்போலொத்த ஓர் வழியின்மூலமாய் வியாதிக்காரனை கீழே இறக்கியிருக்கலாமென்று எண்ணுகிறார்கள். வேறு சிலர் உ.பா. 22. 8ல் சொல்லியிருக்கிற கிராதியைத் தகர்த்து வீட்டின் நடுவே உட்கார்ந்திருக்கிற இரட்சகருக்கு முன்பாக இறக்கியிருப்பார்கள் என்கிறார்கள். மாற்கு சொல்லுகிறதைப் பார்க்கும்பொழுதோ, அவர்கள் வீட்டின் மேற்கூரையைப் பிரித்து வழி உண்டாக்கினதாக திட்டமாய்த் தெரியவருகிறது. இரட்சகரிருந்த இடம் மேல்வீடென்று வைத்துக்கொள்வோமானால் இது நமக்கு லேசாய் விளங்கும். (2 இரா. 4. 10.

அப். 9. 37; 1. 13; 20. 8.). இப்படிப்பட்ட அறையில்தான் இரட்சகர் அடிக்கடி தம்முடைய சீஷரோடிருந்ததாகத் தோன்றுகிறது.

இப்படி நூதன வகையாகவும் அவருடைய பிரசங்கத்தில் குழப்பம்செய்யத்தக்கதாகவும் அவர்கள் அவரண்டை வந்த போதிலும், இரக்கமுள்ள மனிதகுமாரன் அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு பிரியப்பட்டார். மத்தேயுமாத்திரம் இதை எழுதியிருப்பாரானால் இவர்களுடைய விசுவாசம் எவ்வகையாய் வெளியாயிற்றென்றும், அதை ஏன் இரட்சகர் அவ்வளவாகக் கவனித்தார் என்றும் நமக்குத் தெரியவரமாட்டாது. ஆனால் மற்ற இரு சுவிசேஷகரும் அந்த விசுவாசம் அநேக தடைகளை ஜெயித்து அநேக வருத்தங்களைச் சகித்து தன்னைத் தானே வெளியாக்கினபடியால், அது பலமான விசுவாசமென்று ரூபிக்கிறார்கள். அம்புரோஸ் ஏரோம் என்பவர்கள், அவருடைய விசுவாசமென்று மத்தேயு சொல்வதை சுமந்துவந்தவர்களுடைய விசுவாசமென்று அர்த்தப்படுத்துகிறார்கள். அவர்களுடைய செய்கை புகழப்படத்தக்கதாயிருந்தபோதிலும் வியாதிக்காரன் அவர்கள் செய்ததற்கெல்லாம் சம்மதித்தபடியால் அவனுடைய விசுவாசத்தையுங்கூட இயேசுவானவர் கண்டு, பலனளித்தாரென்று கிறிசொஸ்தமைப்போல நாமும் எண்ண இடமுண்டு. நம்முடைய இரட்சகரால் சொஸ்தமடைந்தவர்கள் அவரை விசுவாசித்தார்களென்று சொல்லும்போது அவருடைய போதனையை ஏற்றுக்கொண்டார்களென்றல்ல, தங்களுடைய குறைவை அறிந்து அதை நீக்கத்தக்க வல்லமை அவரிடத்திலிருந்ததென்று உணர்ந்தார்களென்பதே அதின் பொருள்.

இயேசுவானவர் அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு திமிர்வாதக்காரனை நோக்கி: மகனே, திடன்கொள், உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டது என்றார். கர்த்தர் நாம் கேட்பதற்குமுன்னே கொடுக்கிறாரென்பதற்கும், கேட்பதைவிட அதிகமாய்க் கொடுக்கிறாரென்பதற்கும் இதொரு நல்ல திருஷ்டாந்தம். இவன் இரட்சகரிடத்தில் ஒன்றும் கேட்கவில்லை. இவனும் இவனைச் சுமந்தவர்களும் இரட்சகரிடத்தில் விரும்பினது

சரீர சுகம்மாத்திரமே. ஆகிலும் இவன் தன் வியாதி பாவத்தினால் உண்டானதென்றும், தான் செய்துவந்த ஏதோ ஒரு விசேஷித்த பாவத்தின் கூலியென்றும் உணர்ந்து துக்கப்பட்டிருக்கலாம். மகனே, திடன்கொள் என்று இயேசுவானவர் உரைத்த வார்த்தையைக் கவனிக்கும்போது, சரீரவியாதியை விட அதிக பாரமான பாவவியாதியால் மனம் தொய்ந்தவனாய் இருந்தானென்று நினைக்க இடமுண்டு. வெளியரங்கமான சுகமடைந்தபிறகு பாவமன்னிப்புக் கிடைத்ததற்கு திருஷ்டாந்தங்கள் உண்டு. நன்றியறிதலைக் காண்பித்த சமாரியன் (லூக். 17. 19.). குணமடைந்த வியாதியஸ்தன் முதலானவர்கள் (யோவா. 5. 14.). இச்சமயத்திலோ இரட்சகர் பாவமன்னிப்பை முந்திக் கூறுகிறார். இதற்குக் காரணமென்ன? தன் வியாதி பாவத்தோடு சம்பந்தப்பட்டதென்று அவன் நன்றாய் அறிந்திருந்தான். பாவமன்னிப்பினால் அவன் மனச்சாக்ஷி ஆறுதலடையாவிட்டால் சரீரசுகம்மாத்திரம் அவனுக்கு யாதொரு பிரயோசனத்தை வருவிக்கமாட்டாதென்று இரட்சகர் அறிந்திருந்தார். ஆகையால் சரீரவியாதியை நீக்கும் முன்னமே ஆத்துமவியாதியை நீக்குகிறார். வியாதியை நீக்குவதற்கும், பாவத்தை மன்னிப்பதற்கும் இருக்கிற ஐக்கியத்தை யாக். 5. 14, 15ல் பார். மேற்குறிக்கப்பட்டவர்கள் பாவத்தையும் அதால் வரும் துன்பத்தையுங் குறித்து அதிக உணர்வில்லாதவர்களானதால் முதலில் பாவமன்னிப்பையல்ல, சரீரசுகத்தையடைந்தார்கள்; இந்த சரீர சுகத்தைப்பற்றிய நன்றியறிதலானது இரட்சகர் அவர்களுக்காக வைத்திருந்த மேலான ஆசீர்வாதத்தையும் பெற்றுக்கொள்ள அவர்களை ஆயத்தப்படுத்தினதாய் இருந்தது.

உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்று இரட்சகர் சொன்னபோது பாவங்கள் மன்னிக்கப்படவேண்டுமென்ற விருப்பத்தைமாத்திரம் அல்ல, பாவங்கள் மன்னிக்கப்பட்டுப் போனதைக் கூறுகிறதாயும் இருக்கிறது. கூறுகிறதுமாத்திரம் அல்ல, பாவிகளின் இருதயத்தில் பாவமன்னிப்பையும் ஒப்புரவாக்குதலையும் கொடுக்கிற செய்கையாகவும் இருக்கிறது; இதுவே நீதிமானாக்குதல். ஓர் பாவியை நீதிமானாக்கும்போது

தேவன் அவனோடே அவனுக்குள்ளேயே பேசுகிறார். இதிலேயே தேவனுடைய அன்பு வெளியாகிறது. இப்படி நீதிமானாக்கப்பட்டவனுடைய இருதயத்திலேதான் தேவனுடைய அன்பு ஊற்றப்பட்டிருக்கிறது. (ரோ. 5. 5.)

இப்படி இரட்சகர் பாவமன்னிப்பைக் கூறினபோது அவருக்கு விரோதமாய் முறுமுறுத்தவர்கள் அந்த மனிதனுடைய பாவங்கள் மன்னிக்கப்படவேண்டுமென்று அவர் விரும்பினதாய்மாத்திரமல்ல, அல்லது சபையானது இப்போது செய்கிறபடி இன்னொருவர் பேராலும் அதிகாரத்தாலும் பாவமன்னிப்பைக் கூறினாரென்றுமாத்திரமல்ல, தமது சொந்தநாமத்தாலேயே பாவத்தை மன்னித்தாரென்றே அருத்தப்படுத்தினார்கள். பாவமன்னிப்பைக்குறித்தும் அவர்களுக்குச் சரியான எண்ணமிருந்தது. எனெனில், தேவன் ஒருவரே பாவத்தை மன்னிக்கக்கூடியவரென்று தங்களுக்குள்ளே யோசித்தார்கள். கடன்கொடுத்தவனே கடனை மன்னிக்கத்தகுந்தவனாயிருப்பது போல, யாருக்கு விரோதமாய் பாவஞ்செய்கிறோமோ அவரே அதை மன்னிக்கத்தக்கவர். ஆதலால்தான் இவர் தேவதூஷணம் சொல்லுகிறார் என்று எண்ணிக்கொண்டார்கள். தூஷணம் என்னும் வார்த்தை மூலபாஷையில், முதலாவது ஒருவனைக் குறித்து தீங்குசொல்வது என்கிற கருத்தாய் வழங்கிவந்தது (1 கொரி. 4. 13. தீத். 3. 2. 2 பேது. 2. 2. யூதா. 8. வச.); பிறகு துர்ச்சகுனமென்கிற கருத்தாய் வழங்கிவந்தது: ஒரேதேவன் உண்டென்று விசுவாசிக்கிற நமக்குள்ளே அந்த தேவநாமத்துக்கு விரோதமாய்ப் பேசப்படும் வார்த்தைகளையும், அவரைச் சேர்ந்த கனத்தை அபகரித்தலையும் குறிக்கிறதாய் தூஷணம் என்கிற வார்த்தை வழங்கப்பட்டுவருகிறது (மத். 26. 65. யோவா. 10. 36.). உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்று சொன்னவர், தேவனுடைய ஒரேபேறான குமாரனாய் அவருக்குரிய மகிமையிலும் கனத்திலும் பங்குபெறத்தக்கவராயிராதிருந்தாரானால் அவர்கள் எண்ணினபடி அவர் தேவதூஷணம் சொன்னவர்தான். மனுஷனாக எண்ணி அவர்கள் பேசியிருப்பார்களாகில் அவர்களிடத்தில் குற்றமில்லை. அவர்களுடைய கண்கள் குரு

டாயிருந்தபடியால் திவ்வியமகிமையை அவரிடத்தில் காணு தேபோனுர்கள். "ஒளியானது இருளில் பிரகாசித்தது. இருளானது அதைப் பற்றிக்கொள்ளவில்லை."

மாற். 2. 8ல் இப்படி அவர்கள் தங்கள் இருதயங்களில் எண்ணினதை தம்முடைய ஆவியில் அறிந்தாரென்று இருக்கிறது. அவருடைய ஆத்துமா மனிததன்மைக்குரியதாய் இருந்தபோதிலும் அவருடைய ஆவி திவ்விய தன்மையுள்ளதானபடியால் அவர்களுடைய இருதயத்தின் இரகசியசிந்தனைகளை வெளியாக்கிற்று. இதனுல் அவர்கள் எண்ணினபடி தாம் மனிதனல்லவென்று ரூபித்தார். இருதயங்களை ஆராயக்கூடியவர் தேவனே. இவருக்கோ இருதயத்தின் நினைவுகளெல்லாம் வெளியரங்கமாய் இருந்தது (1 சாமு. 16. 7. 1 நாளா. 28. 9. 2 நாளா. 6. 30. எரே. 17. 10.). தேவனுடைய வார்த்தையாகிய அவரே இருதயத்தின் நினைவுகளையும் யோசனைகளையும் வகையறுக்கிறவர் (எபி. 4. 12.). தேவனுக்குரிய இலக்ஷணத்தை எடுத்துக்கொண்டாரென்றுமாத்திரமல்ல, இவர் பாவங்களை மன்னிக்கிறது உண்மையா என்றும், அதை தேவன் அங்கீகரித்தாரா என்றும், வெளியரங்கமான ஓர் அடையாளத்தினுலே அதைக் காண்பிப்பாரோ என்றும் அவர்கள் முறுமுறுத்ததாகத் தோன்றுகிறது. இரட்சகரும் அவர்களைப் பார்த்து: பாவங்களை மன்னிக்க எனக்கு அதிகாரமுண்டோ இல்லையோ என்பதை, நான் அப்படிச் சொன்னது சரியோ இல்லையோ என்பதை உங்களுக்குச் சீக்கிரம் ரூபிப்பேன். நீங்கள் பார்க்கத்தக்க ஒரு அற்புதத்தைச் செய்வேன். இதினுல் நான் மனிதனோ, தேவனோ என்பதை நீங்களே அறிந்துகொள்ளுங்கள். திமிர்வாதக்காரனைப் பார்த்து: நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ என்று சொல்ல, அவன் நடக்கிறதினுல் 'உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது' என்று சொல்ல எனக்கு அதிகாரமுண்டோ இல்லையோ என்பதை அறிந்துகொள்ளுங்கள் என்ற கருத்தாய் அவர்களோடே பேசினுர். இரட்சகர் சொல்லுகிற நியாயத்தில் நாம் கவனிக்கவேண்டுவது என்னவென்ருல் பாவத்தை மன்னிக்கிறதோ, வியாதியுள்ளவனைச் சொஸ்தமாக்

குகிறதோ எது எளிதென்று அவர் கேட்கவில்லை. "உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்று சொல்வதோ, எழுந்து நடவென்று சொல்வதோ, எது எளிதென்று கேட்டார். பாவங்கள் மன்னிக்கப்பட்டது என்று சொல்லுகிறது எளிதான காரியம்; ஆனால் அப்படிச் செய்ய எனக்கு அதிகாரமுண்டென்பதை நீங்களெல்லாரும் அறியும்படி, எழுந்திருந்து நடவென்று சொல்லுகிற வருத்தமான கட்டளையினாலே உங்களுக்குக் காண்பிப்பேன். மனிதர் கண் காணக்கூடியதைச் செய்கிறதினால் காணக்கூடாததைச் செய்ய எனக்கு வல்லமையுண்டென்று காண்பிப்பேன். உங்களெல்லாருக்கும் முன்பாகச் செய்யப்போகிற இக்காரியத்தினாலே மனிதருடைய பாவங்களை மன்னிக்கிற அதிகாரத்தை நான் கொள்ளையிடப்பட்ட உடமையாக தேவனிடத்திலிருந்து பறித்துக்கொள்ளவில்லை என்பதை அறிந்துகொள்ளுங்கள்" என்பதுபோல நியாயம் சொன்னார். துலுக்குபாஷையையும் சீனபாஷையையும் அறியாத ஒருவன் தனக்கு துலுக்குபாஷை தெரியுமென்று சொல்வதைவிட சீனபாஷை தெரியுமென்று லேசாய்ச் சொல்லலாம். துலுக்குபாஷையைவிட சீனபாஷை லேசென்றல்ல, துலுக்கு பாஷையை அறிந்தவர்கள் அநேகரிருப்பதினால், பேசுவது துலுக்கோ அல்லவோ என்பதை லேசாய் அறிந்துகொள்ளலாம். சீனபாஷையை அறிந்தவர்கள் ஒருவருமிராததால் அவனுக்குச் சீனபாஷை தெரியுமோ அல்லவோ என்பதை அறிவது வருத்தம். துலுக்குபேசத் தெரியாதென்று லேசாய் காட்டலாம். சீனபாஷை பேசத்தெரியாதென்று லேசாய்க் காட்டக்கூடாது. ஆதலால், துலுக்குபாஷை தெரியுமென்று சொல்வதைவிட சீனபாஷை தெரியுமென்று சொல்வது இலேசு.

பூமியில் பாவங்களை மன்னிக்க அதிகாரமுடையவரென்று இருக்கிறதால் பரலோகத்தில் அதிகாரமில்லையென்று சொல்லலாமோ? கூடாது. "நீங்கள் நினைக்கிறபடி பரலோகத்திலே தேவனாலே மாத்திரமல்ல, பூமியில் மனிதகுமாரனாலேயும பாவங்கள் மன்னிக்கப்பட்டு வருகிறது. பரமண்டலங்களில் வாசமாயிருக்கிற தேவனுக்குமாத்திரமே அந்த அதிகாரமுண்

டென்று நீங்கள் சொல்வது சரியே; ஆனுல், பரமண்டலத்திலிருந்து இறங்கிவந்த மனிதகுமாரன் தம்மோடு அவ்வல்லமையையும் கொண்டுவந்திருக்கிருர். பூமியில் அவர் சொல்ல அப்படியே நடக்கும்.'' இதுவே இயேசுவானவர் சொன்ன வார்த்தையின் பொருள். பாவங்களை மன்னிப்பது தேவனுக்குரியதாய் இருப்பதால் இங்கே இரட்சகர் தம்மை தேவனுடைய குமாரன் என்காமல் மனிதகுமாரனென்று சொல்வது சற்று ஆச்சரியத்தைத் தரத்தக்கதாயிருக்கிறது. தானி. 7. 13ல் நம்முடைய இரட்சகர் மனிதகுமாரனென்று அழைக்கப்படுகிருர். மேலும் அங்கே அவர் நியாயம் விசாரிக்கிறவராகக் காட்டப்பட்டிருக்கிருர் (யோவா. 5. 27.). அலெக்சந்திரியாவிலுள்ள சபையின் தலைவர்கள், நெஸ்தோரியரோடு தர்க்கித்தபோது கிறிஸ்துவின் திவ்விய தன்மைக்குரிய குணங்களெல்லாம் மனுஷதன்மைக்குரியதாக சொல்லப்படலாமென்று ரூபிக்க இவ்வாக்கியத்தையே எடுத்துக் காண்பித்தார்கள். இரண்டுதன்மையும் அவரில் ஒன்ருக இணைக்கப்பட்டிராவிட்டால் இப்படிச் சொல்லியிருக்கமாட்டார்கள். நம்முடைய இரட்சகர் மனிதகுமாரன் என்னும் பெயரைக்கொண்டே அடிக்கடி தம்மை அழைத்து இவ்விதமாய் தாம் மனுஷதன்மையை எடுத்துக்கொண்டதினுல் தம்மைத்தாமே தாழ்த்தினதை நமக்கு ஞாபகப்படுத்துகிருர்.

தம்முடைய விரோதிகளுக்கு இப்படி நியாயஞ்சொன்னபிறகு வியாதியஸ்தனைப் பார்த்து: நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப் போ என்ருர். அந்தரங்கமான செய்கைக்கு இதோர் வெளியரங்கமான அடையாளம். வேறுவிதமாய்ச் சொல்லவேண்டுமானுல் காண்கிற இவ்வுலகத்தையும் காணுத உலகத்தையும் இவ்வற்புதம் ஒருவகையாய் இணைக்கிறதாயிருக்கிறது. உடனே, அவன் எழுந்து, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு எல்லாருக்கும்முன்பாகப் போனுன். முன் மற்றவர்களால் தூக்கிக்கொண்டுவரப்பட்டவன் இப்போது தன் படுக்கையைத் தானுய் எடுத்துக்கொண்டு போகிருன். முன்னே இவன் வராதபடிக்கு வாசலில்

நெருக்கமாயிருந்தவர்கள் இப்போது இவன் போகிறதற்கு தாராளமாய் இடங்கொடுக்கிறார்கள் (மாற். 10. 48, 49.). இதைப் பார்த்த பரிசேயர் என்னசெய்தார்களென்று சொல்லவில்லை. சனங்கள் பிரமித்து தேவனைப் புகழ்ந்தார்கள் (மத். 5. 16.). மனிதர்களுக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்தபடியால் அவரைப் புகழ்ந்தார்கள். அவரொருவருக்குக் கொடுக்கப்பட்டது எல்லாருக்காகவும் கொடுக்கப்பட்டதாக எண்ணி சந்தோஷப்பட்டார்கள்.



## 10. குஷ்டரோகியைச் சுத்தமாக்கினது.

---

*மத்தேயு,* 8. 1—4.

"*அவர் மலையிலிருந்து இறங்கினபோது, திரளான ஜனங்கள் அவருக்குப் பின்சென்றார்கள்.*

*அப்பொழுது குஷ்டரோகி ஒருவன் வந்து அவரைப் பணிந்து: ஆண்டவரே! உமக்குச் சித்தமானால், என்னைச் சுத்தமாக்க உம்மால் ஆகும் என்றான். இயேசு தமது கையை நீட்டி அவனைத் தொட்டு: எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகு என்றார். உடனே குஷ்டரோகம் நீங்கி அவன் சுத்தமானான். இயேசு அவனை நோக்கி: இதை நீ ஒருவருக்கும் சொல்லாதபடி எச்சரிக்கையாயிரு; ஆயினும், அவர்களுக்குச் சாட்சியாக நீ போய் ஆசாரியனுக்கு உன்னைக் காண்பித்து, மோசே கட்டளையிட்ட காணிக்கையைச் செலுத்து என்றார்.*"

*மாற்கு,* 1. 40—45.

"*அப்பொழுது குஷ்டரோகி ஒருவன் அவரிடத்தில் வந்து, அவர் முன்பாக முழங்கால்படியிட்டு: உமக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மால் ஆகும் என்று வேண்டிக்கொண்டான். இயேசு மனதுருகி, கையை நீட்டி, அவனைத் தொட்டு: எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகு என்றார். இப்படி அவர் சொன்னவுடனே, குஷ்டரோகம் அவனை விட்டு நீங்கிற்று, அவன் சுத்தமானான். அப்பொழுது அவர் அவனை நோக்கி: நீ இதை ஒருவருக்கும் சொல்லாதபடிக்கு எச்சரிக்கையாயிரு; ஆயினும் நீ போய் ஆசாரியனுக்கு உன்னைக் காண்பித்து, நீ சுத்தமானதினிமித்தம், மோசே கட்டளையிட்டிருக்கிறவைகளை அவர்களுக்குச் சாட்சியாகச் செலுத்து என்று கண்டிப்பாய்ச் சொல்லி, உடனே அவனை அனுப்பிவிட்டார்.*

*அவனோ புறப்பட்டுப்போய், இந்தச் சங்கதி எங்கும் விளங்கும்படியாகப் பிரசித்தம்பண்ணத் தொடங்கினான். அதினால் அவர் வெளியரங்கமாய்ப் பட்டணத்தில் பிரவேசிக்கக்கூடாமல், வெளியே வனாந்தரமான இடங்களில் தங்கியிருந்தார்; எத்திசையிலுமிருந்து ஜனங்கள் அவரிடத்திற்கு வந்தார்கள்.*"

*லூக்கா,* 5. 12—16.

"*பின்பு அவர் ஒரு பட்டணத்தில் இருக்கையில், குஷ்டரோகம் நிறைந்த ஒரு மனுஷன் இயேசுவைக் கண்டு, முகங்குப்புற விழுந்து: ஆண்டவரே, உமக்குச் சித்தமானால், என்னைச் சுத்தமாக்க உம்மாலே ஆகும் என்று அவரை வேண்டிக்கொண்டான். அவர் தமது கையை*

நீட்டி, அவனைத் தொட்டு: எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகு என்றார்; உடனே குஷ்டரோகம் அவனைவிட்டு நீங்கிற்று. அவர் அவனை நோக்கி: நீ இதை ஒருவருக்கும் சொல்லாமல், போய், உன்னை ஆசாரியனுக்குக் காண்பித்து, நீ சுத்தமானதினிமித்தம், மோசே கட்டளையிட்டபடியே, அவர்களுக்குச் சாட்சியாக பலிசெலுத்து என்று கட்டளையிட்டார்.

அப்படியிருந்தும் அவருடைய கீர்த்தி அதிகமாகப் பரம்பிற்று. திரளான ஜனங்கள் அவருடைய உபதேசத்தைக் கேட்பதற்கும் அவராலே தங்கள் பிணிகள் நீங்கிச் சவுக்கியமடைவதற்கும் கூடிவந்தார்கள். அவரோ வனாந்தரத்தில் தனித்துப்போய், ஜெபம்பண்ணிக்கொண்டிருந்தார்.''

---

மாற்கு 16. 20ல் கர்த்தர் அற்புதங்கள் நடக்கப்பண்ணினதினாலே உபதேசத்தை உறுதியாக்கினாரென்று சொல்லியிருக்கிறது. இங்கே இரட்சகர் அப்படித்தான் செய்கிறார். மலைப் பிரசங்கத்தை முடித்தஉடனே இதையும் வேறு சில அற்புதங்களையும் செய்கிறார். தாம் போதித்த சத்தியங்களை முத்திரைப்படுத்தி தாம் தீர்க்கதரிசியென்று ரூபித்து அதிகாரத்தோடு பேசத் தகுந்தவரென்று காண்பிக்க இப்படிச் செய்கிறார். அவர் மலையிலிருந்து இறங்கினவுடனே ஓர் குஷ்டரோகி வந்து அவரை வணங்கினான். லூக்காவில், குஷ்டரோகம் நிறைந்த மனுஷனென்றிருப்பதால், இது தேகத்திலிங்குமங்குங் காணப்பட்ட வியாதியாயிராமல் தேகமுழுவதும் நிறைந்திருந்ததாகத் தோன்றுகிறது. பாதமுதல் சிரசுவரையும் குஷ்டரோகியாயிருந்தான். கூட்டத்திற்கு வெளியேயிருந்து கேட்டுக்கொண்டிருந்த அவன், பிரசங்கத்தின் கடைசிவாக்கியங்களினால் பயப்படாமல் பிரசங்கத்தின் துவக்கத்தில் துயரப்படுகிறவர்களுக்கும் துன்பப்படுகிறவர்களுக்கும் கூறியிருக்கிற ஆசீர்வாதங்களைப் பெற்றுக்கொள்ள விருப்பமுள்ளவனாய் அவரிடத்தில் வந்தான். இவன் சுகமடைந்த விதத்தைக்குறித்துச் சொல்லுமுன்னே, குஷ்டரோகம் என்னும் வியாதியைப்பற்றி அறிந்துகொள்வது பிரயோசனமாயிருக்கும். அதின் தன்மையைக் குறித்தும் பலவகைகளைக்குறித்தும் இங்கே ஒன்றும் சொல்லமாட்டோம். லேவியராகமத்தில் இதைப்பற்றிச் சொல்லியிருக்கும் சட்டங்களை, சிலர் தேகசவுக்கியத்தைக் காத்துக்

கொள்ளும் முறைமை என்றெண்ணி, சனங்களுக்குள்ளே செம்மையான ஒழுங்குண்டாகும்படி அவைகளை எழுதியிருக்கிறதாய்ப் பாவித்துக்கொள்ளுகிறார்கள். பிறப்புமுதல் மனிதரில் ஒட்டியிருக்கும் தீட்டை அல்லது, தேவனைவிட்டு மனிதனைப் பிரிக்கும் அசுத்தத்தை இது குறிக்கிறதென்றாவது, பரிசுத்தத்தினாலே தேவனைச் சேருகிறதை அபேட்சிக்கும்படி செய்யவாவது அவைகள் எழுதப்பட்டிருக்கின்றனவென்று அவர்கள் எண்ணுகிறதில்லை. ஆதலால்தான் அவர்கள் தப்பாக குஷ்டரோகம் ஒட்டுவாரொட்டி என்றும் மற்றவர்களும் அந்த வியாதிக்குள்ளாகாதபடிக்குத்தான் குஷ்டரோகி பிரித்து வைக்கப்பட்டான் என்றும், அதாலேயே கிழிந்தவஸ்திரங்களும், மூடின உதடுமுள்ளவனாய் தீட்டுள்ளவன் தீட்டுள்ளவன் என்று கூப்பிடவேண்டியிருந்ததென்றும், அதினால் மற்றவர்கள் அவனைத் தொடாமலும் சமீபித்துச் செல்லாமலும் அவன் வியாதியையடையாமலும் எச்சரிக்கையாயிருந்தார்களென்றும் எண்ணுகிறார்கள். இது உண்மையல்ல, காரியத்தை நன்றாய் ஆராய்ந்த யாவரும் குஷ்டரோகியைத் தொடுவதால் அது ஒட்டிக்கொள்ளும் என்று சொல்லக்கூடாதென்கிறார்கள். தகப்பன் குஷ்டரோகியானால் பிள்ளை அவ்வியாதிக்குள்ளாவதும் புருஷனால் பெண்சாதி அதற்குள்ளாவதுமுண்டேயொழிய, தொடுவதால் அது ஒட்டிக்கொள்ளுமென்று சொல்வது வீண். மோசேயின் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளாதவர்கள் இப்படி குஷ்டரோகிகளை விலக்கினதில்லையென்று நாம் அறிவோம். நாகமான் சீரியாவின் இராணுவத்திற்குப் படைத்தலைவனாயிருந்தான் (2 இரா. 5. 1.). கேயாசி குஷ்டரோகியாயிருந்தும், இஸ்ரவேலின் இராசனோடு சகிதமாய்ப் பேசினான் (2 இரா. 8. 5.). இஸ்ரவேலருக்குள்ளும் அன்னியரும், பரதேசிகளும் குஷ்டரோகிகளுக்குரிய சட்டங்களுக்கு நீங்கினவர்களாயிருந்தார்கள். இது ஒட்டுவாரொட்டி வியாதியானால் அப்படி இருக்கமாட்டாதே. தொடுகிறவர்களுக்கெல்லாம் இது வருகிறதானால், குஷ்டரோகிகளைப் பரீட்சிக்கவேண்டியிருந்த ஆசாரியர் அதற்கெப்படி தப்பிக்கொண்டார்கள்!

குஷ்டரோகத்துக்குரிய சட்டங்களில் இருந்த கருத்து வேறு. மரணத்தோடு ஒட்டிய எதுவும் தீட்டுள்ளதென்று யூதர்கள் எண்ணினார்கள். துக்கத்தில், கல்லறை, சவம் இவைகள் பாவத்தின் குறிப்புகளும் அதாலுண்டான பலனுமானதால் இவைகளை அவர்கள் அசுத்தமென்று எண்ணினார்கள். மரணத்தைக்குறித்து இப்படி எண்ணுவது நியாயமானால் மரணத்தை வருவிக்கும் எந்த வியாதியையும் இப்படி எண்ணுவது நியாயந்தானே. கர்த்தரோ அப்படிச் செய்யாமல் இந்த வியாதியைமாத்திரந் தீட்டுக்குக் குறிப்பாக எடுத்துக்கொண்டு நம்மில் ஒட்டியிருக்கும் அசுத்தத்தையும், அதை நீக்க நாம் செய்யவேண்டிய வகையையும் இதால் நமக்குக் காண்பிக்கிறார். அவர் நம்முடைய மாமிசதேகத்தை எடுத்ததே அந்த வகை. குஷ்டரோகத்தினால் பாவம் தமக்கெவ்வளவு வெறுப்புள்ளதென்றும், அதாலுண்டாகும் சீர்கேடு இவ்வளவென்றும் திட்டமாய்க் காண்பிக்கிறார்.

குஷ்டரோகமானது உயிரோடு கொல்லுகிற வியாதி. அது சீவனின் ஊற்றில் நஞ்சைக் கலப்பதுபோலிருக்கிறது. அது ஒவ்வொரு அவயவத்தையும் தின்று கடைசியில் தேகமுழுவதையும் அழித்துப்போடும். ஆரோன் தன் சகோதரியாகிய மீரியாமைக்குறித்துப் பேசுவதைக் கவனியுங்கள். "தன் தாயின் கர்ப்பத்தில் பாதிமாம்சம் அழுகிச் செத்துவிழுந்த பிள்ளையைப்போல அவள் ஆகாதிருப்பாளாக" என்றான் (எண். 12. 12.). மேலும் இது மனுஷருடைய திறமையால் நீங்கக்கூடியதுமல்ல. லேவியராகமத்தைப் பார்க்கும்போது, சிலவேளை அது முற்றிலும் நீங்கிப்போமென்று தெரியவரும். ஆனால் அது மனுஷருடைய வைத்திய சக்தியாலல்ல, முற்றிலும் தேவனுடைய இரக்கத்தாலேயே நடந்தது. நாகமான் இஸ்ரவேல் அரசனண்டை வந்தபோது அவன் சொன்னதென்ன? "ஒரு மனுஷனை அவன் குஷ்டரோகத்தினின்று நீக்கிவிடவேண்டும் என்று, அவன் என்னிடத்தில் நிருபம் அனுப்புகிறதற்கு, கொல்லவும் உயிர்ப்பிக்கவும் நான் தேவனோ?" என்றான் (2 இரா. 5. 7.). எல்லாரும் குஷ்டரோகியைக் கொடிய பாவி

யைப்போல் பார்த்தார்கள், மரணத்தின் குறிப்புகள் அவனிடமிருந்தது; அதாவது கிழிந்த அல்லது துக்கவஸ்திரங்கள், திறந்த தலை (எண். 6. 9. எசே. 24. 17.), மூடின தாடி (லேவி. 13. 45.) குஷ்டரோகியை நடை கல்லறை என்று ஒருவர் அழைத்திருக்கிறார். மேலும் குஷ்டரோகியைச் சுத்தமாக்கி அவனை ஏற்றுக்கொள்ளும்போதும், சவத்தால் தீட்டுப்பட்டவனை சுத்தமாக்கினதுபோல கேதுருக்கட்டை, ஈசோப்பு, சிவப்புநூல் இவைகளால் சுத்தமாக்கினார்கள் (எண். 19. 6, 13—18ஐ லேவி. 14. 4—7. ஒடு ஒத்துப்பார்.). இதை நினைத்துத்தான் தாவீது நான் சுத்தமாவதற்கு நீர் ஈசோப்பால் என்னைக் கழுவுவீராக என்கிறார் (சங். 51. 7.). அதாவது, தன் ஆத்துமா பாவகுஷ்டரோகத்தால் தீட்டுப்பட்டிருக்கிறதென்றும், கிறிஸ்துவின் இரத்தம் தெளிக்கப்பட்டாலொழிய அது சுத்தமாகாதென்றும் அறிந்து இப்படி ஜெபிக்கிறார். குஷ்டரோகியை மரித்தவனென்று எண்ணினபடியால், அவனைப் பட்டணத்திற்குப் புறம்பே வைத்தார்கள் (லேவி. 13. 46. எண். 5. 4. 2 இரா. 7. 3.). தேவன் மரித்தோருடைய தேவனாயிராமல் சீவனுள்ளோருடைய தேவனாயிருக்கிறாரென்று காண்பிக்கும்படி இந்தக் கட்டளையை வெகு கண்டிப்பாய்க் காத்துவந்தார்கள். மோசேயின் சகோதரியையும் பாளையத்திற்குப் புறம்பே வைத்தார்கள் (எண். 12. 14, 15.); இராசாக்களுக்கும் இப்படியே செய்தார்கள் (2 நாளா. 26. 21. 2 இரா. 15. 5.). பாவத்தால் கறைப்பட்டவர்கள் தேவனுடைய பட்டணமாகிய புது எருசலேமிலிருந்து விலக்கப்படுவார்களென்பதற்கு இது குறிப்பாயிருந்தது. தீட்டுள்ளதும் அருவருப்பையும் பொய்யையும் நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் அதில் பிரவேசிப்பதில்லை (வெளி. 21. 27.). இதனால் குஷ்டரோகியானவன் மற்றவர்களிலும் அதிக பாவியென்று எண்ணக்கூடாது. மீரியாம், கேயாஸ், உசியா இவர்களைப் பார்க்கும்போது, இது தேவனுக்கு விரோதமாய்ச் செய்த பாவத்தின் தண்டனை என்று தெளிவாகும். உபா. 24. 8ல் "நீங்கள் குஷ்டரோகத்தைக் குறித்து மிகவும் எச்சரிக்கையாயிருங்கள்" என்று சொல்லி

யிருப்பதை குஷ்டரோகிகளுக்குரிய சட்டங்களையும் சடங்குகளையும் கைக்கொள்வதில் எச்சரிக்கையாயிரு என்றல்ல, குஷ்டரோகமாகிய தேவதண்டனைக்குள்ளாகாமல் எச்சரிக்கையாயிரு என்றே அர்த்தம்பண்ணவேண்டும். யூதர்கள் இந்த வியாதியை தேவனுடைய விரலென்றும் வாதை என்றும் சொன்னதுமல்லாமல், அது முதலில் ஒருவன் வீட்டின் பேரிலும் அவன் குணப்படாவிட்டால் அவன் வஸ்திரத்தின் மேலும், இன்னும் குணப்படாவிட்டால் அவன்மேலும் வருகிறதென்றும், மெய்யான குணப்படுதலாலேயே அது அவனை விட்டு விலகுமென்றும் சொல்லுகிறார்கள். எப்படியிருந்தபோதிலும், தேவனுடைய நீதியுள்ள ஆக்கினைத்தீர்ப்பு குணப்படாதவனை கொஞ்சங்கொஞ்சமாகக் கிட்டி கடைசியில் நித்தியமரணத்திற்கு உள்ளாக்குவதை இது விளக்குவதாயிருக்கிறது.

ஆத்துமாவில் ஒட்டியிருக்கும் பாவத்தீமைக்கு குஷ்டரோகம் குறிப்பாயிருந்தபடியால் சீவனின் அதிபதியான நம்முடைய கர்த்தர் இதை நீக்க தமக்கு வல்லமையுண்டென்று இங்கே காண்பிக்கிறார். அவர் மரணத்தை ஜெயங்கொண்டதுபோல் ஜீவனோடிருக்கும்போது தோன்றும் மரணத்தையும் ஜெயிக்க தமக்கு வல்லமையுண்டென்று ரூபிக்கிறார். குஷ்டரோகிகள் சுத்தமடைகிறார்களென்பதை தாம் மேசியா என்பதற்குச் சாட்சியாக உரைத்திருக்கிறார் (மத். 11. 5.). இந்த வியாதியின் அகோரத்தையும் அதால் உண்டான கொடிய நோவையும், அதின் பயங்கர தோற்றத்தையும், அது மெள்ளமெள்ள வந்து உயிரைத் தனக்கு இரையாக்குகிறதையும் (எண். 12. 10. யாத். 4. 6. 2 இரா. 5. 27.), கவனித்த இரட்சகர் அவன் பேரில் மனதுருகினார் (மாற். 1. 41.). அவர் வல்லவராயிருந்ததுபோல அன்புநிறைந்தவராயும் இருந்தார். ஆத்துமங்களைச் சொஸ்தப்படுத்தினதுபோல, மனிதருடைய சரீரங்களையும் சுகப்படுத்துகிற நல்ல வைத்தியனாயிருந்தார்.

இந்த குஷ்டரோகி இரட்சகரை வணங்கினானென்று சொல்லியிருக்கிறது. அதாவது, பெரியோருக்குச் செலுத்தும் வணக்

கத்தைச் செலுத்தினன். தேவனென்று பாவித்து வணங்கவில்லை. உமக்குச் சித்தமானல் என்னைச் சுத்தமாக்க உம்மாலாகும் என்று சொன்னதில், அவனுடைய விசுவாசம் விளங்குகிறது. அவருடைய வல்லமையைக்குறித்து அவன் சந்தேகிக்கவில்லை. நீர் எதாகிலும் செய்யக்கூடுமானல், எங்கள்மேல் மனதிரங்கி, எங்களுக்கு உதவிசெய்யவேண்டுமென்று சொன்னவனுடைய அவிசுவாசம் இவனிடம் இருந்ததில்லை (மாற். 9. 22.). ரோமானித்தார் இதினின்று, நாம் ஜெபத்தில் எதைக்கேட்டாலும் அச்சத்தோடு கேட்கவேண்டுமென்கிறார்கள். ஆத்துமாவுக்குரிய நன்மைகளை அதாவது, பாவமன்னிப்பு, பரிசுத்தஆவி இவைகளைக் கேட்கும்போது கூச்சம் அச்சம் ஒன்றுமில்லாமல் தாராளமாய்ச் சந்தேகமின்றிக் கேட்கலாம். குஷ்டரோகி கேட்டதில் கொஞ்சம் சந்தேகமிருந்தது. சரீரத்திற்குரிய நன்மையைக் கேட்டான். ஒருவேளை கொடுப்பாரோ மாட்டாரோ என்று எண்ணினன். எனெனில் சரீரநன்மைகளில் எதைக் கேட்டாலும் கொடுப்போமென்று அவர் வாக்கருளினதில்லை. சிலவேளைகளில் நாம் கேட்பதை நமக்கு நன்மையாக கொடாதிருக்கிறார். இங்கே இயேசுவானவர் தமது கையை நீட்டி அவனைத் தொட்டார். அவன் கேட்டதைக் கொடுக்கும்போது அவன் சொன்ன வார்த்தைகளையே சொல்லுகிறார். "எனக்குச் சித்தமுண்டு, சுத்தமாகு" என்கிறார். உடனே குஷ்டரோகம் நீங்க அவன் சுத்தமானன். இப்படி அவர் தொட்டது நியாயப்பிரமாணத்தின்படிக்கு அவரைத் தீட்டுப்படுத்துகிறதாயிருக்கும். நியாயப்பிரமாண விரோதிகளாகிய நாஸ்திகர், பழைய ஏற்பாட்டின் சடங்குப்பிரமாணங்களை அற்பமென்றும், அவைகள் தேவனல் கொடுக்கப்பட்டவைகள் அல்லவென்றும் காண்பிக்கும்படி இப்படிச் செய்தாரென்று சொல்லுகிறார்கள். தெர்த்துல்லியன் இதற்கு எதிர்நியாயஞ்சொல்வதில், நாம் மற்றவர்களுடைய பாவங்களில் பங்காளிகளாகாதபடிக்கு, அசுத்தமானதைத் தொடவேண்டாமென்று சடங்குப்பிரமாணத்தில் கட்டளையிட்டிருந்ததென்றும், அந்தக் கருத்தாகவே பவுல் அப்போஸ்தலன், "நீங்கள் அவர்கள் நடுவிலிருந்து புறப்பட்டுப்

பிரிந்துபோய் அசுத்தமானதைத் தொடாதிருங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்" என்று எழுதியிருக்கிறாரென்றும் காட்டுகிறார் (2 கொரி. 6. 17.). மேலும் சடங்குக்குரிய இச்சட்டங்கள், தீட்டாகக்கூடாதவர் வருகிறவனாயில் இருந்தது. அவர் சுத்தமுள்ளவரானதால் எல்லாம் அவருக்குச் சுத்தமாயிருந்தது. வேறொருவன் அவனைத் தொட்டிருப்பானானால் தீட்டாவான். இவரோ தொட்டதினால் அவனைச் சுத்தமாக்கினார். ஏனெனில் அவரிடத்தில் சுகம் வியாதியையும், சுத்தம் அசுத்தத்தையும், சீவன் மரணத்தையும் மேற்கொண்டது.

இயேசுவானவர் அவனை நோக்கி, நீ இதை ஒருவருக்கும் சொல்லாதபடி எச்சரிக்கையாயிரு என்றார். அம்புரோசும் வேறு சிலரும் இரட்சகர் இப்படிச் சொன்னது நாம் நன்மைசெய்யும் போது மற்றவர்கள் அறிய ஆடம்பரமாக செய்யக்கூடாதென்று எச்சரிக்கிறதாகச் சொல்லுகிறார்கள். ஆனால் இதற்கு வேறு காரணங்கள் இருக்கலாம். உலகநன்மைகளைப் பெற்றுக்கொள்ளும்படிக்கு அநேகர் அவரிடம் வந்து, அவருடைய திவ்விய ஊழியத்தைத் தடைசெய்யாதபடி அப்படிச் சொல்லியிருக்கலாம் (மாற். 1. 45.); அல்லது அவருடைய சத்துருக்கள் அவரைக் குறித்துப் பிரபலமான செய்தியைக்கேட்டுப் பொறாமையாகி, அவர் காலம் வருமுன்னே அவர்மேல் கைபோடாதபடிக்கு இப்படிச் சொல்லியிருக்கலாம் (யோவா. 11. 46, 48.). ஆனால் முன்னொருசமயத்தில் கர்த்தர் செய்த நன்மைகளைப் பிரசித்தப்படுத்தும்படிக்கு இரட்சகர் சொன்னதை நாம் கவனிக்கும் போது அவனவனுடைய குணத்திற்கும் தன்மைக்குந்தக்கதாக அப்படிச் சொல்லியிருப்பாரென்று எண்ண இடமுண்டு. சில வேதசாஸ்திரிகள், "நீ போய் ஆசாரியனுக்கு உன்னைக் காண்பித்து மோசே கட்டளையிட்ட காணிக்கையைச் செலுத்தும் வரையில், இதை ஒருவருக்குஞ் சொல்லாதிருக்க நினை. ஏனெனில் எருசலேமிலுள்ள ஆசாரியர் முந்தி இதைக் கேள்விப்படுவார்களேயானால் பொறாமைகொண்டு என்னுடைய கிரியையைக் கேவலப்படுத்த, நீ முன் குஷ்டரோகியாய் இருந்ததில்லையென்றாவது, சரியானபடி இன்னும் சுத்தமாகவில்லை

என்றுவது விரோதம்பேசுவார்கள்" என்று சொன்ன கருத்தாய் வியாக்கியானம்பண்ணுகிறார்கள். மாற்கு சொல்வதும் இதற்கு இசைவாயிருக்கிறது. உடனே அவனை அனுப்பிவிட்டார் என்றிருக்கிறது. அவன் தாமதஞ்செய்யாமல் கூடியசீக்கிரம் போகும்படிக்கு உடனே அனுப்பிவிட்டார்.

"அவர்களுக்குச் சாட்சியாக" என்று மத்தேயு சொல்லுகிறதை, தம்முடைய விரோதிகளுக்குச் சாட்சியாக அதாவது, "நான் நியாயப்பிரமாணத்தை அழிக்கும்படிக்கல்ல, அது நிழலாட்டமாயிருந்தாலும் பொருளானது வரும்வரையில் அதை நீக்கும்படிக்கல்ல, அதை நிறைவேற்றும்படிக்கே வந்தேன். இந்த சடங்குப்பிரமாணங்களை இன்னும் நான் கைக்கொள்ளுகிறேன்" என்று சொன்னதாக அர்த்தம்பண்ணுகிறார்கள். ஆனால் மாற். 6. 11. லூக். 9. 5. முதலிய வாக்கியங்களைப் பார்க்கும்போது, அவர்களுக்குச் சாட்சியாக என்பதை அவர்களுக்கு விரோதமான சாட்சியென்றே அர்த்தம்செய்யவேண்டும். நான் இப்படிப்பட்ட பலத்த அற்புதத்தைச் செய்தபோதிலும், உன் காணிக்கையை ஏற்றுக்கொண்டு சுத்தமாக்கப்பட்டவனாக சபையில் சேர்த்துக்கொள்வதால் நான் செய்த கிரியை உண்மையானதென்று அவர்கள் ஒத்துக்கொண்டபோதிலும், இன்னும் அவர்கள் என்னை விசுவாசிக்கவில்லை என்பதற்கு அத்தாட்சியாக நீ போய் காணிக்கையைச் செலுத்து என்றார் (யோவா. 5. 36; 15. 24.). ஆசாரியனிடம் இவன் போனால் குஷ்டம் நீங்கினதையறிந்து, அவனுடைய காணிக்கையை அங்கிகரித்து அவனுக்குப் பிராயச்சித்தமாக அதைச் செலுத்துவான். அப்படிச் செலுத்தினபின், அவனைச் சுத்தமானவனென்று தீர்த்து, இஸ்ரவேலின் சபையோடு சேர்த்துக்கொள்வான்.



## 11. நூற்றுக்கு அதிபதியினுடைய வேலைக்காரனைச் சொஸ்தமாக்கினது.

மத்தேயு, 8. 5—13.

“இயேசு கப்பர்நகூமில் பிரவேசித்தபோது, நூற்றுக்கு அதிபதி ஒருவன் அவரிடத்தில் வந்து: ஆண்டவரே! என் வேலைக்காரன் வீட்டிலே திமிர்வாதமாய்க் கிடந்து கொடிய வேதனைப்படுகிறான் என்று அவரை வேண்டிக்கொண்டான். அதற்கு இயேசு: நான் வந்து அவனைச் சொஸ்தமாக்குவேன் என்றார். நூற்றுக்கு அதிபதி பிரதியுத்தரமாக: ஆண்டவரே! நீர் என் வீட்டுக்குள் பிரவேசிக்க நான் பாத்திரன் அல்ல; ஒரு வார்த்தைமாத்திரம் சொல்லும், அப்பொழுது என் வேலைக்காரன் சொஸ்தமாவான். நான் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும், எனக்குக் கீழ்ப்பட்டிருக்கிற சேவகருமுண்டு; நான் ஒருவனைப் போவென்றால் போகிறான், மற்றொருவனை வாவென்றால் வருகிறான். என் வேலைக்காரனை, இதைச் செய்யென்றால் செய்கிறான் என்றான்.

இயேசு இதைக் கேட்டு ஆச்சரியப்பட்டு, தமக்குப் பின்செல்லுகிறவர்களை நோக்கி: இஸ்ரவேலருக்குக்குள்ளும் நான் இப்படிப்பட்ட விசுவாசத்தைக் காணவில்லை என்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். அநேகர் கிழக்கிலும் மேற்கிலுமிருந்து வந்து, பரலோக ராஜ்யத்தில் ஆபிரகாம் இசாக்கு யாக்கோபு என்பவர்களோடே பந்தியிருப்பார்கள். ராஜ்யத்தின் புத்திரரோ புறம்பான இருளிலே தள்ளப்படுவார்கள்; அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்குமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

பின்பு இயேசு நூற்றுக்கு அதிபதியை நோக்கி: நீ போகலாம், நீ விசுவாசித்தபடியே உனக்கு ஆகக்கடவது என்றார். அந்த நாழிகையிலே அவன் வேலைக்காரன் சொஸ்தமானான்.”

லூக்கா, 7. 1—10.

“அவர் தம்முடைய வார்த்தைகளையெல்லாம் ஜனங்களுடைய காதுகள் கேட்கும்படிச் சொல்லி முடித்தபின்பு, கப்பர்நகூமுக்குப் போனார். அங்கே நூற்றுக்கு அதிபதியாகிய ஒருவனுக்குப் பிரியமான வேலைக்காரன் வியாதிப்பட்டு மரண அவஸ்தையாயிருந்தான். அவன் இயேசுவைக்குறித்துக் கேள்விப்பட்டபோது, அவர் வந்து தன் வேலைக்காரனைக் குணமாக்கவேண்டுமென்று, அவரை வேண்டிக்கொள்ளும்படி யூதருடைய மூப்பரை அவரிடத்தில் அனுப்பினான். அவர்கள் இயேசுவினிடத்தில் வந்து, அவரைக் கருத்தாய் வேண்டிக்கொண்டு: நீர் இந்த தயவுசெய்கிறதற்கு அவன் பாத்திரனாயிருக்கிறான். அவன்

நம்முடைய ஜனத்தை நேசிக்கிறான், நமக்கு ஒரு ஜெபஆலயத்தையும் கட்டினான் என்றார்கள். அப்பொழுது இயேசு அவர்களுடனே கூடப் போனார்.

வீட்டுக்குச் சமீபமானபோது, நூற்றுக்கு அதிபதி தன் சிநேகிதரை நோக்கி: நீங்கள் அவரிடத்தில் போய், ஆண்டவரே! நீர் வருத்தப்பட வேண்டாம்; நீர் என் வீட்டுவாசலுக்குள் பிரவேசிக்க நான் பாத்திரன் அல்ல; நான் உம்மிடத்தில் வரவும் என்னைப் பாத்திரனாக எண்ணவில்லை; ஒரு வார்த்தைமாத்திரம் சொல்லும், அப்பொழுது என் வேலைக்காரன் சொஸ்தமாவான். நான் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும். எனக்குக் கீழ்ப்பட்டிருக்கிற சேவகருமுண்டு; நான் ஒருவனைப் போ என்றால் போகிறான், மற்றொருவனை வாவென்றால் வருகிறான்; என் வேலைக்காரனை, இதைச் செய்யென்றால் செய்கிறான் என்று நான் சொன்னதாகச் சொல்லுங்கள் என்று அவர்களை அனுப்பினான்.

இயேசு இவைகளைக் கேட்டு அவனைக்குறித்து ஆச்சரியப்பட்டு, திரும்பி, தமக்குப் பின்செல்லுகிற திரளான ஜனங்களை நோக்கி: இஸ்ரவேலருக்குள்ளும் நான் இப்படிப்பட்ட விசுவாசத்தைக் காணவில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். அனுப்பப்பட்டவர்கள் வீட்டுக்குத் திரும்பிவந்தபோது, வியாதியாய்க் கிடந்த வேலைக்காரன் சுகமடைந்திருக்கிறதைக் கண்டார்கள்.''

---

இந்த அற்புதமும் யோவான் 4. கடைசியில் சொல்லியிருக்கிற அற்புதமும் ஒன்றல்லவென்பதை முன் காண்பித்திருக்கிறோம். மத்தேயும் லூக்காவும் இந்த ஒரு அற்புதத்தைக் குறித்தெழுதியிருப்பதில் சில விஷயங்களில் வித்தியாசப்படுகிறார்கள். மத்தேயு, நூற்றுக்கு அதிபதி தானே வந்து கர்த்தரை வேண்டிக்கொண்டதாகச் சொல்லுகிறார். லூக்காவோ மற்றவர்கள் மூலமாக தனக்கு வேண்டிய நன்மையைப் பெற்றுக்கொள்ளக் கெஞ்சினதாகச் சொல்லுகிறார். லூக்கா நடந்தபடியே எழுதினதாகத் தோன்றுகிறது. மத்தேயு சுருக்கி எழுதியிருப்பதினால் மற்றவர்கள்மூலமாய்ச் செய்ததைத் தானே செய்ததாகச் சொல்லியிருக்கிறார். இப்படிச் சொல்வது யாவருக்கும் சாதாரணமான வழக்கந்தானே. (மாற். 10. 35ஐ மத். 20. 20ஓடு ஒத்துப்பார்.)

இந்த நூற்றுக்கு அதிபதி கப்பர்நகூமிரிலிருந்த ரோமை இராணுவத்தைச் சேர்ந்தவனாய் இருக்கவேண்டும். இவன் அஞ்ஞானியாயிருந்தும் அப்போஸ்தலர் 10ல் சொல்லிய கொர்நேலியுவைப்போல அஞ்ஞானமார்க்கத் தப்பறைகளை

அறிந்துணர்ந்து, இஸ்ரவேல் சபையைச் சேர்ந்து, யெகோவாவாகிய மெய்தேவனை வணங்கிவந்தவனாய் இருக்கலாம். புதிய ஏற்பாட்டில் சொல்லியிருக்கிற நூற்றுக்கு அதிபதி யாவரும் சாதாரணமாக நல்லவர்களென்று நற்சாட்சி பெற்றவர்களாய் இருக்கிறார்கள். இவ்விரண்டுபேரைத் தவிர வேறு இரண்டுபேரைக்குறித்தும் வாசிக்கிறோம். ஒருவன் கிறிஸ்துவானவர் சிலுவையில் அறையப்பட்டபோது சமீபத்தில் நின்று மெய்யாய் இவர் தேவகுமாரனாய் இருந்தாரென்று சாட்சி சொன்னவன் (மத். 27. 54. லூக். 23. 47.); வேறொருவன் யூலியு என்று பேர்கொண்டவன். இவன் பவுல் அப்போஸ்தலன் ரோமாபுரிக்குப் போனபோது அவனை தயவாய் நடத்தினான். (அப். 27. 3, 43.)

இந்த அற்புதத்தில் சொல்லப்பட்டிருக்கிற அதிபதி யூதனாய் இராவிட்டாலும் தேவபக்தியுள்ளவர்களென்று அழைக்கப்படுகிற புரோசலித்தர் வகுப்பைச் சேர்ந்தவன் (அப். 13. 43, 50; 16. 14; 17. 4, 17; 18. 7.). இவர்கள் ரோமைராச்சியத்திலுள்ள எல்லாப் பெரிய பட்டணங்களிலும் இருந்தார்கள். வகுப்பில் புறதேசத்தாராயும், மார்க்கத்தில் யூதராயும் இருந்தபடியால், ஓர் வகையில் இருதிறத்தாரையும் இணைத்து, ஒரே சபையாக்குவதில் இவர்கள் விசேஷித்த ஒரு துணைக்கருவியாய் இருந்தார்களென்று நன்றாய்ச் சொல்லலாம்.

இந்த அதிபதி யூதர்களோடு பழகினவனானபடியால், புறதேசத்தாரில் பிறந்த பாவிகள் புறம்பேயிருந்து தேவனை வணங்கவேண்டியதென்றும், யூதர்களுக்கும் தனக்கும் ஒரு நடுச்சுவர் இருந்தபடியால் தாராளமாக பரிசுத்த இடத்தில் தான் சேரக்கூடாதென்றும் அறிந்திருந்தான். ஆதலால் தனக்கு மிகவும் பிரியமான வேலைக்காரனை, (வியாதிப்பட்டு மரணத்துக்கு சேதுவாயிருந்தவனை) குணமாக்கவேண்டுமென்று அவரை வேண்டிக்கொள்ளும்படிக்கு வேறு ஆட்களை அனுப்பினான். அவன் அனுப்பின யூதருடைய மூப்பர் மனோற்சாகமாய்ப் போனார்கள். ஊக்கத்தோடு தங்கள் காரியத்தை முடித்தார்கள். தேவனுடைய சொந்த ஜனத்துக்கு அவன் காட்டின அன்பை

யும், தங்களுக்கு அவன் செய்த நன்மையையும் எடுத்துக் காண் பித்து அவனுக்காக பரிந்துபேசினார்கள். "அவன் நம்முடைய தேசத்தாரில் அன்பாயிருந்து, எங்களுக்காக ஒரு ஜெபஆலயத் தையும் கட்டினான். ஆகையால் உம்முடைய தயவுக்கு அவன் பாத்திரனாயிருக்கிறான்" என்றார்கள்.

இந்த அதிபதி தாழ்மையுள்ளவனானபடியால் அத்தனை பெரியவர் தன்னுடைய வீட்டிற்கு வர மற்றவர்கள் மூல மாய்க் கேட்டுக்கொண்டதும், அவனுக்குத் துணிகரமாய்த் தோன்றிற்று. அவன் புறதேசத்தானாயிருந்தபடியால் இஸ்ர வேலின் இராசா தன்னிடம் வரமாட்டாரென்று மாத்திரமல்ல, தான் அசுத்தன் என்றும் அபாத்திரனென்றும் உணர்ந்ததினால் அத்தனை பரிசுத்தமுள்ளவர் தன்னிடம் வருவது தகுதியல்ல வென்று எண்ணி, மறுபடியும் ஆட்கள்வசமாய் வீட்டிற்கு வராமல் ஒரு வார்த்தைமாத்திரம் சொன்னால் தன் வேலைக்காரன் சொஸ்தமடைவானென்று சொல்லியனுப்பினான். அகுஸ்தீன் சொல்லியபடி கிறிஸ்து தன் வீட்டிற்குள் பிரவேசிக்க தான் அபாத்திரனென்று எண்ணினபடியால், கிறிஸ்து அவனுடைய இருதயத்தில் பிரவேசிக்க பாத்திரனாக எண்ணப்பட்டான். இதுவே பெரிய சலாக்கியம். பெருமையுள்ள பரிசேயனுடைய வீட்டில் இரட்சகர் போயிருந்தாலும், அவனுடைய இருதயத் தில் அவருக்கு இடமில்லாதிருந்தது (லூக். 7. 36.). இந்த அதிபதியோ தன் வீட்டில் அவரை ஏற்றுக்கொள்ள தன்னை அபாத்திரன் என்று எண்ணினபடியால் தன் இருதயத்தில் அவரை ஏற்றுக்கொண்டான். இவனைக்குறித்துச் சொல்லிய ஒவ்வொரு காரியமும், தேவனுடைய வசனம் நன்றும் உண் மையுமான இவன் இருதயத்திலே நல்ல நிலத்தில் விழுந்த விதையைப்போல விழுந்து பலன்தந்ததென்று திட்டமாக ரூபிக்கிறது. இவனிடத்திலே அதிகமாய்ப் பிரகாசித்த விசு வாசத்தையும் தாழ்மையையும் பாருங்கள். அதோடு அவன் யூதர்களுக்குக் காண்பித்த பட்சத்தையும், மெய்தேவ ஆராத னைக்கு செபஆலயத்தைக் கட்டின வைராக்கியத்தையும், தன் வேலைக்காரனைக்குறித்து அவனுக்கிருந்த கவலையையும் உருக்

கத்தையும் நன்றாய்க் கவனியுங்கள். இவைகளெல்லாம் இவன் உலகத்தில் சிதறுண்டிருக்கிற தேவனுடைய பிள்ளைகளில் ஒருவன் என்பதற்குத் தகுந்த அத்தாட்சியல்லவா? (யோவா. 11. 52.)

தனக்கு அதிக பழக்கமாயிருந்த ஒரு உவமானத்தைக்கொண்டு இவன் தன் விசுவாசத்தைப் பலப்படுத்திக்கொள்ளுகிற வகையைப் பாருங்கள். கிறிஸ்துவானவருடைய வார்த்தை மாத்திரம் போதுமென்பதற்கு இவன் சொல்லுகிற நியாயம் என்ன? "நான் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும், எனக்குக் கீழ்ப்பட்டிருக்கிற சேவகருமுண்டு; நான் ஒருவனைப் போவென்றால் போகிறான், மற்றொருவனை வாவென்றால் வருகிறான், என் வேலைக்காரனை, இதைச் செய்யென்றால் செய்கிறான்." சின்னகாரியத்தினின்று பெரியகாரியத்தை ரூபிக்கிறான். "நான் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டவன். எனக்குமேல் வேறு அதிகாரிகளுண்டு. ஆகிலும் எனக்குக் கீழிருக்கிற சேவகர் எனக்குக் கீழ்ப்படிகிறார்கள், என் வார்த்தைப்படி நடக்கிறார்கள். இங்குமங்கும் அனுப்ப எனக்கு அதிகாரமுண்டு. நான் சொன்ன இடத்திற்கு அவர்கள் போகிறார்கள். நான் உட்கார்ந்துகொண்டே அவர்கள் மூலமாக எனக்கிஷ்டமானவைகளை நடப்பிக்கிறேன். என்னைப்போல அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டிராமல் வானசேனைக்குப் பிரபுவாயிருக்கப்பட்டவர் எவ்வளவு அதிகம். தூதர்களும் ஆவிகளும் உம்முடைய வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து உமது சொற்படிசெய்ய எவ்வளவு துரிதமாய் ஓடுகிறார்கள். ஆதலால் நீர் என் வீட்டிற்கு வர அவசியமில்லை. சொஸ்தப்படுத்துகிற ஒரு ஆவியைமாத்திரம் அனுப்பும். இவனுக்குஉடனே சுகமுண்டாகும்" என்பதுபோல நியாயஞ்சொன்னான். இரட்சகருக்கு கீழடங்கின பரமசேனையுண்டென்பது நிசந்தான் (லூக். 2. 13. வெளி. 19. 14.). இரட்சகர் தாமே இதன் உண்மையை வெளிப்படுத்துகிறார். "நான் இப்பொழுது என் பிதாவை வேண்டிக்கொண்டால், அவர் பன்னிரண்டு லேகியோனுக்கு அதிகமான தூதரை என்னிடத்தில் அனுப்பமாட்டாரென்று நினைக்கிறாயா?" (மத். 26. 53.) தனக்கு சேவகர்மேல் அதிகாரமிருப்பதுபோல கிறிஸ்துவானவர் எந்த வியா

தியையும் போகவர, அல்லது ஒருவனை அணுக, அல்லது அவனைவிட்டு நீங்க ஒரு வார்த்தையினாலே செய்ய வல்லவரென்றும், அவைகள் வேலைக்காரரைப்போல அவருக்குக் கீழ்ப்படியுமென்றும் சொன்னதாக சிலர் வியாக்கியானம்பண்ணுகிறார்கள். இவன் ரோமருடைய ஆளுகையைச் சேர்ந்தவனானபடியால் பரமண்டலத்துக்குரிய யாவற்றுக்கும் அவரை இராயராக எண்ணிப் பேசுகிறான். அவனுடைய விசுவாசத்தையும் தாழ்மையையும் பார்த்த இரட்சகர் அவனைக்குறித்து ஆச்சரியப்பட்டு திரும்பிக்கொண்டு தம்மைப் பின்செல்லும் ஜனங்களை நோக்கி, "இஸ்ரவேலருக்குள்ளும் நான் இப்படிப்பட்ட விசுவாசத்தைக் காணவில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்" என்றார். மத்தேயுமாத்திரம் இரட்சகர் பிறகு சொன்ன வார்த்தைகளை எழுதியிருக்கிறார். "அநேகர் கிழக்கிலும் மேற்கிலுமிருந்து வந்து, பரலோகராஜ்யத்தில் ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களோடே பந்தியிருப்பார்கள்." புறதேசத்தாருடைய அப்போஸ்தலனுக்கு தோழனாயிருந்த லூக்கா புறதேசத்தாருக்கானவைகளை மேன்மைப்படுத்துகிறவராயிருந்தும், இதை எழுதாமல் விட்டது சற்று கவனிக்கப்படத்தக்கது. இந்த வார்த்தைகளைக்கொண்டு நம்முடைய இரட்சகர் யூதசனங்களைப்பார்த்து அவர்கள் தங்கள் சிலாக்கியங்களை நன்றாய் மதித்து அவைகளைக் கையாடிவராவிட்டால் தேவன் அவைகளை அவர்களிடத்திலிருந்து எடுத்து வேறு ஜனங்களுக்குக் கொடுத்துவிடுவாரென்று எச்சரிக்கிறார். கிளைகளான அவர்கள் அவிசுவாசத்தினாலே ஒலிவமரத்திலிருந்து தள்ளப்பட, காட்டொலிவமரமானது அந்த இடத்திலே ஒட்டவைக்கப்படுமென்பதை முன்னறிவிக்கிறார்.

அந்தத் தலைவனை நோக்கி, அவனுடைய ஆட்கள்மூலமாய் "நீ போகலாம், நீ விசுவாசித்தபடியே உனக்கு ஆகக்கடவது என்றார். அந்த நாழிகையிலே அவன் வேலைக்காரன் சொஸ்தமானான்." அதாவது, வியாதி முற்றிலும் அவனைவிட்டுப்போயிற்று. இந்த வியாதி இன்னதென்று திட்டமாய்ச் சொல்ல ஏதுவில்லை. மத்தேயு திமிர்வாதமென்று சொல்லுகி

ருன். ஆனால் திமிர்வாதம் தேகத்துக்கு நோவைக் கொடுக்கத் தக்கதல்ல, அல்லது லூக்கா சொல்லுகிறபடி அது மரணத்துக்கு ஏதுவானதுமல்ல, இது ஒரு ஜன்னியோடு சேர்ந்த வலியாய் இருக்கவேண்டும். அதனால் கைகால்கள் முடங்கி பொருத்து கள் விட்டு அதிக வலியுண்டாகி மனுஷர் சடுதியாய் இறந்து போவதுண்டு.



# 12. கப்பர்நகூம் ஜெபஆலயத்தில் பிசாசைத் துரத்தினது.

மாற்கு, 1. 23—26.

*"அவர்களுடைய ஜெபஆலயத்திலே அசுத்த ஆவியுள்ள ஒரு மனுஷன் இருந்தான். அவன்: ஐயோ! நசரேயனாகிய இயேசுவே, எங்களுக்கும் உமக்கும் என்ன? எங்களைக் கெடுக்கவா வந்தீர்? உம்மை இன்னார் என்று அறிவேன், நீர் தேவனுடைய பரிசுத்தர் என்று சத்தமிட்டான். அதற்கு இயேசு: நீ பேசாமல் இவனை விட்டுப் புறப்பட்டுப் போ என்று அதை அதட்டினார். உடனே அந்த அசுத்தஆவி அவனை அலைக்கழித்து, மிகுந்த சத்தமிட்டு, அவனைவிட்டுப் போய்விட்டது."*

லூக்கா, 4. 33—36.

*"ஜெபஆலயத்திலே அசுத்தஆவி பிடித்திருந்த ஒரு மனுஷன் இருந்தான். அவன்: ஐயோ! நசரேயனாகிய இயேசுவே, எங்களுக்கும் உமக்கும் என்ன? எங்களைக் கெடுக்கவா வந்தீர்? உம்மை இன்னார் என்று அறிவேன்; நீர் தேவனுடைய பரிசுத்தர் என்று உரத்த சத்தமிட்டான். அதற்கு இயேசு: நீ பேசாமல் இவனைவிட்டுப் புறப்பட்டுப்போ என்று அதை அதட்டினார்; அப்பொழுது பிசாசு அவனை ஜனங்களின் நடுவே விழத்தள்ளி, அவனுக்கு ஒரு சேதமுஞ்செய்யாமல், அவனைவிட்டுப் போய்விட்டது.*

*எல்லாரும் ஆச்சரியப்பட்டு: இது என்னவார்த்தையோ! அதிகாரத்தோடும் வல்லமையோடும் அசுத்த ஆவிகளுக்குக் கட்டளையிடுகிறார், அவைகள் புறப்பட்டுப்போகிறதே என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்."*

*பிசாசுகளைத் துரத்தின சங்கதிகளில் இது இரண்டாவது. இதிலே நாம் முக்கியமாய் கவனிக்கவேண்டிய விசேஷங்கள் இரண்டு. இரட்சகரைக்குறித்து இந்த அசுத்த ஆவி கொடுத்த சாட்சியும், அந்தச் சாட்சியை இரட்சகர் புறக்கணித்ததுமே. இந்த இரண்டுவிஷயங்களிலும் பவுல் அப்போஸ்தலன் துரத்தின பீத்தோன் ஆவியைக்குறித்த சங்கதிக்கு இது ஒத்திருக்கிறது. "இந்த மனிதர் உன்னதமான தேவனுடைய ஊழியக்காரர். உங்களுக்கு இரட்சிப்பின் மார்க்கத்தை*

அறிவிக்கிறவர்கள்" என்று அந்த அசுத்த ஆவி கூப்பிட்ட போது பவுல் விசனமடைந்து, அப்படிச் செய்யாதபடி அதைத் துரத்திவிட்டார்.

நம்முடைய இரட்சகர் தம்முடைய வழக்கப்படியே கப்பர் நகூமிலுள்ள ஜெபஆலயத்தில் போதித்துக்கொண்டிருந்தார். அவர் அதிகாரத்தோடு போதித்ததைக்குறித்து சனங்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஆனால் அவர் வார்த்தையில்மாத்திரம் அல்ல, கிரியையிலும் வல்லவரானபடியால் அதை வெளிப் படுத்துகிறதற்கு தெய்வச்செயலாய்த் தமக்கு சமயம் வாய்த்த தைக் கண்டு தம்முடைய உபதேசத்தை இந்த அற்புதத்தினாலே உறுதிப்படுத்துகிறார். அவர்களுடைய ஜெபஆலயத்திலே அசுத்த ஆவியுள்ள ஒரு மனிதன் இருந்தான். இந்த அசுத்த ஆவி தன்னைச் சேர்ந்த எல்லா அசுத்த ஆவிகளைவிட இவர் பலவானென்று அறிந்துகொண்டது. இதுவரையில் அதினு டைய உடமைகள் பத்திரப்பட்டிருந்தது; இப்பொழுது அவை களைக் கொள்ளையிட அதிக பலவான் ஒருவர் வந்திருந்தபடி யால் தனக்கு மோசம் நேரிட்டிருக்கிறதைக் கண்ட பிசாசு "எங்களுக்கும் உமக்கும் என்ன? எங்களைக் கெடுக்கவா வந்தீர்? உம்மை இன்னார் என்று அறிவேன், நீர் தேவனுடைய பரிசுத் தர் என்று சத்தமிட்டான்." பூமி தன் இராசாவை இன்னும் அறிந்துகொள்ளவில்லை. மோட்சமும் நரகமும் அவருக்குச் சாட்சிபகருகின்றன; பிசாசுகளும் அவரை அறிந்து நடுங்கு கின்றன.

ஆனால் இங்கே ஒரு கேள்விக்கு இடமிருக்கிறது. பிசாசு இரட்சகரைக்குறித்து சாட்சிசொல்லவேண்டியதென்ன? பிசா சின் இராச்சியத்தை அழிக்கவந்தவரைக்குறித்து பிசாசு தானே ஒருவரும் ஏவாமலிருக்க மனிதர்களுக்கு முன்பாக சாட்சியிடு கிறது புதுமையல்லவா? அப்படிச் செய்யாமல் அவரை மறுத்து, அவருடைய மகிமையை மறைக்குமென்றல்லவா நாம் எண் ணவேண்டியது. இரட்சகர் தம்முடைய வல்லமையினாலே இப்படி சாட்சியிடும்படி பலவந்தப்படுத்தினாரென்று சொல் லக்கூடாது. ஏனெனில் பிசாசு சொன்னது அவருக்கு அனு

கூலமாயிருந்தபோதிலும் பிரியமில்லாதிருந்ததினால், அதைப் பேசாமலிருக்கக் கட்டளையிட்டார்; ஆதலால் இந்தச் சாட்சி ஒன்று பயத்தினாலே உண்டாயிருக்கவேண்டியது. ஏனென்றால் கிறிஸ்துவானவர் உலகத்திற்கு வந்தது தன்னை தண்டிக்கத்தான் என்றறிந்து பயந்திருக்கலாம். எசமானை விட்டோடிப் போன அடிமையானவன் சொப்பனத்திலும் தன் எசமான் வந்து, தன்னை அடித்து தண்டிக்கிறதுபோல காண்பானல்லவா? அதுபோல் பிசாசும் எண்ணி பயந்திருக்கவேண்டும். அல்லது இப்படி அறிக்கையிட்டதினால் கிறிஸ்துவானவருக்குக் குறைவை வருவிக்கவேண்டுமென்று எண்ணிச் செய்திருக்கலாம். இரட்சகர் பேசாதிருக்கச் செய்ததைப் பார்த்தால், இப்படியே எண்ணவேண்டியிருக்கிறது. பொய்களை ஊதுகிற ஆவியின் சாட்சி சத்தியத்தைச் சொன்னபோதிலும் சந்தேகிக்கத்தக்கதுதானே. ஒருவேளை நமது இரட்சகருடைய நோக்கத்தையும் அவருடைய கிரியையையும் தடுக்கும்படியாக இப்படி அறிக்கையிட்டிருக்கலாம் (மாற். 3. 11க்குப் பிறகு 22-ம் வசனத்தைப் பார்.). ஆதலால்தான் இயேசுவானவர் நீ பேசாமல் இவனைவிட்டுப் புறப்பட்டுப்போ என்று அவனிலுள்ள ஆவியை அதட்டினார். யூதா 9ல் இருக்கிறதுபோல கர்த்தர் உன்னைக் கடிந்துகொள்வாரென்று சொல்லாமல், தமது சொந்த நாமத்தினாலேயே தமது வல்லமையைக்கொண்டே அதட்டினார். இரட்சகருடைய வார்த்தைக்கு இந்த அசுத்த ஆவி உடனே முற்றிலும் கீழ்ப்படியவில்லையென்று தோன்றும். ஏனென்றால் அவர் பேசாதிருக்கச் சொல்லியும் மிகுந்த சத்தமிட்டு, அவனை விட்டுப் போய்விட்டது என்று சொல்லியிருக்கிறது. ஆனாலும் காரியத்தைச் செவ்வையாய்ப் பார்க்கும்போது முற்றும் கீழ்ப்படிந்ததென்றே சொல்லலாம். ஏனெனில் இரட்சகர் சொன்னபடியே அது பிறகு ஒன்றும் பேசவில்லை. இந்தச் சத்தம் கோபத்தினாலும் வருத்தத்தினாலும் உண்டானதேயொழிய வேறல்ல. லூக். 4. 35ல் ஒரு சேதமுஞ்செய்யாமல் அவனைவிட்டுப் போய்விட்டது என்று சொல்லியிருப்பது, மாற். 1. 26ல் அவனை அலைக்கழித்தது என்று சொல்லியிருப்ப

தற்கு விகற்பமல்ல. நிலைவரமான சேதத்தை உண்டாக்காவிட்டாலும் தன்னுலே கூடியமட்டும் அவனை சேதப்படுத்திவிட்டுத்தான் போயிற்று. லூக்காவிலும் அவனைக் கீழே தள்ளினதாகச் சொல்லியிருக்கிறது. மாற்கு எழுதினதும் இதற்கு ஒத்திருக்கிறது. மாற். 9. 26ல் இதைப்போல் இன்னெரு சங்கதியை வாசிக்கிறோம். ஆனுல் அங்கே சொல்லியிருக்கப்பட்ட குறிப்புகள் இதைவிட பயங்கரமானவைகள். பிசாசு தனக்கு சொந்தமாக வைத்துக்கொள்ளக்கூடாததை தன்னுல் கூடியமட்டும் கெடுக்கப் பார்ப்பான். பார்வோனும் இஸ்ரவேலர் தன்னைவிட்டுக் கடந்துபோகிற சமயத்தில்தான் அதிகமாய் அவர்களை ஒடுக்கினுன். இப்போதும் பிசாசு தன்னுடைய வல்லமையிலிருந்து தப்பிப்போகிறவர்களை பலவித சோதனைகளினுலும் துன்பங்களினுலும் வருத்தப்படுத்துகிறதுண்டு.



## 13. சீமோனுடைய மாமியை சொஸ்தமாக்கினது.

---

*மத்தேயு*, 8. 14—17.

"*இயேசு பேதுருவின் வீட்டிலே வந்து, அவன் மாமி ஜுரமாய்க் கிடக்கிறதைக் கண்டார். அவர் அவள் கையைத் தொட்டவுடனே ஜுரம் அவளை விட்டு நீங்கிற்று; அவள் எழுந்திருந்து, அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.*

*அஸ்தமனமானபோது, பிசாசு பிடித்திருந்த அநேகரை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள்; அவர் அந்த ஆவிகளைத் தமது வார்த்தையினாலே துரத்தி, பிணியாளிகளெல்லாரையும் சொஸ்தமாக்கினார்: அவர் தாமே நம்முடைய பெலவீனங்களை ஏற்றுக்கொண்டு, நம்முடைய நோய்களைச் சுமந்தார் என்று, ஏசாயா தீர்க்கதரிசியினால் உரைக்கப்பட்டது நிறைவேறும்படி இப்படி நடந்தது.*"

*லூக்கா*, 4. 38—40.

*பின்பு அவர் ஜெப ஆலயத்தை விட்டுப் புறப்பட்டு, சீமோன் வீட்டில் பிரவேசித்தார். சீமோனுடைய மாமி கடும்ஜுரமாய்க் கிடந்தாள். அவளுக்காக அவரை வேண்டிக்கொண்டார்கள். அவர் அவளிடத்தில் குனிந்துநின்று, ஜுரம் நீங்கும்படி கட்டளையிட்டார், அது அவளைவிட்டு நீங்கிற்று; உடனே அவள் எழுந்திருந்து அவர்களுக்குப் பணிவிடை செய்தாள்.*

*சூரியன் அஸ்தமித்தபோது, ஜனங்களெல்லாரும் தங்களுக்குள்ளே பலபல வியாதிகளால் வருத்தப்பட்டவர்களை அவரிடத்தில் கொண்டு வந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவர்மேலும் அவர் தம்முடைய கைகளை வைத்து, அவர்களைச் சொஸ்தமாக்கினார்.*"

---

மாற்கும் லூக்காவும் இந்த அற்புதம் முந்தின அற்புதத்திற்குப்பிறகு உடனே நடந்ததாகச் சொல்லுகிறார்கள். உடனே அவர்கள் ஜெபஆலயத்தைவிட்டுப் புறப்பட்டு சீமோன், அந்திரேயா என்பவர்களுடைய வீட்டில் வந்தார்களென்று மாற்கு சொல்லுகிறார். லூக்கா சீமோனுடைய வீடு என்றுமாத்திரம் சொல்லுகிறார். எல்லாவற்றையும் விட்டுக் கிறிஸ்துவைப் பின்சென்ற பேதுருவுக்கு வீடு ஏதென்று ஆட்சேபித்தால், முன் பேதுருவின் வீடாயிருந்து இப்போது தன் மாமிக்கு

அவர் விட்ட வீடாயிருக்கலாம். பேதுருவைக் கிறிஸ்துவண்டை கொண்டுவருகிறதற்கு அந்திரேயா கருவியாய் இருந்தபோதிலும், இங்கும் மற்ற இடங்களிலும் அவருடைய பெயர் அதிகமாய்த் துலங்குகிறதைக் காணேம். ஒருவேளை நமது இரட்சகர் அவருடைய வீட்டிலே போசனம்பண்ணும்படி போயிருக்கலாம். இரட்சகர் வந்தவுடனே, சீமோனுடைய மாமி மிகுந்த ஜுரமாய்க் கிடந்தபடியால் அவளுக்காக அவரை வேண்டிக்கொண்டார்கள். வேறொரு சமயத்தில் நமது இரட்சகர் காற்றையும் கடலையும் அதட்டினதுபோல் இந்தச் சமயத்தில் ஜுரத்தை அதட்டினார். அது அவளைவிட்டு நீங்கினபோது மருந்தின்மூலமாய்ச் சுகப்பட்டவர்கள் பெலவீனமாய் இருக்கிறதுபோல அவளை பெலவீனமாய் விட்டுப்போகவில்லை; அல்லது சாதாரணமாய் நடக்கிறதுபோல அவள் கொஞ்சம் கொஞ்சமாக பெலனடைந்து தேறவுமில்லை. அவள் முற்றிலும் சுகப்பட்டு பெலனடைந்தபடியால் உடனே எழுந்திருந்து அவருக்குப் பணிவிடைசெய்தாள்; அதாவது தன்னுடைய மருமகன் கூட்டிக்கொண்டுவந்த விருந்தாடிகளை உபசரித்தாள். இதினால் இவள் நம்மெல்லாருக்கும் ஒரு நல்ல மாதிரியை வைத்திருக்கிறாள். ஞானப்பிரகாரமாக ஆத்துமசுகமடைந்த யாவரும் தங்களுக்குக் கிடைத்திருக்கும் பெலனையும் சுகத்தையும் கிறிஸ்துவுக்கென்றும் அவருடைய அவயவங்களாகிய மெய்க் கிறிஸ்தவர்களுக்கென்றும், செலவழிப்பது நியாயந்தானே.

இந்த அற்புதத்தினால் ரோமான்மார்க்கத்தார் பிடித்திருக்கிற ஒரு வீணன கொள்கையைக் கண்டிக்க ஏதுவுண்டு. அவர்கள் குருக்கள் கலியாணம் பண்ணக்கூடாதென்று சொல்லுகிறதுமல்லாமல், விவாகம்பண்ணினவர்கள் தெய்வ ஊழியத்திற்கு தகுந்தவர்கள் அல்லவென்று தீர்மானிக்கிறார்கள். இது வேத வசனத்துக்கு முற்றும் விரோதமென்று லேசாய் ரூபிக்கலாம். பேதுரு அப்போஸ்தலனே விவாகம்பண்ணியிருந்தார் என்று இங்கே தோன்றுகிறதல்லவா? பேதுரு அப்போஸ்தலன் மாத்திரமல்ல, வேறு சில அப்போஸ்தலன்மாரும் விவாகம்பண்ணினார்கள் என்றும், அப்படி விவாகம்பண்ணிக்கொள்ளுகிறதற்கு

அவர்களுக்குத் தருந்த அதிகாரம் இருந்ததென்றும் (1 கொரி. 9. 5.) பரிசுத்த பவுல் எழுதியிருப்பதினால் விளங்கும். வேறொரு இடத்தில் அவர் இதைப்பற்றித் தெளிவாய் சொல்லியிருக்கிறதென்ன? "விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளதாயும், விவாகமஞ்சம் அசுசிப்படாததாயுமிருப்பதாக" என்கிறார் (எபி. 13. 4.). இதில் யாவருக்குள்ளும் என்கிற வார்த்தையைக் கவனியுங்கள். அதாவது சபையாருக்குள் மாத்திரமல்ல, குருமாருக்குள்ளும் விவாகநிலைமை கனம்பொருந்தியதென்று தெரியவருகிறது (மேலும் 1 தீமோ. 3. 2. காண்க.). குருமார் விவாகம்செய்யக்கூடாதென்று கட்டாயம்பண்ணுவதால் கிறிஸ்துமார்க்கத்திற்கும் கிறிஸ்துசபைக்கும் குறைவு உண்டாக்கத்தக்க அவகீர்த்தியான சங்கதிகள் அந்த ரோமான்சபையிலேயே பற்பல சமயங்களில் நடந்துவந்தது நமக்குத் தெரியுமே. விவாகஞ்செய்த அநேக குருமார்களுடைய குடும்பங்களோ, கிறிஸ்து மார்க்கத்திற்கும் கிறிஸ்துசபைக்கும் அலங்காரமாக அநேக இடங்களில், வாழைஅடி வாழையாய் செழித்தோங்கி பிரகாசித்துவருகிறதையும் நாம் கண்டிருக்கிறோம். இவைகளையெல்லாம் கவனிக்கும்போது குருமார்கள் விவாகம்செய்யக்கூடாதென்று தடுப்பது தேவவசனத்துக்கு விரோதமும், கிறிஸ்து மார்க்கத்திற்குக் கேவலமும், திருச்சபைக்கு நஷ்டமும், அநேகருடைய நன்மைக்குத் தடையும், பிசாசின் போதனையுமாய் (1 தீமோ. 4. 2.) இருக்கிறதென்றே நாம் எண்ணி அதை அகற்ற வேண்டியது.

இந்த அற்புதத்தைச் சேர்ந்த இரண்டுகாரியங்களை இப்போது கவனிப்போமாக: இந்த அற்புதம் நடந்த செய்தி எங்கும் பிரசித்தமானபடியால் அஸ்தமனமானபொழுது, அல்லது மாற்கு சொல்லுகிறபடி மாலைகாலத்தில் பலவித வியாதியுள்ளவர்களை அவரிடம் கொண்டுவந்தார்கள். மூன்று சுவிசேஷகர்களும் சூரியன் அஸ்தமித்தபிற்பாடு இது நடந்ததாகச் சொல்லியிருக்கிறபடியால் இதற்கு முகாந்தரம் என்னவென்று விசாரிக்கவேண்டும். சிலர், வியாதிஸ்தர் காங்கை பொறுக்கமாட்டாதவர்களாயிருந்தபடியால் வெயிலின் உக்கிரம் தணிந்த

பொழுது சாயந்தரவேளையில் அவர்களைக் கொண்டுவந்ததாகச் சொல்லுகிறார்கள். வேறுசிலர் அந்தநாள் ஓய்வுநாளானபடியால் தகாதவேலையொன்றும் செய்யாமல் ஓய்ந்திருந்து சாயந்தரம் அது முடிந்தபிறகு அவர்களைக் கொண்டுவந்ததாகச் சொல்லுகிறார்கள். எப்படியிருந்தபோதிலும், கிறிசொஸ்தம் சொல்லுகிறபடி, இதில் சனங்கள் கிறிஸ்துவானவரில் வைத்த விசுவாசமும், அவரால் நன்மையடையவேண்டுமென்று அவர்களுக்கிருந்த விருப்பமும் வெளியாகிறது. ஏனெனில் சூரியன் அஸ்தமித்தபிறகும் வியாதியஸ்தரைக் கொண்டுவந்து அவர் பாதத்தண்டை வைத்தார்கள்.

இதோடு சம்பந்தப்பட்டதாக மத்தேயு, ஏசாயா தீர்க்கதரிசனத்திலிருந்து “அவர் நம்முடைய பெலவீனங்களை ஏற்றுக்கொண்டு, நம்முடைய நோய்களைச் சுமந்தார்” என்கிற வார்த்தைகளைச் சொல்லுகிறார். இந்த வார்த்தைகள் செப்துவகிந்து என்னும் திருப்புதலிலிருந்து எடுக்கப்பட்டதல்ல. பேதுரு அப்போஸ்தலன் இரட்சகர் நம்முடைய பாவங்களைச் சுமந்து கொண்ட கருத்தாக இந்தத் தீர்க்கதரிசனத்தை எடுத்துச் சொல்லுகிறார் (1 பேது. 2. 24.). மத்தேயுடைய வார்த்தைகள்தான் மூலபாஷைக்கு ஒத்திருக்கிறது; ஆகிலும் இந்த இரண்டிற்கும் ஆட்சேபிக்கக்கூடிய வித்தியாசமில்லை. பாவமும் வியாதியும் ஒன்றாய் இணைக்கப்பட்டிருக்கிறது. ஒன்றினின்று மற்றொன்று தோன்றுகிறது. பாவமாகிய காரணத்தினின்று வியாதியாகிய காரியம் புறப்படுகிறது. வேதவசனம் இப்படிச் சொல்லுகிறதுமல்லாமல் நாம் தீமை என்கிற வார்த்தையை இரண்டு அர்த்தமாக வழங்குகிறோமல்லவா? அது பாவத்தைமாத்திரமல்ல, பாவத்தினாலுண்டாகும் துன்பம் நஷ்டம் இவைகளையும் குறிக்கும்.

நம்முடைய நோய்களைச் சுமந்தார் என்று சொல்லும்போது சுமந்து தீர்த்தார், அவைகளை விலக்கினார் என்றல்ல, தன்பேரிலே தானே அவைகளைப் போட்டுக்கொண்டாரென்று சிலர் அர்த்தம்பண்ணுகிறார்கள். ஆனால் வியாதிகளை நீக்குகிறதினாலேயல்லாமல் வேறெந்தவிதத்தினாலே நம்முடைய நோய்களை அவர் சுமக்கக்கூடும். உலகத்திலுள்ள எல்லாத் தீமைகளையும்

அவரே எடுத்து முற்றிலும் நிவிர்த்தியாக்குகிறபடியால் அவர் பாவபரிகாரமானுர். வேதனையடைந்து மரணத்தை அனுபவித்தபோது நம்முடைய துன்பங்களையும் நோய்களையும் தமது மேலே போட்டுக்கொண்டாரென்று சொல்லலாம். ஆனுல் வியாதியை அவர் நீக்கினபோது அவைகளைத் தமதுபேரிலேயே போட்டுக்கொண்டாரென்று சொல்வது தகுதியல்ல. எனெனில் அவர் வியாதிகளை நம்மைவிட்டுத் துரத்தினவராக இந்தச் சமயத்தில் வெளிப்பட்டார். சிலர் பகல் முடிந்தபின்னும் இரவிலும் தமக்கு வருத்தமும் ஆயாசமும் உண்டாகத்தக்கதாக அவர்களைச் சொஸ்தமாக்கிக்கொண்டிருந்தபடியால், ஒருவிதமாய்த் தமதுபேரில் அந்த நோய்களைப் போட்டுக்கொண்டதாக அர்த்தம்பண்ணுகிருர்கள். ஆனுலும் இரட்சகர் இந்தநாளில் மாத்திரமல்ல, நன்மைசெய்த ஒவ்வொருநாளிலும் மற்றவர்களுடைய வருத்தத்தை தமதுமேல் போட்டுக்கொண்டவராகத் தான் வெளிப்பட்டார். இதுவே கிறிஸ்துவின் நியாயப்பிரமாணமாயிருந்தது (கலா. 6. 2.). ஆனுல் வியாதிகள்மாத்திரம் அல்ல, பாவத்திஞலுண்டாகிய எந்தக் கேடும் அவருடைய ஆத்துமத்திற்கு நோவுண்டாக்கினபடியால், இந்த உலகத்தில் அவர் வாசம்பண்ணினபோதெல்லாம் நம்முடைய நோய்களைச் சுமந்தவராகத்தான் இருந்தார். வியாதிகளைச் சொஸ்தமாக்கினதல்ல, சொஸ்தமாக்கவேண்டிய வியாதிகள் இருந்ததே அவருடைய சுமையாயிருந்தது. வியாதிக்கும் துன்பத்திற்குமுரிய தேகத்தை அவரெடுத்து மரணத்தை ஜெயமாக விழுங்கினபடியால், நம்முடைய பெலவீனங்களை அவர் எற்றுக்கொண்டு நம்முடைய நோய்களைச் சுமந்தார்.



# 14. கைம்பெண்ணின் மகனை எழுப்பினது.

லூக்கா, 7. 11—16.

"மறுநாளிலே அவர் நாயீன் என்னும் ஊருக்குப் போனார்; அவருடைய சீஷர் அநேகரும் திரளான ஜனங்களும் அவருடனேகூடப் போனார்கள். அவர் ஊரின் வாசலுக்குச் சமீபித்தபோது, மரித்துப் போன ஒருவனை அடக்கம்பண்ணும்படி கொண்டுவந்தார்கள்; அவன் தன் தாய்க்கு ஒரே மகனாயிருந்தான். அவளோ கைம்பெண்ணாயிருந்தாள்; ஊராரில் வெகுஜனங்கள் அவளுடனேகூட வந்தார்கள். கர்த்தர் அவளைப்பார்த்து, அவள்மேல் மனதுருகி: அழாதே என்று சொல்லி, கிட்டவந்து, பாடையைத் தொட்டார்; அதைச் சுமந்தவர்கள் நின்றார்கள்; அப்பொழுது அவர்: வாலிபனே, எழுந்திரு என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார். மரித்தவன் எழுந்து உட்கார்ந்து, பேசத் தொடங்கினான். அவனை அவன் தாயினிடத்தில் ஒப்புவித்தார். எல்லாரும் பயமடைந்து: மகா தீர்க்கதரிசியானவர் நமக்குள்ளே தோன்றியிருக்கிறார் என்றும், தேவன் தம்முடைய ஜனங்களைச் சந்தித்தார் என்றும் சொல்லி, தேவனை மகிமைப்படுத்தினார்கள்."

இங்கே சொல்லப்பட்டிருக்கிற நாயீன் என்னும் பட்டணத்தைக்குறித்து வேதவசனத்தின் வேறெந்தப் பங்கிலும் நாம் வாசிக்கிறதில்லை. அது கலிலேயாவுக்குத் தெற்கே எருசலேமுக்குப் போகிற பாதையில் இருந்தது.

இரட்சகர் இந்தச் சமயத்தில் தம்முடைய ஊழியத்தில் நேரிட்ட இரண்டாம் பஸ்காவுக்குப் போனதாகச் சொல்லுகிறார்கள். அவர் பட்டணத்தின் வாசலில் இந்த பாடையைக் கண்டது தற்செயலாய் நடந்த காரியமாக தோன்றினபோதிலும், திவ்விய ஆலோசனையில் இது முன் குறிக்கப்பட்டிருந்ததென்பதற்கு யாதொரு சந்தேகமில்லை. மேலும் யூதர்கள் மரித்தவர்களை ஊருக்கு வெளியே அடக்கஞ்செய்யும் வழக்கமுடையவர்களாய் இருந்தார்கள். இந்தக் காட்சி இரக்கமுள்ள இரட்சகரைமாத்திரமல்ல, யாவரையும் மனமுருகப்பண்ணத்தக்கதானபடியால் அநேகர் பாடையோடு போனதாக வாசிக்கிறோம்.

சுவிசேஷகன் சொல்லுகிற இரண்டுகாரியங்கள் இந்த ஸ்திரீயினுடைய பரதபிக்கப்படத்தக்க நிலைமையை நன்றாய் வெளிப்படுத்துகிறது. "மரித்துப்போன ஒருவனை அடக்கம்பண்ணும்படி கொண்டுவந்தார்கள்; அவன் தன் தாய்க்கு ஒரேமகனாயிருந்தான். அவளோ கைம்பெண்ணாயிருந்தாள்." ஒரே குமாரனுக்காக துக்கிக்கிறது என்று ஒரு பழமொழியாக சொல்லிவந்தார்கள். "ஒரேபுத்திரனுக்காக துக்கிக்கிறதுபோல மனங்கசந்து புலம்பு" (எரே. 6. 26.). "ஒரே பேறானவனுக்காகப் புலம்புகிறதுபோல எனக்காகப் புலம்புவார்கள்" (சகரி. 12. 10.). "அவர்களுடைய துக்கிப்பை ஒரே பிள்ளைக்காகத் துக்கிக்கிறதற்குச் சமானமாக்குவோம்." (ஆமோ. 8. 10.)

கர்த்தர் அவளைப்பார்த்து உருக்கமாய் இரங்கி, அழவேண்டாம் என்றார். மனிதர்கள் சும்மா ஒப்புக்கு அழவேண்டாம் என்று சொல்லுகிறதற்கும், இரட்சகர் சொன்னதற்கும் எவ்வளவு வித்தியாசம்! மனிதர்கள் வாயினாலே சொல்லுவார்கள், அழாமலிருக்கும்படி செய்யமாட்டார்கள். இவரோ, அழாதே என்கிறார்; கண்ணீரைத் துடைக்கிறார்; மெய்யான ஆறுதலை அளிக்கிறார். இவரைப்போல உருக்கத்தோடு நமக்காக பரிதபித்து ஆறுதல்படுத்துகிற சிநேகிதன் வேறொருவரும் இல்லை. அவர்களுடைய கண்ணீர் யாவையும் தேவன் துடைப்பார். இனி மரணமுமில்லை, துக்கமுமில்லை, அலறுதலுமில்லை, வருத்தமுமில்லை என்று வெளிப்படுத்தல் 21. 4ல் சொல்லியிருக்கிற வாக்குத்தத்தத்தை மெய்ப்பிக்கும்படியாகவே இவர் பரமண்டலத்திலிருந்து இறங்கிவந்தார். தாயின்பேரிலிருந்த உருக்கமே இந்த அற்புதத்திற்குக் காரணமாயிருந்ததென்று நாம் எண்ணுவது சரியல்ல. அப்பொழுது அந்த வாலிபனுக்கு யாதொரு பிரயோசனமும் உண்டாயிருக்கமாட்டாதே. தாய்க்குச் சந்தோஷத்தை உண்டாக்கினது இந்த அற்புதத்தினாலே உடனே உண்டான பலனாயிருந்தபோதிலும், அந்த வாலிபனுடைய ஆத்துமாவை ஞானப்பிரகாரமாக உயிர்ப்பிக்க வேண்டுமென்கிற நோக்கத்தோடேயே இரட்சகர் இந்த அற்புதத்தைச் செய்திருக்கவேண்டும். அதைக்குறித்து இங்கே

ஒன்றுஞ் சொல்லியிராவிட்டாலும், அதுவே தாய்க்கு மெய்யான நிலையுள்ள சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது.

சுமந்துபோனவர்களை நிறுத்தும்படிக்கு அவர் சமீபமாய் வந்து பாடையைத் தொட்டார். அதை அறிந்துகொண்ட அவர்கள் நின்றார்கள். அப்போதுதான் சொந்தநாமத்தினாலே இந்த வல்லமையுள்ள வார்த்தையைக் கூறினார். "வாலிபனே, எழுந்திரு என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார்." மரித்தோரை உயிர்ப்பித்து இல்லாததை இருக்கிறதுபோல அழைக்கிற உயிர்த்தெழுதலும் சீவனுமாகிய நான் சொல்லுகிறேன் என்கிற பாவனையாய்ப் பேசுகிறார். அந்த வார்த்தையை அவன் கேட்டான். ஏனெனில், மரித்தவன் எழுந்து உட்கார்ந்து பேசத்தொடங்கினான். அகுஸ்தீன் சொல்லுகிறபடி படுக்கையிலிருந்து எழுப்புகிறதுபோல பாடையிலிருந்து எழுப்பினார். இதில் இவர் பழைய ஏற்பாட்டிலுள்ள தெய்வஊழியக்காரரிலிருந்து வித்தியாசப்படுகிறார். அவர்கள் வருத்தப்பட்டு தேவனிடத்தில் உருக்கத்தோடு போராடி, மரணத்தின் பற்களிலிருந்து இரையைப் பிடுங்கினார்கள். ஏனெனில் அவர்களிடத்தில் வல்லமை நிறைவாயிருந்ததில்லை. அவர்கள் வீட்டின் வேலைக்காரர், இவரோ தமது சொந்தவீட்டில் குமாரனாயிருக்கப்பட்டவர்.

அவனை அவன் தாய்க்கு ஒப்புவித்தார் (1 இரா. 17. 23. 2 இரா. 4. 36.). இந்த அற்புதத்தைச் செய்தவர் கடைசிக்காலங்களில் எழுந்திருங்கள் என்று வல்லமையோடு பேசி ஒருவர் இருவரையல்ல, மரித்த யாவரையும் உயிர்ப்பித்து அவர்களைப் பிதாவுக்கு ஒப்புவிப்பார். அப்போது சந்தோஷமும் மகிழ்ச்சியும் எல்லா இருதயங்களையும் நிரப்பும்.

மரித்த மூவரை உயிர்ப்பித்ததால் இனி வரப்போகிற உயிர்த்தெழுதலை நமக்கு நிச்சயப்படுத்தியிருக்கிறார். இந்த அற்புதத்தினாலுண்டான நன்மையைப் பாருங்கள். எல்லாரும் பயமடைந்தார்கள். பரிசுத்த பயம். மோட்சமும், மோட்சத்தில் வாசம்பண்ணுகிற பரிசுத்தரும் தங்களுக்குள் வந்திருக்கிறதாக எண்ணி அச்சமடைந்தார்கள். அதுமாத்திரமல்ல, தேவனை

மகிமைப்படுத்தினார்கள். தம்முடைய சனமாகிய இஸ்ரவேலை நினைத்து அவர்களைச் சந்தித்ததற்காக அவரைத் துதித்தார்கள். மகா தீர்க்கதரிசியானவர் நமக்குள்ளே தோன்றியிருக்கிறார் என்றார்கள். பழைய ஏற்பாட்டின் காலத்திலிருந்த பெரிய தீர்க்கதரிசிகளாகிய எலியா, எலிசா மாத்திரம் மரித்தோரை உயிரோடு எழுப்பினபடியால் இப்போது தோன்றின இவர், சாமானிய தீர்க்கதரிசியல்லவென்று நிச்சயித்துக்கொண்டார்கள். கடைசியாக தேவன் தமது சனங்களைச் சந்தித்தாரென்று சொன்னார்கள். அநேககாலமாக தீர்க்கதரிசி அவர்களுக்குள் எழும்பாததையிட்டு அநேகர் இனி வெளியரங்கமான தரிசனை இராதென்றும், தீர்க்கதரிசிகளுடைய வரிசை அற்றுப்போயிற்றென்றும் எண்ணியிருந்தபடியால் இந்த அற்புதத்தைக் கண்டமாத்திரத்திலே தேவன் தங்களைச் சந்தித்ததாகச் சொல்லிக்கொண்டார்கள்.



# 15. பேதஸ்தா என்னும் குளத்தண்டை வியாதியா யிருந்தவனைச் சொஸ்தமாக்கினது.

*யோவான், 5. 1—16.*

*"இவைகளுக்குப்பின்பு யூதருடைய பண்டிகை ஒன்று வந்தது; அப்பொழுது இயேசு எருசலேமுக்குப் போனார். எபிரெய பாஷை யிலே பெதஸ்தா என்னப்பட்ட ஒரு குளம் எருசலேமில் ஆட்டுவா சலினருகே இருக்கிறது, அதற்கு ஐந்து மண்டபங்களுண்டு. அவைக ளிலே குருடர், சப்பாணிகள், சூம்பின உறுப்புடையவர்கள் முதலான வியாதிக்காரர் அநேகர் படுத்திருந்து, தண்ணீர் எப்பொழுது கலங்கும் என்று காத்துக்கொண்டிருப்பார்கள். ஏனெனில் சில சமயங்களிலே தேவதூதன் ஒருவன் அந்தக் குளத்தில் இறங்கி, தண்ணீரைக் கலக் குவான்; தண்ணீர் கலங்கினபின்பு யார் முந்தி அதில் இறங்குவானோ அவன் எப்பேர்ப்பட்ட வியாதிஸ்தனாயிருந்தாலும் சொஸ்தமாவான்.*

*முப்பத்தெட்டு வருஷம் வியாதிகொண்டிருந்த ஒரு மனுஷன் அங்கே இருந்தான். படுத்திருந்த அவனை இயேசு கண்டு, அவன் வெகுகாலமாய் வியாதிஸ்தனென்று அறிந்து, அவனை நோக்கி: சொஸ் தமாகவேண்டுமென்று விரும்புகிறாயா என்று கேட்டார். அதற்கு வியா திஸ்தன்: ஆண்டவரே, தண்ணீர் கலக்கப்படும்போது என்னைக் குளத் தில் கொண்டுபோய் விடுகிறதற்கு ஒருவருமில்லை, நான் போகிறதற் குள்ளே வேறொருவன் எனக்கு முந்தி இறங்கிவிடுகிறான் என்றான். இயேசு அவனை நோக்கி: எழுந்திரு, உன் படுக்கையை எடுத்துக்கொ ண்டு நட என்றார். உடனே அந்த மனுஷன் சொஸ்தமாகி, தன் படுக் கையை எடுத்துக்கொண்டு, நடந்துபோனான்.*

*அந்த நாள் ஓய்வுநாளாயிருந்தது. ஆதலால் யூதர்கள் குணமாக்கப் பட்டவனை நோக்கி: இது ஓய்வுநாளாயிருக்கிறதே, படுக்கையை எடுத் துக்கொண்டுபோகிறது உனக்கு நியாயமல்ல என்றார்கள். அவன் அவர்களுக்குப் பிரதியுத்தரமாக: என்னைச் சொஸ்தமாக்கினவர், உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடவென்று எனக்குச் சொன்னார் என்றான். அதற்கு அவர்கள்: உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடவென்று உன்னுடனே சொன்ன மனுஷன் யார் என்று அவனிடத்தில் கேட்டார்கள். சொஸ்தமாக்கப்பட்டவன் அவர் இன்னாரென்று அறிய வில்லை; அவ்விடத்தில் ஜனங்கள் கூட்டமாயிருந்தபடியினால் இயேசு விலகியிருந்தார்.*

*அதற்குப்பின்பு இயேசு அவனை தேவாலயத்திலே கண்டு: இதோ, நீ சொஸ்தமானாய், அதிக கேடானதொன்றும் உனக்கு வராதபடி இனிப் பாவஞ்செய்யாதே என்றார். அந்த மனுஷன் போய், தன்னைச்*

சொஸ்தமாக்கினவர் இயேசு என்று யூதர்களுக்கு அறிவித்தான். இயேசு இவைகளை ஓய்வுநாளில் செய்தபடியால், யூதர்கள் அவரைத் துன்பப் படுத்தி, அவரைக் கொலைசெய்ய வகைதேடினார்கள்.''

---

இந்த அற்புதம் யூதருடைய பண்டிகையில் நடந்ததென்று பொதுப்படச் சொன்ன அப்போஸ்தலன் இன்ன பண்டிகை என்று ஒரு வார்த்தை சொல்லியிருப்பாரானால், அநேகம் தர்க்கங்களுக்கும் சந்தேகங்களுக்கும் இடமிருந்திருக்கமாட்டாது. ஏனெனில் இந்த அற்புதம் நடந்த காலத்தைப்பற்றி மாத்திரமல்ல, நமது இரட்சகருடைய சீவகாலத்தைப்பற்றியும் நிச்சயமாய் நாம் அறிந்துகொள்வதற்கு இதொரு தடையாயிருக்கிறது. யூதருடைய பண்டிகையென்று இங்கே சொல்லப்பட்டிருக்கிறது பஸ்கா பண்டிகையாயிருக்குமானால், அப்பொழுது யோவான் அப்போஸ்தலன் தன் சுவிசேஷத்தில் நாலு பஸ்காக்களைக்குறித்து எழுதியிருக்கிறாரென்று சொல்லவேண்டும் (யோவா. 2. 13.). இந்த வசனம் (யோவா.6. 4.). கடைசி பஸ்கா. அப்படியானால் கிறிஸ்துவானவருடைய பகிரங்க ஊழியம் மூன்றரைவருஷம் இருந்ததென்றும், அது தானியேல் முன் அறிவித்திருந்த வாரத்தின் பாதியோடு ஒத்திருக்கிறதென்றும் நியாயமாய்ச் சொல்ல ஏதுவுண்டு (தானி. 9. 27.). இது பெந்தெகொஸ்தே பண்டிகையாய், அல்லது சிலர் நினைக்கிறபடி பூரீம் பண்டிகையாயிருக்குமானால், தானியேல் தீர்க்கதரிசி இரட்சகருடைய ஊழியகாலத்தைக்குறித்துச் சொல்லியிருக்கிறது சரியானதாயிருந்தாலும், யோவான் சுவிசேஷத்திலே அதற்கு ஆதாரம் உண்டாயிருக்கமாட்டாது. மேலும் இரட்சகருடைய ஊழியம் மூன்றுவருஷத்துக்கு உள்ளாட்டமாய் இருந்திருக்கவேண்டியது.

கல்விமான்கள் இந்த வாக்கியத்தைக்குறித்துச் சொல்லியிருக்கிறதைக் கவனிக்கவேண்டும். நாஸ்திகர், ஏசாயாவில் கர்த்தருடைய பிரியத்தின் வருஷம் என்றிருக்கிற வாக்கியத்தை வைத்துக்கொண்டு, கிறிஸ்துவானவருடைய ஊழியம் ஒரு வருஷத்திற்குள் முடிந்துபோயிற்றென்று சொன்னபோது, ஐரே

னியு என்பவர் கிறிஸ்துவானவருடைய ஊழியகாலத்திலுள்ள பஸ்காக்களைத் தொகையிட்டு இதையும் கணக்கிலே சேர்த்துக் கொள்ளுகிறார். ஒரிஜனும், அலெக்சந்திரியாவிலுள்ள சாஸ்திரிகளும் நாஸ்திகரைப்போல கர்த்தருடைய வருஷமென்பதை ஆதாரமாகவைத்துக் கிறிஸ்துவினுடைய ஊழியகாலம் ஒருவருஷத்துக்குள்ளாக முடிந்துபோயிற்றென்று சொல்லுகிறார்கள். கிரேக்குச்சபையிலுள்ள கிரிசொஸ்தம், சிரில், தியோபிலாக்ற் என்பவர்கள் இது பெந்தெகொஸ்தே பண்டிகை என்று எழுதியிருக்கிறார்கள். அவர்களுக்குப்பிறகு வந்த தேயோதிரேத்து என்பவரோ, தானியேல் சொன்ன வாரத்தின் பாதியை இரட்சகருடைய ஊழியகாலம் மூன்றரைவருஷமென்று வியாக்கியானம் பண்ணியிருப்பதால், இதைப் பஸ்காவென்றே அர்த்தம் பண்ணிக்கொண்டதாகச் சொல்லவேண்டும். லூதரும், கல்வினும் அப்படியே அர்த்தம்பண்ணுகிறார்கள். இப்பொழுது அநேகர் இது பெந்தெகொஸ்தே பண்டிகை அல்லவென்று ஒத்துக்கொள்ளுகிறார்கள்.

ஆனால் இதோடு சந்தேகம் அற்றுப்போகவில்லை. ஏனெனில் அநேகர் இது பூரீம் பண்டிகையென்றும், யோவா. 6. 4ல் சொல்லியிருக்கிற பஸ்காவுக்கு முந்திவந்ததென்றும் சொல்லுகிறார்கள். இங்கே யூதருடைய பண்டிகை என்றிருப்பதை பஸ்காபண்டிகை என்று ஐரேனியுவைப்போல சொல்வதற்கு சில ஆக்ஷேபனைகளுண்டு. இது பஸ்காவானால் மறுபடியும் அத்தனை சீக்கிரத்தில் இன்னொரு பஸ்கா எப்படி நேரிட்டது (யோவா. 6. 4.). சிலர் சொல்லுகிறபடியே பண்டிகை என்று மாத்திரம் யோவான் சொல்லும்பொழுதெல்லாம் யூதருக்குள் விசேஷித்த பண்டிகையாகிய பஸ்காவையே குறித்துப் பேசுகிறாரென்று சொல்லுவது சரியல்ல. ஏனெனில் பஸ்காவென்று முந்திச் சொன்னபிறகு தான் அதைக்குறித்துப் பிறகு பேசும்பொழுது பண்டிகையென்று சொல்லுகிறார். ஆனால் இது பஸ்காவென்று சொல்லுகிறதற்கு கிறிஸ்துவானவர் அதை ஆசரிக்கும்படி எருசலேமுக்குப் போனதே தகுந்த நியாயமென்று எனக்குத் தோன்றுகிறது. இது பூரீம் பண்டிகையானால் அதை

ஆசரிக்க எருசலேமுக்குப் போயிருக்கமாட்டார். அது மதாசாரத்திற்குரிய பண்டிகையல்ல, சாதியாசாரத்திற்குரியது. தேவனால் ஏற்பட்டதல்ல, ஏனெனில் அவர்கள் அதைத் தங்கள் சொந்த வீடுகளில் ஆசரித்துவந்தார்கள். மற்ற இடங்களில் நடந்ததைவிட எருசலேமில் அதிக ஆடம்பரத்தோடும் வேடிக்கையோடும் நடத்தப்பட்டிருக்கலாம். ஆனாலும் அதற்கென்று இரட்சகர் எருசலேமுக்கு வந்தாரென்று சொல்ல போந்த நியாயமில்லை. மோசே, ஆரோன், மீரியாம் என்பவர்களைவிட மொர்தெகாயும் எஸ்தரும் எவ்வளவு தாழ்ந்தவர்களாயிருந்தார்களோ, எகிப்திலிருந்து அவர்கள் விடுதலையாக்கப்பட்டதைவிட இவர்கள் காலத்தில் நடந்த விடுதலை எவ்வளவு தாழ்ந்ததாயிருந்ததோ அவ்வளவாய், பஸ்காவைவிட பூரீம் தாழ்ந்ததாய் எண்ணப்பட்டிருந்தது. பிறகு வந்தவர்கள் ஒருவேளை அதை அதிகமாய் தங்கள் மனதுக்கேற்றபடி முக்கியப்படுத்தியிருக்கலாம். ஆனாலும் கிறிஸ்துவானவரை அது எருசலேமுக்கு இழுக்கத்தக்கதாக அவ்வளவு பிரயோசனமுள்ள பண்டிகையாயிருந்ததில்லை. ஆதலால் இரட்சகர் தாமே எருசலேமுக்குப் போய் இந்த அற்புதத்தைச் செய்து இவ்வளவாக முக்கியப்படுத்தின இந்த பண்டிகை, எல்லாப்பண்டிகைகளுக்கும் தாய்ப்பண்டிகையாகிய பஸ்காபண்டிகை என்றே நான் எண்ணுகிறேன்.

இந்த அற்புதம் நடந்த இடம் ஆட்டுவாசலின் அருகே என்று கண்டிருக்கிறது (நெகே. 3. 1; 12. 39.). அங்கே இருந்த குளத்திற்குப் பெதஸ்தா என்று பேர். அந்த வார்த்தைக்கு இரக்கத்தின் வீடென்று அர்த்தம். “ஒரு குளமிருக்கிறது” என்று இங்கேயும், “இருந்தது” என்று வேறு சில பிரதிகளிலும் எழுதியிருப்பதினால், இந்த சுவிசேஷம் எருசலேம்பட்டணம் அழிகிறதற்கு முந்தி அல்லது பிந்தி எழுதப்பட்டதென்று சொல்லுகிறதற்குப் போந்த நியாயமில்லை. ஏனெனில் பட்டணம் அழிந்தபிறகும் குளம் இருந்திருக்கலாமே. இப்பொழுது கானான் தேசத்துக்குப் போகிறவர்களுக்கு ஒரு பெரிய கெபியை இதுதான் பெதஸ்தா என்று காட்டுகிறார்கள். ஆனால் இது 75 அடி ஆழமாயிருப்பதால் அதல்லவென்று சிலர் சொல்லுகிறார்கள்.

அதிலிருந்த ஐந்து மண்டபங்களில் குருடர், சப்பாணிகள், சூம்பின உறுப்புடையவர்கள் முதலான அநேக வியாதிக்காரர் படுத்துக்கொண்டிருந்தார்கள். 3-ம் வசனத்தின் கடைசிப்பங்கும், 4-ம் வசனமும் அநேக பிரதிகளிலும் திருப்புதல்களிலும் இராததினால் சிலர் அதைத் தள்ளுகிறார்கள். தெர்த்துல்லியனும், அம்புரோசும், கிறிசொஸ்தமும் அதை வேதவசனத்திற் சேர்ந்ததாக எண்ணி அதிலிருந்து ஞானக்கருத்தாக ஒரு போதனை எடுத்துச் சொல்லுகிறார்கள். தண்ணீரால்மாத்திரம் சுகம்வந்ததில்லை. அப்படியிருந்தால் எல்லாரும் எப்பொழுதுஞ் சுகமடைவார்களே. தேவதூதன் ஜலத்தைக் கலக்கவேண்டியிருந்தது. அதுபோல ஞானஸ்நானத்தில் தெளிக்கப்படும் தண்ணீரினாலேமாத்திரம் ஆத்துமசுகம் வரமாட்டாது. பரிசுத்தஆவியின் கிருபை இருதயத்தில் கிரியைசெய்தால்தான் நம்முடைய பாவங்கள் தொலையும், ஆத்துமாவும் சுகப்படும். சந்தேகமாய் எண்ணப்பட்ட அந்த வார்த்தைகள், பிரதிகள் எழுதினவர்களால் பக்கத்திலெழுதப்பட்டு பிறகு வேதவசனத்தோடு சேர்க்கப்பட்டிருக்கலாம். கொஞ்சம் கொஞ்சமாக அப்படிச் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும். ஏனெனில் இதிலொரு பங்கு சில பிரதிகளிலும், வேறொரு பங்கு வேறு சில பிரதிகளிலும் விட்டிருக்கிறது. இங்கே சொல்லப்பட்டிருக்கிறதற்கிசைவாக இந்த யோவான் தானே வெளிப்படுத்தின விசேஷம் 16. 5ல் தண்ணீர்களின் தூதனைப்பற்றிப் பேசுகிறார். அதிசயப்படத்தக்க காரியங்களைக் கண்டு அதற்குக் காரணங்களைத் தேடுகிறது இயல்புக்குரியதானபடியால், இந்தத் தண்ணீர் தேவாலயத்தில் செலுத்தப்பட்ட பலிமுதலானவைகள் கழுவப்பட்டுவந்த தண்ணீரென்றும், அதிலே மருந்துக்குரிய குணங்களிருந்ததென்றும், அதை அசைக்கப்போனவன் தேவதூதனல்ல மனிதனால் அனுப்பப்பட்ட ஒரு ஆளென்றும், அது மிகவும் சிறிதானதால் ஒருவனே குளிக்கக்கூடியதாய் இருந்ததென்றும் சம்பிரதாயமாய் சிலர் அர்த்தம்பண்ணுகிறார்கள். அப்படிச் செய்வது தேவனுடைய அதிசயமான கிரியைகளைத் தங்கள் புத்திக்கேற்றவிதமாக மட்டுப்படுத்துகிறபடியால், அப்படிப்பட்ட வியாக்கியானத்தை நாம் முற்றிலும் அகற்றவேண்டும்.

அந்தக் குளத்தண்டை காத்துக்கொண்டிருந்த ஒருவனிடத்தில்மாத்திரம் இரட்சகர் தம்முடைய வல்லமையைக் காண்பிக்கிறார். ஏனெனில் அவர் இந்த பூலோகத்திற்கு வந்தது மனுஷருடைய சரீரங்களைச் சுகமாக்கவல்ல, முக்கியமாய் ஆத்துமங்களைத்தான். 5-ம் வசனத்தில் மூலபாஷையிலிருக்கிறதை அந்த மனுஷன் குளத்தோரம் 38 வருஷம் காத்துக்கொண்டிருந்தானென்றும், அல்லது அப்பொழுது அவன் 38 வயதுள்ளவனாயிருந்தானென்றும் இருவகையாய்த் திருப்பலாம். ஆனால் நமது திருப்புதலிலிருக்கிறதே சரியான கருத்து. அந்த 38 வருஷம் அவனுடைய வயதையல்ல, அவன் வியாதியாயிருந்த காலத்தையே குறிக்கிறது. அவன் அவ்வளவு காலம் வியாதியாயிருந்தாலும், அந்த 38 வருஷமும் அங்கே காத்திருந்தானென்று சொல்லக்கூடாது. இரட்சகர் அவனை நோக்கி: நீ சொஸ்தமாக வேண்டுமென்று விரும்புகிறாயா என்று கேட்ட கேள்வி அவசியமில்லாததாகத் தோன்றும். ஏனெனில் சொஸ்தமடைய விரும்பாதவன் எவன்? மேலும் அவன் அந்த இடத்தில் வந்து காத்திருந்ததே அவனுக்குச் சொஸ்தமடைய விருப்பமிருந்ததென்பதற்குப் போதுமான திருஷ்டாந்தம்; ஆனாலும் இந்தக் கேள்வி பிரயோசனமற்றதல்ல. இந்த வியாதிஸ்தன் அநேகநாள் வீணாக காத்திருந்தபடியால் அவனுக்குள் இருந்த நம்பிக்கை சற்றேறக்குறைய முற்றிலும் அற்றுப்போயிருக்கலாம். இரட்சகர் அவனுக்கிரங்கி தாம் அவனுக்கு அளிக்கப்போகிற நன்மையின் பேரில் அவன் அபேட்சைகொள்ளும்படிக்கு இந்தக் கேள்வியைக் கேட்கிறார். வியாதியின் கொடிய வருத்தத்தினாலும் மனிதருடைய அசட்டையினாலும் அவன் இருதயம் வாடித் தொய்ந்துபோயிருந்த சமயத்தில், இந்த அன்னியன் தனக்கு இரங்கி தன் காரியத்தில் மனம்வைத்து தனக்குக் கூடியஅளவில் உதவிசெய்வாரென்று அறிந்தால் இவனுக்குள் எவ்வளவு சந்தோஷமிருக்கும்! இவருடைய அன்பை அறிந்தபிறகு இவருடைய வல்லமையை அறிந்துகொள்ளத் தகுதியுள்ளவனானான். இதுவே அவனில் பிறகு வெளிப்பட்ட விசுவாசத்திற்குக் காரணமாயிருந்தது. இவன் சொன்ன மறுமொழியில்

இன்னும் அவன் சொஸ்தமாகாததற்குக் காரணம் அடங்கியிருந்தது. தண்ணீர் கலக்கப்படும்பொழுது இவனைக் கொண்டுபோய் விடுகிறதற்கு ஒருவருமில்லை. இடம் நெருக்கமாயிருக்கிறதினாலேயோ, வேறெந்த முகாந்தரத்தினாலேயோ முந்திவந்தவன் சுகமானவுடனே சலத்தினாலுண்டான நன்மை நீங்கிப்போனபடியினாலும், இவனைக் கொண்டுபோய் விடுவதற்குத் துணையாள் ஒருவரும் இராததினாலும் ஒருபொழுதும் இந்த நன்மையைப் பெறக்கூடாதவனாயிருந்தான். "நான் போகிறதற்குள்ளே வேறொருவன் எனக்குமுந்தி இறங்கிவிடுகிறான் என்றான்." இவன் வீணாய்க் காத்திருந்த காலம் முடிவடைய இப்போது நேரம் வந்தது. இயேசுவானவர் "எழுந்திரு, உன் படுக்கையை எடுத்துக் கொண்டு நட" என்றார். அந்த வார்த்தையோடு வல்லமையும் புறப்பட்டதென்று விசுவாசித்து, பரீட்சையினாலே அப்படியே இருந்ததென்று கண்டான். உடனே அந்த மனுஷன் சொஸ்தமாகி, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு, நடந்துபோனான். இந்த மனிதனுக்கும் பேதுருவின் வார்த்தையால் குணமடைந்த சப்பாணிக்கும் ஒரு வித்தியாசமிருக்கிறது. அவன் சொஸ்தமானபோது நடந்து குதித்து தேவனைத் துதிசெய்தான். அவன் சப்பாணியாயிருந்தது ஒரு விசேஷித்த பாவத்தினால் வந்ததல்ல. ஏனெனில் அவன் தன் தாயின் வயிற்றிலிருந்து பிறக்கும்போதே சப்பாணியாய்ப் பிறந்தான். இவனோ முன் செய்த பாவத்தினாலே இப்படி வியாதிப்பட்டபடியால், அதற்குக் குறிப்பாக படுக்கையை எடுத்துக்கொண்டு போகவேண்டியிருந்தது.

10-ம் வசனத்தில் சொல்லப்பட்டிருக்கிற யூதர்கள் சாதாரண சனங்கள் அல்ல. யூதசனங்களுக்குத் தலைமையான சனதரீம் சங்கத்தார். இவர்களை யோவான் தன் சுவிசேஷத்தில் அடிக்கடி யூதர்களென்று அழைக்கிறார் (யோவா. 1. 19; 7. 1; 9. 22; 18. 12, 14.). இவர்கள் இயேசுவானவர் சொன்னபடி இவன் படுக்கையை எடுத்துக்கொண்டுபோனதை குற்றமாக எண்ணினார்கள். ஏனெனில் இந்த அற்புதம் நடந்த அந்தநாள் ஓய்வு நாளாயிருந்தது. அந்த நாளில் சுமை கொண்டுபோகிறது யூத

ருக்குள் தகாததாக எண்ணப்பட்டிருந்தது. இப்படி எண்ணுவதற்குப் பழைய ஏற்பாட்டின் பிரமாணம் மாத்திரமல்ல, ஒரு தீர்க்கதரிசன வியாக்கியானமும் அவர்களுக்கு ஆதாரமாயிருந்தது (எரே. 17. 21, 22.). ஆனால் இந்த மனுஷன் படுக்கையைக் கொண்டுபோனது ஒரு வேலையல்ல, இவன் சொஸ்தமான சங்கதியோடு சேர்ந்த ஒரு காரியந்தான். உண்மையாகவே சொஸ்தமானதற்கு தனக்கும் மற்றவர்களுக்கும் இதுவே பலத்த அத்தாட்சி. ஓய்வுநாளில் சொஸ்தமாக்குகிறது நியாயமானால், சொஸ்தமாக்குதலோடு சம்பந்தப்பட்டிருக்கிறதையும் செய்கிறது நியாயந்தானே. ஓய்வுநாட்களில் நன்மைசெய்வதோ, தீமைசெய்தோ, எது நியாயம் என்பதைப் பற்றியே இரட்சகருக்கும் அவருடைய விரோதிகளுக்கும் எப்போதும் வாக்குவாதமிருந்தது (லூக். 6. 9.). தீமைசெய்வது பாவமானபடியால் தமது பிதாவாகிய தேவனைப்போல நன்மைசெய்துகொண்டுவருவதினாலேயே, ஓய்வுநாட்களைச் செம்மையாய்க் கைக்கொள்ளலாமென்று இரட்சகர் தெளிவாய்க் காட்டினார். படுக்கையை எடுத்துக்கொண்டு போகும்படி அந்த மனிதனுக்குச் சொன்னதினாலே அல்ல, இந்தக் காரியங்களைத் தாமாய்ச் செய்தபடியினாலே அவரைத் துன்பப்படுத்த வகைபார்த்தார்கள். அவனைக் கண்டவுடனே, ஓய்வுநாளாயிருக்கிறபடியால் நீ படுக்கையை எடுத்துக்கொண்டுபோவது நியாயமல்லவென்றார்கள். யாத். 22. 12; 31. 13–17; 35. 2, 3. எண். 15. 32—36. நெகே. 13. 15—22. முதலிய வாக்கியங்களிலிருந்து பரிசேயர் அநேக நுண்ணிய கடமைகளையும், நுட்பமான வித்தியாசங்களையும் ஏற்படுத்திக்கொண்டபடியால் விதிக்கப்பட்டது இன்னது விலக்கப்பட்டது இன்னது என்று சாதாரண ஜனங்களுக்கு திட்டமாய்த் தெரியாதிருந்தது. திருஷ்டாந்தமாக லூக். 13. 15, 16. பார். இந்த வீணான வித்தியாசங்களைக்குறித்து இந்த மனுஷன் யோசித்தவனல்ல. தனக்கு இரக்கம் காண்பித்து தன்னை சொஸ்தப்படுத்தினவர் செய் என்று சொன்னதை தான் செய்தபடியால் அதுவே தனக்குப் போந்த நியாயமென்று மாத்திரம் அறிந்திருந்தான். என்னை சொஸ்தமாக்கினவர்,

உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடவென்று எனக்குச் சொன்னார் என்றான். உலகத்தாருடைய வழக்கங்களுக்கும் ஆசாரங்களுக்கும் அவர்கள் ஏற்படுத்தும் சட்டங்களுக்கும் எதிரிடையாக ஒரு கிறிஸ்தவன் நடக்கிறதைப் பார்த்து, உலகத்தார் நிந்தித்துக் குற்றப்படுத்தும்போது இப்படி அவர்களுக்கு உத்தரவுசொல்வது மிகவும் தகுதியாயிருக்கும்.

இப்படி இவனைக் குற்றஞ்செய்யப்பண்ணினவர் அதிகக் குற்றவாளியானதால் அதிக தண்டனைக்கு ஏதுவானவரென்று எண்ணி, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடவென்று உன்னுடனே சொன்ன மனுஷன் யார் என்று கேட்டார்கள். இவர்களுடைய துரோக சிந்தை இவர்கள் கேட்ட கேள்வியிலேயே விளங்குகிறது. இவன் சொன்னதை வைத்துக்கொண்டு, உன்னைச் சொஸ்தமாக்கினது யாரென்று கேளாமல் அவர் இன்னாரென்று அவர்களுக்குத் தெரிந்திருந்தபடியால், தங்கள் தோற்றத்தின்படி நியாயப்பிரமாணத்திற்கு விரோதமான கட்டளையைக் கொடுத்தவன் தேவனிடத்திலிருந்து வந்திருக்கமாட்டான் என்று மற்றவர்கள் எண்ணும்படிக்கு இப்படிக் கேட்டார்கள். இதினால் அந்த மனுஷன் இரட்சகரைப் பற்றிக்கொண்டிருந்த நல்லெண்ணத்தை விட்டுவிடவும் இவர்கள் வகைதேடினார்கள். அப்படி அவன் நல்லெண்ணங்கொண்டிராவிட்டால், அவருடைய வார்த்தைக்குக் கீழ்ப்படியமாட்டான். ஆனால் அவன் தன்னை சொஸ்தப்படுத்தினவர் இன்னாரென்று காட்டக்கூடாததாயிருந்தது. அவ்விடத்தில் ஜனக்கூட்டம் இருந்தபடியினாலே இரட்சகர் விலகி மறைந்துபோனார். மற்றவர்களுடைய புகழ்ச்சி தமக்கு வேண்டுவதில்லையென்று எண்ணிப் போய்விட்டாரென்றல்ல, ஜனக்கூட்டமிருந்தது அவர் லேசாக கடந்துபோவதற்கு ஏதுகரமாயிருந்ததென்பதே இதன் பொருள். அவர் ஜனக்கூட்டத்திற்குள் மறைந்து காணாமற்போனார். எப்பொழுதும் ஜனங்கள் நம்முடைய இரட்சகர் பட்சமாயிருந்தபடியால், யூதர்களுடைய தலைவர் அவரை வருத்தப்படுத்தக்கூடாதிருந்தது. மேலும் அவருடைய நேரமும் இன்னும் வரவில்லை.

பிறகு இயேசுவானவர் அவனை தேவாலயத்திலே கண்டு பேசினது அவனுக்கு நன்மையாயிருந்தது. அங்கே தனக்குக் கிடைத்த நன்மைக்காகத் துதிசெலுத்தப்போயிருப்பான் (ஏசா. 38. 22. அப். 3. 8.). ஆனால் சரீரசுகத்தின்மூலமாய் அவன் ஆத்துமாவுக்கு நன்மைசெய்ய நோக்கங்கொண்டிருந்த கர்த்தர் 38 வருஷமாக அவன் செய்துவந்த யாவும் தமக்குத் தெரியுமென்று காண்பித்து, அவனை எச்சரிக்கும்படிக்கு இந்தச் சமயத்தைத் தேடுகிறார். இதோ, நீ சொஸ்தமானாய், அதிக கேடானதொன்றும் உனக்கு வராதபடி இனிப் பாவஞ்செய்யாதே என்றார். கர்த்தருடைய தண்டனையின் கொடூரத்தை இதினால் அறிகிறோம். இந்த வியாதி வாலிபத்திலே தொடங்கி விருத்தாப்பியத்தில் அவனைவிட்டு நீங்கினபடியால், அவனுடைய புருஷதத்துவம் முழுவதையுங் கேவலமாக்கிவிட்டது. மறுபடியும் இவன் பாவஞ்செய்வானாகில் இதைவிட அதிக தண்டனை வருமென்று எச்சரிக்கிறார். இவன் முன் செய்த பாவமின்னதென்று நமக்குத் தெரியாவிட்டாலும் அவனுக்கு நன்றாய்த் தெரிந்திருந்தது. அவனுடைய மனச்சாட்சி இந்த எச்சரிப்பை அவனுக்குத் தெளிவாக்கும். கிறிஸ்துவானவர் அவனுடைய வியாதியை அவன் செய்த பாவத்தோடு சம்பந்தப்படுத்திப் பேசினாரென்பதுமாத்திரம் நமக்குத் தெரியும். மனுஷர்களுடைய குற்றத்திற்குத் தக்கதாய் இவ்வுலகத்தில் தண்டனை கிடைக்குமென்று சொல்வது நம்முடைய அனுபவத்திற்கு விரோதமாயிருப்பதுமல்லாமல், இரட்சகரும் அப்படி எண்ணுவது தகாதென்று கண்டித்திருக்கிறார். கடைசிநாளிலே எல்லாம் ஒழுங்குபடும்போதுதான் சரியான தண்டனை செலுத்தப்படும். ஆகிலும் இவ்வுலகத்திலேயே பாவத்துக்குரிய தண்டனை நடந்தேறிவருகிறதென்பதை நாம் மறுக்கக்கூடாது. இப்படிக் கர்த்தர் நமக்குச் சமீபமாயிருந்து சரியானபடி அப்போதைக்கப்போது தண்டித்துவருகிறாரென்பது நமக்குப் பிரியமில்லாத போதனையாயிருந்தபோதிலும், அது நிச்சயமாகவே உண்மையுள்ளதென்பதற்கு யாதொரு சந்தேகமில்லை. அநேகருடைய சொந்தப் பாவமே அவர்களுக்குத் துன்பமாய் வர்த்

தித்துக் கடைசியிலே அவர்களை அழிவுக்குக் கொண்டுவருகிற துண்டு. பாவத்திற்கும் அதினாலுண்டாகும் ஆக்கினைக்கும் இருக்கும் ஐக்கியத்தைத் தெளிவாய் அறிந்துகொள்ளும்படிக்கு ஒருவன் தான் செய்த தீமையைப்போலொத்த தீமையை மற்றவர்கள் தனக்குச் செய்வதினால் தன் பாவத்திற்குரிய தண்டனையை அடைவதுண்டு (நியா. 1. 6, 7. ஆதி. 42. 21.). மற்றவர்களை மோசம்போக்குகிறவன் யாக்கோபைப்போல மற்றவர்களால் மோசம்போவதுண்டு (ஆதி. 27. 19—24; 29. 23; 31. 7; 37. 32.). மற்றவர்களுடைய சமுசார சந்தோஷத்தைக் குலைக்கிறவன் தாவீதைப்போல தனக்கு மிகவும் அருமையான பந்துசனங்களால் அதிக துன்பத்தை அடைகிறதுண்டு (2 சாமு. 11. 4; 13. 14; 16. 22.). மற்றவர்களுக்கு முடிவாக வருகிற தண்டனையைக் கண்டு அநேகர் பாவத்திற்குரிய ஆக்கினை தாமதியாதென்று எச்சரிப்படைகிறதுண்டு. எஸ்ரயேலனாகிய நாபோத்தின் தோட்டத்தில்தான் ஆகாபுடைய பேரன் கொலை செய்யப்படுகிறான்.

அப்பொழுது அந்த மனிதன் போய் தன்னை குணமாக்கினவர் இயேசு என்று அறிவித்தான். ஜனக்கூட்டத்தில் அவரை அறிந்துகொள்ளாதவன் தேவாலயத்தில் அவரை அறிந்துகொண்டான். அகுஸ்தீன் சொல்லுகிறபடி நாம் தனிமையாய் ஆவியில் அமைதலாய் இருக்கும்பொழுதுதான் கர்த்தர் தம்மை நமக்கு வெளிப்படுத்துகிறார். சமீபத்தில் நின்றவர்களால் அவருடைய பேரை அறிந்திருப்பான். சிலர் நினைக்கிறபடி அவர் பேரில் மற்றவர்களுக்கிருந்த விரோதத்தை அதிகப்படுத்தி அவருக்குத் தீமைசெய்யவேண்டுமென்று யூதருக்கு அதை அறிவித்தானென்று நாம் எண்ணக்கூடாது. அப்படி எண்ணுகிறதற்குச் சரித்திரத்தில் கொஞ்சமாவது இடையில்லை. தன்னை சொஸ்தமாக்கின பரிகாரியை தேச அதிகாரிகளுக்கு முன்பாகப் புகழ்ந்து நன்றியறிதலோடே அவரை மேன்மைப்படுத்தவேண்டுமென்றே அப்படிச் செய்தான். அவரை தீர்க்கதரிசி அல்லது மேசியாவென்று அநேகர் எண்ணியிருந்தபடியால், அவருடைய நாமத்தின் புகழ்ச்சியை இவன் பிரஸ்தாபப்படுத்தினால்

அதுவே அவர்களுடைய வாயை அடைத்துப்போடுமென்று அவன் எண்ணியிருக்கலாம். மற்றப்படி அவருக்குத் தீமை செய்ய நோக்கமாய் இவன் சொல்லியிருப்பானனால், கிறிசொஸ்தம் விநோதமாய்ச் சொல்லியிருக்கிறபடி தன்னை குணமாக்கினவர் இயேசுவென்று சொல்லாமல் தன் படுக்கையை எடுத்துக்கொண்டு போகச்சொன்னவர் இயேசுவென்று அறிவித்திருப்பான்.

அவன் சொன்னது அவர்களுடைய கோபத்தை அமர்த்தவில்லை, அதிகமாக்கிற்று. திவ்விய காரியங்கள் வெளிப்படும் போது இப்படியே நடக்கிறது. அது தன்னிடம் இழுத்துக் கொள்ளாததைத் தன்னைவிட்டு விலக்குகிறது. கீழ்ப்படிதலுக்குக் கொண்டுவராததைப் பகையாக்குகிறது. அவரவனை ஓய்வு நாளை மீற அதாவது, அதைக்குறித்து அவர்கள் வைத்திருந்த கட்டுகளைத் தள்ளச்செய்ததுமல்லாமல், தாமே அவைகளைத் தள்ளினதால், அதிகமாய்க் கோபமடைந்து கொலைசெய்ய வகை தேடினார்கள். அவரோ தீமைக்கு நன்மைசெய்கிறவரானபடியால், ஓய்வுநாளின் தன்மையையும் பிதாவுடைய ஒரே பேறான குமாரனாகிய அவரோடு அது சம்பந்தப்பட்டிருந்த வகையையும் அவர்களுக்கு விளக்கிக் காட்டும்படி வகைதேடுகிறார். சிருஷ்டிப்பின் கிரியையை ஒவ்வொரு நாழிகையும், ஒவ்வொரு நிமிஷமும் தாங்கிக்கொண்டுவருகிற பிதாவைவிட அவர் ஓய்வு நாளை அதிகமாய் மீறவில்லையென்று நியாயஞ்சொல்லுகிறார். என் பிதா இதுவரைக்கும் கிரியைசெய்துவருகிறார். நானும் கிரியைசெய்துவருகிறேன் என்றார். அதாவது, "என் கிரியை அவருடைய கிரியையின் சாயல்தானே. வேலையை முற்றிலும் விட்டுவிடுகிறது ஓய்வுநாளின் ஆசரிப்புக்கு அவசியமானதல்ல. உலகவேலைகளும் தொல்லைகளும் நம்மைப் பிடித்திருக்கிறபடியால், அவைகளிலிருந்து நமது மனதை இழுத்து வேறுசிந்தையில் வைக்கிறது வருத்தமென்று கண்ட கர்த்தர் வேலையைவிட்டு ஒழிந்திருக்கவேண்டுமென்று கற்பித்திருக்கிறார். மேலான அலுவல் நமக்கிருக்கும்போது நம்முடைய உலக அலுவலை ஒழித்துவிடவேண்டும். அவைகளில் நம்மு

டைய மனது சிதறியிருந்தால், அவைகளிலிருந்து மனதைப் பிரிக்க அதற்கேற்ற காலங்களும் வேண்டும்; ஆனல் பிதா வோடே ஒன்ருய் இருக்கப்பட்டவருக்கு அப்படி வேண்டுவ தில்லே. இளைப்பாறுதலும் வேலையும் ஒன்றுக்கொன்று விரோ தப்படாமல் அவரிலும் பிதாவிலும் இரண்டும் ஒன்ருகவே இருக்கிறது." இப்படி அவர் மாறுத்தரம் சொன்னது அவரு டைய சத்துருக்களுக்கு அதிக எரிச்சலேயுண்டாக்கிற்று. அவர் ஓய்வுநாளே மீறினதாகமாத்திரமல்ல, தேவதூஷணஞ் சொன்ன தாகவும் பாவித்துக்கொண்டார்கள். ஆரியர் (Arians) அறிந்து கொள்ளாததை யூதர் அறிந்துகொண்டபடியால், அவர் தம்மைப் பிதாவுக்குச் சமானமாக்கி தம்மை தேவனென்று சொல்லிக்கொ ண்டாரென்று அவரை அதிகமாகக் கொலேசெய்ய வகைபார்த் தார்கள். யோவா. 7. 21ல் இரட்சகர் ஒரு கிரியைசெய்தேன் என்று சொல்லியிருக்கிறது இந்த அற்புதந்தான் என்று சிலர் எண்ணுகிருர்கள். 31-ம் வசனத்தில் சொல்லியபடி வேறு அற்புதங்களேயும் அவர் செய்தபடியால் கொஞ்சக்காலத்துக்கு முன்செய்த அற்புதத்தைக்குறித்துப் பேசாமல், வேருெரு அற் புதத்தைக்குறித்துப் பேசுகிருரென்றே நாம் எண்ணவேண்டும். இந்த அற்புதத்திற்குப் பிறகு இரட்சகர் செய்த பிரசங்கத்திலே பிதாவுக்கும் குமாரனுக்கும் இருக்கிற சம்பந்தங்களே வெகு தெளிவாக எடுத்துச்சொல்லுகிருர். ஆரியர், செபெல்லியர் என்றவர்களுடைய கொள்கைக்கு எதிரிடையாக விசுவாசத் தின் தூண்களே வெகு உறுதியாக நிலேநிறுத்துகிருர். அதைக் குறித்து நாம் இங்கே ஒன்றுஞ் சொல்லமாட்டோம்.

இந்த அற்புதத்தில் கண்டிருக்கிற குளத்தைப்பற்றிய ஞானக் கருத்தைக்குறித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்லுவோம். சிலர் இந்த பெதஸ்தா குளத்திஞல் உண்டாகிற நன்மை ஞானஸ் நானத்திஞலுண்டாகிற நன்மையை முன்குறிக்கிறதென்றும், இதிஞலுண்டான சரீரசுகமானது தண்ணீரால் குறிக்கப்பட்ட ஆத்துமத்திற்குரிய மேலான சுகத்திற்கு அடையாளமாயிருந்த தென்றும் சொல்லுகிருர்கள். மேலும் அந்தக் குளத்திஞல் உண்டான நன்மைகள் பழைய ஏற்பாட்டிஞலுண்டான பிர

16

யோசனங்களுக்கு முன்குறிப்பாயிருந்ததென்றும், புதிய ஏற்பாட்டின் நன்மைகளோடு அவைகளை ஒத்துப்பார்க்கும்போது அவைகளுடைய கேவலமும் குறைவும் வெளிப்படுகிறதென்றும் சொல்லுகிறார்கள். தடவைக்கு ஒருவன்தான் சொஸ்தமானான். ஒருவன் சொஸ்தமான அநேககாலத்திற்குப்பிறகு வேறொருவன் சொஸ்தமானான். எல்லாருக்கும் இடமில்லை. எப்பொழுதும் போகத்தக்க ஊற்று திறந்திருந்ததில்லை. உலகத்தில் உள்ள யாவருக்குமல்ல, ஒரு ஜனக்கூட்டத்தாருக்குமாத்திரம் அது உபயோகமாய் இருந்தது. புதிய ஏற்பாட்டின் நன்மைகளோ யாவருக்கும் எப்பொழுதும், இவ்வுலகத்திற்கு மாத்திரமல்ல, மறுமைக்கும் உபயோகமுள்ளதாய், இடுக்கமாகவல்ல, தாராளமாய் வைக்கப்பட்டிருக்கிறது.

கிறிசொஸ்தம் என்பவர் ஒரு ஈஸ்தர்பண்டிகையில் அநேகர் ஞானஸ்நானம் பெற்றபோது பண்ணின ஒரு பிரசங்கத்தில் சொன்னதைக் கவனியுங்கள். "யூதருக்குள்ளே ஒரு குளம் இருந்தது. அதின் உபயோகத்தைக் கவனித்தால் யூதருடைய தரித்திரமும் நம்முடைய ஐசுவரியமும் வெளியாகும். ஒரு தேவதூதன் அதின் தண்ணீரைக் கலக்கினபிறகு முந்தி அதில் இறங்கினவன் சொஸ்தமடைந்தான்; தேவதூதர்களுக்கு ஆண்டவரானவரோ யோர்தான்நதியில் இறங்கி சர்வலோகத்தாரும் சுகமடைவதற்குத் தண்ணீரை பிரதிஷ்டையாக்கினார். அங்கே முந்தி இறங்கினவனுக்குப் பின்னிறங்கினவன் சுகமானதில்லை. இங்கே இரண்டாவது மூன்றாவது நான்காவது இறங்கினாலும், ஆயிரம்பேர் இறங்கினாலும், உலகம் முழுவதும் அதற்கு உட்பட்டாலும் அதின் நன்மை குறைகிறதுமில்லை, அதின் பிரயோசனம் அற்றுப்போகிறதுமில்லை, அதின் ஊற்று திட்டாவதுமில்லை, அதினுடைய தயாளம் வற்றுகிறதுமில்லை." நியாயப்பிரமாணம் பாவத்தை வெளிப்படுத்துமேயொழிய பாவத்தை நீக்கமாட்டாது, பிணியை அறிந்துகொள்ளச் செய்யுமேயொழிய அதைச் சொஸ்தமாக்கமாட்டாது, சுயநீதியாகிய முடுக்குகளிலிருந்து இழுக்குமேயொழிய நிச்சயமான அடைக்கலத்தை நமக்குத் தரமாட்டாது என்று ரூபிக்கவந்த அகுஸ்தீன்

என்பவர் அந்த ஐந்து மண்டபங்களை நியாயப்பிரமாணத்திற்குத் திருஷ்டாந்தமாகச் சொல்லுகிறார். அவைகள் அங்கே தங்கின வியாதிஸ்தரை வெளிப்படுத்தினதேயொழிய அவர்களைச் சொஸ்தமாக்கினதில்லை. ஏனெனில் குருடர், சப்பாணிகள், சூம்பின உறுப்புடையவர்கள் முதலான அநேக வியாதிக்காரர் அங்கே படுத்துக்கொண்டிருந்தார்கள். சொஸ்தமாக்கும் வல்லமை தோன்றுமுன் அந்தத் தண்ணீரை அசைக்கவேண்டியிருந்தது, கிறிஸ்துவானவர் வந்தபோது யூதர்களுக்குள் உண்டாயிருந்த கலக்கத்திற்கு அடையாளமாயிருந்தது. இறங்கினவன் சொஸ்தமானதுபோல அவர் மனிதாவதாரமெடுத்ததை விசுவாசிக்கிறவன் அவருடைய தாழ்மையான நிலையைக்குறித்து இலச்சையடையாதவன் என்னவியாதியுடையவனாயிருந்தபோதிலும் சுகமடைவான். மேலும் 38 வருஷமாய் அந்தக் குளத்திற்குச சமீபமாய்க் காத்திருந்தும் சுகமடையாமற்போனதுபோல நாம் திருச்சபையைச் சேர்ந்தாலும், வேதவசனத்தைக் கேட்டாலும், ஞானஸ்நானம்பெற்றாலும், ஞானமானதிரவியங்களை வாங்கி உட்கொண்டாலும், இரட்சிப்புக்கு எவ்வளவு சமீபித்திருந்தாலும், கிறிஸ்து இயேசுவின் இரத்தத்தால் கழுவப்படாவிட்டால் இரட்சிக்கப்படமாட்டோம் என்பது நிச்சயம்.



# 16. ஐயாயிரம்பேர் அற்புதமாய்ப் போஷிக்கப்பட்டது.

---

*மத்தேயு*, 14. 15—21.

"சாயங்காலமானபோது, அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்து: இது வனாந்தரமான இடம், நேரமுமாயிற்று; ஜனங்கள் கிராமங்களுக்குப் போய்த் தங்களுக்கு போஜனபதார்த்தங்களைக் கொள்ளும்படி அவர்களை அனுப்பிவிடவேண்டும் என்றார்கள். இயேசு அவர்களை நோக்கி: அவர்கள் போகவேண்டுவதில்லை; நீங்களே அவர்களுக்கு போஜனங்கொடுங்கள் என்றார். அதற்கு அவர்கள்: இங்கே எங்களிடத்தில் ஐந்து அப்பமும் இரண்டு மீன்களுமேயல்லாமல், வேறொன்றும் இல்லை என்றார்கள். அவைகளை என்னிடத்தில் கொண்டுவாருங்கள் என்றார்.

அப்பொழுது, அவர் ஜனங்களைப் புல்லின்மேல் பந்தியிருக்கச் சட்டளையிட்டு, அந்த ஐந்து அப்பங்களையும், அந்த இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்தை அண்ணாந்துபார்த்து, ஆசீர்வதித்து, அப்பங்களைப் பிட்டுச் சீஷர்களிடத்தில் கொடுத்தார்; சீஷர்கள் ஜனங்களுக்குக் கொடுத்தார்கள். எல்லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள்; மீதியான துணிக்கைகளைப் பன்னிரண்டு கூடைநிறைய எடுத்தார்கள். ஸ்திரீகளும் பிள்ளைகளும் தவிர, சாப்பிட்ட புருஷர்கள் ஏறக்குறைய ஐயாயிரம் பேராயிருந்தார்கள்,"

*மாற்கு*, 6. 35—44.

"வெகுநேரம் சென்றபின்பு, அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்து: இது வனாந்தரமான இடம், வெகுநேரமுமாயிற்று; புசிக்கிறதற்கும் இவர்களிடத்தில் ஒன்றுமில்லை; ஆகையால் இவர்கள் சுற்றியிருக்கிற கிராமங்களுக்கும் ஊர்களுக்கும் போய், தங்களுக்காக அப்பங்களை வாங்கிக்கொள்ளும்படி இவர்களை அனுப்பிவிடவேண்டும் என்றார்கள். அவர் அவர்களை நோக்கி: நீங்களே அவர்களுக்கு போஜனங்கொடுங்கள் என்றார். அதற்கு அவர்கள்: நாங்கள் போய், இருநூறு பணத்துக்கு அப்பங்களை வாங்கி இவர்களுக்குப் புசிக்கும்படி கொடுக்கக்கூடுமோ என்றார்கள். அதற்கு அவர்: உங்களிடத்தில் எத்தனை அப்பங்களுண்டு, போய்ப்பாருங்கள் என்றார். அவர்கள் பார்த்துவந்து: ஐந்து அப்பங்களும், இரண்டு மீன்களும் உண்டு என்றார்கள்.

அப்பொழுது எல்லாரையும் பசும் புல்லின்மேல் பந்திபந்தியாக உட்காரவைக்கும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டார். அப்படியே வரிசை வரிசையாய், நூறுநூறுபேராகவும் ஐம்பதைம்பதுபேராகவும், உட்கார்ந்தார்கள். அவர் அந்த ஐந்து அப்பங்களையும், அந்த இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்தை அண்ணாந்துபார்த்து, ஆசீர்வதித்து, அப்

பங்களைப் பிட்டு, அவர்களுக்குப் பரிமாறும்படி தம்முடைய சீஷர்களிடத்தில் கொடுத்தார். அப்படியே இரண்டு மீன்களையும் எல்லாருக்கும் பங்கிட்டார். எல்லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள். மேலும் அப்பங்களிலும் மீன்களிலும் மீதியான துணிக்கைகளைப் பன்னிரண்டு கூடைநிறைய எடுத்தார்கள். அப்பம் சாப்பிட்ட புருஷர் ஏறக்குறைய ஐயாயிரம்பேராயிருந்தார்கள்."

லூக்கா, 9. 12—17.

"சாயங்காலமாகிறபோது, பன்னிருவரும் சேர்ந்துவந்து, அவரை நோக்கி: நாம் இருக்கிற இடம் வனாந்தரமாயிருக்கிறது, சுற்றியிருக்கிற ஊர்களிலும் கிராமங்களிலும் ஜனங்கள் போய்த் தங்கி, போஜனபதார்த்தங்களைச் சம்பாதித்துக்கொள்ளும்படி அவர்களை அனுப்பிவிடவேண்டும் என்றார்கள். அவர் அவர்களை நோக்கி: நீங்களே அவர்களுக்கு போஜனங்கொடுங்கள் என்றார். அதற்கு அவர்கள்: எங்களிடத்தில் ஐந்து அப்பங்களும் இரண்டு மீன்களுமாத்திரமுண்டு, இந்த ஜனங்களெல்லாருக்கும் போஜனங்கொடுக்கவேண்டியதானால், நாங்கள் போய் வாங்கிக்கொண்டு வரவேண்டுமே என்றார்கள். ஏறக்குறைய ஐயாயிரம் புருஷர் இருந்தார்கள். அவர்களைப் பந்திக்கு ஐம்பது ஐம்பதுபேராக உட்காரும்படி சொல்லுங்கள் என்று தம்முடைய சீஷர்களுக்குச் சொன்னார். அவர்கள் அந்தப்படியே எல்லாரையும் உட்காரும்படி செய்தார்கள். அப்பொழுது அவர் அந்த ஐந்து அப்பங்களையும் அந்த இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்தை அண்ணாந்துபார்த்து, அவைகளை ஆசீர்வதித்து, பிட்டு, ஜனங்கள்முன் வைக்கும்படி சீஷர்களிடத்தில் கொடுத்தார். எல்லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள். மீதியான துணிக்கைகள் பன்னிரண்டு கூடைநிறைய எடுக்கப்பட்டது."

யோவான், 6. 5—14.

"இயேசு தம்முடைய கண்களை ஏறெடுத்து, திரளான ஜனங்கள் தம்மிடத்தில் வருகிறதைக் கண்டு, பிலிப்புவை நோக்கி: இவர்கள் சாப்பிடத்தக்கதாக அப்பங்களை எங்கே கொள்ளலாம் என்று கேட்டார். தாம் செய்யப்போகிறதை அறிந்திருந்தும், அவனைச் சோதிக்கும்படி இப்படிக் கேட்டார். பிலிப்பு அவருக்குப் பிரதியுத்தரமாக: இவர்களில் ஒவ்வொருவன் கொஞ்சங்கொஞ்சம் எடுத்துக்கொண்டாலும், இருநூறு பணத்து அப்பங்களும் இவர்களுக்குப் போதாதே என்றான். அப்பொழுது அவருடைய சீஷரிலொருவனும், சீமோன் பேதுருவின் சகோதரனுமாகிய அந்திரேயா அவரை நோக்கி: இங்கே ஒரு பையன் இருக்கிறான், அவன் கையில் ஐந்து வாற்கோதுமை அப்பங்களும் இரண்டு மீன்களும் உண்டு, ஆனாலும் அவைகள் இத்தனை ஜனங்களுக்கு எம்மாத்திரம் என்றான்.

இயேசு: ஜனங்களை உட்காரவையுங்கள் என்றார். அந்த இடம் மிகுந்த புல்லுள்ளதாயிருந்தது. பந்தியிருந்த புருஷர்கள் ஏறக்குறைய

ஐயாயிரம்பேராயிருந்தார்கள். இயேசு அந்த அப்பங்களை எடுத்து. ஸ்தோத்திரம்பண்ணி, சீஷர்களிடத்தில் கொடுத்தார்; சீஷர்கள் பந்தியிருந்தவர்களுக்குக் கொடுத்தார்கள்; அப்படியே மீன்களையும் அவர் எடுத்து அவர்களுக்கு வேண்டியமட்டும் கொடுத்தார்.

அவர்கள் திருப்தியடைந்தபின்பு, அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி: ஒன்றும் சேதமாய்ப் போகாதபடிக்கு மீதியான துணிக்கைகளைச் சேர்த்துவையுங்கள் என்றார். அந்தப்படியே அவர்கள் சேர்த்து, வாற்கோதுமை அப்பங்கள் ஐந்தில் அவர்கள் சாப்பிட்டு மீதியான துணிக்கைகளினாலே பன்னிரண்டு கூடைகளை நிரப்பினார்கள்.

இயேசு செய்த அற்புதத்தை அந்த மனுஷர் கண்டு: மெய்யாகவே இவர் உலகத்தில் வருகிறவரான தீர்க்கதரிசி என்றார்கள்.''

---

யோவான்ஸ்நானகன் கொலைசெய்யப்பட்டபிறகு, இரட்சகர் வனாந்தரமான ஓரிடத்தில் தனித்துப்போயிருந்த சமயத்தில், இந்த அற்புதம் நடந்ததாக மத்தேயு எழுதியிருக்கிறார். மாற்கும், லூக்காவும் இரட்சகர் தனித்திருந்ததற்கு ஸ்நானகனுடைய மரணத்தைக் காரணமாகச் சொல்லாவிட்டாலும், அதோடு சேர்ந்ததாகத்தான் இந்த அற்புதத்தை எழுதியிருக்கிறார்கள். மாற்கு இப்படி இரட்சகர் தனித்திருப்பதற்கு வேறொரு காரணஞ் சொல்லுகிறார். சீஷர்கள் இரட்சகர் சொன்னபடியே தங்கள் வேலையை முடித்துத் திரும்பிவந்ததினாலே சரீர ஆத்தும இளைப்பாறுதலடையும்படிக்கு, ஜனக்கூட்டத்தில் எப்பொழுதும் மற்றவர்களுக்கு நன்மைசெய்துகொண்டிருக்கிறதை விட்டு சற்றே ஓய்ந்திருக்கும்படி தனித்துப்போனதாகச் சொல்லுகிறார். இந்த வனாந்தரமான இடத்திலும் ஜனங்கள் அவரைப் பின்சென்றார்கள் (மாற். 6. 33.). கால்நடையாய் என்பதைக் கரைவழியாய் என்று திருப்பினால் செம்மையாயிருக்கும். இரட்சகரோ கடல்வழியாய்ப் போனார். இவர்கள் அதிகம் சுற்றிப்போகவேண்டியிருந்தபோதிலும் அவருக்கு முன்னே இவர்கள் போனபடியாலும், இவர்கள் திரளாய்க்கூடி அவருக்காகக் காத்துக்கொண்டிருந்தபடியாலும், அவர்கள் வந்தது இவருடைய நோக்கத்திற்கு விரோதமாயிருந்தும் அவர்களை அங்கிகரித்துக்கொண்டு தேவனுடைய இராச்சியத்தைக்குறித்து அவர்களுடனே பேசி சொஸ்தமடையவேண்டுமென்று

இருந்தவர்களை சொஸ்தப்படுத்தினர். லூக். 9. 11. யோவா. 6. 4ல் பஸ்காபண்டிகை சமீபமாயிருந்ததென்று சொல்லியிருப்பது இவ்வளவு திரள் சனங்கள் கூடிவந்த காரணத்தை வெளிப்படுத்தும். இவர்கள் பண்டிகையை ஆசரிக்கும்படி எருசலேமுக்குப் போகிற ஜனங்கள்.

முதல் மூன்று சுவிசேஷகர் சொல்லியிருக்கிறதற்கும் யோவான் சொல்லியிருக்கிறதற்கும் அற்புதத்தின் துவக்கத்தில் ஒரு விகற்பங் காணப்படுகிறது. பொழுது அஸ்தமிக்கிற வேளையானபடியால் ஜனங்கள் அடுத்த கிராமங்களிற்போய் ஆகாரம்கொள்ள அனுப்புவிக்கவேண்டுமென்று சீஷர்கள் இரட்சகரிடம் சொன்னதாக அவர்கள் எழுதியிருக்கிறார்கள். யோவானே இரட்சகர் தாமே முதலாவது பிலிப்புவை நோக்கி: இவர்கள் சாப்பிடத்தக்கதாக அப்பங்களை எங்கே கொள்ளலாம் என்று கேட்டதாக எழுதியிருக்கிறார். இந்த விகற்பத்தை லேசாய் நீக்கிக்கொள்ளலாம். மத்தியானத்திலே ஜனங்களைக் கண்டஉடனே பிலிப்புவைப்பார்த்து இந்தக் கேள்வியைக் கேட்டு, சீஷர்கள் அதைக்குறித்து யோசிக்கும்படிசெய்து இவ்விதமாக தாம் செய்யப்போகிற ஆச்சரியமான கிரியைக்கு ஆயத்தப்படுத்தியிருக்கலாம். பிறகு அவர்கள் தங்கள் பெலஈனத்தை அறிந்து அறிக்கையிட்டவுடனே தமது வழக்கப்படியே தம்முடைய வல்லமையைக் காண்பித்து அவர்களுக்கு உதவிசெய்திருக்கலாம்.

யோவான் அப்போஸ்தலன் ஒருவரும் இரட்சகருடைய வார்த்தைகளைக்குறித்து தப்பான நோக்கங்கொண்டு அவருடைய ஞானத்தையும் வல்லமையையும் குறைவாய் எண்ணக்கூடாதென்று எப்போதும் கவலைப்பட்டவரானதால், பிலிப்புவைப் பார்த்து அவர் அப்படிக் கேட்டபோது செய்யவேண்டுவதை அறிந்திருந்தும் அவனைச் சோதிக்கும்படிக்கு இப்படிச் சொன்னார் என்கிறார். தம்மை மேசியா என்றும், மோசேயினாலும் தீர்க்கதரிசிகளாலும் முன் உரைக்கப்பட்டவர் என்றும் அறிக்கையிட்ட இவனுடைய விசுவாசத்தின் அளவு எவ்வளவென்று சோதிக்கும்படி இவனைக் கேட்டார் (யோவா. 1. 45.).

வனாந்தரத்தில் வானத்திலிருந்து அப்பத்தை மோசே கொடுத்த தையும், அநேகரை அற்புதமாய் எலிசா தீர்க்கதரிசி போஷித்த தையும் (2 இரா. 4. 43, 44.) அறிந்திருந்த இவன், தான் கிறிஸ்துவென்று அறிக்கையிட்ட இவர் மோசேமுதலான தீர்க்கதரிசிகளைவிட இந்த அவசரகாலத்தில் பெரியவராய் வெளிப்படுவதை உண்மையாய் விசுவாசித்தானோ இல்லையோ என்று சோதிக்க இப்படிக் கேட்டார். மற்ற அப்போஸ்தல ரைக் கேளாமல் இவனைமாத்திரம் கேட்டதைப்பற்றி சிரில் என்பவர் நியாயஞ்சொல்வதில், இவன் ஆத்துமகாரியங்களில் சற்று மந்தமுடையவனாயிருந்தபடியால் தகுந்தவிதமாய் அவ னுக்குப் படித்துக்கொடுக்கும்படிக்கு இப்படி அவனைக் கேட் டாரென்று சொல்வதுமல்லாமல் அவன் மந்தமுள்ளவனென்று ரூபிக்க, யோவா. 14. 8ல் இரட்சகரைப் பார்த்து நீர் பிதாவை எங்களுக்குக் காண்பிக்கவேண்டுமென்று அவன் கேட்டதை திருஷ்டாந்தமாகக் காண்பிக்கிறார். ஆனால் இப்படி அவனைக் கேட்டதற்கு வேறொரு நியாயமுண்டு. இவர்கள் பெத்சாயிதா பட்டணத்திற்குச் சமீபமாயிருந்தபடியால் அந்த இடத்திற் குரிய விசேஷங்கள் இவனுக்கே நன்றாய்த் தெரிந்திருக்கவேண் டும். ஏனெனில் இவன் பெத்சாயிதா பட்டணத்தான் (யோவா. 1. 44.). எந்த நோக்கத்தையிட்டு இரட்சகர் இவனைச் சோதித்தாலும், இந்தச் சமயத்தில் இவனுடைய விசுவாசம் வெ ளிப்படவில்லை. இரட்சகரோடு இவ்வளவுகாலமிருந்தபோதி லும் குமாரனில் பிதா இருக்கிறதை அறியாதேபோனான் (யோவா. 14. 9.). தன்னைத் தெரிந்தெடுத்த கர்த்தர் கையைத்திற ந்து சீவனுள்ள யாவையும் சம்பூரணத்தால் நிரப்புகிறவரென்றும், எல்லாச் சிருஷ்டிகளையும் போஷித்து ஆதரிக்கிறவரென்றும், உலகசிருஷ்டிப்பு முதற்கொண்டு அப்படிப் போஷித்து ஆத ரித்து வந்தவரென்றும், ஆதலால் அப்போது கூடிவந்திருந்த ஜனங்களைப் போஷிக்கக்கூடியவரென்றும் அவன் அறியாமல் போனான். ஆதலால் சாதாரணமான எதுக்களைத் தேடி, இரு நூறு தேனாரியுபணத்து அப்பங்களும் போதாது என்றான். இவ் வளவு பணம் அவர்களுடைய பொதுவான பொக்கிஷத்தில் இருந்திருக்கமாட்டாதே.

பிலிப்பு இவ்விதமாக தன்னுடைய பெலஈனத்தை அறிக்கையிட்டபிறகு, அவர்கள் செய்யக்கூடியதைச் செய்யும்படிக்கு அவர்களை அவர்கள்மட்டுக்கு விட்டுவிட்டார். அவர்கள் சாயங்காலத்தில் அவரிடத்தில் வந்து தங்களுக்குத் தெரிந்தது இவ்வளவுதான் என்பதுபோல, ஜனங்களை அனுப்பிவிட்டால் சுற்றுக்கிராமங்களில் தங்களுக்கு வேண்டிய போசனபதார்த்தங்களை வாங்கிக்கொள்வார்களென்று சொன்னார்கள். ஆனால் தம்முடைய நோக்கத்தைச் சற்றே வெளிப்படுத்தும்படிக்கு "அவர்கள் போகவேண்டுவதில்லை; நீங்களே அவர்களுக்கு போஜனங்கொடுங்கள்" என்றார். பிலிப்பு சொன்னதுபோல இவர்கள் எல்லாரும் ஒன்றுகூடி அவர்களுக்கு வேண்டிய போசனத்தைக் கொள்ள தங்கள் நிருவர்கத்திற்கு மிஞ்சி இருநூறு தேனரியு பணத்தைச் செலவழிக்கலாமா என்று கேட்டபோது (மாற். 6. 37.), அந்தச் சமயத்தில் அவர்களுக்குக் கிடைக்கக்கூடியது இன்னதென்று அறிந்துவரும்படி சொன்னார். மோசே ஒரு சமயத்தில் "ஆடுமாடுகளை அவர்களுக்காக அடித்தாலும் அவர்களுக்குப் போதுமா?" என்று கேட்ட கேள்வி இதற்கு ஒத்திருக்கிறது (எண். 11. 22.). இரண்டிலும் கொஞ்சம் அவிசுவாசமும் கர்த்தர் இப்படிச் செய்யவல்லவரோ என்கிற சந்தேகமுமிருந்தது. ஆனாலிந்த இரண்டுசமயங்களிலும் தாம் செய்யப்போகிறதைக் கர்த்தர் தாமே முந்தி குறிப்பாய்க் காட்டியிருந்தார். ஒரு பையனிடத்தில் அப்போதிருந்த கொஞ்சம் போசனத்தை அவர்கள் வாங்கினார்கள்; முதல் மூன்று சுவிசேஷகர் அந்த ஐந்து அப்பமும் இரண்டு மீனும் சீஷர்களிடத்திலிருந்ததுபோலவும், யோவான் அவைகள் ஒரு பையனிடத்தில் வாங்கினதுபோலவும் சொல்லியிருப்பதில் விகற்பமில்லை. முதல் மூன்றுபேரும் வாங்கினபிறகு அவர்களிடத்திலிருந்ததைச் சொல்லியிருக்கிறார்கள். அந்த அப்பங்கள் வாற்கோதுமை அப்பங்களென்று வாசிக்கிறோம். வாற்கோதுமை மிகவும் கேவலமான போசனம். அது மனுஷருக்கல்ல, மிருகங்களுக்கு ஏற்றதென்று சிலர் சொல்லியிருக்கிறார்கள் (2 இரா. 7. 1.). ஒருவன் வாற்கோதுமை நன்றாய் விளைந்திருக்கிறதென்று சொன்னபோது, அதைக் கேட்

டுக்கொண்டிருந்த வேறொருவன்: அதைக் குதிரைகளுக்கும் கழுதைகளுக்கும் சொல்லு என்று சொன்னதாய் யூதருடைய தல்மூதில் வாசிக்கிறோம். ரோமைப் போர்ச்சேவகர் குற்றஞ்செய்தபோது அவர்களுக்கு தண்டனையாக கோதுமை அப்பத்தை நிறுத்தி வாற்கோதுமை அப்பத்தைக் கொடுப்பார்களாம். இப்படிப்பட்ட அற்ப போசனத்தைக்கொண்டு இத்தனைபெரிய சனக்கூட்டத்தைப் போஷித்தார். கிறிசொஸ்தம் இதற்கிசைவாக,வனாந்தரத்திலேபோஜனபந்தியைஆயத்தப்படுத்தக்கூடுமோ என்கிற வாக்கியத்தை எடுத்துச்சொல்லுகிறார் (சங். 78. 19.). சனங்களை இரட்சகர் புல்லின்மேல் உட்காரும்படி சொன்னார். இருப்புக்கு அது மிகவும் ஏற்றதாயிருந்தது. மாற்கும், யோவானும் பச்சைப்புல் அவ்விடத்தில் மிகுதியாயிருந்ததாகச் சொல்லுகிறார்கள். அவர்கள் உட்கார்ந்த இடத்தைக் குறித்து மாற்கு அவர்கள் ஐம்பதுபேராகவும், நூறுபேராகவும் கூட்டங் கூட்டமாய் உட்கார்ந்ததாகச் சொல்லுகிறார். இதிலேயும் கர்த்தருடைய ஞானம் விளங்குகிறது. அவர் எல்லாவற்றையும் ஒழுங்குப்படுத்துகிறவர். ஒழுங்கை நேசிக்கிறவர், இப்படி அவர்கள் ஒழுங்காய் உட்கார்ந்தபடியால் அவர்களுக்குள்ளே கலகமொன்றும் தோன்றவில்லை. பெலஈனரான ஸ்திரீகளும், பிள்ளைகளும் மறக்கப்படவில்லை. அப்போஸ்தலர் வருத்தமில்லாமல் அவர்களைப் போஷிக்கவும் அவர்களுக்கு வேண்டியதைத் தாராளமாய்க் கொடுக்கவும் இடமிருந்தது.

இரட்சகர் அந்த அப்பத்தை ஆசீர்வதிக்குமுன்னமே கையிலெடுத்தார். ஆசீர்வாதத்தோடேதான் அற்புத கிரியையும் நடந்ததென்று ஓரிஜன் என்பவர் சொல்லியிருப்பது எல்லாச் சுவிசேஷகரும், முக்கியமாய் லூக்காவும் சொல்லியிருப்பதற்கு ஒத்திருக்கிறது. அந்தக் குடும்பத்திற்கு இயேசுவானவர் தலைவரானபடியால் அவர் தோத்திரஞ் செலுத்துவது நியாயந்தான். தோத்திரஞ் செலுத்தாமல் ஏதாவது ஒன்றை உட்கொள்ளுகிறவன் தேவனைக் கொள்ளையடிக்கிறானென்று தல்மூதில் சொல்லியிருக்கிறது. ஆசீர்வதித்தபோது இரட்சகர் எந்த வார்த்தைகளைச் சொன்னாரென்று நமக்குத் தெரியாது. அது சாப்பிடுமுன்

இஸ்ரவேலருக்குள் வழங்கிவந்த ஒரு ஜெபமாயிருக்கலாம். ஆசீர்வதித்தபிறகு அப்பங்களைப் பிட்டுச் சீஷர்களுக்குக் கொடுத்தார். சீஷர்கள் அவைகளைச் சனங்களுக்குக் கொடுத்தார்கள். அந்த அப்பம் முதலாவது இரட்சகர் கையிலும், பிறகு சீஷர்கள் கையிலும், கடைசியில் சாப்பிடுகிறவர்கள் கையிலும் ஆச்சரியமாய்ப் பெருகிற்று. ஆதலால் அவர்களெல்லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள் (சங். 145. 16.). இரட்சகர் சொன்ன வாக்கு இப்போது நிறைவேறிற்று. "முதலாவது தேவனுடைய இராச்சியத்தையும், அவருடைய நீதியையும் தேடுங்கள், அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்." மூன்றுநாளாய் இவர்கள் என்னத்தைப் புசிக்கலாம், என்னத்தைப் பானம்பண்ணலாமென்று கவலைப்படாமல், தேவனுடைய இராச்சியத்தைத் தேடி வேதவசனத்தைக் கேட்கவேண்டுமென்ற விருப்பத்தோடே வந்தார்கள். இப்பொழுது இரட்சகருடைய வாக்கின்படியே இந்தக் கீழானவைகள் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது.

இந்த அற்புதம் எவ்விதமாய் நடந்ததென்று நாம் ஆராய்வோமானால், தண்ணீர் இரசமான வகையைப்போல இது நமக்கு முற்றிலும் விளங்காததாயிருக்கும். இந்த வகையை அறிந்துகொள்ளப் பிரயாசப்படுவது வீண். சிருஷ்டிப்பு அதாவது இல்லாத ஒரு காரியத்தை இருக்கச்செய்கிறது நம்முடைய அறிவுக்கு எட்டாததாயிருக்குமானால், ஒரு சிருஷ்டியின் தன்மையை மாற்றுகிறதும் நம்முடைய புத்திக்கு எட்டாததாய்த்தான் இருக்கவேண்டும். இப்படிப்பட்ட செய்கைகள் நம்முடைய புத்திக்கு விளங்காததையிட்டு இந்த அற்புதம் நடக்கவில்லையென்று நாம் ஆட்சேபிக்கிறது நியாயமல்ல. இதை விளக்கிக் காட்டப் பிரயாசப்படாமல் விட்டுவிட்டதே சரித்திரக்காரனுடைய ஞானத்தை ரூபிக்கிறது. உலகம் தேவனுடைய வார்த்தையினால் உண்டாக்கப்பட்டதென்றும், இவ்விதமாய்க் காணப்படுகிறவைகள் தோன்றப்படுகிறவைகளால் உண்டாகவில்லையென்றும், எந்த விசுவாசத்தால் அறிந்துகொள்ளுகிறோமோ அந்த விசுவாசமே இதை அறிந்துகொள்ளுகிறதற்கும் வேண்டும் (எபி. 11. 3.)

இந்த அற்புதத்தை அறிந்துகொள்ளுகிறதற்கு இதைப்போ லொத்த ஒரு காரியத்தை நாம் கவனிக்கவேண்டும். ஒரு வயல் நிலத்தில் ஒரு மணியை நாம் விதைத்தோமானால், அதிலிருந்து எத்தனை கதிர்கள், ஒவ்வொரு கதிரில் எத்தனை மணிகள் உண் டாகிறதென்று பாருங்கள். இப்படி வருஷாவருஷம் அடிக்கடி நடந்துவருகிறபடியினால், அதை அற்புதமாக எண்ணுகிற தில்லை. இரட்சகர் இங்கே அப்பத்தைப் பெருகப்பண்ணினது இரண்டுவிசைமாத்திரம் நடந்தகாரியமானபடியால் இது நமக்கு அற்புதமாகத் தோன்றுகிறது. ஆகிலும் இந்த இரண்டுவிதமான செய்கைகளுக்கும் பெரிய வித்தியாசமுண்டு. ஒரு கோதுமை மணியானது சுபாவப் பிரமாணத்தின்படியே அப்பமாக மாற மாட்டாது. ஆதலால் அப்பத்தைப் பெருகப்பண்ணின இந்தச் செய்கையில் நாடோறும் நாம் பார்க்கிற செய்கையைவிட, சுபாவப் பிரமாணத்திற்கு மிஞ்சின செய்கையைக் கவனிக்கி றோம். இதிலேதான் திவ்விய வல்லமை விளங்குகிறது. ஒன்று மில்லாமையிலிருந்து இது தோன்றவில்லை. கொஞ்சத்திலி ருந்து அதிகத்தை உண்டாக்கினார். அவர்களெல்லாரும் சாப் பிட்டுத் திருப்தியடைந்தார்கள்.

நம்முடைய இரட்சகர் இந்த அற்புதத்தினாலே தம்மைத் தாமே சீவ அப்பமாக வெளிப்படுத்தியிருக்கிறார். மனிதரு டைய பசியை நீக்குகிறவர் அவரே; யாவருடைய சீவனுக் கும் ஆதாரமாயிருக்கிறவர் அவரே. பசியாயிருக்கும் எல்லா ஆத்துமாக்களுக்கும் எக்காலத்திற்கும் வேண்டிய பரம ஆசீர் வாதங்களைக் கொடுக்கிறவர் அவரே. அகுஸ்தீன் சொல்லு கிறபடி, அவர் தேவனுடைய வார்த்தையானபடியால் அந்த வார்த்தையினுடைய கிரியைகளெல்லாம் நமக்கு வார்த்தைக ளாயிருக்கின்றன. அவை நாம் பார்த்து ஆச்சரியப்படும்படிக் கான படங்களல்ல, நாம் வாசித்து அறிந்துகொள்ளவேண்டிய எழுத்துகள்.

எல்லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தபிறகு ஒன்றும் கெட்டுப்போகாமல் மீந்திருந்த யாவையும் சேகரிக்கும்படிக்கு சீஷருக்குக் கட்டளையிட்டார். இதுவே அவர்களெல்லாருக்

கும் போதுமானதைவிட அதிகம் இருந்ததென்பதற்கு நல்ல அத் தாட்சி (2 இரா. 4. 43, 44. ரூத். 2. 14.). சேஷமானவை களைப் பன்னிரண்டு கூடை நிறைய எடுத்தார்கள். ஒரு அப் போஸ்தலனுக்கு ஒரு கூடை வீதமாக. மீன்களிலும் அப்ப டியே எடுத்ததாக மாற்கு சொல்லுகிறூர். சுபாவமுறைமைக்கு ஆண்டவராயிருக்கிறவர் தாராளமாகத் தம்முடைய நன்மைக ளைப் பரிமாறுவதோடுகூட சிக்கெனவாகவும் அவைகளைப் பரிமாறுகிறூர். தம்மை தேவனென்று ரூபித்தவர் தேகநிலை மைக்குரிய சட்டங்களுக்கும் தம்மைக் கீழ்ப்படுத்துகிறூர். அற் புதத்தில் அவருடைய திவ்விய வல்லமை விளங்குகிறதுபோல இந்தக் கட்டளையில் அவருடைய பெரிய தாழ்மையும் விளங் குகிறது. அவர்களுக்கு முதலில் கிடைத்ததைவிட அவர்கள் சாப்பிட்டு மீதியானது மிகவும் அதிகமாயிருந்தது. தேவனு டைய அன்பு எவ்வளவு அதிகமாய் வெளிப்படுகிறதோ அவ் வளவாய்க் குறையாமல் அதிகரித்துக்கொண்டேவருவதை இது குறிப்பாகக் காட்டுகிறது. வாரியிறைத்தும் விருத் தியடைவாரும் உண்டு (நீதி. 11. 24. 2 இரா. 4. 1—7.). கிறிஸ்துவின் சத்துருக்களுக்கு அவர்பேரிலிருந்த எரிச் சலைக்குறித்தும் அதின் காரணத்தைக்குறித்தும் நமக்கு அறி விக்கிற யோவான், சனங்கள் அவரை மெச்சிக்கொண் டதினுல் நடந்தகாரியத்தையும் விரிவாய்ச் சொல்லுகிறூர். அவர்கள் தாங்கள் எதிர்பார்த்த தீர்க்கதரிசி இவரென்றும், தன்னைப்போல் ஒரு தீர்க்கதரிசியை எழுப்புவாரென்று மோசே சொன்னவர் இவரே என்றும் எண்ணி, நவமான காரியங்க ளில் ஆசையுள்ளவர்களானபடியால், அவருடைய மனதுக்கு விரோதமாக அவரைத் தங்களுக்கு இராசாவாக்கப் பிரயத்த னப்பட்டார்கள். மூலபாஷையிலிருக்கும் வார்த்தையைப் பார்த்தால் அவரை பலவந்தமாய் இழுத்துப்போனூர்களென்று சொல்லவேண்டும். அவர்கள் எருசலேமுக்குப் போகிறவர் களானபடியால் அவரை அங்கே கொண்டுபோய் தாவீதின் இராசாசனத்தில் உட்காரப்பண்ணவேண்டுமென்ற நோக்கமுள் ளவர்களாய் அப்படிச் செய்தார்கள். அவர்களை இப்படிச்

செய்யப்பண்ணினது இரட்சகர் வெளிப்படுத்தின வல்லமை மாத்திரமல்ல, இதைப்போலொத்த அற்புதத்தை மேசியாவான வர் செய்வார் என்று அவர்கள் எதிர்பார்த்திருந்தபடியால்தான் அப்படிச் செய்தார்கள். மோசே செய்ததைப்போலொத்த அற்புதத்தை மேசியாவானவர் செய்வாரென்று எண்ணியிருந் தார்கள். மோசே வனாந்தரத்தில் ஜனங்களுக்கு அற்புதமாய் அப்பங்கொடுத்ததுபோல பிறகு வெளிப்படவேண்டிய மேசி யாவும் இப்படிச் செய்வாரென்று நினைத்தார்கள். இந்த எண்ணங்கள் அற்றுப்போனபிறகு மோசே செய்த அற்புதத் தோடு இதை ஒப்பிட்டுப் பேசுகிறார்கள். மோசேக்குச் சம மான அல்லது மோசேயைவிட ஒரு பெரிய தீர்க்கதரிசி தங்களுக்குள்ளே தோன்றியிருக்கிறாரென்று ரூபிக்கும்படிக்கு அல்ல, இரட்சகருடைய அற்புதத்தைக் குறைவாக்கி அவர் மேசியா அல்லவென்று காண்பிக்கும்படிக்கே அப்படிச் செய் தார்கள். "உம்மை விசுவாசிக்கும்படிக்கு நாங்கள் காணத் தக்கதாக நீர் என்ன அடையாளத்தைக் காண்பிக்கிறீர்? என் னத்தை நடப்பிக்கிறீர்? வானத்திலிருந்து அவர்களுக்கு அப் பத்தைப் புசிக்கக்கொடுத்தார் என்றெழுதியிருக்கிறபடி, நம் முடைய பிதாக்கள் வனாந்தரத்தில் மன்னாவைப் புசித்தார்களே (யோவா. 6. 30, 31.); நீர் கொடுக்கிற அப்பமோ சாதாரண மாய்க் கிடைக்கத்தக்கது, அதைக்கொண்டு ஒரே விசைதான் நீர் அநேகருக்குச் சாப்பாடு கொடுத்தீர்" என்கிறதுபோலச் சொன்னார்கள்.

இரட்சகர் செய்த அற்புதத்திற்கும் வானத்திலிருந்து வந்த மன்னாவுக்கும் ஒற்றுமையிருந்தாலும், பழைய ஏற்பாட்டி லுள்ள வேறொரு அற்புதத்தோடு இது அதிகமாய் ஒத்திருக் கிறது. எலிசா இருபது வாற்கோதுமை அப்பங்களைக்கொண்டு நூறுபேருக்குச் சாப்பாடு கொடுத்தார் (2 இரா. 4. 42, 44.). இந்த இரண்டிலும் இயற்கைக்குரியதும் செயற்கைக்குரியதும் இருந்தது. இரண்டிலும் அப்பமிருந்ததுபோல ஒன்றில் மீனும் மற்றொன்றில் தாள்கதிர்களும் இருந்தது. இங்கே அப்போஸ்த லர் சந்தேகத்திற்கிடங்கொடுத்ததுபோல அங்கே பணிவிடைக்

காரன் இதை நான் நூறுபேருக்கு வைப்பதெப்படி என்றான். இங்கே பன்னிரண்டு கூடை மீந்ததுபோல அங்கே அவர்கள் சாப்பிட்டு மீத்துவைத்தார்கள். ஆனாலும் சில விசேஷித்த குறிப்புகளில் வித்தியாசமிருந்தது. இங்கே அற்புதஞ்செய்தவர் கர்த்தர், அங்கே செய்தவர் அவருடைய ஊழியக்காரன். தீர்க்கதரிசிகளுக்கு அளவின்படியே கிருபை அளிக்கப்பட்டிருந்தபடியால் அளவின்படியே அற்புதம் செய்தார்கள். குமாரனோ நித்திய வல்லமையுள்ளவரானபடியால் தம்முடைய சொந்த வல்லமையினாலே அளவுக்கு மிஞ்சினதாய்ச் செய்தார். இதைப்போலொத்த இன்னும் இரண்டு அற்புதங்களைச் சொல்லலாம். எலியா சைம்பெண்சாதியின் பானைமாவையும் கலயத்தெண்ணெயையும் அதிகரிக்கச்செய்தது (1 இரா. 17. 16.), எண்ணெயை ஆச்சரியமானவிதமாய்ப் பெருகப் பண்ணினது. (2 இரா. 4. 1—7.)



# 17. சமுத்திரத்தின்மேல் நடந்தது.

மத்தேயு, 14. 22—33.

"இயேசு ஜனங்களை அனுப்பிவிடுகையில், தம்முடைய சீஷர்கள் படவில் ஏறி, தமக்கு முன்னே அக்கரைக்குப் போகும்படி அவர்களைத் துரிதப்படுத்தினார். அவர் ஜனங்களை அனுப்பிவிட்டபின்பு, தனித்து ஜெபம்பண்ண ஒரு மலையின்மேல் ஏறி, சாயங்காலமான போது அங்கே தனிமையாயிருந்தார். அதற்குள்ளாக படவு நடுக்கடலிலே சேர்ந்து, எதிர்க்காற்றாயிருந்தபடியால் அலைகளினால் அலைவுபட்டது.

இரவின் நாலாம் ஜாமத்திலே, இயேசு கடலின்மேல் நடந்து, அவர்களிடத்திற்கு வந்தார். அவர் கடலின்மேல் நடக்கிறதைச் சீஷர்கள் கண்டு, கலக்கமடைந்து, ஆவேசம் என்று சொல்லி பயத்தினால் அலறினார்கள். உடனே இயேசு அவர்களோடே பேசி: திடன்கொள்ளுங்கள், நான்தான், பயப்படாதிருங்கள் என்றார்.

பேதுரு அவரை நோக்கி: ஆண்டவரே! நீரேயானால் நான் ஜலத்தின்மேல் நடந்து உம்மிடத்தில் வரக் கட்டளையிடும் என்றான். அதற்கு அவர்: வா என்றார். அப்பொழுது, பேதுரு படவைவிட்டிறங்கி, இயேசுவினிடத்தில் போக ஜலத்தின்மேல் நடந்தான். காற்று பலமாயிருக்கிறதைக் கண்டு, பயந்து, அமிழ்ந்துபோகையில்: ஆண்டவரே, என்னை ரட்சியும் என்று கூப்பிட்டான். உடனே இயேசு கையை நீட்டி அவனைப் பிடித்து: அற்பவிசுவாசியே, ஏன் சந்தேகப்பட்டாய் என்றார். அவர்கள் படவில் ஏறினவுடனே காற்று அமர்ந்தது. அப்பொழுது, படவில் உள்ளவர்கள் வந்து: மெய்யாகவே நீர் தேவனுடைய குமாரன் என்று சொல்லி, அவரைப் பணிந்துகொண்டார்கள்."

மாற்கு, 6. 45—52.

"அவர் ஜனங்களை அனுப்பிவிடுகையில், தம்முடைய சீஷர்கள் படவில் ஏறி அக்கரையில் பெத்சாயிதாவுக்கு எதிராக, தமக்கு முன்னே போகும்படி, அவர்களைத் துரிதப்படுத்தினார். அவர் ஜனங்களை அனுப்பிவிட்டபின்பு, ஜெபம்பண்ணும்படி ஒரு மலையின்மேல் ஏறினார்.

சாயங்காலமானபோது படவு நடுக்கடலிலிருந்தது; அவரோ கரையிலே தனிமையாயிருந்தார். அப்பொழுது காற்று அவர்களுக்கு எதிராயிருந்தபடியினால், அவர்கள் தண்டுவலிக்கிறதில் வருத்தப்படுகிறதை அவர் கண்டு, இராத்திரியில் நாலாம் ஜாமத்தில் கடலின்மேல் நடந்து அவர்களிடத்தில் வந்து, அவர்களைக் கடந்துபோகிறவர்போல் காணப்பட்டார். அவர் கடலின்மேல் நடக்கிறதை அவர்கள் கண்டு, ஆவே

சம் என்று எண்ணி, சத்தமிட்டு அலறினார்கள். அவர்களெல்லாரும் அவரைக் கண்டு கலக்கமடைந்தார்கள். உடனே அவர் அவர்களோடே பேசி: திடன்கொள்ளுங்கள், நான்தான், பயப்படாதிருங்கள் என்று சொல்லி, அவர்கள் இருந்த படவில் ஏறினார். அப்பொழுது காற்று அமர்ந்தது; அதினால் அவர்கள் தங்களுக்குள்ளே மிகவும் பிரமித்து ஆச்சரியப்பட்டார்கள். அவர்களுடைய இருதயம் கடினமுள்ளதாயிருந்தபடியினால் அப்பங்களைக்குறித்து அவர்கள் உணராமற்போனார்கள்.''

யோவான், 6. 14—21.

"இயேசு செய்த அற்புதத்தை அந்த மனுஷர் கண்டு: மெய்யாகவே இவர் உலகத்தில் வருகிறவரான தீர்க்கதரிசி என்றார்கள். ஆதலால் அவர்கள் வந்து, தம்மை ராஜாவாக்கும்படிப் பிடித்துக்கொண்டுபோக மனதாயிருக்கிறார்களென்று இயேசு அறிந்து, மறுபடியும் விலகி, தனியே மலையின்மேல் ஏறினார்.

சாயங்காலமானபோது அவருடைய சீஷர்கள் கடற்கரைக்குப் போய் படவில் ஏறி, கடலின் அக்கரையிலுள்ள கப்பர்நகூமுக்கு நேராய்ப் போனார்கள்; அப்பொழுது இருட்டாயிருந்தது, இயேசுவும் அவர்களிடத்தில் வராதிருந்தார். பெருங்காற்று அடித்தபடியினாலே கடல் கொந்தளித்தது. அவர்கள் ஏறக்குறைய மூன்று நாலு மைல் தூரம் தண்டு வலித்துப் போனபொழுது, இயேசு கடலின்மேல் நடந்து படவுக்குச் சமீபமாய் வருகிறதைக் கண்டு பயந்தார்கள். அவர்களை அவர் நோக்கி: நான்தான், பயப்படாதிருங்கள் என்றார். அப்பொழுது அவரைப் படவில் ஏற்றிக்கொள்ள மனதாயிருந்தார்கள்; உடனே படவு அவர்கள் போகிற கரையைப் பிடித்தது.''

---

இந்த அற்புதத்தை எழுதியிருக்கிற மூன்று சுவிசேஷகரும் ஐயாயிரம்பேரைப் போஷித்த அன்று சாயங்காலமே இது நடந்ததாகச் சொல்லுகிறார்கள். முதலில் இரண்டு சுவிசேஷகர் எல்லாரும் சாப்பிட்டபிறகு ஜனங்களை அனுப்பும் சமயத்தில் தமது சீஷர் படவிலேறி அக்கரை போகும்படி அவர்களைத் துரிதப்படுத்தினதாகச் சொல்லுகிறார்கள். அப்படித் துரிதப்படுத்தின முகாந்தரம் ஏதென்று அவர்கள் தெரிவிக்காவிட்டாலும் யோவான் சொல்வதைப் பார்க்கும்போது அதின் காரணம் விளங்கும். யோவா. 6. 15ல் ஜனங்கள் அவரை இராசாவாக்க எத்தனித்ததாகச் சொல்லியிருக்கிறது. சீஷர்களுக்கு இது தெரியாதிருக்கமாட்டாது. இப்படி அவர் இராசா

வாக உயர்த்தப்படுஞ்சமயத்தில் அவரைவிட்டுப் பிரிய அவர்களுக்குக் கொஞ்சமென்கிலும் மனமிருந்ததில்லையென்று தோன்றுகிறது. பொதுவாக ஒரு நிமிஷமாவது அவரை விட்டுப் பிரிந்திருக்க மனமற்றிருந்தபடியால், இப்படி அவர்களைத் துரிதப்படுத்தவேண்டியிருந்ததென்றுஞ் சொல்லலாம். இவர்கள் பெத்சாயிதா ஊருக்குப் போகவேண்டியிருந்ததென்று மாற்கில் சொல்லியிருக்கிறது; அவர்கள் படவிலேறி கப்பர்நகூம் ஊருக்குப் போகப் புறப்பட்டார்களென்று யோவான் சொல்லியிருக்கிறதற்கு விகற்பமல்ல. லூக்கா சற்றுமுன்னே 9. 10ல் சொல்லியிருக்கிற பெத்சாயிதா இதல்ல. இரண்டையும் வித்தியாசப்படுத்த அதை பெத்சாயிதா யூலியா என்றழைத்தார்கள். இது பிலிப்பு, அந்திரேயா, பேதுரு என்பவர்களுடைய ஊர் (யோவா. 1. 44.). இது கடலுக்கு மேற்கே கப்பர்நகூமிருந்த திசையில் அதற்குச் சமீபமாயிருந்தது. மத்தேயும் மாற்கும் இந்த நாளில் இரண்டு சாயந்தரவேளை இருந்ததாகச் சொல்லுகிறார்கள். மத். 14. 15ல் ஐயாயிரம் பேருக்குப் போசனம் கொடுக்க ஆயத்தப்படுமுன் "சாயங்காலத்திலே" என்றும், 23-ம் வசனத்தில் சீஷர்கள் படவிலேறி பிரயாணப்படுமுன் "சாயங்காலமானபோது" என்றும் இருக்கிறது. இப்படிப் பேசுகிறது யூதருக்குள் வழக்கம். முதலாவது சொல்லப்பட்டிருக்கிற "சாயங்காலம்" நாம் சொல்லுகிற மதியத்திற்குப் பிந்தினநேரத்திற்குச் சரியாயிருக்கும். மத்தேயும் மாற்கும் சாயங்காலம் என்றெழுதியிருக்கிறதைச் சாயங்காலமாகிறபோது, அல்லது பொழுதுசாய்கிறபோது என்று லூக்கா தெளிவாய்ச் சொல்லியிருக்கிறார். இரண்டாவது "சாயங்காலம்" சாயங்காலம் ஆறுமணிமுதல் இருட்டும் வரையுள்ள நேரம், அல்லது பொழுது மயங்குகிறவேளை. ஐயாயிரம் பேருக்குப் போசனம்கொடுக்க ஆரம்பித்தது முதல்சாயங்காலத்தில், இரண்டாம் சாயங்காலத்தில் சீஷர் படவிலேறினார்கள்.

கர்த்தர் அவர்களோடிராததினால் அவர்கள் பயணம் செவ்வையாய் நடந்தேறவில்லை. காற்று எதிராயிருந்தது, கடல் கொந்தளித்தது, சப்பற் பாய்கள் கவைக்குதவாதேபோயிற்று.

நாலாம் சாமம் ஆகியும், பொழுதுவிடியக் கொஞ்சநேரமாத் திரமிருந்தும், அவர்கள் 25 அல்லது 30 ஸ்தாதிவழி தூரந் தான் போயிருந்தார்கள். கடலின் பாதிக்கதிகம் கடக்க வில்லை. அது நாற்பது நாற்பத்தைந்து ஸ்தாதிவழி அகலமா யிருந்தது. மோசம் அதிகரித்துக்கொண்டிருந்தபடியால் என்ன செய்யலாமென்று தெரியாமல் திகைத்தபோது, சடுதியாய் அவர் கடலில் நடந்து கப்பலுக்குச் சமீபித்துவருகிறதைக் கண்டார்கள். ஏனெனில் அவர் சனத்தைத் துரிதப்படுத்தி அனுப்பிவிட்டபிறகு தனித்துச் செபத்தியானஞ்செய்ய ஒரு மலையிலேறினர். சாயந்தரமானபோது அவர்மாத்திரம் அங்கி ருந்தார். அவ்விடத்திலிருந்து தமது அன்பின் பார்வையால் அவர்களைக் கவனித்து வருத்தத்தோடு படகைத் தள்ளினதைக் கண்டார் (யாத். 3. 7. சங். 56. 8.). அவர்களால் தம்மை யன்றி ஒன்றும் ஆகாதென்று கண்டபோது மறுபடியும் அவர் களண்டை போனுர். கிறிசொஸ்தம் சொல்லுகிறபடி இது வரையில் அவர்கள் படியாத மேலானவைகளை இந்த இரவில் அவர்களுக்குப் படிப்பிக்க மனதாயிருந்தார். இதற்குமுன் புசலுண்டானபோது (மத். 8. 24.) அவர் அவர்களோடு பட விலிருந்தார். அவர் கண்ணுக்கு முன்னிருந்தபடியால் அவர் கள் அதிகம் கலங்காமல் மோசம் மிஞ்சினுல் அவரை எழுப் பலாமென்று எண்ணினுர்கள். ஆனுல் இவ்விதமாய் எப்பொ ழுதும் அவர் தங்கள்முன் இருக்கும்போதுமாத்திரம் அவர் பேரில் நம்பிக்கையாயிருப்பது அவருக்குப் பிரியமில்லை. அவர்கள் எப்பொழுதும் ஒன்றைத் தாவிப் பிடித்திருக்கிற படர்கொடியைப்போல் அல்ல, பெருங்காற்றைத் தாங்கத்தக்க பலத்த விருட்சம்போல் இருக்கவேண்டுமென்று விரும்பினுர். நல்ல தாய்ப்பட்சியானது தன் சிறு குஞ்சுகள் தங்கள் சிறகு களை விரித்து பறக்கப் படிக்கும்படி அவைகளைக் கூட்டினின்று தள்ளுமாப்போல, அவர்களை மோசத்தில் தனித்துவிட்டு பிறகு நடந்தகாரியத்தைக் கண்டு தாம் எப்போதும் உதவிசெய்ய ஆயத்தமாயிருக்கிறபடியால் தம்மிடத்தில் நம்பிக்கை வைக் கும்படிக்கு அவர்களுக்குப் படித்துக்கொடுத்தார். அவர் கட

வில் நடந்துவருவாரென்று அவர்கள் கொஞ்சமாவது அறிந்திராததால் அப்படி அவர் உதவிசெய்வாரென்று அவர்களுக்கு நம்பிக்கையிராதிருந்தும் அந்த உதவி கிடைத்தது. அவர்களை நன்றாய்ச் சோதித்தபிறகு அவர்களுக்குத் தம்மைச் சமீபத்தில் காண்பித்தார். அவர்கள் ஜீவநாளெல்லாம் அவர்களுக்கு நேரிடும் புசல்காற்றையொத்த சோதனைகளிலே தாமே அவர்களுக்குச் சமீபமாயிருப்பாரென்றும், எப்பொழுதும் அவர்களுடைய சரீர கண்களுக்கு அவர் தென்படாவிட்டாலும் தம்முடைய உதவி அவர்களுக்கு அதிக தூரமிருக்கிறதாய்க் காணப்பட்டாலும் துன்பகாலத்தில் தாமே அவசரத்திற்கேற்ற உதவிசெய்யக்கூடியவரென்றும் அவர்களுக்கு இதனால் படித்துக்கொடுத்தார்.

இதினால் நாம் அறிந்துகொள்ளுகிற விசேஷித்த வேறொரு போதனையுமுண்டு. கொந்தளிக்கும் சமுத்திரத்திலே படவிருந்ததுபோல சபையும் அடிக்கடி இருக்கிறதாகக் காணப்படுகிறது. தனது எசமான் தன்னோடிராததினால் உலகத்திலுண்டாகும் துன்பங்களாகிய பெருங்காற்றினால் மோதப்பட்டு வருத்தமடைகிறபொழுது அது செம்மையாய் நடந்தேறாதது போலத் தோன்றும். ஆகிலும் அவர் கண் இன்னும் அதின் மேல் இருக்கிறது. அவர் மலையின்மேல் தனித்து ஜெபம்பண்ணிக்கொண்டிருக்கிறார். அவர் பரமண்டலத்துக்கேறி என்றும் உயிரோடிருக்கிற இரட்சகரானபடியால் தமது ஜனங்களுக்காக விண்ணப்பம்பண்ணிக்கொண்டேயிருக்கிறார். அவசரமான சமயம் நேரிடும்பொழுது நமக்குத் தெரியாத அதிசயமான விதமாய் சடுதியில் அதினண்டை வருகிறார். முன்னே வருத்தமாயிருந்ததெல்லாம் அப்பொழுது இலகுவாகும். வருத்தத்தோடே படகைத் தள்ளுகிறவர்கள் உடனே தாங்கள் போய்ச்சேரவேண்டிய துறையில் சேருவார்கள்.

முதலாவது இரட்சகரைக் கண்டபோது ஒரு ஆவேசம் என்று பயந்தார்கள். அதுபோல அவருடைய ஜனங்களும் வழக்கமில்லாதவிதமாக அவர்கள் எதிர்பாராதவகையாய்த் துன்பங்கள் உபத்திரவங்களோடு கர்த்தர் அவர்களிடத்தில் வரும்

பொழுது தப்பான எண்ணங்கொள்ளுகிறதுண்டு. அவர் ஆசீர் வாதத்தைக்கொண்டு வருகிறவராய் இருந்தாலும் பயத்தினாலே அலறுகிறதுண்டு. பயப்படாதிருங்கள், நான்தான் என்று அவர் சொல்லும் சத்தத்தைக் கேட்கிறவரையில், அவர் இன்னாரென்று திட்டமாய் அறிந்துகொள்ளும்வரையில் அவரை ஒரு பயங்கரமான ஆவியென்று தப்பாய் நினைக்கிறதுண்டு. அவர் அவரேயானால், தங்களுக்கு உதவிசெய்யவே வருகிற வராயிருந்தார். ஆனால் அந்த நோக்கத்திற்கு எதிரிடையாக அவர்களைக் கடந்துபோகிறதாக தோன்றும்போதுதான் அவர் களுக்கு அதிக திகிலுண்டாகிறது (மாற். 6. 48.). அவர்க ளுக்கு அந்த திகில் ஓர் நிமிஷந்தானிருந்தது. சுவிசேஷங் களிலுள்ள விகற்பங்களைத் தேடித்திரிகிறவர்களுக்கோ இது எப்போதும் மலைவைக் கொடுக்கிறது. அவர்களுக்கு வேண் டிய நிச்சயத்தைக்கொடுத்து உதவிசெய்யும்படிக்காகவே அவர் களுக்குச் சமீபமாய் வரும்பொழுது அவர்களைக் கடந்து தப் பிக்கொள்ளப் பார்ப்பானேன்? எனெனில் அவரை இன்னா ரென்று அறிந்துகொண்டு அவரை நோக்கி வேண்டிக்கொண்ட வுடனே, அவர்களிருந்த படவில் அவரும் ஏறினாரே என்கி றார்கள். விசுவாசத்தினால் பிழைக்கிறது இன்னதென்று அறியா தவர்கள் இதையும் தேவனுடைய மற்றெந்த நடத்துதலையும் அறிந்துகொள்ளுகிறது லேசல்ல. அவர் கடந்துபோகிறவரா கத் தம்மைக் காண்பித்தபடியால்தான் அப்படிக் கடந்து போகாமலும், அவர்களை விட்டுவிடாமலும் இருக்கவேண்டு மென்று அவர்கள் ஜெபம்பண்ணவேண்டிய அவசியம் வெளி யாயிற்று. இவ்விதமாகவே உயிர்த்தெழுந்தபிறகு எம்மா ஊருக் குப்போன சீஷரோடு அவர் நடந்துபோனபோது அவர் அப் புறம்போக மனதுள்ளவர்போல் காண்பித்தபடியால்தான் தங்களிடம் தங்கும்படி அவரை வேண்டிக்கொள்ள நேரிட் டது (லூக். 24. 28.). தேவன் தமது ஜனங்களை நடத்து கிற விதங்களில் அடிக்கடி இப்படிப்பட்ட காரியம் காணப்படு கிறதுண்டு. இங்கேமாத்திரமல்ல, வேதவசனத்தின் மற்ற இடங்களிலேயும் ஒரு கிறிஸ்தவனுடைய சுய அனுபவத்தி

லேயும் இதற்கொத்த காரியங்களைக் காணலாம். அநீதியுள்ள நியாயாதிபதி (லூக். 18. 2.), நல்மனமற்ற சிநேகன் (லூக். 11. 5.). இந்த உவமைகளில் தேவன் இப்படிப்பட்டவராகத்தான் நமக்கு வெளிப்படுகிறார். நம்முடைய இரட்சகரும் மிகவும் அவசரமான வேளையில் பெத்தானியாவூரிலிருந்த சகோதரிகளுக்கு உதவிசெய்யப் போகாதிருந்தபோது இப்படிப்பட்டவராகத்தான் தம்மை வெளியாக்கினார் (யோவா. 11. 6.). சங்கீதங்களில் பக்தியுள்ள தேவனுடைய பிள்ளைகள் கர்த்தாவே! ஏன் உம்முடைய முகத்தை மறைக்கிறீரென்று அழுதபோது, கர்த்தர் அப்படி தமது முகத்தை மறைக்கிறதுண்டென்றும்; அவர் தாமதித்து அவர்களைவிட்டுக் கடந்து போகிறதுபோல காண்பிக்கிறபோது, அவர்கள் விசுவாசத்தை உயிர்ப்பித்து, அவர் சீக்கிரம் திரும்ப வந்து தங்களோடு எப்போதும் இருக்கவேண்டுமென்று ஜெபம்பண்ணும்படி தங்களை ஏவிவிடுகிறாரென்றும் அறிக்கையிடுகிறார்கள் அல்லவா.

அவர்களுடைய சத்தத்தைக் கேட்டு உதவிக்கு வந்தவரானதால் திடன்கொள்ளுங்கள், நான்தான், பயப்படாதிருங்கள் என்று பயந்திருந்த அவர்களுக்குத் திடன்சொன்னார். அதின் பிறகுதான்: ஆண்டவரே! நீரேயானால் நான் ஜலத்தின்மேல் நடந்து உம்மிடத்தில் வரக் கட்டளையிடும் என்று பேதுரு சொன்னதும், அதன்மேல் அவனுக்குச் சம்பவித்ததும் வருகிறது. இதை மத்தேயு ஒருவரே சொல்லியிருக்கிறார். "நீரேயானால்" என்று அவன் சொன்னதை அவர் கர்த்தரோ அல்லவோவென்று சந்தேகித்தானென்பதாய் அர்த்தம்பண்ணக்கூடாது. தோமாவாயிருப்பானேயானால், இது ஒரு ஆவேசமல்ல, கர்த்தரேயென்று ஒத்துக்கொள்ளுமுன்னே கப்பலின்மேல் வந்து தம்மைக் காண்பிக்கவேண்டுமென்று கேட்டிருப்பான். பேதுரு இப்படிப்பட்ட தப்பிதத்துக்கு உட்படத்தக்கவனல்ல. நீரேயானால் என்பதை நீரானபடியால் உம்மிடம் வரும்படி கட்டளையிடும் என்னும் கருத்தாய்ப் பேசினான். தான் போகுமுன் கிறிஸ்துவானவர் வாவென்று கட்டளையிடவேண்டுமென்று நினைத்தது சரிதான். அவரை அவன் நேசித்

தபடியால் அவர் கட்டளையிடவேண்டுமென்றும் அவர் இருக்குமிடத்திலேயே இருக்கவேண்டுமென்றும் ஆசித்தான் (யோவா. 20. 1—7.). ஒருவேளை மற்றவர்களைப்போல இவனும் பயந்தபடியால் அதற்குச் சரிக்கட்டும்படிக்கு இப்படி தன் தைரியத்தைக் காண்பிக்கவேண்டுமென்று சொல்லியிருப்பான். ஆகிலும் இதிலே கொஞ்சம் துணிகரம் கலந்திருந்தபடியால் விழுந்தான் (மத். 26. 33—70.). எனக்கு கட்டளையிடும் என்று சொன்னதுதான் அவனுடைய தப்பிதம். மற்றவர்களைவிட தனக்கு அதிக விசுவாசமிருக்கிறதுபோலவும், மற்றவர்களை விட அதிக தைரியமிருக்கிறதுபோலவும் காட்டவேண்டும் என்று அதிக ஆசைப்பட்டான். உமது நிமித்தம் எல்லாரும் இடறலடைந்தாலும், நான் ஒருக்காலும் இடறலடையேன் என்று இந்தச் சமயத்திலும் சொன்னதுபோலவேயிருந்தது. இப்போது இரட்சகர் காண்பித்த ஆச்சரியமான ஞானத்தையும், அன்பையும் சற்றே கவனிப்போமாக. பேதுருவினிடத்திலிருந்த தப்பிதத்தைக் காணக்கூடிய விவேகமிருந்தபோதிலும், சற்று எரிச்சலாய் அவனுக்கு மறு உத்தாரஞ் சொன்னால், அவனுக்குப் படிப்பிக்கக்கூடிய நல்ல போதனையை படித்துக்கொடுக்க இடமிருந்திருக்கமாட்டாது. கர்த்தர் அவனைப்பார்த்து: நீ இருக்குமிடத்திலேயே இரு என்று சொல்லியிருப்பாரானால், அவருடைய அன்பு வெளியாகவும், இவன் தன் குறைவைக் கண்டுகொள்ளவும், அதற்கேற்ற போதனையை அடையவும் ஏதுவிராமற்போகும். ஆனால் நமது எசமான் கிருபையும் பகுத்தறிவுமுடையவரானதால் நடக்கப்போகிறது இன்னதென்று அறிந்திருந்தும் அதற்குத் தம்மை உத்தரவாதியாக்கிக்கொள்ளவில்லை. எனக்குக் கட்டளையிடும் என்று பேதுரு கேட்டான். கர்த்தர் அவனுக்குச் சொன்ன மாறுத்தரவில் உனக்குக் கட்டளையிடுகிறேனென்று சொல்லவில்லை. உம்மிடத்தில் வரும்படி என்று பேதுரு சொன்னான். இரட்சகரோ என்னிடத்தில் வா, என்காமல் வா என்று மாத்திரம் சொன்னார். அதாவது "மனமிருந்தால் வா; உனக்கு விருப்பமானால் வந்து பார்" என்பதுபோலச் சொன்னார். யோவாப்

அகிமாசுக்கு ஓடு என்று சொன்னதுபோல இவர் வா என்று சொன்னர் (2 சாமு. 18. 22.). வா என்று சொன்னதில் பேதுரு தண்ணீரில் அமிழமாட்டானென்கிற நிச்சயமிருந்த போதிலும், அவன் எண்ணினபடியே நடக்குமென்பதற்கு அது உறுதிவாக்கல்ல. அவன் கேட்டபடியே முற்றிலும் உத்தரவுகொடுத்திருப்பாரானல், அவன் விருப்பமெல்லாம் நடந்தேறும். தொடங்கினபடியே முடிவுவரையில் தன் நம்பிக்கையைக் காத்துக்கொள்ளவேண்டிய பொறுப்பு பேதுருவின்மேல்தான் இருந்தது. மனிதனுக்குள்ளிருக்கிறதை அறிகிறவர் அவன் முடிவுவரையில் நிற்கமாட்டானென்று கண்டார். மாம்ஸசிந்தைக்குரிய தைரியம் சோதனை நேரிடும்போது பயமாகவும் அவிசுவாசமாகவும் மாறிப்போமென்று பார்த்தார். அப்படியே நடந்தது. பேதுரு படவைவிட்டு இறங்கி, இயேசுவினிடம் வரும்படிக்கு ஜலத்தில் நடந்தான். சற்றுதூரம் நடந்தான். கர்த்தரை, கர்த்தரையே அவன் பார்த்துக்கொண்டிருந்தவரையில் கடலின்மேல் நடக்க அவனுக்குப் பெலனிருந்தது. தண்ணீரும் அலைகளும் அத்தனையாய்த் தோன்றவில்லை. ஆனல் மாம்சத்தோடு அவன் யோசித்தபோது, இயேசுவைத்தவிர மற்றவைகள்மேல் தன் கண்ணை வைத்தபோது, காற்றுப் பலத்திருக்கிறதைக் கண்டு பயமடைந்து அமிழத்தொடங்கினன். மற்றச் சீஷர்களைவிட தனக்கு அதிக தைரியமிருக்கிறதென்று காட்டப்பார்த்தவன் எல்லாருக்குமுன்பாக தன்னை பயங்காலியென்று வெளிப்படுத்துகிறன். முன் தனக்கு பலத்த விசுவாசமுண்டென்று காட்ட நினைத்தவன் இப்பொழுது தன் பெலஈன விசுவாசத்தை வெளியாக்குகிறன். இந்தச் சமயத்தில் அவனுக்கு நீந்தத் தெரிந்தும் அது உபயோகப்படாதேபோச்சுது (யோவா. 21. 7.). சுபாவத்தையும் தேவகிருபையையும் கலக்கக்கூடாது. கிருபை என்னும் அதிசய உலகில் பிரவேசித்தவன் தனக்கு இஷ்டமான போது அதைத் தள்ளி தன்னுடைய பழைய சுபாவத்திற்குரிய உதவியைத் தேடலாகாது. அதைத் தள்ளிவிட்டபடியால், தான் தொடங்கின நவமான பிரமாணத்தை முற்றும் கொண்டு செலுத்தவேண்டும்; இல்லாவிட்டால் மோசமடைவான்.

ஆனால் இயேசு தன்னை முற்றும் கைவிடுவாரென்று நம்ப வில்லை. அவன் சங்கீதக்காரனைப்போல் "என் கால் தள்ளாடுமென்று நான் சொன்னபோதோவெனில், கர்த்தாவே! உமது கிருபை என்னைத் தாங்கிற்று" என்று அநுபவத்தினால் சொல்லத்தக்கவனாய் இருந்தான். "ஆண்டவரே, என்னை இரட்சியும்" என்று கூப்பிட்டபோது உடனே அவனுக்குச் சகாயம் கிடைத்தது. இயேசுவானவர் கையை நீட்டி அவனைப் பிடித்துக்கொண்டார். அவனைக் கண்டித்தவிதத்தைப் பாருங்கள். அவிசுவாசியே என்று அவனை அழையாமல் "அற்ப விசுவாசியே, ஏன் சந்தேகப்பட்டாய் என்றார்." ஏன் வந்தாயென்று கேட்கவில்லை; அவனுடைய தைரியசிந்தையைத் தடுக்கவில்லை; அதைத் திடப்படுத்தினார். கிறிஸ்துவைக்கொண்டு யாவையுஞ்செய்ய அவன் கூடியவன் ஆனபடியால், தன்னைத் தாங்கக்கூடிய வல்லமையில் அதிக நம்பிக்கை வையாததினாலே அப்படிக் கண்டித்தார். பயந்திருந்த அவனுக்குத் திடன்கொடுத்து, கோஷ்டமாயிருந்த சமுத்திர அலைகளைக் காலின்கீழ் மிதிக்க அவனுக்குப் பெலனுண்டென்று காட்டினபிறகுதான் இப்படி உருக்கமாய் அவனைக் கண்டித்தார். இதற்குள்ளாக அவனுக்கு தைரியம் மறுபடியும் வந்துவிட்டது. ஏனெனில் அவனுடைய சந்தேகத்தைக் கடந்துபோன காரியமாய் எண்ணிப் பேசுகிறார். ஏன் சந்தேகப்பட்டாய் என்றார். "உன் இருதயத்தில் சந்தேகம் தோன்றுமுன் நீ கடலில் நடந்தாய். இப்பொழுது உன் விசுவாசம் திரும்பினபிறகும் தண்ணீரில் நடக்கிறாய். இது கூடாதகாரியமல்ல, விசுவாசமாத்திரம் வேண்டும், விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் ஆகும்" என்கிற கருத்தாய்க் கண்டித்தார். இதில் யாவருக்கும் ஒரு படிப்பினை இருக்கிறது. எக்காலத்திலுமுள்ள எல்லாப் பரிசுத்தவான்களும் பயத்திலும் பெலவீனத்திலும் அகப்படும்போது பேதுருவைப்போல் இருக்கிறார்கள். அவர்கள் விசுவாசம் பலமாயிருக்குமானால், இந்தப் பொல்லாதலோகத்தில் நடக்கும் எல்லாத் துக்கங்களையும் வருத்தங்களையும் காலின் கீழே போட்டு மிதித்துப்போடுவார்கள். அவர்கள் தைரியம்

குறைந்து பயத்துக்கிடங்கொடுப்பார்களானால், கிறிஸ்துவான வரை நோக்குகிறதற்குப் பதிலாக கொந்தளிக்கிற காற்றையும் கடலையும் பார்ப்பார்களேயானால், இவைகள் அவர்களை மேற்கொள்ளும். அவர்கள் அமிழத்தொடங்குவார்கள். அந்தச் சமயத்தில் கெஞ்சும்பொழுது அவர்களுக்கு உதவிசெய்யும்படியாய் நீட்டப்பட்டிருக்கிற கிறிஸ்துவானவருடைய கரம் அவர்களைத் தாங்காவிட்டால் அவர்கள் முற்றிலும் அமிழ்ந்து மூழ்கிப்போவார்கள்.

சுவிசேஷகர் சொல்வது ஒன்றுக்கொன்று விகற்பமாயிருக்கிறதென்று காண்பிக்க விரும்புகிறவர்கள் மத்தேயும் மாற்கும் சொல்லுகிறது யோவான் சொல்லுகிறதற்கு ஒரு விஷயத்தில் விரோதப்படுகிறதென்கிறார்கள். அவர்கள் நம்முடைய இரட்சகர் படவில் ஏறினதாகச் சொல்லியிருக்க யோவான் அவரைப் படவிலேற்றிக்கொள்ள விரும்பினார்களென்று மாத்திரம் சொல்லி வேறொன்றும் சொல்லாததினால் கப்பலில் அவரை ஏற்றிக்கொள்ளவில்லையென்றும், உடனே வெகுசீக்கிரத்தில் ஆச்சரியமானவிதமாய்ப் படகு கரைசேர்ந்ததென்றும் சொல்லுகிறதாக அர்த்தம்பண்ணுகிறார்கள். காரியத்தைப் பார்க்கும்பொழுது அவர்கள் விரும்பினதுபோல செய்தார்கள் என்றே சொல்லவேண்டும். ஏற்றிக்கொள்ள விரும்பினார்கள் என்றுதான் சொல்லியிருக்கிறது. அவர் சமீபத்தில் வந்தபோது ஆவேசம் என்று சொல்லிப் பயந்தவர்கள், இப்பொழுது அவரைப் படவில் ஏற்றிக்கொள்ள ஆசித்து அப்படி ஏற்றிக்கொண்டார்கள் என்பதுதான் இதன் பொருள். மூலபாஷையில் விரும்பினார்களென்று திருப்பியிருக்கிற வார்த்தை விரும்பினதுபோல் செய்வதையுங் குறிக்கும். மத். 18. 23ல் ஒரு இராயன் தன் ஊழியக்காரரோடு கணக்குப்பார்க்க சித்தமாயிருந்தான் என்றிருக்கிறது. அப்படிச் சித்தமாயிருந்ததுபோல கணக்குப்பார்த்தான் என்று பின்வரும் சங்கதியால் விளங்குகிறது. யோவா. 1. 43ல் இயேசுவானவர் கலிலேயாவுக்குப் போக மனதாயிருந்தாரென்று மாத்திரமிருக்கிறது. ஆனால் 2. 11ல் பார்த்தால் அவர் போயிருந்தாரென்பது திட்டமாய்த் தெரிய

வருகிறது (லூக். 20. 46. 1 கொரி. 10. 27.). கிறிசொஸ்தம் என்பவர் அவர் படவில் ஏறவில்லையென்று அபிப்பிராயம் கொண்டிருக்கிறதினால் யோவான் வேறொரு சங்கதியைக் குறித்து எழுதியிருக்கிறார் என்கிறார். இது நம்பக்கூடியதல்ல. மத்தேயும் மாற்கும், யோவான் சொல்லுகிறதுபோல படகு உடனே கரைக்கு வந்து சேர்ந்ததென்று சொல்லாமல், இரட்சகர் படவிலேறின உடனே காற்று அமர்ந்துபோயிற்றென்று மாத்திரம் சொல்லுகிறார்கள். இதைப் பார்த்த சீஷர்கள் மிகவும் அதிகமாய்த் தங்களுக்குள்ளே பிரமித்து ஆச்சரியப்பட்டதாக மாற்கு சொல்லுகிறார். சீஷர்மாத்திரமல்ல, படவில் அவர்களோடிருந்த மற்றவர்களும் இரட்சகருடைய பலத்த வல்லமையைக் கண்டு, மெய்யாகவே நீர் தேவனுடைய குமாரன் என்று சொல்லி, அவரைப் பணிந்ததாக மத்தேயு சொல்லுகிறார். "உமது வழி கடலிலும், உமது பாதைகள் திரண்ட தண்ணீர்களிலும் இருந்தது; உமது காலடிகள் தெரியப்படாமற்போயிற்று" என்று சங். 77. 19லும், "திரளான தண்ணீர் குவியலாகிய சமுத்திரத்துக்குள் உமது குதிரைகளோடே நடந்துபோனீர்" என்று ஆபகூ. 3. 15லும், "வானங்களை விரித்து, சமுத்திர அலைகளின்மேல் நடக்கிறவர்" என்று யோபு. 9. 8லும் சொல்லப்பட்டிருக்கிறவருக்கு இவர் சமானமானவர் என்று அவர்கள் உணர்ந்திருக்கவேண்டும். யோபில் சொல்லியிருக்கிற வார்த்தைகள் இந்த அற்புதத்தினாலேயே நிறைவேறினதென்றும், அவர் கடலின் தண்ணீரில் நடந்ததுபோல பாவம், மரணமென்ற கோஷ்டமான சமுத்திரங்களை மிதித்து நம்மை இரட்சிக்கிறாரென்றும், ஐரேபியுஸ் எழுதியிருக்கிறார். நாஸ்திகரில் சிலர் கிறிஸ்துவுக்கு நம்மைப்போலொத்த சரியான சரீரம் இருந்ததில்லை என்று எண்ணினபடியால், இந்த அற்புதத்தைத் தங்களுடைய தப்பான கொள்கைக்கு ஆதாரமாக சொல்லுகிறதுமல்லாமல், இரட்சகருடைய காலுக்குத் தண்ணீர் கல்போல் உறுதியாய் இருந்ததென்றும் சொன்னார்கள். கிறிஸ்துவானவருடைய மனந்தான் இப்படிச் செய்வதற்குக் காரணமாயிருந்தது. அவர்

சித்தமானபடி செய்தார். பூதங்கள் யாவற்றிற்கும் அவரே ஆண்டவரானபடியால் அவைகள் அவருக்கு முற்றும் கீழ்ப் படிந்தன. இப்படி அவர் தண்ணீரில் நடந்தது சுபாவமுறை மைக்கு விரோதமானதல்ல, அதற்கு மேலானது. மனிதனு டைய சித்தம் தேவனுடைய சித்தத்திற்கு ஒத்திருக்கும்போது அதிசயமான காரியங்களை நடப்பிக்கும்படி தேவன் இடங் கொடுக்கிறதுண்டு. இரட்சகருடைய சரீரம் முற்றிலும் நமது சரீரத்தைப்போல் மாம்ஸ இரத்தமுள்ளதாய்த்தான் இருந்தது. பாவம் ஒன்றுதவிர அவர் முற்றும் நம்மைப்போலானார். அவருக்கு ஆயாசமும் பசியும் இருந்தது. நித்திரைசெய்தார், காயப்பட்டார். காயங்களின் தழும்புகளும் அவருடைய தேகத்தில் காணப்பட்டது. இப்படியிருக்க அவருடைய சரீரம் வேறுவிதமானதென்று எப்படிச் சொல்லலாம்? தண் ணீரில் நடந்தபடியால் அப்படிச் சொல்வது சரியல்ல. பேதுருவும் தண்ணீரில் நடந்தானே. இதினால் நாஸ்திக ருடைய கொள்கை வேதவசனத்திற்கு எவ்வளவு விரோத மானதென்று லேசாய் அறிந்துகொள்ளலாம்.



## 18. பிறவிக்குருடனுக்குப் பார்வை அளித்தது.

---

யோவான், 9. 1—7.

"அவர் அப்புறம்போகையில் பிறவிக்குருடனாகிய ஒரு மனுஷனைக் கண்டார். அப்பொழுது அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி: ரபீ, இவன் குருடனாய்ப் பிறந்தது யார் செய்த பாவம், இவன் செய்த பாவமோ, இவனைப் பெற்றவர்கள் செய்த பாவமோ என்று கேட்டார்கள்.

இயேசு பிரதியுத்தரமாக: அது இவன் செய்த பாவமுமல்ல, இவனைப் பெற்றவர்கள் செய்த பாவமுமல்ல; தேவனுடைய கிரியைகள் இவனிடத்தில் வெளிப்படும்பொருட்டு இப்படிப் பிறந்தான். பகற்காலமிருக்குமட்டும் நான் என்னை அனுப்பினவருடைய கிரியைகளைச் செய்யவேண்டும்; ஒருவனும் கிரியை செய்யக்கூடாத இராக்காலம் வருகிறது. நான் உலகத்திலிருக்கையில் உலகத்திற்கு ஒளியாயிருக்கிறேன் என்றார்.

இவைகளைச் சொல்லி, அவர் தரையிலே துப்பி, உமிழ்நீரினால் சேறுண்டாக்கி, அந்தச் சேற்றைக் குருடனுடைய கண்களின்மேல் பூசி: நீ போய், சீலோவாம் குளத்திலே கழுவு என்றார். சீலோவாம் என்பதற்கு அனுப்பப்பட்டவன் என்று அர்த்தமாம். அப்படியே அவன் போய்க் கழுவி, பார்வையடைந்தவனாய்த் திரும்பிவந்தான்."

---

யோவான் 7, 8-ம் அதிகாரங்களிலுள்ள சங்கதிகள் நடந்த நாளிலேயே இந்த அற்புதமும் நடந்ததென்று சொல்லலாம். இரக்ஷகருடைய பிரசங்கம் விபசாரத்தில் பிடிக்கப்பட்ட ஸ்திரீயின் சங்கதியினால் குழப்பப்பட்டபோதிலும், யூதர்களுடைய கோபத்துக்குத் தப்பிக்கொள்ளும்படி தேவாலயத்திலிருந்து போனபொழுது அவர் இந்த அற்புதத்தைச் செய்திருக்கலாம். பிச்சைக்காரரும் சப்பாணிகளும் மற்றும் வியாதியஸ்தரும் தேவாலயத்துக்குச் சமீபமாயிருந்து நடந்து போகிறவர்களிடத்தில் பிச்சைகேட்பதுண்டு. 7-ம் அதிகாரத்தின் கடைசியில் இருக்கிற நம்முடைய இரக்ஷகருடைய பிரசங்கம் ஓய்வுநாளிலே பண்ணப்பட்டிருக்கவேண்டும்.

ஏனெனில் அது கூடாரப்பண்டிகையின் கடைசிநாளில் நடந்தது. அந்த நாள் எப்பொழுதும் ஓய்வுநாள்தான். இந்த அற்புதமும் ஓய்வுநாளில்தான் நடந்தது. இந்த காரணத்தைக்கொண்டு இவை எல்லாம் ஒரேநாளில் நடந்ததுதான் என்று சொல்லுகிறார்கள். இரக்ஷகர் தப்பித்துக்கொள்ளும்படி தனியே போனபோதிலும், அவருடைய சீஷர் பிறகு அவரிடத்தில் சேர்ந்திருக்கலாம். இரக்ஷகர் எந்தச் சமயத்திலும் சத்துருக்கள் நடுவிலிருக்கும்பொழுதும் யாதொரு பயமில்லாமல் கலக்கமில்லாமல் நன்மைசெய்யக்கூடியவராய் இருந்தார். யூதருடைய கோபமாகிய இரவு முற்றிலும் அவர்மேல் வரும் முன்னே தம்மை அனுப்பினவருடைய கிரியையைச் செய்ய ஜாக்கிரதைப்பட்டார்.

இவன் பிறவிக்குருடனாயிருந்தான். அதாவது பிறப்புமுதல் குருடன். அப். 3, 14–ம், அதிகாரங்களில் சொல்லியிருக்கிற சப்பாணியும் அப்படியே. இவனைக்குறித்து எருசலேமிலுள்ள யாவரும் நன்றாய் அறிந்திருந்ததாகத் தோன்றுகிறது. இவன் பிறவிக்குருடன் என்று அறிந்த சீஷர், இரட்சகைப் பார்த்து: ரபீ, இவன் குருடனாய்ப் பிறந்தது யார்செய்த பாவம், இவன்செய்த பாவமோ, இவனைப் பெற்றவர்கள் செய்த பாவமோ என்று கேட்டார்கள். இவனுடைய குருட்டுத்தனத்துக்கு இவனுடைய பாவமே எப்படிக் காரணமாயிருக்கலாம் என்பதைப்பற்றி பல அபிப்பிராயங்களுண்டு. சிலர் முந்தின பிறப்பில் அவன் பாவஞ்செய்திருப்பான் என்று சீஷர் எண்ணினதாக நினைக்கிறார்கள்; இது சரியல்ல. ஏனெனில் யூதருக்குள் பிறப்பைப்பற்றின தப்பிதமான உபதேசம் இருந்ததில்லை.

ஏசா யாக்கோபைக்குறித்து, கர்ப்பத்திலே பிள்ளைகள் ஒன்றையொன்று மோதிக்கொண்டிருந்தன என்று சொல்லியிருக்கிறதை ஆதாரமாக வைத்து, தாயின் கர்ப்பத்திலேயே பிள்ளைகள் பாவஞ்செய்யக்கூடியதென்று யூதர்கள் விசுவாசித்து வந்ததாகவும் சிலர் எண்ணுகிறார்கள். வேறுசிலர் இனிமேல் அவன் ஏதோ ஒரு பெரிய பாவஞ்செய்வானென்று முன்னறிந்த தேவன் இப்படி அவனை தண்டித்திருப்பாரென்று

எண்ணுகிறார்கள். குற்றஞ்செய்வதற்கு முன்னே இப்படி தண்டிப்பாரென்று சொல்வது நமது புத்திக்கு விரோதம். இவனுடைய பாவத்தினால் இவன் குருடனாக்கப்படக்கூடாது. ஏனெனில் பிறக்கும்போதே குருடனாயிருந்தான். இவன், பெற்றோர் பாவத்தினாலும் குருடனானான் என்று சொல்லக்கூடாது. அவனவன் பாவத்தை அவனவன் சுமக்கவேண்டுமே. "பிதாக்கள் திராட்சக்காய்களைத் தின்றதினால் பிள்ளைகளின் பல் கூசிப்போனது" என்று எப்படிச் சொல்லலாம்? தங்கள் வார்த்தைகளின் பொருளைக் கவனியாமல் சீஷர்கள் இப்படி சொன்னதாகத் தோன்றுகிறது. பாவத்தினால் தண்டனை வரும் என்பதைக் கவனித்தார்களேயொழிய துன்பத்துக்கு எல்லாம் காரணமாகிய பாவத்தை மொத்தப்பொருளாய்க் கவனிக்கவில்லை. ஆதித்தாய் தகப்பன்மாருடைய பாவம் அவர்களுடைய சந்ததியார் முழுவதையும் பிடித்தது. அந்தப் பாவத்திலிருந்தே உலகத்திலுள்ள வருத்தங்களும் துன்பங்களும் தோன்றிற்று. இவனும் பாவஞ்செய்யவில்லை, இவனைப் பெற்றவர்களும் பாவஞ்செய்யவில்லை என்று இரட்சகர் சொன்னது அவர்கள் ஒருக்காலும் பாவிகளல்ல என்ற பொருள் உடையதல்ல. இவன் குருடனாய்ப் பிறக்கிறதற்கு அவர்கள் காரணரல்ல என்றுமாத்திரம் சொன்னார். "தேவனுடைய கிரியைகள் இவனிடத்தில் வெளிப்படும்பொருட்டே இவன் குருடனாய்ப் பிறக்கும்படி கர்த்தர் இடம்பண்ணினார். இந்த குருட்டுத்தனம் நீங்குகிறதினால் கர்த்தருடைய மகிமையும் இரக்கமும் வெளிப்படுவதைப் பாருங்கள்" என்பதுபோல சொன்னார். இவனுக்கும் மற்றவர்களுக்கும் கர்த்தருடைய மகிமை வெளிப்படுகிறது மாத்திரமல்ல, இவனுடைய ஆத்துமாவிலிருந்த அந்தகாரம் நீங்கி நித்தியமோட்ச பிரகாசத்துக்கு இவன் பங்காளியாகும்படி இதை ஒரு கருவியாக ஏற்படுத்தினாரென்று சொல்லலாம். மேலும் தம்முடைய ஒரே பேறானவருடைய மகிமையையும் வல்லமையையும் வெளிப்படுத்துவதற்கும் இதை ஒரு வழியாக ஏற்படுத்தினார். (யோவா. 11. 4. ரோ. 5. 20; 9. 17; 11. 25, 32, 33.). தேவன்

பாவத்துக்குக் காரணராய் இராவிட்டாலும் பாவத்தினால் வருந் தீமையைப் பகிர்ந்துகொடுக்கிறவரானபடியால் இந்த மனு ஷனுக்கு இந்தப் பெரிய பங்கைக் கொடுக்கச் சித்தமானார். அதுபோல் இதைக்கொண்டு தமது மகிமையை அதிகமாய் வெளிப்படுத்தவும் மனதுவைத்தார்.

இந்த அற்புதத்தைச் செய்வதற்கு இரட்சகர் சொல்லுகிற காரணத்தைப் பாருங்கள். "பகற்காலமிருக்குமட்டும் நான் என்னை அனுப்பினவருடைய கிரியையைச் செய்யவேண் டும்; ஒருவனும் கிரியைசெய்யக்கூடாத இராக்காலம் வருகி றது. என்ன மோசம் நேரிட்டாலும் இந்த கிரியையை நான் நிறைவேற்றவேண்டும். நான் ஜனங்களுக்குள் நடமாடி நன்மை செய்யக்கூடிய பகற்காலமாகிய என் ஜீவநாள் சீக்கிரம் முடி யும். இப்படிப்பட்ட கிரியையைச் செய்யக்கூடாதபடிக்கு இராத்திரியாகிய மரணம் சீக்கிரம் வரும்." பகலிலே அவர் வேலைசெய்ததுபோல பகலின் வெளிச்சமாயும் இருந்தார். பகற்காலம் வேலைக்கேற்றது. அப்போது மனிதன் தன் வேலைக்கும் தன் பண்ணைக்கும் சாயங்காலமட்டாக புறப்படுகி றான். இரவிலோ வேலைசெய்கிறது கூடாது. இரட்சகர் பூமியில் இருக்கிறவரையில் பூமிக்கு ஒளியாயிருக்கிறேன் என்று சொன்னதுபோல, குருட்டுக் கண்களைத் திறக்கிறதி லும், ஆத்துமாவுக்குரிய பரம ஒளியை ஈகிறதிலும் தம்மு டைய பகற்காலத்தைச் செலவழித்தார். அவர் சொஸ்தமாக்கின வகையைப் பாருங்கள். இப்படி அவர் சொல்லி பின்பு தரையிலே துப்பி உமிழ்நீரினால் சேறுண்டாக்கி அந்தச் சேற் றை குருடனுடைய கண்களின்மேல் பூசினார். நம்முடைய இரட்சகர் மாற். 7, 8-ம் அதிகாரங்களில் குருடனின் கண் களைத் திறந்தபோதும், செவிடனுடைய காதைத் திறந்த போதும் உமிழ்நீரைப் பிரயோகித்ததாகப் பார்க்கிறோம். இது அவசியமென்றல்ல. ஏனெனில், வேறுசமயங்களில் தம் முடைய வார்த்தையைக்கொண்டுமாத்திரம் குருடருக்குப் பார் வை அளித்திருக்கிறார் (மத். 20. 30-34.). ஒருவேளை இவன் பெலவீன விசுவாசத்துக்கு உதவியாக இப்படிச் செய்திருப்

பார். நீ போய் சீலோவாம் குளத்திலே கழுவு என்று சொன்னதின் பொருளென்ன? கழுவுகிறதினால் பார்வை உண்டாகும் என்றல்ல, இவனுடைய விசுவாசத்தைச் சோதிக்கும்படி அப்படிச் சொன்னார். யோவான் அப்போஸ்தலன் இந்த இடத்தில் சீலோவாம் என்ற வார்த்தைக்கு அர்த்தம் இன்னதென்று அறிவிக்கிறார். கழுவும்படி குருடன் அனுப்பப்பட்டதற்கு இந்த வார்த்தையின் பொருள் ஒத்திருக்கிறதினாலேயோ, இரட்சகருக்கு அனுப்பப்பட்டவர் என்கிற பேர் இருந்ததினாலேயோ, இன்னகாரணமென்று திட்டமாய்ச் சொல்ல எதுவில்லை. இங்கே இரட்சகர் குருடனை அனுப்புகிறவராயிருந்தபோதிலும் அவர் பிதாவினால் அனுப்பட்டவராயும் இருந்தார் (யோவா. 7. 29; 8. 42.). இதினால் நமது இரட்சகர் அப்போஸ்தலர் என்று அழைக்கப்படுகிறார் (எபி. 3. 1.). சீலோவாமின் தண்ணீர் ஞானஸ்நான சுத்திகரிப்புக்கும் ஆத்துமத்தின் உள்ளான சுத்திகரிப்புக்கும் முன்னடையாளமாய் இருக்கலாம். இதினால் அந்த பேர் அதற்குத் தற்செயலாய் வரவில்லை என்று தோன்றுகிறது.

அந்தப்படி அவன் போய்க் கழுவி பார்வையடைந்து திரும்பிவந்தான். இரட்சகரண்டைக்கு அவன் திரும்பிவந்ததாகத் தோன்றவில்லை. அவன் சிநேகிதரும் அயலகத்தாரும் அவனைக் கண்டவுடனே ஆச்சரியப்பட்டு, இவன் அவன்தானோ என்று சந்தேகப்பட்டார்கள். பார்வையடைந்ததினால் அவன் முகமும் வேறுபட்டது. இவன் எப்படி பார்வையடைந்தான் என்றும், இவனுக்குப் பார்வையளித்தது இன்னார் என்றும் அறிந்துகொள்ள ஆசையுள்ளவர்களாய் பரிசேயரிடத்தில் அவனை அழைத்துவந்தார்கள். அவனுக்கு விரோதமாயாவது, இரட்சகருக்கு விரோதமாயாவது தீங்குசெய்யவேண்டுமென்று அவர்கள் எண்ணவில்லை. ஓய்வுநாளில் அது நடந்தபடியால் அதையிட்டு சந்தேகங்கொண்டு பரிசேயரிடத்தில் வந்ததாகத் தோன்றுகிறது. சனதிரீம் சங்கத்தில் பரிசேயர்மாத்திரமல்ல, சதுசேயரும் இருந்தார்கள் (அப். 23. 6.). காய்பா ஓர் சதுசேயன் (அப். 5. 17.). ஆகிலும் பரிசேயர்தான் தொகையில்

அதிகப்பட்டவர்களாயும், இரட்சகருக்கு முக்கிய விரோதிகளாயும் இருந்தார்கள்.

நீ எப்படிப் பார்வையடைந்தாய் என்று கேட்டபொழுது, அவர் என் கண்களின்மேல் சேற்றைப் பூசினார், நான் கழுவினேன், காண்கிறேன் என்றான். அவன் குருடனாயிருந்தபடியால் உமிழ்நீர் துப்பினதைப் பார்க்கவில்லை. அது ஓய்வு நாளில் நடந்தபடியால், அவர் செய்த அற்புதசெய்கையை கறைப்படுத்தப் பார்த்தார்கள். அது அற்புதமாயிருந்தபோதிலும் ஓய்வுநாளில் அதைச் செய்ததினால் அவர் தேவனால் அனுப்பப்பட்டவரல்ல, பிசாசின் வல்லமையினாலே அதைச் செய்தார் என்றெண்ணினார்கள். வேறொரு சமயத்தில் இவன் பிசாசுகளின் தலைவனானபடியால் பிசாசுகளைத் துரத்துகிறான் என்று சொன்னதுபோல இப்போதும் நினைத்தார்கள். ஆனால் சனதிரீம் சங்கத்தில் நிக்கொதேமு, யோசேப்பு என்றவர்களைப்போல தெய்வபக்தியுடைய சிலர் இருந்தபடியால் பாவியாயிருக்கிற ஒருவன் இப்படிப்பட்ட அற்புதங்களைச் செய்வதெப்படி என்று ஆக்ஷேபித்தார்கள். இப்படிக் கேள்வி கேட்டதினால் சந்தேகங்கொண்ட பெலவீனராய் இரட்சகர் பட்சத்தில் பேசினார்களென்று தோன்றுகிறது. உன் கண்களைத் திறந்தானே, அவனைக்குறித்து நீ என்ன சொல்லுகிறாயென்று குருடனைக் கேட்டபொழுது, அவன்: அவர் தீர்க்கதரிசி என்றான். தேவனுடைய குமாரனென்றும், மேசியாவென்றும் அவன் அறியவில்லை. இப்படிப்பட்ட அற்புதங்களைச் செய்தபடியால் அவர் தேவனால் வந்த போதகரென்றுமாத்திரம் அறிந்தான் (யோவா. 3. 2; 4. 19; 6. 14.). அவனுடைய அபிப்பிராயத்தை அறியவேண்டுமென்று கேட்கவில்லை. அவன் வாயிலிருந்து தங்கள் நோக்கத்துக்கிசைவானது ஏதாவது புறப்படும் என்று எண்ணிக் கேட்டார்கள். தங்கள் கருத்தை அவன் அறிந்துகொண்டு அதற்கிசைவாகப் பேசுவான்; தங்கள் காரியம் வாய்க்கும் என்று நினைத்தார்கள். அவனோ அவர்களுக்கு பயப்படாமல் கர்த்தர் தனக்குக் கொடுத்த தைரியத்தைக்கொண்டு தனக்குத் தெரிந்த சத்தியத்தில் உறுதியாய் நிற்கிறான். கிரியை

செய்தவரும் அவர் செய்த கிரியையும் தெய்வீகமுடைய தென்று உறுதியாய் சாதித்தான். அவன் மூலமாய் காரியம் வாய்க்கவில்லை என்று கண்டவர்கள் அவன் பெற்றோரை வரவழைத்து, இவன் குருடனாய்ப் பிறக்கவில்லை என்று சொல்லும்படி பிரயாசப்பட்டார்கள். அவர்களாலும் இவர்கள் காரியம் பலிக்கவில்லை. அவர்களைப் பார்த்து மூன்று கேள்வி கேட்டார்கள். இவன் உங்கள் குமாரனா? இவன் குருடனாய்ப் பிறந்தவனா? இவன் எப்படிப் பார்வையடைந்தான் என்றார்கள். முந்தின இரண்டு கேள்விகளுக்கு இவன் எங்கள் குமாரன்தான் என்றும், குருடனாய்ப் பிறந்தான் என்றும் ஒத்துக்கொண்டார்கள். மூன்றாவது கேள்விக்கோ, இவன் வயதுள்ளவனாயிருக்கிறான், இவனைக் கேளுங்கள், இவனே சொல்லுவான் என்றார்கள். இயேசுவைக் கிறிஸ்து என்று அறிக்கையிடுகிறவனை சபைக்குப் புறம்பாக்கவேண்டுமென்று சங்கத்தார் தீர்ப்புச்செய்திருந்தபடியால் பயந்து இப்படிச் சொன்னார்கள். சனதிரீம் சங்கத்தார், இயேசுவை கள்ளன் என்றும் எத்தன் என்றுஞ் சொல்லாவிட்டாலும், தாங்கள் அவரை மேசியா என்று ஒப்புக்கொள்ளுமுன்னே ஒருவரும் அவரை ஏற்றுக்கொள்ளக்கூடாது; அப்படி ஏற்றுக்கொள்ளுகிறவர்களை ஜெபஆலயத்துக்குப் புறம்பாக்கவேண்டும் என்று ஒழுங்குசெய்திருந்தார்கள். சபைக்குப் புறம்பாக்குதல் யூதருக்குள் மூன்றுவகையாயிருந்தது. இது கொடிய தண்டனையாய் இருந்தபடியினாலும், தம்முடைய சீஷர் இதற்கு உள்ளாக வேண்டியது வருமென்று இரட்சகர் அறிந்திருந்தபடியினாலும் இவைகளைக்குறித்து அடிக்கடி பேசியிருக்கிறார். முதலாவது முப்பதுநாள் ஜெபஆலயத்துக்குப் புறம்பாக்கினார்கள். இதினால் சீரடையாவிட்டால் இன்னும் முப்பதுநாளைக்காவது அதிகமாயாவது சபைக்குப் புறம்பாக்குவதுமல்லாமல், அவனைச் சபித்து அவனோடும் அவன் குடும்பத்தோடும் ஐக்கியமாய் இராதபடிக்கு விலக்கிவைப்பார்கள். கடைசியாக இதிலும் சீரடையாவிட்டால் முற்றிலும் சபைக்கு புறம்பாகத் தள்ளி, முற்றும் அவனை தெய்வகாரியங்களுக்கு விலக்கிவைப்பார்கள். இதைத்தான்

சாத்தானுக்கு ஒப்புக்கொடுக்கிறதென்று பவுல் அப்போஸ்தலன் சொல்லுகிறார் (1 கொரி. 5. 5. 1 தீமோ. 1. 20.). இந்த மூன்று விதமான தண்டனையைக் குறித்துத்தான் இரட்சகர் லூக். 6. 22ல் பேசுகிறதாக சிலர் நினைக்கிறார்கள்.

பெற்றோரிடத்தில் விசாரணைசெய்தபிறகு இரண்டாந் தரம் அவனை அழைத்து: "நீ தேவனை மகிமைப்படுத்து; இந்த மனுஷன் பாவியென்று நாங்கள் அறிந்திருக்கிறோம்" என்றார்கள். "உன் தாய்தகப்பன்மார் எங்களுக்கிசைவாய்ச் சொல்லியிருக்கிறார்கள். நீயும் அப்படியே அறிக்கையிடு. இதெல்லாம் பொய்யென்று எங்களுக்குத் தெரியும். எங்களுக்கு அதற்கேற்ற சாக்ஷிகளுண்டு. ஆதலால் கர்த்தருக்கு மகிமையைச் செலுத்தி நீயும் இது பொய்யென்று அறிக்கையிடு" என்றார்கள். தேவனுக்குத் தோத்திரம்செலுத்து என்று அவர்கள் சொன்னபொழுது, நீ அடைந்த பார்வைக்காக தோத்திரஞ்செலுத்தென்று சொல்லவில்லை. ஏனெனில் அற்புதம் நடக்கவில்லை என்று மற்றவர்கள் எண்ணும்படி விரும்பினார்கள். "தேவனை மகிமைப்படுத்து" என்கிறது ஓர்வகை ஆணை. யோசுவாவும் ஆகானைப்பார்த்து, "நீ இப்போது இஸ்ரவேலின் தேவனுக்கு மகிமையைச் செலுத்தி அவருக்குமுன்பாக அறிக்கைபண்ணி, என்ன செய்தாய் என்று எனக்கறிவி" என்றான். குணப்படும்பொழுதும், அறிக்கையிடும்பொழுதும் இப்படி தேவனை மகிமைப்படுத்தென்று சொல்லுகிறதுண்டு (1 சாமு. 6. 5. எரே. 13. 16. வெளி. 16. 9.). "நீயும் இயேசுவானவரும் கூடிக்கொண்டு இப்படி பொய்சொல்ல ஆரம்பித்தீர்கள். கர்த்தரோ எல்லா இருதயங்களையும் ஆராய்கிறவர். அவருக்குமுன்பாக எந்தப் பொய்யும் நிற்கமாட்டாது. ஆதலால் அவரை மகிமைப்படுத்து. இந்த மனுஷன் பாவியாயிருக்கிறான், அவன் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தபடியால் இப்படி அற்புதம் செய்யத்தக்க திராணியை அவனுக்குக் கொடுத்திருக்கமாட்டார். நீ சொல்லுகிறது உண்மை அல்ல, உன்னைவிட அதிக அறிவுள்ள நாங்கள் அப்படிச் சொல்லுகிறோம். உன்னைவிட எங்களுக்கு அதிகம் தெரியும்" என்று சொன்னார்கள்.

அவனோ தன் அறிவுக்கு மிஞ்சின காரியத்தை ஒத்துக்கொள்ள மனதில்லாதவனாய் "அவர் பாவியென்று எனக்குத் தெரியாது; நான் குருடனாயிருந்தேன், இப்பொழுது காண்கிறேன்; இது ஒன்றுதான் எனக்குத் தெரியும்" என்றான்.

இவன் கொஞ்சமாவது பிடிகொடாததைப் பார்த்த அவர்கள், அவன் சொல்லும் வாக்குமூலத்தில் ஏதாவது விகற்பம் கண்டுபிடிக்கலாம் என்று எண்ணி: உனக்கு என்னசெய்தான், உன் கண்களை எப்படித் திறந்தான் என்று மறுபடியும் கேட்டார்கள். அவனோ விசாரணையினால் சடைவடைந்துபோனபடியால் "என் மறுபடியுஞ் சொல்லவேண்டும்? முன்னமே உங்களுக்குச் சொன்னேன், நீங்கள் கேளாமற்போனீர்கள்; மறுபடியும் கேட்கவேண்டியதென்ன? அவருக்குச் சீஷராக உங்களுக்கும் மனமுண்டோ" என்றான். "நான் அவருடைய சீஷன், நீங்களும் அப்படியாவீர்களா? அவரை நீங்கள் இவ்வளவாய்ப் பகைக்கும்பொழுது உங்களுக்கு நூறுவிசை சொன்னபோதிலும் நீங்கள் அதை ஒத்துக்கொள்ளமாட்டீர்கள், அவருடைய சீஷராகவுமாட்டீர்கள்" என்பதுபோலப் பேசினான். "ஒருவேளை நீங்கள் மறுபடியுங் கேட்டு நான் சொன்னதை உண்மையென்று ஒப்புக்கொண்டு அவர் சீஷராக மனதாயிருப்பீர்களாக்கும்" என்பதுபோலும் சொல்லியிருப்பான். அவர்கள் இதைக் கேட்டவுடனே அவனை வைது "நீ அவனுடைய சீஷன், நாங்கள் மோசேயினுடைய சீஷர், மோசேயுடனே தேவன் பேசினாரென்று அறிவோம். அவருக்கு ஆண்டவர் அற்புதம்செய்யும் வல்லமையைக் கொடுத்தனுப்பினார். இவனைப்பற்றி எங்களுக்கொன்றும் தெரியமாட்டாது, இவன் எங்கேயிருந்துவந்தவனென்றும் அறியமாட்டோம்" என்பதுபோல மோசேயை இரக்ஷகருக்கு விரோதப்படுத்திப் பேசினார்கள். இவனோ கூர்ந்த புத்தியுள்ளவன் ஆனபடியால் அவர்கள் சொன்னதைக்கொண்டே அவர்களுக்கு எதிர்நியாயஞ்சொல்லுகிறான். "இது ஆச்சரியமல்லவா? இவர் என் கண்களைத் திறந்தார். இது மனுஷனால் கூடாதகாரியம். இத்தேசத்து அதிகாரிகளாகிய நீங்கள் சகலத்தையும் விசா

ரித்து ஆவிகளை வகையறுத்து கர்த்தரால் வந்ததையும் வராததையும் அறிந்து நிதானிக்கவேண்டியவர்கள். எங்களுக்கு இன்னவிடத்திலிருந்து வந்தவரென்று தெரியாதென்கிறீர்கள். நீங்கள் சொன்னபடி இவர் பாவியாயிருப்பாராகில் தேவன் இவருக்குச் செவிகொடுக்கமாட்டாரே. பாவிகளுக்கு தேவன் செவிகொடுக்கிறதில்லை. இவருக்கோ அவர் செவிகொடுத்து இப்படிப்பட்ட அற்புதத்தைச் செய்ய திறமை அளித்திருக்கிறார். இதினால் இவர் எவ்விடத்தானென்று எனக்குத் தெரியும். இவர் தேவனிடத்திலிருந்து வராதிருந்தால் இப்படிப்பட்ட காரியங்களைச் செய்யமாட்டார். உங்களுக்குத் தெரியாவிட்டாலும் எனக்குத் தெரியும். நீங்கள் ஒத்துக்கொள்ளாவிட்டாலும் இது சத்தியம்'' என்று உறுதியாய்ச் சொன்னான்.

இந்த மனுஷனுடைய விசுவாசமும் தைரியமும் எவ்வளவு சீக்கிரம் வளர்ந்ததென்று பாருங்கள். சற்றுமுன்னே அவர் பாவியோ அல்லவோ, எனக்குத் தெரியாதென்றவன், இப்பொழுது பாவிகளுக்கு தேவன் செவிகொடுக்கிறதில்லை என்று திட்டமாய்ச் சொல்லுகிறான். இந்த வாக்கியத்துக்குப் பொருளென்ன? சாதாரணமாய் எல்லா மனிதரும் பாவிகள் தான். ஆதாமின் மக்கள் ஒவ்வொருவருக்கும் அவனவனுக்கேற்ற பாரச்சுமையுண்டு. இந்தவிதமாய்ப் பார்க்கும்பொழுது எந்த மனிதனுக்கும் ஆண்டவர் செவிகொடுக்கிறதில்லை என்று சொல்லக்கூடாது. விசேஷித்த பாவங்களைச் செய்து பாவச் சேற்றில் அமிழ்ந்திருக்கிறவர்களும் உண்டு. இப்படிப்பட்டவர்கள் குணப்பட்டால் தேவன் அவர்களுக்குச் செவிகொடுக்கிறதில்லை என்று சொல்லக்கூடாது. குணப்படாமல், சீரடையாமல் தங்கள் பாவத்திலே நிலைத்திருக்கிறவர்களுக்கு தேவன் செவிகொடுக்கிறதேயில்லை. அப்படிப்பட்ட பாவிகளுடைய விண்ணப்பமும் தேவனுக்கு அருவருப்பாயிருக்கிறது. அப்படிப்பட்டவர்கள் கேட்டாலும் பெற்றுக்கொள்ளமாட்டார்கள். (எசா. 1. 11—15; 59. 1, 2. நீதி. 1. 28; 15. 8, 29. சங். 50. 16; 66. 18. யோபு. 27. 9; 35. 13. எரே. 14. 12. ஆமோ. 5. 21, 23. மீகா. 3. 4.)

இப்படி குருடன் சொன்னதைக் கேட்டவுடனே அவன் மேல் கோபமூண்டவர்களாகி அவன் தங்களுக்குப் போதிக்க வந்தது அவர்கள் எரிச்சலை மூட்டிவிட்டபடியால் "நீ முழுவதும் பாவத்தில் பிறந்தவன், உன் சரீரமாத்திரமல்ல, உன் ஆத்துமாவும் பிறப்புமுதல் அந்தகாரப்பட்டு தாயின் கர்ப்பம் முதல் தேவதண்டனைக்குள்ளானவன், நீயா எங்களுக்குப் போதிக்கிறது?" என்று கோபமாய்ப் பேசினார்கள். சற்றுமுன்னே: அவன் குருடனாய் பிறக்கவில்லை, பொய்யாய் அப்படிச் சொல்லுகிறான் என்று குற்றஞ்சாட்டினவர்கள் இப்பொழுது அவன் குருடனாய்ப் பிறந்ததை ஒத்துக்கொண்டு, முழுவதும் பாவத்தில் பிறந்தவன் என்கிறார்கள். இப்படிச் சொல்லி அவனை புறம்பே தள்ளினார்கள். அதாவது, ஜெபஆலயத்துக்குப் புறம்பாக்கினார்கள். இவ்விதமாய் அவன் கிறிஸ்துவுக்காக துன்பத்தைச் சகிக்க ஆரம்பித்தான். "மனிதகுமாரனிமித்தம் மனிதர் உங்களைப் பகைத்து உங்களைப் புறம்பாக்கி நிந்தித்து உங்கள் நாமத்தைப் பொல்லாததென்று தள்ளிவிடும்பொழுது நீங்கள் பாக்கியவான்களாயிருப்பீர்கள்" என்று இரட்சகர் சொன்ன வசனம் இப்போதுதான் நிறைவேறிற்று. தாழ்வான ஐக்கியத்தினின்றும், சீக்கிரம் நீங்கிப்போகும் ஐக்கியத்தினின்றும் தள்ளப்பட்டபோதிலும் இவன் மேலான ஐக்கியத்துக்கும் அசையாத ராஜ்யத்துக்கும் பங்காளியானான். யூதருடைய ஜெபஆலயத்திலிருந்து புறம்பாக்கப்பட்டவன் கிறிஸ்துவின் சபையில் சேர்த்துக்கொள்ளப்பட்டான். யூதரால் தள்ளப்பட்டபோதிலும் கிறிஸ்துவினால் அங்கிகரிக்கப்பட்டான். சங்கீதக்காரன் சொல்லுகிறதுபோல, அவன் தகப்பனும் அவன் தாயும் அவனைக் கைவிட்டார்கள். கிறிஸ்துவோ அவனைச் சேர்த்துக் கொண்டார். சபையின் திறவுகோலையுடையவர்கள் அநியாயமாய்க் கதவைப் பூட்டும்பொழுது, தாழ்ப்பாளை நாதாங்கிக்குப் புறம்பே விடுவார்களேயொழிய குற்றமற்றவனுக்கு மோக்ஷவாசலை அடைக்கமாட்டார்கள். இந்த குருடன் வெட்கமடையாமல் கிறிஸ்துவை அறிக்கையிட்டபடியால் கிறிஸ்துவானவர் தம்முடைய மகிமையையும் தன்மையையும் அவனுக்கு வெ

ளிப்படுத்தச் சித்தமானார். ஆதலால் இதுவரையில் அவரைத் தீர்க்கதரிசியென்று அறிந்தவன் இப்போது தேவகுமாரனாக அறிந்து கொள்ளுகிறான். உள்ளவனுக்குக் கொடுக்கப்படும் என்று அவரே சொன்னார், ஆதலால் அவன் புறம்பாக்கப்பட்டதை கேள்விப்பட்டவர் நல்ல மேய்ப்பனைப்போல தன் ஆட்டைத் தேடி அதைத்தன்னுடையதாக்கிக் கிடையில் சேர்க்கும்படியாய் அவனைக் கண்டுபிடித்து, நீ தேவனுடைய குமாரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறாயா என்றார். தேவகுமாரன் என்பது மேசியாவுக்குரிய பெயரென்று அறிந்தபோதிலும், அவர் இன்னாரென்று அறியாதபடியால்: ஆண்டவரே, நான் அவரிடத்தில் விசுவாசமாயிருக்கும்படிக்கு அவர் யார் என்றான். இயேசு அவனுக்குச் சொன்னது, நீ அவரைக் கண்டாய் உன்னுடனே பேசுகிறவர் அவர்தான் என்றார். முன்னே அவரைக் காணவில்லை, இப்பொழுது பேசும்போது அவரைக் கண்டதைத்தான், நீ அவரைக் கண்டாய் என்கிறார். நீ அவரைக் கண்டிருக்கிறாயே, உன்னுடனே பேசுகிற நான்தானே அவர், ஆகையால் இப்பொழுதே அவரைக் காண்கிறாய் என்று அவர் சொன்னபோது, ஆண்டவரே, நான் விசுவாசிக்கிறேன் என்று சொல்லி அவரைப் பணிந்துகொண்டான். இப்போதுதான் தேவனுடைய மகிமை அவனில் நிறைவாய் வெளிப்பட்டது. கிறிஸ்துவைப்பற்றிய அறிவு வரவர சம்பூரணமடைந்தது. விதையானது முளையும் பயிருமாய் வளர்ந்து பூத்துக் காய்த்துக் கனிகொடுத்ததுபோல இருந்தது. அவருடைய பாதத்தில் விழுந்து பயத்தோடும் நடுக்கத்தோடும் அவரை வணங்கித் தொழுதுகொண்டான். படிப்படியாய் கர்த்தர் தனக்குக் கொடுத்த ஒளியைப் பின்சென்று தடைகளை ஜெயித்து உண்மையாய் நடந்தபடியால், அவனுடைய விசுவாசம் பலப்பட்டு அவன் இருதயத்தில் விழுந்த விதை வேரூன்றி, துன்பத்துக்கு அஞ்சாதிருக்க அதிக கிருபையையும் அதிக அறிவையும் பெற்றுக்கொள்ளப் பாத்திரனானான்.

இவன் பார்வையடைந்திருக்க, அந்த சதுசேயரும் மற்றவர்களுமோ துன்மார்க்கத்தில் கடினப்பட்டுப்போனபடியால்,

இரட்சகர் அவர்களைப்பார்த்து: "காணாதவர்கள் காணும்படியாகவும் காண்கிறவர்கள் குருடர் ஆகும்படியாகவும் நியாயத்தீர்ப்புக்கொடுக்கிறதற்காக நான் இந்த உலகத்தில் வந்தேன்" என்றார். "அவனவன் நிலைமையை அவனவனுக்கு வெளிப்படுத்த வந்தேன். நான் ஒரு உரைகல்; என்னைத் தொடுகிறவர்கள், பார்வைக்கு நல்லவர்களாயிருந்தாலும் கள்ளரென்று வெளிப்படுவார்கள். அற்பரென்று அசட்டைபண்ணப்படுகிறவர்கள் நல்லவர்களாக கடைசியில் வெளிப்படுவார்கள். அறிவுள்ளவர்களென்று தங்களை அழைத்துக்கொண்டவர்கள் குருடராயும், அறிவீனரென்று புறக்கணிக்கப்படுகிறவர்கள் மெய்யான ஒளியுள்ளவர்களாகவும் வெளிப்படுவார்கள்." அவர் நாமம் சத்தியம். அவர் பாரிசமானவர்கள் சத்தியமுள்ளவர்கள். அவருக்கு விரோதிகள் பொய்யர். சிமியோன் சொன்னபடி அநேகருடைய சிந்தனைகள் வெளிப்படத்தக்கதாக இஸ்ரவேலில் அநேகர் விழுகிறதற்கும் எழுந்திருக்கிறதற்கும் இவர் நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்த கல்லின்மேல் அநேகர் அஸ்திபாரம்போட்டு தங்கள் மாளிகையைக் கட்டுகிறார்கள். சிலரோ இதற்கு விரோதமாய் இடறிவிழுகிறார்கள் (1 பேது. 2. 6, 8. 1 கொரி. 2. 16.). பரிசேயர் "நாங்களும் குருடரா" என்று விரோதமாய்க் கேட்டபோது, இரட்சகர் அவர்களுக்கு மாறுத்தரமாக யோவா. 10. 21 வரையிலுள்ள உவமையைச் சொல்லி இவனை சபைக்குப் புறம்பாகத் தள்ளினபடியால், அவர்கள் பலாத்காரமாய் கடூரமாய் ஆண்டுவந்த கெட்ட மேய்ப்பரென்றும், தாம் உண்மையுள்ள நல்ல மேய்ப்பரென்றும் காட்டுகிறார். எசே. 34-ம் அதிகாரத்தை யோவா. 9, 10-ம் அதிகாரங்களோடு ஒத்து வாசித்துப்பார்த்தால் இது நன்றாய் விளங்கும்.



# 19. சூம்பின கையையுடையவனைச் சொஸ்தமாக்கினது.

மத்தேயு, 12. 9—13.

"அவர் அவ்விடம் விட்டுப்போய், அவர்களுடைய ஜெபஆலயத்தில் பிரவேசித்தார். அங்கே சூம்பின கையையுடைய மனுஷன் ஒருவன் இருந்தான். அப்பொழுது, அவர்மேல் குற்றஞ்சாட்டும்படிக்கு: ஓய்வு நாளில் சொஸ்தமாக்குகிறது நியாயமா என்று கேட்டார்கள்.

அதற்கு அவர்: உங்களில் எந்த மனுஷனுக்காகிலும் ஒரு ஆடு இருந்து, அது ஓய்வுநாளில் குழியிலே விழுந்தால், அதைப் பிடித்துத் தூக்கிவிடமாட்டானோ? ஆட்டைப்பார்க்கிலும் மனுஷனானவன் எவ்வளவோ விசேஷித்திருக்கிறான்! ஆதலால், ஓய்வுநாளிலே நன்மை செய்வது நியாயந்தான் என்று சொன்னார்.

பின்பு அந்த மனுஷனை நோக்கி: உன் கையை நீட்டு என்றார். அவன் நீட்டினான்; அது மறுகையைப்போல் சொஸ்தமாயிற்று."

மாற்கு, 3. 1—5.

"மறுபடியும் அவர் ஜெப ஆலயத்தில் பிரவேசித்தார். அங்கே சூம்பின கையையுடைய ஒரு மனுஷன் இருந்தான். அவர் ஓய்வுநாளில் அவனைச் சொஸ்தமாக்கினால் அவர்பேரில் குற்றஞ்சாட்டலாமென்று அவர்மேல் நோக்கமாயிருந்தார்கள். அப்பொழுது அவர் சூம்பின கையையுடைய மனுஷனை நோக்கி: எழுந்து நடுவே நில் என்று சொல்லி; அவர்களைப் பார்த்து: ஓய்வுநாட்களில் நன்மைசெய்வதோ, தீமைசெய்வதோ, ஜீவனைக் காப்பதோ அழிப்பதோ, எது நியாயம்? என்றார். அதற்கு அவர்கள் பேசாமலிருந்தார்கள். அவர்களுடைய இருதயகடினத்தினிமித்தம் அவர் விசனப்பட்டு, கோபத்துடனே சுற்றிலும் இருந்தவர்களைப் பார்த்து, அந்த மனுஷனை நோக்கி: உன் கையை நீட்டு என்றார்; அவன் நீட்டினான், அவன் கை மறுகையைப்போலச் சொஸ்தமாயிற்று."

லூக்கா, 6. 6—11.

"வேறொரு ஓய்வுநாளிலே, அவர் ஜெபஆலயத்தில் பிரவேசித்து உபதேசித்தார். அங்கே சூம்பின வலதுகையையுடைய ஒரு மனுஷன் இருந்தான். அப்பொழுது வேதபாரகரும் பரிசேயரும் அவரிடத்தில் குற்றம் பிடிக்கும்படி, ஓய்வுநாளில் சொஸ்தமாக்குவாரோ என்று அவர்மேல் நோக்கமாயிருந்தார்கள். அவர்களுடைய சிந்தனைகளை அவர் அறிந்து, சூம்பின கையையுடைய மனுஷனை நோக்கி: நீ எழுந்து, நடுவே நில் என்றார். அவன் எழுந்து நின்றான்.

அப்பொழுது இயேசு அவர்களை நோக்கி: நான் உங்களிடத்தில் ஒன்று கேட்கிறேன்; ஓய்வுநாட்களில் நன்மைசெய்வதோ, தீமைசெய்வதோ ஜீவனைக் காப்பதோ, அழிப்பதோ, எது நியாயம் என்று கேட்டு, அவர்களெல்லாரையும் சுற்றிப்பார்த்து, அந்த மனுஷனை நோக்கி: உன் கையை நீட்டு என்றார். அப்படியே அவன் தன் கையை நீட்டினான், உடனே அவன் கை மறுகையைப்போலச் சொஸ்தமாயிற்று.

அவர்களோ மூர்க்கவெறிகொண்டு, இயேசுவை என்னசெய்யலாமென்று ஒருவரோடொருவர் ஆலோசித்தார்கள்.''

---

நம்முடைய இரக்ஷகர் ஏழு அற்புதங்களை ஓய்வுநாளில் செய்திருக்கிறார். கப்பர்நகூம் ஜெபஆலயத்தில் பிசாசுபிடித்தவனை சொஸ்தமாக்கினார் (மாற். 1. 21.). சீமோனுடைய மாமியைச் சுகமாக்கினார் (மாற். 1. 29.). பெதஸ்தாகுளத்தில் வியாதியாய்க் கிடந்தவனைச் சுகமாக்கினார் (யோவான் 5. 9.). இங்கே சூம்பின கையையுடையவனைச் சுகமாக்கினார். பிறவிக்குருடனுக்குப் பார்வை அளித்தார் (யோவா 9. 14.). கூனியாயிருந்த ஒரு ஸ்திரீயைக் குணமாக்கினார் (லூக். 13. 14.). நீர்க்கோவையுள்ள ஒருவனை குணமாக்கினார் (லூக். 14. 1.). இன்னும் அநேக அற்புதங்களை ஓய்வுநாளில் செய்ததாக மாற். 1. 34ல் வாசிக்கிறோம். நம்முடைய இரக்ஷகருடைய விரோதிகள் இதற்காக எப்பொழுதும் அவரிடத்தில் குற்றம்பிடித்து விரோதம் பேசினார்கள். இந்தச் சமயத்திலும் இதற்குச் சற்றுமுன்னே அவர் பண்ணின பிரசங்கத்திலும் அவர்கள் சாட்டின குற்றத்துக்கு எதிர்நியாயஞ் சொல்லி ஓய்வுநாளின் தன்மையை விவரமாய்க் காட்டியிருப்பதால், அதை இந்த இடத்தில் விசாரித்தறிந்துகொள்ளுவது நல்லது.

சீஷர்கள் ஓய்வுநாளில் கதிர்களைக் கொய்து தின்றதையிட்டு பரிசேயர் விரோதம்பேசினார்கள். கதிர்களைக் கொயது சாப்பிட்டது தப்பிதமென்றல்ல, ஓய்வுநாளில் அப்படிச் செய்வதே தப்பிதம் என்றார்கள். ஏனெனில், அடுத்தவன் விளைச்சலுக்குள் பிரவேசித்தால் அரிவாளைக்கொண்டு அறுக்கிறது தப்பிதமாயிருந்தாலும், பசிக்காக கையினாலே கதிர்களைக் கிள்ளலாமென்று மோசே கற்பித்திருந்தார். கர்த்தர் இஸ்ரவேல

ருக்கு இராசாவாயிருந்தபடியால், தேசம் அவருடையதென்று காட்டும்படி இப்படிச் சட்டங்கொடுத்திருந்தார். பரிசேயர் சீஷர்மேல் குற்றஞ்சாட்டி, இதோ, ஓய்வுநாளில் செய்யத்தகாததை உம்முடைய சீஷர்கள் ஏன் செய்கிறார்கள் என்றார்கள். அவர்கள் செய்ததைக் குற்றமென்று ஒத்துக்கொள்ளுவாரா? இல்லாவிட்டால் அவர்கள் செய்தது சரி என்று சொல்லி தாமும் குற்றவாளியாவாரா? எவ்விதத்திலும் அவரிடத்தில் குறைவைக் கண்டுபிடிக்கலாம் என்று எண்ணினார்கள். அவர்கள் எண்ணமோ வாய்க்கவில்லை. அவர்கள் விசுவாசித்து வந்த வேதாகமத்திலிருந்தே இரண்டு திருஷ்டாந்தங்களை எடுத்துச் சொல்லி, தம்முடைய சீஷர்கள் செய்தது வேதவசனத்துக்கு விபரீதமல்லவென்று ரூபித்தார். முதல் திருஷ்டாந்தம் அவர்களுடைய சரித்திர ஆகமங்களிலிருந்தும், இரண்டாவது அவர்கள் தேவாலய ஆராதனையினின்றும் எடுக்கப்பட்டது. 1 சாமு. 21-ம் அதிகாரத்தில், தாவீது சவுலுக்குத் தப்பி ஓடினபோது பசியாயிருந்தபடியால், பிரதான ஆசாரியனிடத்தில் தேவசமுகத்தப்பங்களைக் கேட்டு வாங்கிச் சாப்பிட்டான் என்று பார்க்கிறோம். தாவீது மிகவும் பெரிய பரிசுத்த தீர்க்கதரிசியாக எண்ணப்பட்டபடியால், இது அவர்களுக்கு பலத்த திருஷ்டாந்தமாய் இருந்தது. ஆசாரியர் மாத்திரம் சாப்பிடத்தக்க அப்பத்தைக் கேட்டு வாங்கின தாவீதும், அதைக் கொடுத்த பிரதானஆசாரியனும் தப்பிதக்காரன் என்று சொல்வார்களா? இரண்டாம் திருஷ்டாந்தம் அவர்கள் ஆராதனையைச் சேர்ந்தபடியால், அதையும் அவர்கள் லேசாய்த் தள்ளத் தக்கதல்ல. "ஓய்வுநாளிலும் தேவாலய ஊழியம் நடக்கவேண்டும். தேவாராதனை விசேஷித்ததானபடியால் அதைச் செய்யாமல் ஓய்வுநாளிலும் ஓய்ந்திருக்கக்கூடாது. மற்ற நாளைவிட அந்த நாளில் அதிக பலிகளைச் செலுத்தி, அதற்கேற்ற வேலைகளை ஆசாரியர் செய்வது அவசியம். அப்படிச் செய்வதினால் ஆசாரியர்கள் ஓய்வுநாளை மீறுகிறார்களென்று சொல்லக்கூடாது. அப்படிச் செய்யாமல் விடுவதே தப்பிதமாய் இருக்கும் என்று வேதத்தில் வாசிக்கிறதுமல்லாமல் நீங்களும் சொல்லு

கிறீர்களே" (எண். 28. 9.) என்பதுபோல நியாயஞ்சொன்னார். வேறொரு சமயத்தில் விருத்தசேதனத்தை ஓய்வுநாளில் செய்து ஓய்வுநாளைவிட சடங்குப்பிரமாணம் முக்கியமுள்ளதென்பதாய் அவர்கள் எண்ணி நடந்தார்களென்று காண்பித்தார். "எட்டாம் நாள் விருத்தசேதனம் செய்யவேண்டுமென்று மோசே கற்பித்தார். அது ஓய்வுநாளாயிருக்குமானால் ஓய்வுநாளென்றும் பாராமல் அதில் விருத்தசேதனம்பண்ணுகிறீர்கள். ஓய்வுநாளைவிட விருத்தசேதனம் விசேஷித்ததானால் என்னுடைய அற்புதங்கள் எவ்வளவு அதிக விசேஷித்ததென்று பாருங்கள். விருத்தசேதனத்தினால் ஒரு அவயவத்தைச் சுத்தமாக்குகிறீர்கள். நானோ மனுஷன் முழுமையும் குணப்படுத்துகிறேன். இப்படிப்பட்ட நல்ல கிரியைகளைச் செய்யக்கூடாதென்று சொல்லலாமா" என்று கேட்டார் (யோவா. 7. 22, 23.). ஒருவேளை பரிசேயர் அது தேவாலயத்திற்குரிய ஆராதனை, இவர்களோ தங்கள் சொந்தக் காரியத்தைப் பார்த்தார்கள் என்பதாய் ஆக்ஷேபிப்பார்களென்று நினைத்து தேவாலயத்திலும் பெரியவர் இங்கே இருக்கிறபடியால், அவருக்காக ஓய்வுநாளில் ஊழியஞ்செய்வதும் தப்பிதமல்லவென்று காண்பித்தார் (மல்கி. 3. 1. எரே. 11. 15.). தம்முடைய சீஷர்கள் புது உடன்படிக்கையின் ஆசாரியராகவும் தாமே சரியான தேவாலயமாகவும் எண்ணிப் பேசினார். அவருடைய ஊழியத்தில் அவர்கள் முயற்சியாயிருந்தபடியினாலே, தங்கள் சாப்பாட்டைத் தேட நேரமில்லாமல் போச்சுது. அதினால்தான் பசியினால் வருத்தப்பட்டு, அவர்கள் சத்துருக்கள் எண்ணினபடி ஓய்வுநாளை மீறும்படி நேரிட்டது. மெய்யான தேவாலயத்துக்கு நிழலாட்டமாயிருந்த தேவாலயத்திலுள்ள ஊழியத்தைச் செய்கிறவர்கள் குற்றமற்றவர்களாவார்களானால் மனுஷனாலல்ல கர்த்தரால் ஏற்படுத்தப்பட்டு கைகளில்லாமல் கட்டப்பட்ட மெய்யான தேவாலய ஊழியத்தைச் செய்கிறவர்களுடைய சிலாக்கியம் எவ்வளவு அதிகம்!

தமது சீஷரிடத்தில் தப்பிதமில்லை என்று காட்டுவது போதாது. பொறுமையினால் குற்றஞ்சாட்டினவர்களைக் கண்

டிக்கவேண்டும். இந்த நோக்கத்தோடே "பலியிலும் இரக்கத்தை விரும்புகிறேன் என்கிற வாக்கியத்தின் கருத்தை நீங்கள் அறிந்தீர்களானால் குற்றமில்லாத இவர்களைக் குற்றப்படுத்தமாட்டீர்கள்" என்றார். "வேதவசனத்தை எவ்வளவோ ஆராய்ந்து அதிலுள்ள எழுத்தை முதலாய் கணக்குப்பார்க்கிற நீங்கள் அதின் உள்ளான சரியான கருத்தைக் கவனித்தீர்களானால், இப்படிக் குற்றஞ்சாட்டமாட்டீர்கள்." இந்த வாக்கியம் ஓசி. 6. 6 விருந்து எடுக்கப்பட்டது. பலியைவிட இரக்கமே தமக்குப் பிரியமென்று ஆண்டவர் சொல்லுகிறார். பழைய உடன்படிக்கை குறைவுள்ளதென்றும், அது பெலனற்றதென்றும், அதைவிட பிரயோசனமுள்ள வேறொன்றை கர்த்தர் தம்முடைய ஜனங்களுக்காக ஆயத்தப்படுத்தப்போகிறாரென்றும் அநேக வாக்கியங்களில் திட்டமாய்ச் சொல்லியிருக்கிறது. இந்த வாக்கியமே அதற்குத் திருஷ்டாந்தம் (எசே. 20. 25. எபி 8. 8. மு. வாக்கியங்களைப் பார்.). பழைய ஏற்பாட்டின் தீர்க்கதரிசி புதிய ஏற்பாட்டின் அப்போஸ்தலனைப் போல பேசுகிறார். "நான் மனிதர் பாஷைகளையும் தூதர் பாஷைகளையும் பேசினாலும், அன்பு எனக்கிராவிட்டால், சத்தமிடுகிற வெண்கலம்போலவும், ஓசையிடுகிற கைத்தாளம் போலவும் இருப்பேன். நான் தீர்க்கதரிசனவரத்தை உடையவனாயிருந்து, சகல ரகசியங்களையும், சகல அறிவையும் அறிந்தாலும்; எனக்குண்டான யாவற்றையும் நான் அன்னதானம் பண்ணினாலும், என் சரீரத்தைச் சுட்டெரிக்கப்படுவதற்கு கொடுத்தாலும், அன்பு எனக்கிராவிட்டால் எனக்குப் பிரயோஜனம் ஒன்றுமில்லை" (1 கொரி. 13. 1–3.). வெளியரங்கமான சடங்குகளையும் பலிகளையும் அல்ல, இருதயக் காணிக்கையையே கர்த்தர் விரும்புகிறார். இதுதான் அவர் பார்வையில் மிகவும் விலையேறப்பெற்றது. சடங்குகளையல்ல, வெளியரங்கமான வேஷத்தையல்ல, புறம்பான ஆசாரங்களையல்ல; உள்ளான அன்பை, விசுவாசத்தை, கீழ்ப்படிதலையே கர்த்தர் மிகவும் விரும்புகிறார் (எபி. 10. 5–10.). இதை நன்றாய் அறிந்திருந்த சில பரிசுத்த போதகன்மார் சிறையிருப்பிலி

ருந்து கர்த்தருடைய பிள்ளைகளை மீட்டுவிடவும், கொடிய பஞ்சத்தில் அவர்களைக் காப்பாற்றவும், தேவாலயத்தின் பாத்திரங்களையும் விற்றார்கள். கர்த்தருக்கு அது அதிக பிரியமென்று அறிந்திருந்தார்கள்.

இரக்ஷகர் பலியைவிட இரக்கத்தையே விரும்புகிறேன் என்று இங்கே சொன்ன வார்த்தையின் கருத்தென்ன? சீஷருக்காக இதைப் பேசியிருப்பாரானால் "கர்த்தருக்கு எது பிரியமென்று நீங்கள் அறிந்துகொண்டவர்களானால் என் சீஷர் மேல் குற்றஞ்சாட்ட இடமிராது. அவர்கள் அழிந்துபோகிற ஆத்துமாக்களின்மேல் உருக்கமாய் இரங்கினபடியால் தங்கள் சாப்பாட்டையும் பெரிதென்று பாராமல் கர்த்தருக்கு ஊழியஞ்செய்தார்களே. அதினால்தான் இந்தச் சமயத்தில் கதிர்களைக் கொய்து தின்னும்படி நேரிட்டது. புறம்பான வணக்கத்தை கட்டளையின்படியே செலுத்துகிறதைவிட இப்படிப்பட்ட அன்பான ஊழியத்தையே கர்த்தர் ஏற்றுக்கொள்ளுகிறார்" என்கிற கருத்தாய்ச் சொல்லியிருப்பார். அல்லது பரிசேயரைக் கண்டிக்க இப்படிச் சொல்லியிருப்பாரானால் "கர்த்தருக்குப் பிரியமானது இன்னதென்று நீங்கள் அறிந்துகொண்டவர்களானால் இவர்களை வீணாய் கடிந்துகொள்ளுதலைவிட்டு, சாந்தமும் இரக்கமும் உள்ளவர்களாய் மற்றவர்களைக்குறித்து அன்பாய் எண்ணி, கர்த்தரை முழு இருதயத்தோடு நேசித்து, அவருக்குப் பிரியமான ஊழியத்தைச் செய்யப் பார்ப்பீர்கள். தகனபலி முதலான பலிகளிலும் இதுவே கர்த்தருடைய பார்வைக்கு மேன்மையாயிருக்கிறது." என்கிறதுபோல கண்டித்திருப்பார். குற்றங் கண்டுபிடிக்கத் தேடின பரிசேயரிடத்தில் இந்த அன்பும் இரக்கமுந்தான் குறைவாயிருந்தது. சீஷர்களை சீர்திருத்தவேண்டுமென்றாவது, கர்த்தருடைய காரியத்தில் வைராக்கியத்தைக் காட்டவேண்டுமென்றாவது, அவர்கள் சீஷருடைய குற்றத்தை எடுத்துப்பேசாமல், பொறாமையினாலும் எரிச்சலினாலும் ஏவப்பட்டு, அவர்களுக்கு விரோதஞ்செய்யவேண்டுமென்று தேவனுடைய பக்ஷத்தில் பேசுகிறதுபோலப் பேசி சீஷர்களைக்கொண்டு இரக்ஷகரையே துன்

பப்படுத்தப் பார்த்தார்கள். அவர்கள் ஏழைகளாயிருந்ததினு லல்ல, பசியினால் அப்படிச் செய்தபடியால் குற்றமற்றவர்கள் தான். கிறிஸ்துவுக்காகத் தங்கள் தொழிலை விட்டார்கள்; தேவ னுக்காக பிரயாசப்பட்டு பசியினால் வருந்தினார்கள். ஆதலால் தாவீதைப்போல இவர்களும் அவசியத்தினால் இப்படிச் செய் தார்கள். தேவாலயத்தில் ஊழியஞ்செய்த ஆசாரியனைப்போல் கர்த்தருக்கு ஊழியஞ்செய்ததினாலேயே ஓய்வுநாளை மீறின வர்களாகக் காணப்பட்டார்கள். தேவசமுகத்து அப்பங்களை யும் இவர்கள் சாப்பிட்டாலும் இவர்கள்மேல் குற்றஞ்சுமராது. ஏனென்றால் கர்த்தருடையது அவர்களுடையதுதான்.

மாற்கு சுவிசேஷகன் மனிதர் ஓய்வுநாளுக்காக உண்டாக் கப்படவில்லை. ஓய்வுநாள் மனிதருக்காக உண்டாக்கப்பட் டது என்கிற வார்த்தையையும் இரக்ஷகர் சொன்னதாகச் சொல் லுகிறார். ஓய்வுநாளைக் கைக்கொள்ளும்படிக்கு தேவன் மனி தனை உண்டாக்காமல் மனிதனுடைய நன்மைக்கும் பிரயோ ஜனத்துக்குமென்றே ஓய்வுநாளை ஏற்படுத்தினார். வெளியரங் கமான ஏற்பாடெல்லாவற்றையுங்குறித்து இப்படியே சொல் லலாம். மனிதனுக்காக நியாயப்பிரமாணத்தைக் கொடுத் தாரே ஒழிய, நியாயப்பிரமாணத்திற்காக மனிதனை உண்டாக் கவில்லை. மனிதன்தான் கர்த்தருடைய பார்வையில் விசே ஷித்தவன். மற்றவைகளெல்லாம் அவனுக்காக ஏற்படுத்தப் பட்ட கருவிகள். அவைகளால் அவன் ஒழுங்குபட்டு சீரடைந்து தம்மை வணங்குவதற்கு தகுந்தவனாவதே அவர் நோக்கம். யூதர்களுடைய தல்மூதிலும் "ஓய்வுநாள் உங்கள் கைகளிலிருக்கிறது. நீங்கள் ஓய்வுநாளுக்குள்ளானவர்கள் அல்ல, ஆதலால்தான் கர்த்தர் ஓய்வுநாளைக் கொடுத்தாரென்று எழுதியிருக்கிறது" என்று யூதர்கள் வாசித்தார்கள் (யாத். 16. 29.). இந்த காரணங்கள் எல்லாவற்றையும் அவர்களுக் குச் சொல்லி, கடைசியில் மனிதகுமாரன் ஓய்வுநாளின் தேவனாயிருக்கிறான் என்றார். சிலர் "மனிதகுமாரன்" என் பதை முந்தின வாக்கியத்திலுள்ள மனுஷனென்று அர்த்தம் பண்ணி, மனுஷனுக்காக ஓய்வுநாள் உண்டாக்கப்பட்டபடி

யால் அவன் ஓய்வுநாளுக்குக் கர்த்தனாயிருக்கிறான், அவன் இஷ்டப்படியே ஓய்வுநாளைக் கைக்கொள்ளலாமென்கிறார்கள்; இது பெரிய தப்பிதம். புதிய ஏற்பாட்டில் மனிதகுமாரன் என்று எண்பத்தெட்டுவிசை வந்தாலும், எப்பொழுதும் கிறிஸ்துவானவரைக்குறித்து அப்படிச் சொல்லியிருக்கிறதே ஒழிய ஒருவிசையாவது மனுஷனைக்குறித்துச் சொல்லியிருக்கிறதாகக் காணோம். பவுல் அப்போஸ்தலனும், கிறிஸ்துவினால் மனிதனுக்குக் கிடைத்த பெரிய சலாக்கியங்களைக்குறித்துப் பேசும் பொழுது, நியாயப்பிரமாணத்துக்கு அவன் எவ்வளவோ நீங்கினவனென்று சொன்னபோதிலும், நியாயப்பிரமாணத்துக்கு அவனைக் கர்த்தனென்று அழைக்கவே இல்லை. மீட்கப்பட்ட மனிதன் நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டவனல்ல, நியாயப்பிரமாணம் அவன்மேல் அதிகாரம் செலுத்துகிறதில்லை என்றாலும், சிநேகிதனைப்போல தோழனைப்போல அவனோடிருக்கிறது. மாம்சத்திலிருக்கிறவரையில் தேவநியாயப்பிரமாணம் அவனை மட்டுத் திட்டப்படுத்தவேண்டியது அவசியந்தான். கிறிஸ்துவின் ஊழியமாகிய சுயாதீனத்தினின்று விழுந்தவுடனே மறுபடியும் அதற்குக் கீழாகிறான். சடங்குப்பிரமாணத்தினின்றும் மனிதன் முற்றிலும் நீங்கலானவன் அல்ல. அதற்கு அவன் கர்த்தனல்ல. அதைக் கொடுத்தவரே அதற்கு அதிபதி. மனிதகுமாரன் தேவகுமாரனுமாய் இருப்பதால், எல்லாப் பிரமாணங்களுக்கும் கர்த்தனாயிருக்கிறார். முதலாவது அவைகளைக் கொடுத்தவர் கர்த்தரே. அவைகளை அவர் கொடுத்த நோக்கம் நிறைவேறினபிறகு அவைகளை நீக்கத்தக்கவரும் அவரே (எபி. 9. 11–15.). மனிதசுபாவத்தின்படி நியாயப்பிரமாணத்துக்குக் கீழானார்; தெய்வசுபாவத்தின்படி நியாயப்பிரமாணத்துக்குக் கர்த்தனானார். நிழலாட்டம் போய் பொருள் எப்பொழுது வருமென்று அவரே தீர்க்கத்தக்கவர். பொருளைப் பிடித்துக்கொண்டு நிழலைத் தள்ளத்தக்கது எப்பொழுதென்று அவரே நிர்ணயிக்க வல்லவர். எல்லா ஈவுகளுக்கும் மேலான ஈவான அவர் வந்ததினாலே, மற்றப் புறம்பான ஏற்பாடுகளெல்லாம் நின்றுபோவதற்குக் காலம் வந்த

தென்று அறிகிறோம். அவரே நியாயப்பிரமாணத்தின் முடிவு. அவரே அதை நிறைவேற்றினார். அவரையே அது முன் குறித்தது. அவரே சரியானபடி நியாயப்பிரமாணமாயும் இருக்கிறார். சத்துருக்கள் சொன்னபடி அதை அழிக்க அவர் வரவில்லை; அதை நிறைவேற்றவே வந்தார். அதின் அர்த்தத்தை வெளிப்படுத்தினார். அதை மகிமைப்படுத்தினார். நிழலைத் தள்ளிப் பொருளை ஸ்தாபித்தார். எழுத்தையல்ல, ஆவியை உறுதிப்படுத்தினார். (மத். 5. 17, 18.)

ஓய்வுநாளைப்பற்றி இரக்ஷகர் இந்த நியாயங்களைச் சொன்ன பிறகு உடனே இந்தச் சங்கதி நடந்ததாக மத்தேயு சொல்லுகிறார். லூக்கா இது மறு ஓய்வுநாளில் நடந்ததாகச் சொல்லுகிறார். கூனியாயிருந்த ஸ்திரீயைச் சொஸ்தமாக்கினதுபோலும், கப்பர்நகூமில் பிசாசைத் துரத்தினதுபோலும், இந்த அற்புதத்தைக் கர்த்தர் ஜெபஆலயத்தில்தான் செய்தார். அவர்களுடைய ஜெபஆலயத்தில், அதாவது அவரோடு தர்க்கமாடின பரிசேயருடைய ஜெபஆலயத்தில் பிரவேசித்தபோது, சூம்பின கையையுடைய ஒருவனைக் கண்டார். இது வலதுகை என்று லூக்கா சொல்லுகிறார். இது கொடிய வியாதி. இரத்தஓட்டம் இல்லாமல் அவயவம் சிறுத்து வரவரச் செத்து கடைசியில் முற்றிலும் கெட்டுப்போம். இது மனுஷரால் லேசாய்த் தீரக்கூடியதல்ல. நசரேனரும் ஈபியோனியரும் வழங்கிவந்த எபிரெய சுவிசேஷத்தில் இவன் கொத்தவேலை செய்தவன் என்றும், இரக்ஷகரைப் பார்த்து: நான் கையினால் ஜீவனம்பண்ணுகிறவன், எனக்குச் சுகமளிக்க வேண்டிக்கொள்ளுகிறேன்; இயேசுவே, இல்லாவிட்டால் வெட்கத்தோடு இரக்கவேண்டிவரும் என்று கெஞ்சினதாகவும் சொல்லியிருக்கிறது.

பரிசேயர் முதலாவது இரக்ஷகரைப் பார்த்து, ஓய்வுநாளில் சொஸ்தமாக்குகிறது நியாயமா என்று கேட்டதாக மத்தேயு சொல்லுகிறார். மாற்கும், லூக்காவும் நம்முடைய இரக்ஷகர் முந்திக் கேட்டதாகச் சொல்லுகிறார்கள். பரிசேயர் முந்தி அப்படி கேட்டிருக்கலாம். நம்முடைய இரக்ஷகரும் அந்தக் கேள்விக்கு மாறுத்தரமாக வேறொரு கேள்வியைக் கேட்டிருப்

பார். இது அவருடைய வழக்கம் (மத். 21. 24.). லூக்கா சொல்லுகிறதைப் பார்த்தால் இது தெளிவாகும். "நான் உங்களிடத்தில் ஒன்று கேட்கிறேன்: ஓய்வுநாட்களில் நன்மை செய்வதோ, தீமைசெய்வதோ, ஜீவனைக் காப்பதோ, அழிப்பதோ எது நியாயம்" என்று கேட்டார். அளவற்ற ஞானமுடைய அவர் வேறொரு சமயத்தில், "எனக்குப் பிறன் யார்" என்று கேட்ட நியாயசாஸ்திரிக்கு மறுஉத்தரவு சொன்னது போல், அவர்கள்மேலேயே காரியத்தைப் போட்டு, யார்பக்ஷத்தில் நியாயமுண்டென்று பார்க்கச்சொல்லுகிறார். செய்யலாமா, செய்யக்கூடாதா என்பதல்ல, நன்மைசெய்யலாமா அல்லது நன்மைசெய்யாமலிருக்கலாமா என்பதுதான் கேள்வி என்று பிடித்துக்கொண்டார். நன்மைசெய்யாமல் விடுவது தீமைசெய்வதற்குச் சமானம். காக்காமலிருப்பது அழிப்பது தான் (நீதி. 24. 11, 12.). "இதைக்குறித்து ஒருவரும் சந்தேகிக்கமாட்டார்கள். பாவஞ்செய்வது ஒருபோதும் நல்லதல்ல. ஓய்வுநாளில் சில காரியங்களைச் செய்யலாம் என்று மாத்திரமல்ல, செய்யவேண்டிய கடமையும் உண்டு. நான் செய்யப்போகிற காரியங்களைவிட அற்பக்காரியங்களை நீங்களே செய்யாமல் இருக்கமாட்டீர்கள். உங்களுடைய ஆடு ஓய்வு நாளில் குழியிலே விழுந்தால் அதை எடுத்துவிடாமலிருப்பீர்களா? நல்லமேய்ப்பனாகிய நான் மந்தையிலுள்ள ஆட்டைவிட விலையேறப்பெற்ற மனுஷனை இரக்ஷிக்கவேண்டாமா? அது ஓய்வுநாளுக்கடுத்த வேலையானால் இது எவ்வளவு அதிகம். ஓய்வுநாளில் சொஸ்தமாக்கலாமா என்று கேட்கிறீர்களா? ஓய்வுநாளில் நன்மைசெய்யலாம்; ஆதலால் சொஸ்தமாக்கலாம்" என்று மறுமொழி சொன்னபோது, அவர்கள் பதில் சொல்ல ஒன்றுமில்லாமல் பேசாமலிருந்தார்கள். அப்பொழுது அவர், அவர்கள் இருதயத்தின் கடினத்தைக்குறித்து விசனப்பட்டு கோபத்தோடே அவர்களைச் சுற்றிப்பார்த்து, பின்பு அந்த மனிதனை நோக்கி: உன் கையை நீட்டு என்றார்; பாவியைக் கண்டு விசனப்பட்டார், பாவத்தைக் கண்டு கோபமடைந்தார்; இரண்டும் அவரிடத்தில் இருந்தது. நாமோ

பாவிகளானபடியால் பாவமில்லாமல் கோபங்கொள்வது வருத்தம். நம்முடைய கோபம் கீழேயிருக்கும் மண்டியை, அதாவது பாவச்சுபாவத்தைக் கலக்குகிறதுபோலிருக்கிறது. அவருடைய கோபமோ மேலேயிருக்கும் தண்ணீரை அடித்ததுபோல் இருக்கிறது. இரக்ஷகருடைய முகக்குறிப்புகளே அடிக்கடி சொல்லுகிற மாற்குமாந்திரந்தான், அவருக்குக் கோபம் உண்டாயிற்றென்று சொல்லுகிறார். சொன்னபடியே அந்த மனுஷன் நீட்டினான். அக்ஷணமே அது மற்ற கைபோல் சொஸ்தமாயிற்று. உடனே அவருடைய சத்துருக்களின் கோபம் அதிகரித்து பித்தங்கொண்டவர்களைப்போலானார்கள். அவர்களுடைய பாரம்பரை நியாயங்களைத் தகர்த்துப்போட்டார். அவர்கள் வாயை அடைத்துப்போட்டார். ஜனங்களுக்கு முன்பாக அவர்களை வெட்கத்துக்குள்ளாக்கினார். அவர்கள் நோக்கம் நிறைவேறாததையிட்டு அவர்பேரிலுள்ள விரோதத்தினால், மதியீனத்தினால் நிறையப்பட்டு கையில் அகப்பட்டதைப் பிடிக்கிறவர்கள்போல் ஏரோதியரோடு அவருக்கு விரோதமாய் ஒப்பந்தம்பண்ணினார்கள். இவர்கள் கலிலேயாவை ஆண்டுவந்த அந்திப்பாசுடைய கூட்டத்தார். ரோமர் பட்சமாயிருந்தார்கள். பிறகு ஒரு சமயத்திலும் அவரை வார்த்தையில் குற்றம்பிடிக்கும்படிக்கு இவர்களோடேயே சேர்ந்து கொண்டார்கள் (மத். 22. 16.). உலகத்தாருடைய நடக்கை இப்படிப்பட்டதுதான். சத்தியத்துக்கு விரோதமாய் எழும்ப தங்களுக்குள்ளிருக்கும் விரோதத்தையும் மறந்து, ஒன்றுகூடிக் கொள்வார்கள். ஒளியின் ராஜ்யத்தை அழிக்கப் பிரயத்தனப்படும்போது, தங்களுக்குள்ளேதானே பிரிந்திருக்கமாட்டார்கள். கிறிஸ்துவைக் கொல்ல ஏரோதும் பிலாத்தும் சிநேகிதரானார்கள் (லூக். 23. 12.). அவர்கள் உபாயங்களை அறிந்த அவர் அவர்களுடைய வன்மத்துக்குத் தப்ப கலிலேயாக் கடலோரத்துக்குப் போனார். (மாற். 3.)



## 20. கூனியாயிருந்த ஸ்திரீயைச் சொஸ்தமாக்கினது.

லூக்கா, 13. 10—17.

"ஒரு ஓய்வுநாளில் அவர் ஜெபஆலயத்தில் போதகம்பண்ணிக்கொண்டிருந்தார். அப்பொழுது பதினெட்டு வருஷமாய்ப் பலவீனப்படுத்தும் ஆவியைக்கொண்ட ஒரு ஸ்திரீ அங்கேயிருந்தாள். அவள் எவ்வளவும் நிமிரக்கூடாத கூனியாயிருந்தாள். இயேசு அவளைக் கண்டு, தம்மிடத்தில் அழைத்து: ஸ்திரீயே, உன் பலவீனத்தினின்று விடுதலையாக்கப்பட்டாய் என்று சொல்லி, அவள்மேல் தமது கைகளை வைத்தார்; உடனே அவள் நிமிர்ந்து, தேவனை மகிமைப்படுத்தினாள்.

இயேசு ஓய்வுநாளிலே சொஸ்தமாக்கினபடியால், ஜெபஆலயத்தலைவன் கோபமடைந்து, ஜனங்களை நோக்கி: வேலைசெய்கிறதற்கு ஆறு நாள் உண்டே, அந்த நாட்களிலே நீங்கள் வந்து சொஸ்தமாக்கிக் கொள்ளுங்கள், ஓய்வுநாளிலே அப்படிச் செய்யலாகாது என்றான்.

கர்த்தர் அவனுக்குப் பிரதியுத்தரமாக: மாயக்காரனே, உங்களில் எவனும் ஓய்வுநாளில் தன் எருதையாவது தன் கழுதையையாவது தொழுவத்திலிருந்து அவிழ்த்துக்கொண்டுபோய், அதற்குத் தண்ணீர் காட்டுகிறதில்லையா? இதோ, சாத்தான் பதினெட்டு வருஷமாய்க் கட்டியிருந்த ஆபிரகாமின் குமாரத்தியாகிய இவளை ஓய்வுநாளில் இந்தக் கட்டிலிருந்து அவிழ்த்துவிட வேண்டியதில்லையா என்றார்.

அவர் அப்படிச் சொன்னபோது, அவரை விரோதித்திருந்த அனைவரும் வெட்கப்பட்டார்கள். ஜனங்களெல்லாரும் அவரால் செய்யப்பட்ட சகல மகிமையான செய்கைகளைக்குறித்தும் சந்தோஷப்பட்டார்கள்."

இந்த அற்புதத்தையும் நமது இரட்சகர் ஓய்வுநாளில்தான் செய்தார். இந்தச் சமயத்திலேயும் அவருடைய சத்துருக்கள் அவருக்கு விரோதமாய் முறுமுறுத்தார்கள். இது ஒரு ஜெபஆலயத்தில் நடந்ததாகச் சொல்லியிருக்கிறது. யூதர்கள் எல்லாருக்கும் ஒரே தேவாலயம் இருந்தபோதிலும், ஜெபஆலயங்கள் அநேகமிருந்தன. எங்கேயாவது ஒரு ஜெபஆலயத்தில் ஓய்வுநாள்தோறும் இரக்ஷகர் போதித்துவந்தார். இந்தச் சமயத்தில் ஜெபஆலயத்தில் கூடிவந்தவர்களில் பலவீனப்படுத்தின ஆவியையுடைய ஒரு ஸ்திரீ இருந்தாள். இந்தக் கார

ணத்தினால் அவள் நிமிரக்கூடாத கூனியாயிருந்ததாகச் சொல்லியிருக்கிறது. இது இயல்பாய் வயதினாலுண்டான தேக வருத்தமல்ல. ஏனெனில் நமது இரக்ஷகர் இவளை சாத்தான் கட்டியிருந்த ஆபிரகாமின் குமாரத்தி என்றழைக்கிறார். அதினால் அவள் பிசாசு பிடித்தவளென்று தோன்றுகிறது. சாத்தான் அவளுடைய ஆத்துமாவில் ஒருவித சஞ்சலத்தைக் கொடுத்து, அதின்மூலமாய் தேகத்தின் நரம்புகளைச் சுருக்கி, நிமிரக்கூடாதபடி தேகத்தை வளைத்துப்போட்டான் என்று தோன்றுகிறது. கீழே பூமியைப் பார்க்கத்தக்கவிதமாய் மற்ற மிருகங்களை உண்டாக்கின கர்த்தர், மனிதனை மேல்நோக்குகிறவனாய் உண்டாக்கினார். பூமியைக் குனிந்துபார்க்கிற பார்வை பூமிக்குரிய கீழானவைகளைச் சிந்திக்கிற சிந்தையைக் குறிக்கும்.

அவள் இரக்ஷகரைத் தானாய்த் தேடாவிட்டாலும், ஒருவேளை சொஸ்தமாக்கப்படலாமென்கிற சிந்தையோடு வந்திருக்கலாமென்று தோன்றுகிறது. ஏனெனில், ஆலயத்தலைவன்: மற்ற நாட்களில் வந்து சொஸ்தமாக்கிக்கொள்ளுங்கள், ஓய்வு நாளில் அப்படிச் செய்யலாகாது என்றான். இயேசு அவளைக் கண்டு தம்மிடத்தில் அழைத்து, அவள்மேல் தமது கைகளை வைத்தார். அந்தக் கைகளின்மூலமாய் சொஸ்தத்தைக் கொடுத்தார். அவர் கைகளை வைத்தபோது, ஸ்திரீயே உன் பலவீனத்தினின்று விடுதலையாக்கப்பட்டாய் என்றார். அவர் சொன்னவுடனே அப்படியே ஆயிற்று. அவள் ஆவியையும் சரீரத்தையும் கட்டியிருந்த கட்டுகள் தளர்ந்துபோனபடியால், உடனே நிமிர்ந்து தேவனை மகிமைப்படுத்தினாள். ஒருவேளை இரக்ஷகருக்கும் நன்றியறிதலைச் செலுத்தியிருப்பாள். இது ஆலயத்தலைவனுக்கு வெறுப்பாயிருந்தது. இரக்ஷகர் அவனை மாயக்காரனென்று அழைக்கிறார். நன்மைக்கு அவன் விரோதியாயிருந்தபோதிலும், தேவன்பேரில் தனக்கு வைராக்கியம் இருக்கிறதென்று காண்பித்து, அதைக்கொண்டு தன் கெட்ட எண்ணங்களை மூடப்பார்த்தான். கிறிஸ்துவானவருக்கு மகிமையுண்டாவது அவனுக்குப் பிரியமில்லாதபடி

யால், ஓய்வுநாளை மீறினர் என்பதுபோல எரிச்சல்கொண்டவனுகக் காண்பித்தான். இந்த மாய்மாலத்திற்காகத்தான் இரக்ஷகர் அவனை அவ்வளவாய்க் கடிந்துகொண்டார். மேலும் அவருக்கு விரோதமாய் நேராய் பேசாமல், அவர்பேரிலுள்ள எரிச்சலை ஜனங்களைப் பேசுகிற ஜாடையாய்க் காண்பித்தான். ஏனென்றால் அவர்களோடு அவன் பழகியிருந்தான். இவ்விதமாய்ச் சாத்தானுடைய கட்டுகளை அவிழ்க்கிறதும், அவன் சங்கிலிகளை நீக்குகிறதும், சரீரத்துக்கும் ஆத்துமத்துக்கும் சுகமளிக்கிறதும் ஓய்வுநாளில் செய்யத்தகாத வேலை என்கிறான். குணமாகும்படி வந்தது தப்பிதமென்றபடியால், குணமாக்கின இரக்ஷகர்பேரில் குற்றத்தைச் சுமத்துகிறான்.

இரக்ஷகர் அவனுக்குத் தகுந்தபடி மாறுத்தரங் கொடுத்து, தாம் ஓய்வுநாளை மீறவில்லை என்று திட்டமாய்க் காண்பிக்கிறார். "நீங்கள் ஓய்வுநாளில் அவசியமான உலக அலுவல்களைச் செய்கிறீர்கள். உங்கள் உலகப்பொருளுக்கு நஷ்டம் சேதம் நேரிடாதபடி ஓய்வுநாளில் செய்யவேண்டியதைத் தாராளமாய்ச் செய்கிறீர்கள். உங்கள் எருது, கழுதை உங்களுக்கு அருமையாயிருக்கிறபடியால் ஓய்வுநாளென்றும் பாராமல், அவைகளைக் கொண்டுபோய்த் தண்ணீர் காட்டுகிறீர்கள். ஆத்துமா அவைகளைவிட அருமையுள்ளதல்லவா? அதை பாவக்கட்டினின்று அவிழ்த்துவிடுவது தப்பிதமா? நீங்கள் மிருகங்களை ஓய்வுநாளில் அவிழ்த்துவிட்டால், மிருகங்களைவிட விலையேறப்பெற்ற ஆத்துமாவை அவிழ்த்துவிடக்கூடாதா? கொஞ்சநேரங் கட்டப்பட்டிருந்ததை அவிழ்த்துவிடுவது அவசியமானல், பதினெட்டுவருஷம் பிசாசின் அடிமைத்தனத்திலிருந்ததை அவிழ்த்துவிடக்கூடாதா? நீங்கள் அவிழ்க்கவும், தண்ணீர் காட்டவும் கொஞ்சநேரம் செல்லும்; நான் ஒரு வார்த்தையினல் சுகத்தைக் கொடுத்ததினல் மனஸ்தாபப்படுகிறீர்களா?" என்று பலத்த நியாயங்களை எடுத்துக்காட்டினர். சிருஷ்டிகள் எல்லாவற்றிலும் மனிதன் மேன்மையானவன்; மற்றச் சிருஷ்டிகளுக்கு எஜமான். எல்லாம் அவனுக்காகச் சிருஷ்டிக்கப்பட்டது. அப்படியிருக்க தேவன் மாடுகளுக்காக

மாத்திரமா கவலையாயிருக்கிறார்? சகலத்தையும் அவனுக்குக் கீழ்ப்படுத்தினாரே. மனுஷனுக்கு நன்மைசெய்கிறது அவசியம் அல்லவென்று எண்ணலாமா? என்று கேட்கிறார் (சங். 8. 8.). இன்னொரு பலத்த நியாயத்தையுங் கூட்டுகிறார். இவள் ஆபிரகாமின் குமாரத்தி, அவனுடைய விசுவாசத்தை சுதந்தரித்துக்கொண்டவள். அவளுடைய ஆத்துமாவை இரக்ஷிக்கும் பொருட்டு, இந்தச் சரீரவருத்தத்தைக் கர்த்தர் அவளுக்கு வருவித்தார். அப்படியிருக்க இவளுக்கு நன்மைசெய்வது எவ்வளவு அவசியமென்று இரக்ஷகர் சொன்னபோது, அவருடைய விரோதிகள் வெட்கப்பட்டார்கள்; ஜனங்கள் சந்தோஷப்பட்டார்கள்.



## 21. நீர்க்கோவையுள்ள மனிதனைச் சோஸ்தமாக்கினது.

லூக்கா, 14. 1—6.

*"ஒரு ஓய்வுநாளிலே பரிசேயரில் தலைவனாகிய ஒருவனுடைய வீட்டிலே அவர் போஜனம் பண்ணும்படிக்குப் போயிருந்தார். அப்பொழுது நீர்க்கோவை வியாதியுள்ள ஒரு மனுஷன் அவருக்கு முன்பாக இருந்தான். என்ன செய்வாரோவென்று ஜனங்கள் அவர்மேல் நோக்கமாயிருந்தார்கள். இயேசு நியாயசாஸ்திரிகளையும் பரிசேயரையும் பார்த்து: ஓய்வுநாளிலே சொஸ்தமாக்குகிறது நியாயமா என்று கேட்டார். அதற்கு அவர்கள் பேசாமலிருந்தார்கள். அப்பொழுது அவர் அவனை அழைத்து, சொஸ்தமாக்கி, அனுப்பிவிட்டு, அவர்களை நோக்கி: உங்களில் ஒருவனுடைய கழுதையாவது எருதாவது ஓய்வுநாளில் துரவிலே விழுந்தால், அவன் அதை உடனே தூக்கிவிடானோ என்றார். அதற்கு உத்தரவுசொல்ல அவர்களால் கூடாமற்போயிற்று."*

இந்த அற்புதத்தைச் சேர்ந்த அநேககாரியங்களைக்குறித்து முந்தின இரண்டு அற்புதங்களில் கேட்டிருக்கிறோம். பரிசேயரை இன்னம் சத்தியத்தை அறிகிற அறிவுக்குள் இழுக்க வேண்டுமென்று விருப்பங்கொண்டிருந்த நமது இரக்ஷகர், போஜனம்பண்ணும்படி அழைத்திருந்த ஒரு பரிசேயன் வீட்டிற்குப் போனார். இது ஓய்வுநாளாயிருந்தது. விருந்துமுதலியவைகளை யூதர்கள் ஓய்வுநாளில் செய்வது வழக்கம். இப்படிச் செய்வது சரியானபடி ஓய்வுநாளை மீறுகிறதென்று அறியாமலிருந்தார்கள். அன்பினால் ஏவப்பட்டு விருந்துக்கு அழையாமல், அவரிடத்தில் குற்றங் கண்டுபிடிக்கவேண்டுமென்ற நோக்கமாய் அழைத்ததாகத் தோன்றுகிறது. வெளிக்கு உபசரித்தவர்கள், உள்ளுக்குத் தீமைசெய்யக் காத்திருந்தார்கள். அப்போது நீர்க்கோவையுள்ள ஒரு மனுஷன் அவர்முன்பாக இருந்தான். இவர் என்னசெய்வாரென்று பார்ப்போம் என்ற நோக்கத்தோடே அவனை அங்கே வைத்திருந்ததாக சிலர் சொல்லுகிறார்கள். சரித்திரத்தில் அப்படி ஒன்றுஞ் சொல்ல

வில்லை. மேலும் இப்படிப்பட்ட சமயங்களில் இவன் இங்கேயிருந்தது ஆச்சரியமல்ல. இரக்ஷகருடைய வல்லமையை அறிந்து, அவரால் சுகம்பெறவேண்டுமென்று அங்கே வந்திருப்பான் (லூக். 7. 36, 37.). அதெப்படியிருந்தாலும், இரக்ஷகர் அவனை அழைத்து குணமாக்கி அனுப்பிவிட்டார் என்பது நிசம்.

அப்படிச் செய்யுமுன்னே தாம் செய்யப்போகிறது நியாயமென்று காட்டும்படிக்கு, ஓய்வுநாளில் குணமாக்குவது நியாயமா என்று நியாயசாஸ்திரிகளைப் பார்த்துக் கேட்டார். இதைப்பற்றி பல நியாயங்களை முன்னே சொல்லியிருந்தபடியால், இந்தச் சந்தேகம் முழுதும் நீங்கிப்போயிற்று. முன்போல இப்போதும் பேசாமல் இருந்தார்கள். அவர் செய்வது அவர்களுக்கு மனமில்லை, அதை விரோதிக்கவும் அவர்களால் கூடவில்லை. அவர்களுடைய அநுபோகத்தினின்றே இரக்ஷகர் அவர்களுக்கு நியாயத்தை எடுத்துக்காண்பித்து, அவர்கள் ஓய்வுநாளில் சாதாரணமாய்ச் செய்கிற கிரியையைப்போலொத்த கிரியையே தானும் செய்கிறேனென்று காட்டினுர். சாத்தாளுல் கட்டப்பட்டிருந்த ஸ்திரீயின் காரியத்தில்: உங்கள் மிருகங்களை அவிழ்த்துவிடுகிறதில்லையா என்று கேட்டவர், நீர்க்கோவை வியாதியின் தன்மைக்குத்தக்கதாய் இங்கே பேசுகிறுர். தண்ணீரிளுல் திக்குமுக்கடைக்கப்பட்டு வருத்தப்படுகிற இவனை நான் சொஸ்தமாக்குகிறது உங்களுக்குப் பிரியமில்லையே. உங்களில் ஒருவனுடைய கழுதையாவது, எருதாவது ஓய்வுநாளில் துரவில் விழுந்து தண்ணீரால் அதற்கு மோசம்வருகிறதாயிருந்தால், நீங்கள் அதை உடனே தூக்கிவிடாமல் இருப்பீர்களா? மிருகங்களைவிட மனுஷன் எத்தனை அதிகம் என்கிற கருத்தாய்ச் சொன்னுர். அநேகம் பிரதிகளில் கழுதைக்குப் பதிலாக மகனென்றிருக்கிறது. அப்படியிருக்குமாளுல் "உங்கள் மகன் என்று சொல்லி ஓய்வுநாளில் தூக்கிவிடுவீர்களே. நம்மைப்போல நம்முடைய பிறனைச் சிநேகிக்கவேண்டாமா" என்று சொல்லியிருப்பார். கழுதை என்றே இருக்கவேண்டுமென்று சொல்லுகிறவர்கள்

யாத். 21. 33ஐ தங்களுக்கு ஆதாரமாக வைத்துச் சொல்லு கிறார்கள். நம்முடைய இரக்ஷகருடைய நியாயத்துக்கு இரண்டும் உதவும். எப்படியிருந்தாலும் சரிதான். அதற்கு உத்தரவுசொல்ல அவர்களுக்குத் திராணியில்லாமல் போயிற்று. அவர்கள் வாய் அடைபட்டுப்போனபோதிலும், அவர்கள் மனம் அவர் சொன்னதை ஒத்துக்கொள்ளவில்லை. அவர்பேரில் அதிகமாய்க் கோபங்கொண்டு, அவருக்குத் தீமைசெய்யத்தக்க சமயத்தைத் தேடினார்கள். (மத். 12. 14.)



## 22. பத்து குஷ்டரோகிகள் சுத்தமானது.

லூக்கா, 17. 11—19.

*"பின்பு அவர் எருசலேமுக்குப் பிரயாணம்பண்ணுகையில், அவர் சமாரியா கலிலேயா என்னும் நாடுகளின் வழியாக நடந்துபோனார். அவர் ஒரு கிராமத்தில் பிரவேசித்தபோது, குஷ்டரோகமுள்ள மனுஷர் பத்துப்பேர் அவருக்கு எதிராக வந்து, தூரத்திலே நின்று: இயேசு ஐயரே, எங்களுக்கு இரங்கும் என்று சத்தமிட்டார்கள். அவர்களை அவர் பார்த்து: நீங்கள் போய், ஆசாரியர்களுக்கு உங்களைக் காண்பியுங்கள் என்றார். அந்தப்படி அவர்கள் போகையில் சுத்தமானார்கள். அவர்களில் ஒருவன் தான் ஆரோக்கியமானதைக் கண்டு, திரும்பிவந்து, உரத்தசத்தத்தோடே தேவனை மகிமைப்படுத்தி, அவருடைய பாதத்தருகே முகங்குப்புற விழுந்து, அவருக்கு ஸ்தோத்திரஞ்செலுத்தினான்; அவன் சமாரியனாயிருந்தான். அப்பொழுது இயேசு: சுத்தமானவர்கள் பத்துப்பேர் அல்லவா, மற்ற ஒன்பதுபேர் எங்கே? தேவனை மகிமைப்படுத்துகிறதற்கு, இந்த அந்நியனே ஒழிய மற்றொருவனும் திரும்பிவரக் காணோமே என்று சொல்லி, அவனை நோக்கி: நீ எழுந்துபோ, உன் விசுவாசம் உன்னை ரட்சித்தது என்றார்."*

யூதருக்கும் சமாரியருக்கும் எப்போதும் விரோதமிருந்தபடியால், கலிலேயாவிலுள்ளவர்கள் எருசலேமுக்குப் பண்டிகையை ஆசரிக்கப்போனபோது, நேரே சமாரியா வழியாய்ப் போகாமல் யோர்தானைக் கடந்து, பழைய ஏற்பாட்டில் கீலேயாத் என்றழைக்கப்பட்டிருக்கிற பெரேயா நாட்டுக்குப் போய், அப்புறம் எருசலேமுக்குப் போவார்கள். ஏனெனில் அவர்கள் எருசலேமுக்குப் போனது, கெர்சீம் மலையில் தேவனை ஆராதிப்பது சரியல்லவென்று சொன்னதுபோலிருந்தது. விசேஷமாகப் பண்டிகை சமயங்களில் சமாரியர் தங்கள் நாட்டின் வழியாய்ப் பிரயாணம்பண்ணின யூதர்களை கொள்ளையடிக்கிறதும் உயிர்ச்சேதம்பண்ணுகிறதும் வழக்கமாயிருந்தது. இந்த அற்புதம் நடந்த கொஞ்சக்காலத்துக்குப் பிறகும் கலிலேயரில் அநேகரை சமாரியர் கொன்றதாக யோசேப்பூஸ் எழுதியிருக்கிறான். நம்முடைய இரக்ஷகர் இவைகளையெல்

லாம் கவனியாமல், எருசலேமுக்குப் போன இந்தக் கடைசி சமயத்தில் சமாரியா வழியே நேர் பாதையாய்ப் பிரயாணம் பண்ணினார் (லூக். 9. 51, 56. யோவா. 4. 9.). சமாரியாவின் நடுவே அவர் பிரயாணம்பண்ணவிட்டாலும், சமாரியாவுக்கும் கலிலேயாவுக்கும் நடுவே இரண்டு எல்லைகளின் ஓரத்தில் வலதுபுறம் சமாரியாவும், இடதுபுறம் கலிலேயாவுமாய்ப் பிரயாணம்பண்ணி, எரிகோவின் சமீபத்திலிருந்த துறைமுகத்திலே சித்தப்போலி என்னும் ஊருக்கருகே யோர்தானைக் கடந்திருப்பாரென்று தோன்றுகிறது. (லூக். 18. 35.)

அவர் ஒரு கிராமத்தில் பிரவேசித்தபொழுது, குஷ்டரோகமுள்ள பத்துப்பேர் அவருக்கு எதிராக வந்தார்கள். ஒரேவிதமான வியாதியுள்ளவர்களானபடியால், சமாரியர் யூதர் என்கிற பிரிவினையில்லாமல் ஒன்றாய்க் கூடினார்கள் (2 இரா. 7. 3.). கலிலேயாவும் சமாரியாவும் சேருகிற இடமானபடியால், ஒரு சமாரியனும் அந்தக் கூட்டத்தில் இருந்தான். குஷ்டரோகம் மோசேயின் நியாயப்பிரமாணத்தில் எவ்விதமாய் எண்ணப்பட்டதென்று முன் சொல்லியிருக்கிறோம். அது பாவக்கறைக்கும், பாவத்தினால் நமக்கும் தேவனுக்கும் உண்டான பிரிவினைக்கும் குறிப்பாயிருந்தது. ஆத்தும வியாதிக்குமாத்திரமல்ல, ஆத்தும மரணத்துக்கும் இது அடையாளம். நியாயப்பிரமாணத்தின்படியே இந்தக் குஷ்டரோகிகள் (லேவி. 13. 46.) தூரத்தில் நின்று தங்கள் வருத்தத்தை உணர்ந்தவர்களாய், தங்களுக்கு நன்மைகிடைக்குமென்ற நம்பிக்கையுடையவர்களாய், இயேசு ஐயரே! எங்களுக்கு இரங்கும் என்று சத்தமிட்டார்கள். இரக்கம்பெற இவ்வளவு ஆசையைக் காண்பித்தவர்கள், பிறகு நாம் பார்க்கிறபடி நன்றியறிதலைச் செலுத்த மனமற்றவர்களாய்ப் போனார்கள். அவர்களை அவர் பார்த்து: நீங்கள் போய், ஆசாரியருக்கு உங்களைக் காண்பியுங்கள் என்றார். இந்த நல்ல வைத்தியன் தம்மிடத்தில் வந்த பல வியாதிக்காரருக்குப் பலவகையாய் நன்மைசெய்தாரென்று பார்க்கிறோம். ஞானத்தோடும் தயவோடும் தம்மிடத்தில் வந்த பிணியாளிகளுக்குத் தக்கவிதமாய் அவர்களை நடத்தினார். பலமுள்ள விசுவாசத்தைக்

கண்டாரா? அதை அதிகப் பலமுள்ளதாக்கும்படிக்கு முந்தி வெறுப்பாய்ப் பேசினூர். பலவீன விசுவாசத்தைக் கண்டாரா? அது தளர்ந்துபோகாமல் ஆதரித்தார். ஒரு மனிதனுக்குப் பாவமன்னிப்பைக் கொடுத்து பின்பு குணமாக்குகிறூர். வேறொருவனுக்குச் சரீரநன்மையைக் கொடுத்து, சொஸ்தப்படுத்தி, பிறகு பாவமன்னிப்பைக் கொடுக்கிறூர். மத்தேயு 8ல் சொல்லியிருக்கிற குஷ்டரோகியைச் சுத்தமாக்கி அப்புறம் ஆசாரியரிடத்திற்கு அனுப்புகிறூர். இந்தக் குஷ்டரோகிகளேயோ சுத்தமாக்குமுன்னேயே ஆசாரியரிடத்தில் போகச்சொல்லுகிறூர். இவ்விதமாய் அவர்கள் விசுவாசத்தைச் சோதித்தார். சுத்தமானதற்கு யாதொரு குறிப்புக் காணப்படுமுன்னேயே சுத்தமாக்கப்பட்டவர்கள் செய்வதைச் செய்யச் சொன்னூர். இரக்ஷகருடைய வார்த்தை பொய்யாய்ப் போனூல், இவர்கள் போனது வீணூயும் சிரிப்புக்கிடமாயுமிருக்கும். இவர்கள் உடனே போனதினூல் தங்களுக்கு விசுவாசமுண்டென்று காண்பித்தார்கள். ஆசாரியர்கள் குணமாக்குவார்களென்று அவர்களைப் போகச்சொல்லவில்லை என்பது அவர்களுக்குத் தெரியும். சுத்தமானூர்கள் என்று சொல்ல அவர்களால் ஆகுமேயொழிய, சுத்தமாக்க அவர்களால் ஆகாது. வியாதியை நீக்காவிட்டாலும் வியாதி தீர்ந்தபிறகு செய்யவேண்டிய சடங்குகள் செய்து, சபையில் சேர்த்துக்கொள்வதுதான் அவர்கள் வேலை.

இந்தக் குஷ்டரோகிகள் நன்றிகேட்டுக்கு இடங்கொடுத்து, சோதனையில் விழ இடமிருந்தது. தங்களுக்குச் சுகமுண்டானதைக் கண்டபோது, சுகமளித்தவர் அவர்கள் முன்பாக நிற்கவில்லை. நன்றிசெலுத்தும்படி திரும்ப வரவேண்டியதிருந்தது. எவ்வளவுதூரம் போனூர்களென்று தெரியமாட்டாது. போகையில் சுத்தமானூர்களென்று வாசிக்கிறோம். சிலர்: திரும்பிவந்த சமாரியன் எருசலேமுக்குப் போய் காணிக்கைசெலுத்தி சபையில் சேர்க்கப்பட்டபிறகு நன்றிசெலுத்தத் திரும்பவந்தானென்றும், அவைகளெல்லாவற்றையும் விட்டுவிட்டுத் திரும்பிவந்ததைமாத்திரம் சுவிசேஷகன் உடனே நடந்ததாகச் சொல்லியி

ருக்கிறுரென்றும் எண்ணுகிறுர்கள். அற்புதத்தை வாசிக்கிறவர்களுக்கு கொஞ்சதூரம் போனவுடனே அவர்கள் எல்லாரும் சுகமடைந்தார்களென்றும், இவன்மாத்திரம் தான் சுகமானதைக் கண்டு தேவனை மகிமைப்படுத்தி, தனக்குச் சுகமளித்த இரக்ஷகருக்குத் தோத்திரஞ்செலுத்த திரும்பினுனென்றும் காணப்படும். சூரியனுகிய நாகமானும் இந்தக் கொடிய வியாதியினின்று சுகமானபோது தன் கூட்டத்தாரோடு திரும்பிவந்து; தேவனுடைய மனிதனை ஒரு காணிக்கை வாங்கிக்கொள்ளக் கெஞ்சினுன் என்று பார்க்கிறேம். இவர்களோ திரும்பிவர மனமில்லாமல், உபகாரஞ்செய்தவருக்கு நன்றிசெலுத்தாமல், நன்றிகெட்டவர்களானுர்கள். ஒரு பரிசுத்தவான் சொல்லுகிறபடி இந்தப் பாவம் சாதாரணமாய் நமக்குள் காணப்படுகிறது. இவர்கள் கெஞ்சினதுபோலக் கர்த்தர் தம்முடைய கையைத் திறக்கிறவளையில் நம்முடைய வாயை விரிவாய்த் திறக்கிறேம். அவர் நம்முடைய வாயை நிரப்பினவுடனே நம்முடைய தொண்டை அடைபட்டுப்போனதுபோல, மனமும் வாயும் அடைபட்டு மவுனமாயிருக்கிறேம். நன்றி செலுத்தினவன் சமாரியன்; உடன்படிக்கைக்கு அந்நியன். மற்ற ஒன்பதுபேரோ ஆபிரகாமின் வித்தாகிய இஸ்ரவேலர். புறச்சாதிகளுக்குரிய இந்தச் சுவிசேஷத்தில் இது சொல்லியிருக்கிறது மிகவும் இசைவாயிருக்கிறது. ஏனெனில், லூக்கா சுவிசேஷம் புறச்சாதியாருக்கென்றே எழுதப்பட்டது. புறச்சாதியார் தேவனுடைய இராச்சியத்துக்குப் புறம்பானவர்களல்ல, இராச்சியத்தின் புத்திரருக்கு முன்னே இவர்கள் பரலோக ராச்சியத்தில் சேருவார்களென்று இதினுல் அறிகிறேம். அவர்களுடைய நன்றிகேடு அவர்களுடைய வழியை அடைத்துப்போட்டது. இவர்களுடைய விசுவாசம் இவர்களுக்கு ஆசீர்வாதத்தை வருவித்தது.

மனிதருடைய இருதயத்திலுள்ள யாவையும் அறிந்தவரே, எவ்வளவோ நன்றிகேட்டை மற்றவர்களிடத்தில் கவனித்தவரே இவர்களுடைய நன்றிகெட்ட தன்மையைப் பார்த்து ஆச்சரியப்பட்டு: சுத்தமானவர்கள் பத்துப்பேர் அல்லவா, மற்ற

ஒன்பதுபேர் எங்கே? தேவனை மகிமைப்படுத்துகிறதற்கு, இந்த அந்நியனேயொழிய மற்றொருவனும் திரும்பிவரக்காணோமே என்று சொன்னதுமல்லாமல், இவன் நன்றியறிதலுக்குப் பலனாக சரீரநன்மையோடு ஆத்துமசுகத்தையும் கட்டளையிட்டார். அவனை நோக்கி: நீ எழுந்துபோ, உன் விசுவாசம் உன்னை இரக்ஷித்தது என்றார். அந்த ஒன்பதுபேர் பெற்றுக்கொள்ளாததை இவன் பெற்றுக்கொண்டான்; ஏனெனில், அந்த ஒன்பதுபேரில் காணப்படாத நற்குணம் இவனில் காணப்பட்டது.

இந்த அற்புதம் கர்த்தருடைய பிள்ளைகளின் நிலைமைக்கு மிகவும் ஒத்திருக்கிறது. ஞானஸ்நானத்தில் கர்த்தர் நீ இன்று சுத்தமானாய் என்று சொன்னதுபோலிருக்கிறது. ஞானஸ்நானம் பெற்றபிறகு பாவக்கறை நம்மில் காணப்பட்டாலும், நாம் விசுவாசத்தோடு வேதவசனத்தை ஏற்றுக்கொண்டு சாக்கிரமெந்தை வாங்கி வருவோமானால், நாம் முழுவதும் சொஸ்தமடைவதைக் காணலாம். இப்படிச் சொஸ்தமாகி வரும்போது நாம் பாவத்தினின்று கழுவப்பட்டோம் என்பதை மறக்கக்கூடாது. அப்படி மறக்கிறவர்கள் இந்த ஒன்பதுபேரைப்போல பாவஞ்செய்வார்கள். அவர்கள் குஷ்டரோகிகளாயிருந்ததை முற்றிலும் மறைக்கும்படி திரும்பிவராதிருந்திருக்கலாம். நாமும் முன் மிகவும் அசுத்தராயிருந்ததையும், கர்த்தரைநோக்கி எங்களுக்கிரங்கும் என்று கெஞ்சினதையும், இப்பொழுது இரக்ஷகர்மூலமாய் பெற்றுக்கொண்ட சமாதானத்தையும் சந்தோஷத்தையும் நினைவுகூர்ந்து, நன்றியறிதலோடு அவரை மகிமைப்படுத்தி அவருக்கு உண்மையாய் ஊழியஞ்செய்யவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அவர்களுடைய பாவத்தைவிட நமது பாவம் அதிகமாயிருக்கும். அவர்கள் சரீரநன்மைமாத்திரம் பெற்றுப் போனார்கள், நாமோ விலையேறப்பெற்ற ஆத்துமநன்மைகளைப் பெற்றநுபவிக்கிறோம். நம்முடைய சலாக்கியங்களுக்குத் தக்கதாக நம்முடைய குற்றமும் அதிகப்படும்.



# 23. காநானிய ஸ்திரீயின் குமாரத்தி சொஸ்தமானது.

மத்தேயு, 15. 21—28.

"பின்பு, இயேசு அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, தீரு சீதோன் பட்டணங்களின் திசைகளுக்குப் போனார். அப்பொழுது, அந்தத் திசைகளில் குடியிருக்கிற கானானிய ஸ்திரீ ஒருத்தி அவரிடத்தில் வந்து: ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும், என் மகள் பிசாசினால் கொடிய வேதனைப்படுகிறாள் என்று சொல்லிக் கூப்பிட்டாள். அவளுக்குப் பிரதியுத்தரமாக அவர் ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. அப்பொழுது அவருடைய சீஷர்கள் வந்து: இவள் நம்மைப் பின்தொடர்ந்து கூப்பிடுகிறாளே, இவளை அனுப்பிவிடும் என்று அவரை வேண்டிக்கொண்டார்கள். அதற்கு அவர்: காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்கு அனுப்பப்பட்டேனேயன்றி, மற்றப்படியல்லவென்றார். அவள் வந்து: ஆண்டவரே, எனக்கு உதவிசெய்யும் என்று அவரைப் பணிந்துகொண்டாள். அவர் அவளை நோக்கி: பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து, நாய்க்குட்டிகளுக்குப் போடுகிறது நல்லதல்ல என்றார். அதற்கு அவள்: மெய்தான் ஆண்டவரே, ஆகிலும் நாய்க்குட்டிகள் தங்கள் எஜமான்களின் மேஜையிலிருந்து விழும் துணிக்கைகளைத் தின்னுமே என்றாள். இயேசு அவளுக்குப் பிரதியுத்தரமாக: ஸ்திரீயே, உன் விசுவாசம் பெரிது; நீ விரும்புகிறபடி உனக்கு ஆகக்கடவது என்றார். அந்நேரமே அவள் மகள் ஆரோக்கியமானாள்."

மாற்கு, 7. 24—30.

"பின்பு, அவர் எழுந்து அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, தீரு சீதோன் பட்டணங்களின் எல்லைகளில் போய், ஒரு வீட்டுக்குள் பிரவேசித்து, ஒருவரும் அதை அறியாதிருக்க விரும்பியும், அவர் மறைவாயிருக்கக் கூடாமற்போயிற்று. அசுத்தஆவி பிடித்திருந்த ஒரு சிறு பெண்ணின் தாயாகிய ஒரு ஸ்திரீ அவரைக்குறித்துக் கேள்விப்பட்டு, வந்து அவர் பாதத்தில் விழுந்தாள். அந்த ஸ்திரீ சீரோபேனிக்கியா தேசத்தாளாகிய கிரேக்கஸ்திரீயாயிருந்தாள்; அவள் தன் மகளைப் பிடித்திருந்த பிசாசைத் துரத்திவிடவேண்டுமென்று அவரை வேண்டிக்கொண்டாள். இயேசு அவளை நோக்கி: முந்திப் பிள்ளைகள் திருப்தியடையட்டும்; பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து நாய்க்குட்டிகளுக்குப் போடுகிறது நல்லதல்ல என்றார். அதற்கு அவள்: மெய்தான், ஆண்டவரே, ஆகிலும், மேஜையின் கீழிருக்கும் நாய்க்குட்டிகள் பிள்ளைகள் சிந்துகிற துணிக்கைகளைத் தின்னுமே என்றாள். அப்பொழுது, அவர்: நீ சொன்ன அந்த வார்த்தையினிமித்தம் போகலாம்; பிசாசு உன் மகளை விட்டு நீங்கிப்போயிற்று என்றார். அவள் தன் வீட்டுக்கு வந்தபொழுது, பிசாசு போய்விட்டதையும், தன் மகள் கட்டிலில் படுத்திருக்கிறதையும் கண்டாள்."

நம்முடைய இரட்சகர் தம்முடைய ஊழியத்தை யூதர்களுக்குள்ளேமாத்திரம் செய்துவந்தார். அவர் தீரு சீதோன் திசைகளுக்குப் போனார் என்று மத்தேயு சொன்னது இதற்கு விகற்பமல்ல. ஏனெனில் மாற்கு என்பவர் அவர் தீரு சீதோன் எல்லைகளுக்குப் போனாரென்று சொல்லியிருக்கிறார். மத்தேயும் அந்த அஞ்ஞானப்பட்டண திசைகளுக்குப் போனார் என்றுதான் சொல்லியிருக்கிறார். மேலும் நம்முடைய இரக்ஷகர் காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாருக்கேயன்றி, மற்றவர்களிடத்தில் நான் அனுப்பப்படவில்லை என்று சொன்னபடியால், இந்த அஞ்ஞான தேசத்தில் அற்புதங்கள் செய்ய வேண்டுமென்ற நோக்கத்தோடு வந்திருக்கமாட்டார். மேலும் இந்தக் கானானிய ஸ்திரீ அந்தத் திசைகளிலிருந்து வந்தாளென்று சொல்லியிருப்பதால், அவர் அந்த தேசத்தின் எல்லைவரையில் போனார் என்பதுதான் சுவிசேஷகனுடைய கருத்து. அங்கே போய் ஒரு வீட்டிற்குள் பிரவேசித்து, யாரும் அதை அறியாதிருக்கவேண்டுமென்று விரும்பினார். பரிமளதைலமானது தான் இருக்குமிடத்தை லேசாய்க் காட்டிக்கொடுப்பது போல, வார்க்கப்பட்ட தைலத்தைப்போன்ற நாமமுடைய இவர், இந்தச் சமயத்தில் மறைந்திருக்கக் கூடாமற்போயிற்று. அத்தேசத்து ஸ்திரீகளிலொருத்தி அந்த வாசனையால் இழுக்கப்பட்டு அவரிடத்தில் வந்தாள். மத்தேயு அவளை ஒரு கானானிய ஸ்திரீ என்று அழைக்கிறார். மாற்கு சீரோபேனிக்கிய ஊராளாகிய கிரேக்கஸ்திரீ என்கிறார். முந்தின வார்த்தையால் அவளுடைய பூர்வோத்திரம் விளங்குகிறது. கர்த்தர் இஸ்ரவேலைக்கொண்டு முற்றிலும் அழித்துப்போடச் சித்தமான கானானியரைச் சேர்ந்தவள்; அவர்களுக்குள் தப்பிப் பிழைத்த வம்சத்தில் தோன்றினவள். பிந்தினவார்த்தை அவளுடைய மார்க்கத்தை வெளியாக்குகிறது. அவள் யூதமார்க்கத்தைச் சேர்ந்தவள் அல்ல, அஞ்ஞானி. இவளுடைய பேர் யுஸ்தா என்று சொல்லுகிறார்கள். எல்லாம் இவளுக்கு விரோதமாயிருந்தது. ஆகிலும் அவள் பின்வாங்காமல் தான் விரும்பின காரியத்தை இரட்சகரிடம் கேட்கத் துணிகிறாள். அவர்

இஸ்ரவேலில் செய்த பலத்த செய்கைகளைக் கேள்விப்பட்டிருப்பாள். அவருடைய கீர்த்தி சீரியாதேசமெங்கும் பிரசித்தமானபடியால் வியாதிஸ்தரை மாத்திரமல்ல, பிசாசுபிடித்தவர்களையும் சந்திரரோகிகளையும் அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். அவர்களைச் சொஸ்தமாக்கினார் (மத். 4. 24.). தன்னுடைய மகளுக்காக கெஞ்சுகிறாள். தன் மகளுக்கு வந்த துன்பத்தை தனக்கு வந்ததுபோல எண்ணினபடியால் தனக்காகக் கெஞ்சுகிறவள்போல, ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும், என் மகள் பிசாசினால் கொடிய வேதனைப்படுகிறாள் என்று சொல்லிக் கூப்பிட்டாள். ஊமையும் செவிடுமான பிசாசுபிடித்த பிள்ளையினுடைய தகப்பன்: எங்கள்மேல் மனதிரங்கி, எங்களுக்கு உதவிசெய்யவேண்டுமென்று கெஞ்சினதுபோலக் கெஞ்சினாள். (மாற். 9. 22.)

அவள் கேள்வியினால் அவரைப்பற்றி அறிந்துகொண்டது போல, அவர் இந்தச் சமயத்தில் காணப்படவில்லை. அவர் இரக்கமுள்ள மனிதகுமாரன் என்றும், நெரிந்தநாணலை முறியாமலும் மங்கி எரிகிற திரியை அவியாமலும் இருக்கிறவரென்றும், ஆயாசமடைந்து வருந்துகிற எந்த ஆத்துமாவையும் தன்னிடத்தில் வந்து இளைப்பாறுதலையடைய அழைக்கிறவரென்றும் அவள் கேள்விப்பட்டிருப்பாள். தாமாய் மற்றவர்களுக்கு உதவிசெய்ய வந்தவர், இவளுக்கு உதவிசெய்ய பின்வாங்குகிறார். அவளுக்கு அவர் ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. கிறிசொஸ்தம் சொல்லுகிறபடி, வார்த்தையானவர் ஒரு வார்த்தையும் சொல்லாமற் போனார். ஊற்று அடைபட்டுப்போச்சுது. வைத்தியன் தன் ஔஷதங்களைக் கொடாமல் வைத்துக் கொண்டார். அவள் அடிக்கடி கெஞ்சினபடியால், தங்கள் எசமானைவிட இரக்கமுள்ளவர்கள்போலக் காணப்பட்ட சீஷர்கள் அவரிடத்தில் வந்து, அவளுக்காகப் பரிந்துபேசி, அவளுக்கு வேண்டியதைக் கொடுத்து, அவளை அனுப்பிவிடக் கேட்டுக்கொண்டார்கள். சுயநன்மையைத் தேடுகிற குணம் இதனுள் இருந்தது. அனுப்பிவிடும்படி சொன்ன காரணமே அதைக் காட்டுகிறது. நம்மைப் பின்தொடர்ந்து கூப்பிடுகிறாளே

என்றார்கள். அதாவது, மற்றவர்கள் நம்மைக் கவனிக்கும்படி செய்கிறாள்; எல்லாரும் வேடிக்கை பார்க்க இடமாகிறது என்றார்கள். நாம் அடிக்கடி மனமில்லாமல் மற்றவர்களுக்கு ஒரு காரியத்தைக் கொடுக்கிறதுண்டு. கேட்கிறவன்பேரிலுள்ள அன்பினாலல்ல, நம்மை அமைதலாயிருக்கவொட்டாமல் தொந்தரவுசெய்கிறானென்று கேட்டதைக் கொடுக்கிறது நமக்குள் வழக்கம். இப்படித்தான் அந்த நியாயாதிபதி சொல்லி நியாயஞ்செய்தான். இவள் அடிக்கடி வந்து என்னை அலட்டாதபடிக்கு இவளுக்கு நியாயம்செய்யவேண்டுமென்றான் (லூக். 18. 5.). அடிக்கடி உண்மையான சிநேகம் வெறுப்பைப்போலத் தோன்றுகிற குணத்திற்குள் மறைந்திருக்கும். அன்பைப்போல தோன்றுகிறதோ அடிக்கடி சுயநன்மையை நாடுகிற குணத்திலிருந்து பிறக்கும்.

இப்படிப் புரிந்துபேசினவர்களையும் இரட்சகர் அவளை நடத்தினதுபோலவே நடத்தினார். அவளுக்கு யாதொரு நன்மையும் செய்ய எதுவில்லையென்று காட்டத்தக்க வார்த்தைகளால் அவர்களுடைய வாயை அடைத்துப்போட்டார். காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாருக்கேயன்றி, மற்றவர்களிடத்தில் நான் அனுப்பப்படவில்லை என்றார் (மத். 10. 6.). இது உண்மைதானா? எந்தக் கருத்தின்படி இரட்சகர் இப்படிச் சொல்லியிருப்பார்? தீர்க்கதரிசனங்களிலெல்லாம் வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட வித்தாகிய அவரில் ஒரு ஜாதியார் மாத்திரமல்ல, பூமியின் வம்சங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்படுமென்று முன்னுரைத்திருக்கிறதே. அவர் தாமும் இந்தத் தொழுவத்திலுள்ளவைகளல்லாமல் வேறே ஆடுகளும் எனக்கு உண்டு; அவைகளையும் நான் கொண்டுவரவேண்டும், அவைகள் என் சத்தத்துக்குச் செவிகொடுக்கும் என்றாரே (யோவா. 10. 16.). பொய்மதங்களை ஸ்தாபித்தவர்கள்தான் தங்கள் காரியம் அநுகூலமாகிறதைப் பார்த்து, தங்கள் கொள்கைகளையும் விஸ்தாரமாய்ப் பிரசித்தம்செய்தார்கள். முதலாவது ஒரு கோத்திரத்தாருக்கு, அல்லது ஒரு ஜாதியாருக்கு வேதமார்க்கத்தை ஏற்படுத்தத் துணிந்தவர்கள், வரவர உலகமுழுவதுக்கும்

தங்கள் மார்க்கமே ஏற்றதென்று சொல்லத்தொடங்கினார்கள். இரட்சகருடைய காரியமோ அப்படியல்ல; அவர் சகலத்தையும் முன்னதாகவே அறிந்திருந்தார். தம்முடைய மார்க்கம் உலகமுழுவதையும் நிரப்புமென்று ஆதிமுதல் தீர்மானித்தார். இப்படியிருக்க, நான் இஸ்ரவேலுக்காகமாத்திரம் வந்தேனென்று அவர் என்ன கருத்தாய்ச் சொல்லியிருப்பார்? தம்முடைய ஜீவகால ஊழியத்தைக்குறித்துமாத்திரம் அப்படிச் சொன்னார் என்று சொல்லவேண்டும். கர்த்தருடைய ஞானமுள்ள தீர்மானத்தின்படி அது அவருடைய சொந்தச் சாதியாருக்குமாத்திரமே கிடைத்தது. மற்றவர்களுக்கு ஏதாவது நன்மைசெய்திருப்பாரானால், அது புறநடை என்று தெளிவாய்க் காண்பிப்பார். பிறகு தாம் சகலருக்கும் செய்யப்போகிற இரக்கத்தைக் குறித்து சில குறிப்புகளை முன் காட்டினார். புறச்சாதியார் தேவனுடைய இரக்கத்தினிமித்தம் அவரை மகிமைப்படுத்து முன்னே, பிதாக்களுக்குப் பண்ணப்பட்ட வாக்குத்தத்தத்தை உறுதியாக்கும்படிக்கு, இயேசுகிறிஸ்து விருத்தசேதனமுள்ளவர்களுக்கு ஊழியக்காரராகவேண்டும். தேவனுடைய கிருபை அவர்களுக்குப் பாய்ந்தபிறகுதான் அஞ்ஞான உலகத்துக்குப் பாயவேண்டும். தற்செயலாய் இப்படி நடந்ததாகத் தோன்றின இந்தக் காரியம், முன்னமே தேவனுடைய ஆழ்ந்த தீர்மானங்களில் மறைத்துவைக்கப்பட்டிருந்தது (அப். 18. 44, 49. ரோம. 11. அதி.). முந்திப் பிள்ளைகள் திருப்தியாகட்டுமென்று மாற்கு சொல்லுகிற வார்த்தைகள், முற்றிலும் இரக்ஷகர் நன்மைசெய்ய மாட்டேன் என்றதாக அல்ல; நாம் கொடுக்கும் ஆசீர்வாதத்தை பிள்ளைகளாகிய இவர்களில் எத்தனைபேர் ஏற்றுக்கொள்ள எத்தனமாயிருக்கிறார்களோ, அத்தனைபேர்களும் ஏற்றுக்கொண்ட பிறகுதான் மற்றவர்களுக்குக் கிடைக்கும் என்கிற கருத்தாய்ச் சொன்னதாகத் தோன்றுகிறது. ஆகிலும், இப்பொழுது ஒன்றும் கிடையாது; காலம் இன்னும் வரவில்லை; பிள்ளைகள் திருப்தியடையுமுன் சாப்பாட்டை மற்றவர்களுக்குக் கொடுக்கிறது சரியல்லவென்கிற கருத்தும் அதிலுண்டு.

தனக்காகப் பரிந்துபேசின சீஷர்களுக்குக் கிடைத்த மாறுத்

தரவைக் கேட்டும் பின்வாங்காமல், தைரியம்விடாமல், தூரத்தில் அவரைப் பின்சென்று கூப்பிட்டுக்கொண்டு வந்தவள் கிட்டி வந்து, ஆண்டவரே, உதவிசெய்யுமென்று பணிந்து கொண்டாள். இதுவரையும் கூப்பிட்டதற்கு மௌனமாயிருந்தவர் இப்பொழுது வாயைத் திறக்கிறார். அவர் கொடுக்கிற உத்தரவோ மௌனமாயிருந்ததைவிட அதிக வருத்தத்தை உண்டாக்குகிறது. அவர் அவளை நோக்கி: பிள்ளைகளின் அப்பத்தை நாய்க்குட்டிகளுக்குப் போடுவது நல்லதல்ல என்றார். பிள்ளைகள் இராச்சியத்தின் புத்திரரே (மத். 8. 12.). அவைகளைக்குறித்து முன் கோபமாய்ப் பேசினவர் இப்பொழுது கண்யமாய்ப் பேசுகிறார். இதில் விகற்பம் ஒன்றும் இல்லை. ஏனெனில் இங்கே தேவனுடைய இராச்சியத்தில் அவர்களுக்குக் கிடைக்கும் சலாக்கியத்தைக்குறித்துப் பேசுகிறார்; அங்கேயோ அந்தச் சலாக்கியத்திற்குத் தக்கதாய் நடந்துகொள்ளாததைக்குறித்துப் பேசுகிறார். ஒருவனை நாயென்று கூப்பிடுகிறது பெரிய நிந்தை. இந்த மிருகத்திற்கு பூர்வத்தாருக்குத் தெரிந்திருந்த அநேக நல்ல குணங்கள் இருந்தும் அவைகளில் ஒன்றும் வேதவசனத்தில் சொல்லியிருக்கவில்லை. (உபா. 23. 18. யோபு. 30. 1. 1 சாமு. 17. 43; 24. 14. 2 சாமு. 3. 8; 9. 8; 16. 9. 2 இரா. 8. 13. மத். 7. 6. பிலி. 2. 2. வெளி. 22. 15.)

அநேகர் இம்மட்டில் தங்கள் விண்ணப்பத்தை நிறுத்திப் போடுவார்கள். இரக்ஷகர் சொன்ன வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் கோபத்துக்கும் அவநம்பிக்கைக்கும் இடங்கொடுத்து திரும்பிப்போய்விடுவார்கள். இந்த ஸ்திரீயோ அப்படியல்ல; அவள் அந்த நூற்றுக்குச் சேர்வைக்காரனைப்போல, அவனுக்கு நேரிட்டதைவிட வருத்தமான சோதனையிலும் விசுவாசத்தில் வல்லமையுள்ளவளாய் வெளிப்பட்டாள். அவளுக்கு எரிச்சலை உண்டாக்கத்தக்க வார்த்தையினின்றே விசுவாசத்தோடு கூடிய சாமர்த்தியத்தினாலே தனக்கு அநுகூலமான ஒரு நியாயத்தை எடுத்துக்கொண்டாள். இரக்ஷகரை அவர் வார்த்தையிலேயே பிடித்துக்கொள்ளுகிறாள். இது இரட்சகருக்குப் பிரியம்.

அவருடைய கையிலிருந்த பட்டயத்தைக்கொண்டே அவரை மேற்கொள்ளுகிறாள். "மெய்தான் ஆண்டவரே, ஆகிலும் நாய்க்குட்டிகள் தங்கள் எஜமான்களின் மேஜையிலிருந்து விழும் துணிக்கைகளைத் தின்னுமே" என்றாள். இந்தச் சின்னச் சரித்திரத்தை வெகு செம்மையாய் விளக்கிக்காட்டி, இந்த ஸ்திரீயின் பலத்த விசுவாசத்தை அதிகமாய் மெச்சிக்கொள்ளுகிற லுத்தர் இந்த வார்த்தைகளைக்குறித்து, "அது நல்ல அடி, கிறிஸ்துவின் வார்த்தைகளைக்கொண்டே அவருக்குக் கண்ணி வைத்தாள்" என்று சொல்லியிருக்கிறதுமல்லாமல், அதைரியப்பட்டுச் சோர்ந்துபோகிற இருதயங்கள் கர்த்தர் "இல்லை" என்கிறதினின்று "ஆம்" என்கிறதை வருவிக்கப் படித்துக்கொள்ளவும், "இல்லை" என்று சொல்லுகிறதில் மறைந்திருக்கிற "ஆம்" என்கிற வார்த்தையைக் கேட்கவும், இந்த ஸ்திரீயைத் திருஷ்டாந்தமாக அடிக்கடி அவர்கள்முன் வைக்கிறார். "அவர் உனக்கு விரோதமாகச் சொல்லுகிறதெல்லாவற்றையும் சரி என்று ஒத்துக்கொள். ஆகிலும் அவளைப்போல மேற்கொள்ளும்வரையில் உன்மேல் அவர் சாற்றுங் குற்றங்களை உன் அவசரத்துக்கேற்ற நியாயங்களாகத் திருப்பும்வரையில், கிறிஸ்துவை அவருடைய வார்த்தைகளிலேயே அகப்படுத்தும்வரையில், ஜெபம்பண்ணுகிறதை விட்டு ஓயாதே" என்கிறார். கர்த்தர் சொன்ன வார்த்தைகளைத் தள்ளாமல், அதிலேதானே தனக்கு ஏற்றநியாயம் இருக்கிறதென்று காட்டுகிறாள். "நாய்க்குட்டிகள் என்கிறீரா, மெய்தான். அந்தப் பேரையும் அந்த இடத்தையும் ஏற்றுக்கொள்ளுகிறேன். நாய்களுக்கு முந்தின பங்கு, அல்லது பிள்ளைகளுடைய பங்கு கிடையாவிட்டாலும் இன்னும் அவைகளுக்குரிய பங்கு ஒன்றுண்டே. எஜமான்கள் மேஜையிலிருந்து விழும் துணிக்கைகள் வறண்டுபோன மேற்பங்குமாத்திரம் அல்ல, மேஜையைத் துடைக்கிறதற்குத் துணிக்குப் பதிலாக நீங்கள் பிரயோகிக்கிற உள்ளேயிருக்கும் மிருதுவான பங்கும் நாய்களுக்குரியவைகளாச்சுதே. இந்த உம்முடைய வார்த்தைகளிலேயே அந்தப் பெரிய வீட்டெஜமானாகிய கர்த்தர் வழங்கும் ஆசீர்வாதங்களில் அஞ்ஞானிகளுக்கும்

எனக்கும்கூட பங்கு உண்டென்று காட்டுகிறீரே. நாங்கள் கடைசியிடத்தில் இருக்கிறவர்களாய் இருந்தாலும் அந்நியர் அல்ல; அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்தான் என்று காட்டுகிறீரே; அந்தப் பேரே எனக்குப் போதும். அதற்குரியதையே நான் கேட்கிறேன்" என்று நியாயம் சொன்னாள். எஜமான்கள் என்பதை யூதர்கள் என்று கிறிசொஸ்தம் அர்த்தம்பண்ணினது சரியல்ல. அப்படியானால் உவமானமுழுவதும் கெட்டுப்போம். அவர்கள்; பிள்ளைகள். எஜமான்கள் என்பது தேவனைக் குறிக்கும், முன்னே நாய்களென்று பன்மையில் பேசினபடியால் அதற்கு இசைவாக எஜமான்களென்று பன்மைச் சொல்லை வழங்குகிறார். அப்படியே நமது இரட்சகரும் பூமியின் ராஜாக்களென்று முந்திச் சொன்னபடியால் பிதாவின் ஒரேபேறான தம்மைக்குறித்துப் பேசும்போது அதற்கு இசைவாக "அப்படியானால் பிள்ளைகள் அதைச் செலுத்தவேண்டியதில்லையே" என்று பன்மையில் பேசுகிறார். பெரிய எஜமானாகிய அவர் சகல ஜீவாத்துமாக்களுக்கும் பந்தியை விரிக்கிறார். மேஜையிலிருக்கும் பிள்ளைகளும், மேஜையின் கீழிருக்கிற நாய்களும் சகலரும் தங்கள் தங்கள் ஒழுங்கின்படியே அதில் சாப்பிட்டுத் திருப்தியடைகிறார்கள். அவள் சொன்னது "உம்முடைய கூலிக்காரரில் ஒருவனாக வைத்துக்கொள்ளும்" என்று கெட்டுப்போன குமாரன் சொன்னதுபோலிருக்கிறது. மனிதர் தேவனுக்குமுன்பாகப் பலவித சம்பந்தத்தில் நிற்கிறார்கள். சிலர் சற்றே கிட்டின சம்பந்தத்திலும், வேறுசிலர் சற்றே தூரமான சம்பந்தத்திலும் இருக்கிறார்கள். கிட்ட இருந்தாலும், தூர இருந்தாலும் சகலரும் அவரிடத்திலிருந்து போஜனத்தைப் பெற்று அவரால் ஆசீர்வதிக்கப்பட்டுவருகிறார்கள்.

இப்பொழுது இவள் மேற்கொண்டாள். முன்னே இகழ்ச்சியான வார்த்தையைக் கேட்டவள் இப்பொழுது புகழ்ச்சிக்கு எதுவான வார்த்தைகளைப் பெற்றுக்கொள்ளுகிறார்கள். "ஸ்திரீயே உன் விசுவாசம் பெரிது." இப்படிப்பட்ட புகழ்ச்சி சுவிசேஷங்களில் இன்னொருவருக்குமாத்திரமே கிடைத்தது. முந்தி அவளுக்கு ஒன்றும் செய்ய மனமில்லாதவர்போல காண்

பித்தவர், இப்பொழுது தமது கிருபையின் பொக்கிஷசாலை யைத் திறந்து தனக்கு வேண்டியமட்டும் எடுத்துக்கொள்ளச் சொல்லுகிறார். நீ விரும்புகிறபடி உனக்கு ஆகக்கடவது என் றார். யோசேப்பு முந்தி தன் சகோதரருக்கு அந்நியனாய்க் காண்பித்ததுபோல இவரும் முந்தி வெறுப்பைக் காண்பித்தார். ஆனால் யோசேப்பைப்போல நெடுநேரம் தமது அன்பை மறை த்துவைத்திருக்கக்கூடாமல், வேண்டியதற்கு அதிகமாக அதை மறைத்து வைத்துவைய்யாமல் அவளுடைய விசுவாசத்தைக் கண்டவுடனே "நீ சொன்ன அந்த வார்த்தையினிமித்தம் போகலாம்; பிசாசு உன் மகளைவிட்டு நீங்கிப்போயிற்று என் றார்." கப்பர்நகூமிலுள்ள நூற்றுக்குச் சேர்வைக்காரனைப்போல (மத். 8. 13.), கானாவிலிருந்த அதிகாரியைப்போல (யோவா. 4. 53.) அவருடைய வார்த்தை தூரத்திலிருந்தாலும் சமீபத் திலிருந்தாலும் வல்லமையுள்ளதென்று கண்டாள். இவள் மகள் தூரத்திலிருந்தாலும் இவளுடைய விசுவாசத்தின்மூல மாய் கிறிஸ்துவின் ஆசீர்வாதம் அவளுக்கு எட்டிற்று. விசு வாசத்தின் ஒரு கையினால் இரக்ஷகனைப் பற்றிக்கொண்டு, மறு கையினால் தன் மகளைப் பிடித்தாள். இரட்சகரிடத்திலிருந்து சொஸ்தமாக்கும் வல்லமை மின்தாதைப்போல இவள்மூல மாய் இவள் மகளுக்குச் சென்றது. வீட்டுக்கு வந்தபோது பிசாசு போய்விட்டதையும், தன் மகள் கட்டிலில் படுத்திருக் கிறதையும் கண்டாள். பிசாசு போவதினால் உண்டாகும் மும் முரத்தினாலே பெலவீனமாய்க் கிடந்திருப்பாள்; அல்லது இதுவரையில் கிடையாத இளைப்பாறுதலைப் பெற்று அமைத லாய்க் கிடந்திருப்பாள். லூக். 8. 35ல் பிசாசினால் வாதிக் கப்பட்ட ஒருவன் வஸ்திரம்தரித்து புத்திதெளிந்திருந்ததற்கு இது சரியாயிருக்கிறது.

ஆனால் கர்த்தர் இவளை இவ்வளவுதூரம் சோதிப்பானேன்? மற்றவர்களுக்குக் காட்டாத வெறுப்பை இவளுக்குக் காட்டு வானேன்? சில ச்மயங்களில் அவரே வலியவந்து, நமக்கு நன்மைசெய்ய மனமுள்ளவராய் "சொஸ்தமாகவேண்டும் என்று விரும்புகிறாயா?" என்று கேட்கிறார் (யோவா. 5. 6.);

அல்லது இரக்கஞ்செய்யக் காத்திருக்கிறபடியால் இரண்டுதரம் கேட்குமட்டும் காத்திராமல், கேட்டவுடனே தமது ஆசீர்வாதத்தைப் பொழிகிறார். இந்தச் சமயத்தில் ஒரு பக்திமான் சொல்லுகிறபடி அவ்வளவுநேரம் தாமதித்து, அவள் விசுவாசத்தோடு போராடி, அது நன்றாய் வேர்போட்டிருக்கிறதோ என்று அசைத்தசைத்துப் பார்ப்பானேன்? அது சோதனைக்கு நிற்கும் என்றும், கடைசியில் ஜெயங்கொள்ளும் என்றும் கேட்டவுடனே கொடுத்துவிட்டால் இவ்வளவு அதிகப் பெலனையும், சுத்தாங்கமாயும், மேலானதாயும் வெளிப்படாதென்றும் அவர் அறிந்திருந்தார். மனுஷர்கள் சோர்ந்துபோகாமல் எப்பொழுதும் ஜெபம்பண்ணவேண்டுமென்றும், கர்த்தர் ஒன்றைக் கொடுக்கத் தாமதப்படும்போது அதை மறுக்கிறதில்லை என்றும் முன் படியாதவிதமாய் இப்போ படித்துக்கொண்டாள். கர்த்தர் தனக்கு எதிர்ப்பட்டு தன்னைக் கொல்லவேண்டுமென்றிருந்த போது மோசே படித்துக்கொண்ட பாடத்தைப் படித்துக் கொண்டாள் (யாத். 4. 24.). இராமுழுதும் தேவதூதனோடே போராடின யாக்கோபைப்போல பெலனைச் சம்பாதித்துக் கொண்டாள். யாக்கோபினுடைய போராட்டமும் இவளுடைய சரித்திரமும் அநேக காரியங்களில் ஒன்றுபோலிருக்கிறது (ஆதி. 32. 24—32.). ஒரு பக்ஷத்தில் நீண்ட போராட்டமும் மறு பக்ஷத்தில் அல்லத்தட்டுதலும் காண்கிறோம். இரண்டிலும் பெலவீனன் பெலமுள்ளவனை மேற்கொள்ளுகிறான். விசுவாசத்தோடு சேர்ந்த ஜெபத்தின் வல்லமைக்குக் கர்த்தரும் இடங்கொடுக்கிறார். பிறகு ஒரு தீர்க்கதரிசி இந்தப் போராட்டத்தைக்குறித்துப் பேசும்போது, அந்தக் கோத்திரப்பிதா பிரயோகித்த ஆயுதம் இன்னதென்று சொல்லுகிறார். அவன் அழுது அவரை நோக்கிக் கெஞ்சினான். தூதனுன அவனோடே பிரபுவாய்ப் போராடி மேற்கொண்டான் (ஓசி. 12. 3, 4.). சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிற தூதனுனவன் உடன்படிக்கையின் தூதன், மனுவுருவெடுத்த வார்த்தையானவர். யாக்கோபைப் பேனியேலில் ஆசீர்வதித்தவரே இங்கே இந்த ஸ்திரீயையும் ஆசீர்வதித்தார். இரண்டு சமயங்களிலும் நீர்

என்னை ஆசீர்வதித்தாலொழிய உம்மைப் போகவிடேன் என்று சொன்ன விசுவாசத்திற்குப் பலன் அளித்தார். இரண்டு சரித்திரங்களையும் இவ்விதமாகக் கவனிக்கும்போதுதான் நமக்கு நிறைவான எழுப்புதல் உண்டாகும். இதிலேதான் இரண்டு சரித்திரங்களும் முற்றிலும் ஒத்திருக்கிறது.

மனிதன் தேவனை மேற்கொள்ளுகிறுன் என்று சொல்லும் போது அந்த வல்லமையை தேவனே மனிதருக்குக் கொடுக்கிருர் என்பதை மறக்கக்கூடாது. மனிதன் தன் விசுவாசத்தின் வெறுமையைக் கவனிக்கும்போது தேவனுடைய வல்லமையையும் நிறைவையும் தனதாக்கிக்கொள்ளுகிறுன். இவ்விதமாய் "ஆவியில் எளிமையுள்ளவர்கள் பாக்கியவான்கள்; பரலோகராஜ்யம் அவர்களுடையது." பவுல் அப்போஸ்தலன் யாக்கோபின் போராட்டத்தைப்போலொத்த போராட்டம் தன் சபையாருக்காகத் தன் மனதிலிருந்ததைக்குறித்துப் பேசும்போது "எனக்குள்ளே வல்லமையாய் கிரியை நடப்பிக்கிற அவருடைய பலத்தின்படி போராடிப் பிரயாசப்படுகிறேன்" என்கிருர். (கொலோ. 1. 29; 4. 12.)

கிறிஸ்துவண்டைக்கு வராதபடி நம்மைத் தடுக்கிறவைகளை நீக்குகிறதில் விசுவாசத்தின் மூன்று படிகளைப் பார்க்கிறேம். மாற். 2. 4ல் சொல்லப்பட்ட திமிர்வாதக்காரன்; மாற். 10. 48ல் சொல்லப்பட்ட எரிகோவின் குருடன்; இந்தக் காணுனிய ஸ்திரீ. திமிர்வாதக்காரன் வெளியரங்கமான தடைகளைமாத்திரம் நீக்கினுன். பர்த்திமேயு என்னும் குருடன் மனிதராலுண்டான தடைகளை நீக்கினுன். இந்த ஸ்திரீயோ அவர்களைவிட அதிகமாய்க் கிறிஸ்துவானவர் தாமே வைத்த தடைகளையும் நீக்கினுள். இவர்கள் மூன்றுபேரும் மூன்று பராக்கிரமசாலிகள். தாவீதுடைய பராக்கிரமசாலிகளல்ல; தாவீதுக்கு ஆண்டவரும் தாவீதின் குமாரனுமாயிருந்தவருடைய பராக்கிரமசாலிகள். இவர்கள் சத்துருக்களின் இராணுவங்களைக் கடந்து, இரட்சிப்பின் கிணறுகளிலிருந்து ஜீவதண்ணீரை மொண்டுவந்தவர்கள். (2 சாமு. 23. 16.)



# 24. செவிடனும் தெத்துவாயனுமான ஒருவனைக் குணமாக்கினது.

மாற்கு, 7. 31—37.

"மறுபடியும், அவர் தீரு சீதோன் பட்டணங்களின் எல்லைகளை விட்டுப் புறப்பட்டு, தெக்கப்போலியின் எல்லைகளின் வழியாய்க் கலிலேயாக் கடலருகே வந்தார். அங்கே கொன்னைவாயுடைய ஒரு செவிடனை அவரிடத்தில் கொண்டுவந்து, அவர் தமது கையை அவன்மேல் வைக்கும்படி வேண்டிக்கொண்டார்கள். அப்பொழுது, அவர் அவனை ஜனக்கூட்டத்தை விட்டுத் தனியே அழைத்துக்கொண்டுபோய், தம்முடைய விரல்களை அவன் காதுகளில் வைத்து, உமிழ்ந்து, அவனுடைய நாவைத் தொட்டு; வானத்தை அண்ணாந்துபார்த்து, பெருமூச்சுவிட்டு; எப்பத்தா என்றார்; அதற்குத் திறக்கப்படுவாயாக என்று அர்த்தமாம். உடனே அவனுடைய செவிகள் திறக்கப்பட்டு, அவனுடைய நாவின் கட்டும் அவிழ்ந்து, அவன் செவ்வையாய்ப் பேசினான். அதை ஒருவருக்கும் சொல்லவேண்டாமென்று அவர்களுக்குக் கட்டளையிட்டார்; ஆகிலும் எவ்வளவு அதிகமாய் அவர்களுக்குக் கட்டளையிட்டாரோ, அவ்வளவு அதிகமாய் அவர்கள் அதைப் பிரசித்தம்பண்ணி, எல்லாவற்றையும் நன்றாய்ச் செய்தார்; செவிடர் கேட்கவும், ஊமையர் பேசவும் பண்ணுகிறார் என்று சொல்லி, மேன்மேலும் ஆச்சரியப்பட்டார்கள்."

மத்தேயு சுவிசேஷகன் தீரு சீதோன் திசைகளிலிருந்து நம்முடைய இரட்சகர் கலிலேயாக்கடலண்டை வந்தபோது, சப்பாணிகள், குருடர், ஊமையர், ஊனர்முதலிய அநேகராத் திரள்ஜனங்கள் கூட்டிக்கொண்டு இயேசுவினிடத்தில் வர, அவர்களை அவர் சொஸ்தப்படுத்தினார் என்று சொல்லுகிறார். ஊனர் என்கிற வார்த்தையைக் கையில்லாதவனென்று சிலர் அர்த்தப்படுத்துகிறார்கள் (மத். 18. 8.). ஆகிலும் இரட்சகர் சிருஷ்டிகளைப்போல இல்லாத அவயவத்தை உண்டுபண்ணினாரென்று சொல்ல எதுவில்லை. எதாவது ஒரு சிறு ஆதாரத்தை வைத்துக்கொண்டு தம்முடைய அற்புதங்களைச் செய்து வந்தார். தண்ணீரை இரசமாக்கினார், ஐந்து அப்பங்களைப் பெருகப்பண்ணினார். ஒன்றுமில்லாமையிலிருந்து இப்படிச்

செய்ய வல்லவரல்லவென்றல்ல, இது அவருடைய வழக்க மல்ல. மத்தேயு சொல்லுகிற ஏராளமான அற்புதங்களிலிருந்து மாற்கு இந்த அற்புதத்தையெடுத்து விரிவாய்ச் சொல்லுகிறான். ஏனெனில், மற்றவைகளிலிருந்து இது சில காரியங்களில் வித்தியாசப்பட்டது. இவன் கொன்னைவாயுடைய ஒரு செ விடன். 37-ம் வசனத்தில் ஊமையனென்று இருப்பதினால் இவன் பேசமாட்டாத ஊமையனென்று சிலர் எண்ணுகிறார் கள். 35-ம் வசனத்தில் செம்மையாய்ப் பேசினான் என்றிருப்ப தால், இவன் ஊமையனல்ல; வார்த்தைகளை உச்சரிக்கத் திற மையற்றவனென்று தோன்றுகிறது. மத். 9. 32ல் சொல்லப் பட்ட ஊமையன் பிசாசுபிடித்ததினால் ஊமையனானவன். இந்த மனிதனைக்குறித்து அப்படி ஒன்றும் சொல்லவில்லை; நாமாய் அப்படி எண்ணவும் ஏதுவில்லை. இவனுடைய சிநே கிதர் இவனை இரட்சகரண்டை கொண்டுவந்து, தமது கையை அவன்மேல் வைக்க வேண்டிக்கொண்டார்கள். அவர்கள் கேட்டுக்கொண்டபடி செய்து அவர் அவனை சொஸ்தமாக்க வில்லை.

பலவித வியாதிஸ்தர் தம்மிடம் வந்தபோது பலவகையாய் அவனவன் நிலைமைக்குத் தக்கதாய்த் தம்முடைய ஞானத்தின் படியே அவர்களுக்கு நன்மைசெய்துவந்தார். மனிதனில் இருந் ததை அறிந்த அவரைப்போல அவரிடத்தில் வந்த ஒவ்வொரு வருடைய ஆத்துமநிலைமையையும் நாம் அறிந்திருப்போமா னால், ஏன் ஒருவனை ஜனக்கூட்டத்தில் சுகமாக்கினார், ஏன் ஒருவனைச் சுகமாக்குமுன் பட்டணத்திற்கு வெளியே கொண் டுபோனார், ஏன் ஒருவனை ஒரு வார்த்தையினாலும் வேறொ ருவனை ஸ்பரிசத்தினாலும் வேறொருவனைச் சீலோவாம் குளத் தில் கழுவச்சொன்னதினாலும் சொஸ்தமாக்கினார் என்றும், ஒருவனுக்கு ஏன் சுகத்தை முற்றிலும் கொடுத்து வேறொரு வனை முதலாவது மனிதரை மரத்தைப்போல காணச்செய்தா ரென்றும் அறிந்துகொள்ளுவோம்; தாமாய்ச் சுகப்படுத்தினால் அவருடைய வல்லமை குறைவுள்ளதென்று சொல்லக்கூடாது. அப்படிச் செய்வது அவனவனுடைய சரீர ஆத்துமநிலை

மைக்கு அவசியமாயிருந்தது. நம்முடைய இரட்சகர் சரீரத்திற்குச் செய்த நன்மையினால் ஆத்துமாவுக்கும் நன்மைசெய்யப் பார்த்தார். அதுவே அவருடைய நோக்கம். நாம் அறிவீனமுள்ளவர்களானபடியால், ஒவ்வொரு சங்கதியிலும் அதை எவ்வித ஞானமாய் நிறைவேற்றினாரென்று சொல்ல நமக்குத் தெரியாது.

இந்தச் சமயத்தில் தாம் சொஸ்தமாக்க விரும்பினவனை ஜனக்கூட்டத்தைவிட்டு தனியே அழைத்துக்கொண்டுபோனார். இவ்விதமாகவே அவர் குருடனுடைய கையைப்பிடித்து அவனைக் கிராமத்திற்கு வெளியே அழைத்துக்கொண்டுபோனார் என்று சொல்லியிருக்கிறது (மாற். 8. 23.). என் இவனை தனித்துக் கொண்டுபோனார். மற்றவர்கள் வேடிக்கையாகப் பார்த்து மெச்சிக்கொள்ளாதபடிக்கென்று கிரேக்கைசபை பிதாக்கள் சொல்லுகிறார்கள். இது சரியான நியாயமல்ல. ஏனெனில் இரண்டுவிசைமாத்திரமே அப்படிச் செய்திருக்கிறார். மற்ற அற்புதங்களை ஜனங்கள் வேடிக்கை பார்த்து மெச்சிக்கொள்ளத் தக்கதாக செய்தார் என்று சொல்லலாமா? கல்வின் என்பவரைப்போல தாராளமாய் ஜெபம்பண்ணும்படி இப்படிச் செய்திருப்பாரென்று எண்ணுவதும் சரியல்ல. எப்பொழுதும் ஜெபஞ்செய்து கொண்டிருந்தவருக்குத் தனித்த இடம் அவசியமில்லையே. கூட்டத்திலிருந்த சந்தடி, கலக்கம் இவைகளைவிட்டுத் தனிமையும் அமைதலுமான இடத்தில் ஆழ்ந்த கருத்தாய் இரட்சகர் சொன்னதை ஏற்றுக்கொள்ளவும், அது அவன் மனதில் நன்றாய்ப் பதியவும் அப்படிச் செய்திருப்பார். இப்பொழுதும் ஒரு ஆத்துமாவைத் தனியே அழைத்து அதை வியாதியினாலாவது துன்பத்தினாலாவது தனிப்படவைத்து பூமிக்குரிய கூட்டாளிகளையும் சிநேகிதரையும் அதைவிட்டுப் பிரித்து அதோடு பேசி அதற்குச் சுகமளிக்கிறதுண்டு. உலகத்தின் நடுவில் அதின் சந்தடியில், தான் சொல்லுகிறதற்கு அவர்கள் செவிகொடுக்க மாட்டார்களென்று இந்தச் செவிடனைப்போல அவர்களை வெளியே கொண்டுபோகிறார். அப்படியே தாம் தெரிந்துகொண்ட ஜனத்தை வனாந்தரத்திற்குக் கொண்டுவந்ததுமுதல் அவர்கள்

ஆத்தும காதுகளைத் திறந்து, பிறகு நியாயப்பிரமாணத்தைக் கேட்கச்செய்தார்.

தம்முடைய விரல்களை அந்த மனிதன் காதில் வைத்ததும் உமிழ்நீரைக்கொண்டு அவன் காதைத் தொட்டதும் உவமான மான செய்கைகள். இந்த விஷயத்தில்மாத்திரம் அவர் அப்ப டிச்செய்ய முகாந்தரமிருந்தது. பார்வையினாலாவது ஸ்பரிசித் தலினாலாவது அவர் அவனுக்கு ஏதாவது செய்யக்கூடும். இந்தச் செய்கைகளால் அவன் விசுவாசத்தை எழுப்பிவிட்டுத் தான் பெறப்போகிற நன்மையை எதிர்பார்க்கச் செய்தார். காதை துளைத்துக் கேளாதபடிக்குக் காரணமாயிருந்த தடைகளை நீக்கு கிறதற்குக் குறிப்பாக விரலைக் காதில் வைத்தார். அவனிலிருந்த கேட்டுக்கு அது ஊற்றாயிருந்தது. அவன் செம்மையாய்க் கேளா ததினாலே செம்மையாய்ப் பேசவில்லை. இந்தக் குறைவுதான் முதலாவது நீங்கினதாகச் சொல்லியிருக்கிறது. அதிக வறட்சி யால் நாவு மேல்வாயோடு ஒட்டிக்கொள்ளுகிறதுண்டு. இதை நீக்க இரண்டாவதாக நாவை அவிழ்க்கும்படி உமிழ்ந்து, அவன் நாவைத் தொட்டார். இரண்டும் தம்மிலிருந்தே புறப்படும்படி செய்கிறார். புறம்பேயிருந்து கொண்டுவர வில்லை. தம்முடைய வாயிலிருந்த எச்சிலைத் தம்முடைய விரலால் தொட்டு அவன் நாவின் கட்டுகளை அவிழ்க்கும் படிக்கு அதைத் தொடுகிறார். அதிலே மருந்துக்கேற்ற குணம் ஒன்றுமில்லை. தமக்குள்ளிருக்கும் வல்லமை தம் மிடத்திலிருந்து வெளியாகிறதைக் காட்டும்படி அப்படிச் செய்தார். இப்படிப்பட்ட குறிப்புகளை விபரமாய்ச் சொல் லுகிற மாற்கு அவர் வானத்தை அண்ணாந்து பார்த்து பெருமூச்சுவிட்டார் என்று சொல்வதுமல்லாமல், அவர் அந்தச் சமயத்தில் சொன்ன வார்த்தையையும் நமக்குத் தெரி விக்கிறான். "எப்பத்தா" என்றார். அதற்கு திறவுண்டு போ என்று அர்த்தமாம். வானத்தை அண்ணாந்து பார்த்ததி னால் தேவஒத்தாசை எவ்வளவு அவசியமென்று காட்டு கிறார். திவ்விய வல்லமை அவரிடத்தில் சிலவேளை மாத்திரமல்ல, எப்பொழுதும் குடிகொண்டிருந்தமையால்

தாம் பிதாவோடு ஒன்றுயிருக்கிறதையும், பிதா செய்யக் காண்கிறதையே தாம் செய்கிறதையும் இதினால் குறிப்பாய்க் காட்டினார் (மத். 14. 19. யோவா. 11. 41, 42.). அவர் பெருமூச்சுவிட்டார் என்றிருப்பதை அந்தச் சமயத்தில் ஜெபம் பண்ணினபோது பெருமூச்சுவிட்டிருப்பார் என்று சிலர் சொல்லுகிறார்கள். தமக்குமுன் நின்ற நிர்ப்பாக்கியமான மனிதனைப் பார்த்து, பிசாசும் பாவமும் தேவனுடைய நல்ல சிருஷ்டியை இப்படிக் கெடுத்துப்போடுகிறதே என்று துக்கத்தோடு இருதயத்திலிருந்து பெருமூச்சுவிட்டார் என்று எண்ணலாம். வேறொரு சமயத்தில் ஆவியிலே கலங்கித் துயரமடைந்தார் என்று வாசிக்கிறோம் (யோவா. 11. 33.). பாவமும் மரணமும் மனுப்புத்திரரை எவ்வளவாய்க் கேவலப்படுத்திப்போட்டது, எவ்வளவு துக்கத்திற்குக் காரணமாச்சுது என்கிற அந்த எண்ணம் அவருக்குள் வியாகுலத்தை உண்டாக்கிற்று. அந்தச் சமயத்தில் துக்கப்பட்டுக்கொண்டிருந்தவர்கள் எப்பொழுதும் எல்லா இடங்களிலும் துக்கித்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு குறிப்பாயிருந்ததுபோல, இந்த மனுஷன் பலவிதத் துன்பங்களில் அகப்பட்டு வேதனைப்படுகிற ஆதாமின் புத்திரரைக் குறிக்கிறான். இந்தச் சமயத்தில் எப்பத்தா என்கிற வார்த்தையை வழங்கினதுபோல, வேறொரு சமயத்தில் "தலித்தாகூமி" என்று சொல்லி ஒரு பெண்ணை உயிரோடெழுப்பினார். இரக்ஷகர் சொன்ன வார்த்தையை அதின் அர்த்தத்தோடே சொல்லுகிறது மாற்குவினுடைய வழக்கம் (மாற். 3. 17, 5; 41. 7; 11. 14, 36; 16. 34, 10; 46. 15, 22.). இந்த வார்த்தைகள் சுவிசேஷகன் தான் எழுதினதைக் கண்ணாரக்கண்டு காதாரக்கேட்டவர்களிடத்திலிருந்தே பெற்றுக்கொண்டான் என்றும், காதுகளைத் திறந்து நாவின் கட்டுகளை அவிழ்த்து மரித்தோரை எழுப்பின இந்த வார்த்தைகள் அவர்கள் மனதில் நன்றாய்ப் பதிந்திருந்ததென்றும் தெளிவாய்க் காட்டுகிறது.

அதை ஒருவருக்கும் சொல்லவேண்டாமென்று கட்டளையிட்டார். அவர்களுக்கு என்றிருப்பதால் அவனைக் கூட்டத்தை விட்டுப் பிரித்தபோது அவனுடைய சிநேகிதரும் அவ

னோடு போயிருக்கவேண்டும்; அவர்களும் அற்புதத்தைக் கண்டிருக்கவேண்டும். ஆகையால்தான் அவர்களுக்கு இப்படிக் கட்டளையிட்டார். இதற்குக் காரணம் முன்னே சொல்லியிருக்கிறோம். ஜனங்கள் இதைக் கண்டு ஆச்சரியப்பட்டு எல்லாவற்றையும் நன்றாய்ச் செய்தார் என்றார்கள். சிருஷ்டிப்பு முடிந்தபோதும் தேவன் இப்படியே சகலத்தையும் நல்லதென்று கண்டார் என்று இருக்கிறது (ஆதி. 1. 31.). அப்படிப்போல புது சிருஷ்டியாகிய இரட்சகருடைய செய்கையிலும் சகலமும் நன்றாயிருக்கிறதென்று சொல்லவேண்டும். இஸ்ரவேலின் தேவனை மகிமைப்படுத்தினார்களென்று மத்தேயு சொல்லியிருப்பதால், அவர்களில் அநேகர் அஞ்ஞானிகளாயிருந்திருக்கவேண்டும். தெக்கப்போலி நாடு அஞ்ஞானிகளுள்ள நாடுதான். இவர்கள் நடந்த பலத்த செய்கைகளைக் கண்டு இஸ்ரவேலைத் தெரிந்துகொண்ட தேவன் எல்லா தேவர்களுக்கும் மேலானவர் என்று அறிக்கையிட்டார்கள்.



## 25. நாலாயிரம் பேரை அற்புதமாய் போஷித்தது.

---

*மத்தேயு*, 15. 32—39.

"*பின்பு, இயேசு தம்முடைய சீஷர்களை அழைத்து: ஜனங்களுக்காகப் பரிதபிக்கிறேன், இவர்கள் என்னிடத்தில் மூன்றுநாள் தங்கியிருந்து சாப்பிட ஒன்றுமில்லாதிருக்கிறார்கள்; இவர்களைப் பட்டினியாய் அனுப்பிவிட எனக்கு மனதில்லை, வழியில் சோர்ந்துபோவார்களே என்றார். அதற்கு அவருடைய சீஷர்கள்: இவ்வளவு திரளான ஜனங்களுக்குத் திருப்தியுண்டாகும்படி வேண்டிய அப்பங்கள் இந்த வனாந்தரத்திலே நமக்கு எப்படி அகப்படும் என்றார்கள். அதற்கு இயேசு: உங்களிடத்தில் எத்தனை அப்பங்கள் உண்டு என்று கேட்டார். அவர்கள்: ஏழு அப்பங்களும் சில சிறுமீன்களும் உண்டு என்றார்கள்.*

*அப்பொழுது அவர் ஜனங்களைத் தரையில் பந்தியிருக்கக் கட்டளையிட்டு, அந்த ஏழு அப்பங்களையும் அந்த மீன்களையும் எடுத்து, ஸ்தோத்திரம் பண்ணி, பிட்டுத் தம்முடைய சீஷர்களிடத்தில் கொடுத்தார்; சீஷர்கள் ஜனங்களுக்குப் பரிமாறினார்கள். எல்லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள்; மீதியான துணிக்கைகளை ஏழுகூடைநிறைய எடுத்தார்கள். ஸ்திரீகளும் பிள்ளைகளும் தவிர, சாப்பிட்ட புருஷர் நாலாயிரம்பேராயிருந்தார்கள்.*

*அவர் ஜனங்களை அனுப்பிவிட்டு, படவில் ஏறி, மக்தலாவின் எல்லைகளில் வந்தார்.*"

*மாற்கு*, 8. 1—9.

"*அந்நாட்களிலே திரளான ஜனங்கள் கூடிவந்திருக்கையில், அவர்கள் சாப்பிடுகிறதற்கு ஒன்றுமில்லாதபோது, இயேசு தம்முடைய சீஷரை அழைத்து: ஜனங்களுக்காகப் பரிதபிக்கிறேன், இவர்கள் இப்பொழுது என்னிடத்தில் தங்கியிருந்த மூன்றுநாளாய்ச் சாப்பிட ஒன்றுமில்லாதிருக்கிறார்கள். இவர்களில் சிலர் தூரத்திலிருந்து வந்தவர்களாகையால், நான் இவர்களைப் பட்டினியாய் வீட்டிற்கு அனுப்பிவிட்டால் வழியில் சோர்ந்துபோவார்களே என்றார்.*

*அதற்கு அவருடைய சீஷர்கள்: இந்த வனாந்தரத்திலே ஒருவன் எங்கேயிருந்து அப்பங்களைக் கொண்டுவந்து இத்தனைபேர்களைத் திருப்தியாக்கக்கூடும் என்றார்கள். அதற்கு அவர்: உங்களிடத்தில் எத்தனை அப்பங்கள் உண்டு என்று கேட்டார். அவர்கள்: ஏழு அப்பங்கள் உண்டு என்றார்கள்.*

*அப்பொழுது அவர் ஜனங்களைத் தரையிலே பந்தியிருக்கக் கட்டளையிட்டு, அந்த ஏழு அப்பங்களையும் எடுத்து, ஸ்தோத்திரம்பண்ணி, பிட்டு, அவர்களுக்குப் பரிமாறும்படி சீஷர்களிடத்தில் கொடுத்தார்;*

அவர்கள் ஜனங்களுக்குப் பரிமாறினார்கள். சில சிறு மீன்களும் அவரிடத்தில் இருந்தது; அவர் அவைகளையும் ஆசீர்வதித்து அவர்களுக்குப் பரிமாறும்படி சொன்னார். அவர்கள் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள்; மீதியான துணிக்கைகளை ஏழு கூடைநிறைய எடுத்தார்கள். சாப்பிட்டவர்கள் ஏறக்குறைய நாலாயிரம்பேராயிருந்தார்கள். பின்பு அவர் அவர்களை அனுப்பிவிட்டார்.''

---

இந்த அற்புதத்தைப்பற்றிச் சொல்லக்கூடிய அநேக சங்கதிகளை இதைப்போலொத்த அற்புதத்தை முன்னே வியாக்கியானம்பண்ணும்போது சொல்லிவிட்டோம். அது நடந்தது போல இதுவும் பெத்சாயிதா வனாந்தரத்தில் நடந்ததென்று சிலரும், அது கலிலேயாக்கடலின் கீழ்ப்பக்கத்தில் நடந்ததுபோல இது மேல்பக்கத்தில் நடந்ததென்று வேறு சிலரும் சொல்லுகிறார்கள். ஆகிலும் இரண்டும் சற்றேறக்குறைய ஒரே இடத்தில் நடந்ததென்று சொல்லலாம். மாற்கு சொல்லுகிறபடி இரட்சகர் அந்த இடத்திற்கு வந்திருக்கவேண்டும். கானானிய ஸ்திரீயின் மகளைக் குணமாக்கினபிறகு அவர் தீரு சீதோன் திசைகளை விட்டு தெக்கப்போலியின் எல்லையின் வழியாய் கலிலேயாக்கடலுக்கு வந்தார் (மாற். 7. 31.). ஒன்றுதவிர தெக்கப்போலியைச் சேர்ந்த பட்டணங்களெல்லாம் கடலுக்குக் கிழக்கேயிருந்தபடியால் அவரும் அங்கேதான் இருந்தாரென்று எண்ணவேண்டும். மேலும் இந்த அற்புதத்தைச் செய்தபிறகு அவர் மக்தலா நாட்டுக்கு வந்ததாக மத். 15. 39ல் சொல்லியிருக்கிறது. இது கடலுக்கு மேற்கேயிருக்கிறதென்று திட்டமாய்த் தெரியும். "படவில் ஏறி மக்தலாவின் எல்லைகளுக்கு வந்தார்.'' மாற்கு தல்மனூத்தாவின் எல்லைகளுக்கு வந்தாரென்று சொல்லுகிறார். இந்த இடத்தைப்பற்றி வேறொன்றும் தெரியாவிட்டாலும் அது கடலுக்கு மேற்கேயிருந்ததென்று சொல்லப் போந்த நியாயம் உண்டு.

இந்த அற்புதம் ஐயாயிரம்பேரைப் போஷித்த சங்கதிக்கு அநேக காரியங்களில் ஒத்திருந்தாலும், சில விஷயங்களில் வித்தியாசப்படுகிறது. இந்தச் சமயத்தில் ஜனங்கள் மூன்று

நாள் இரட்சகரிடத்தில் காத்திருந்ததாகப் பார்க்கிறோம். முந்தின சமயத்தில் அப்படி ஒன்றுஞ் சொல்லவில்லை. அப்பொழுது ஐந்து அப்பமும் இரண்டு மீனுமாத்திரம் இருந்தது. இப்பொழுது ஏழு அப்பங்களும் சில மீன்களும் இருந்ததாகச் சொல்லியிருக்கிறது. அற்புத வல்லமை இரண்டிலும் ஒன்றைப் போல வெளிப்பட்டாலும் அப்பொழுது மீந்ததைப் பன்னிரண்டு கூடை நிறைய எடுத்தார்கள். இப்பொழுது ஏழுகூடை மாத்திரந்தான் என்று பார்க்கிறோம். இரண்டு சமயங்களிலும் இருந்த கூடைகள் வெவ்வேறு வகையான கூடைகளென்று மூலபாஷையைப் பார்த்தால் தெரியவரும் (மத். 16. 9, 10. மாற். 8. 19, 20.). மூலபாஷையிற் பார். நாலாயிரம் பேருக்கு அப்பங்கொடுத்தபொழுது வழங்கப்பட்ட கூடையைப்போலொத்த கூடையில்தான் தமஸ்குவில் பவுல் அப்போஸ்தலனை மதில்வழியாய் இறக்கிவிட்டார்கள் (அப். 9. 25.). ஆகையால் அது ஒரு ஆள் இருக்கத்தக்க கூடையாயிருந்திருக்க வேண்டும். முதல்விசை அவர்கள் வழங்கின கூடைகள் எப்படிப்பட்டதென்று சொல்ல ஏதுவில்லை. தங்கள் போஜன பதார்த்தங்களைக் கொண்டுபோக கூடையைக் கொண்டுபோனார்கள் என்று சிலரும், தூங்கும்போது பனிமுதலானது அடியாதபடிக்கு மூடியாகக் கொண்டுபோனார்கள் என்று வேறு சிலரும் சொல்லுகிறார்கள்.

முந்தின அற்புதத்தைப் பார்த்தவர்கள் இந்தச் சமயத்தில் அப்பம் எங்கேயிருந்து வருமென்று திகைத்துக்கொண்டிருந்தது ஆச்சரியம். ஆ! மனிதனுடைய இருதயம் எப்படிப்பட்டதென்றும், நம்முடைய இருதயம் எப்படிப்பட்டதென்றும், அதிலே அவிசுவாசம் எவ்வளவாய் வேரூன்றியிருக்கிறதென்றும் நாம் அறிந்தோமானால் ஆச்சரியப்படமாட்டோம். வருத்தமான காலங்களில் முன் கிடைத்த உதவியை மறந்துவிடுகிறோம். தேவன் செய்த ஆச்சரியமான கிரியைகளை நினைக்கிறதில்லை. வருத்தம் பெரிதாய்த் தோன்றுகிறபோது தேவதயவு முடிவடைந்ததென்று எண்ணுகிறோம். தேவன் சிவந்தசமுத்திரத்தைப் பிளந்து இஸ்ரவேலைக் கடக்கப்பண்ணினார். அவர்

கள் அக்கரைக்குப் போனவுடனே தண்ணீர் இல்லாததினால் மோசேக்கு விரோதமாய் முறுமுறுத்து கர்த்தர் எங்கள் நடுவில் இருக்கிறாரோ இல்லையோ என்று அவரைப் பரீட்சை பார்த்தார்கள் (யாத். 17. 1—7.). வேறொரு சமயத்தில் காடைகளைக்கொண்டு கர்த்தர் அவர்கள் பாளயத்தை மூடின போதிலும் (யாத். 16. 13.) மோசே தானும் அவ்வளவு பெரிய ஜனக்கூட்டத்திற்கு இறைச்சியைக் கொடுக்கக் கூடுமோ என்று சந்தேகமாய்ப் பேசினான் ( எண். 11. 21, 22.). இந்தச் சமயத்தில் அப்போஸ்தலர்களுக்குப் பலத்த விசுவாசமிருந்ததில்லை. நிறைவான உறுதியான விசுவாசமுள்ளவர்கள்தான் முன்னே நடந்ததைக்கொண்டு வரப்போகிற காரியங்களை நிதானித்து, கர்த்தர் தங்களை நடத்தின விதத்தை நினைத்து அவரை உறுதியாய்ப் பற்றிக்கொள்வார்கள். (1 சாமு. 17. 34, 37. 2 நாளா. 16. 7, 8.)

ஒருவேளை அவர்கள் முந்தின அற்புதத்தை நினைத்து, கர்த்தர் முன்னே தங்களுக்கு வனாந்தரத்தில் பந்தியை ஆயத்தம்பண்ணினதுபோல இன்னும் அப்படிச் செய்யக்கூடுமென்று விசுவாசித்தாலும், மறுபடியும் தம்மிடத்திலிருந்த சிருஷ்டிப்பின் வல்லமையைக் காட்டுவாரோ என்று சந்தேகித்திருக்கலாம். அப்படி சரீரப்பிரகாரமான உதவிபெற்றுக்கொள்ளும்படியாய் ஆத்துமாவுக்கடுத்த பசி இவர்களிடத்திலிருந்ததோ, இவ்வுலகத்துக்குரிய சகலத்தையும் கூடப் பெற்றுக்கொள்ளும்படிக்கு இவர்கள் தேவனுடைய ராஜ்யத்தை முந்தித் தேடினார்களோ என்றும் அவர்கள் சந்தேகித்திருக்கலாம்.

அகுஸ்தீன் என்பவர் ஜனங்களை ஆச்சரியவிதமாய்ப் போஷித்த இந்த இரண்டு அற்புதங்களை உவமானமாய் அர்த்தப்படுத்தி, முந்தினது, அதாவது ஐயாயிரம்பேரைப் போஷித்தது யூதர்கள் ஆத்துமப்பிரகாரம் இரட்சகரால் திருப்தி அடைவதையும், பிந்தினதில் தூரத்திலிருந்து வந்தவர்களென்று சொல்லியிருப்பதால் அது புறஜாதியார் கிறிஸ்துவண்டையில் வந்து திருப்தியடைவதையும் குறிக்கும் என்கிறார். அப்படி அர்த்தம்பண்ணுவோமென்றால், முந்தின அற்புதத்தைப் பார்த்

திருந்தும் அப்பங்கிடைக்கும் வகையைக்குறித்து சீஷர்கள் திகைத்து நின்றது, சுவிசேஷ ராஜ்யத்திற்குப் போதகரான பின்பும் யூதர்களைப்போல புறஜாதியாரும் கிறிஸ்துவின் இரக்ஷிப்பில் பங்கடைவார்கள் என்பதை அறிந்துகொள்வதில், அவர்கள் எவ்வளவு மந்தமாயிருந்தார்கள் என்பதை விளக்கிக் காட்டும்.



## 26. பெத்சாயிதாவில் ஒரு குருடன் கண்களைத் திறந்தது.

மாற்கு, 8. 22—26.

"பின்பு அவர் பெத்சாயிதா ஊருக்கு வந்தார்; அப்பொழுது ஒரு குருடனை அவரிடத்தில் கொண்டுவந்து, அவனைத் தொடும்படி அவரை வேண்டிக்கொண்டார்கள். அவர் குருடனுடைய கையைப் பிடித்து, அவனைக் கிராமத்துக்கு வெளியே அழைத்துக்கொண்டுபோய், அவன் கண்களில் உமிழ்ந்து, அவன்மேல் கைகளை வைத்து: எதையாகிலும் காண்கிறாயா என்று கேட்டார். அவன் ஏறிட்டுப்பார்த்து: நடக்கிற மனுஷரை மரங்களைப்போலக் காண்கிறேன் என்றான். பின்பு அவர் மறுபடியும் அவன் கண்களின்மேல் கைகளை வைத்து, அவனை ஏறிட்டுப் பார்க்கும்படி செய்தார்; அப்பொழுது அவன் சொஸ்தமடைந்து, யாவரையும் தெளிவாய்க் கண்டான். பின்பு அவர் அவனை நோக்கி: நீ கிராமத்தில் பிரவேசியாமலும், கிராமத்தில் இதை ஒருவருக்கும் சொல்லாமலும் இரு என்று சொல்லி, அவனை வீட்டிற்கு அனுப்பி விட்டார்."

இதை மாற்குமாத்திரம் சொல்லுகிறார். இதிலுள்ள விசேஷித்த காரியங்களை முன்னே விவரித்திருக்கிறோம். அந்தக் கொன்னைவாயையுடைய செவிடனை அவர் ஜனக்கூட்டத்தைவிட்டுத் தனியே அழைத்துக்கொண்டு போனதுபோல இந்தக் குருடனுடைய கையைப் பிடித்து அவனை கிராமத்திற்கு வெளியே அழைத்துக்கொண்டுபோய் முன் செய்ததுபோல உமிழ்நீரைத் தடவி இவனைச் சொஸ்தமாக்கினார். இவைகளைக்குறித்து அந்தச் சமயத்தில் சொன்ன வியாக்கியானத்தைப் பார்க்கலாம். இரட்சகர் தமது வழக்கத்தின்படியே அற்பகாரியங்களைத் தெரிந்துகொண்டு, அவைகளின்மூலமாய்ப் பெரியகாரியங்களை நடப்பித்து, ஆச்சரியமான காரியங்களை இயல்பான காரியங்களால் மறைக்கிறார். தம்முடைய சீஷர்களை வியாதிஸ்தர்மேல் எண்ணெய் பூசச் சொன்னார் (மாற். 6. 13. யாக். 5. 16.). இது கீழ்த்திசைகளில் சில வியாதிகளை நீக்குகிறதற்கு உதவியாயிருந்தது. சொஸ்தமாக்கினது

எண்ணெயல்ல, இரட்சகருடைய வார்த்தைதான். ஆகிலும் எண்ணெயில்லாமல் சொஸ்தமாக்குகிறதற்குத் தங்களுக்கு வல்லமையுண்டென்று விசுவாசிக்கிறதும் வருத்தமாயிருந்தது. குணமாக்கப்பட்டவர்களும் தாங்கள் எண்ணெயில்லாமல் குணமாவோமென்று நம்புகிறதும் வருத்தமாயிருந்தது. எசேக்கியாவின் பருவின்மேல் அத்திப்பழக் குழம்பைப் பற்றுப் போடுங்களென்று ஏசாயா தீர்க்கதரிசி சொன்னான். சாதாரணமான எந்த வைத்தியனும் அதற்கேற்ற மருந்து இதுதான் என்று செய்வான். ஆனால் இயல்பாய்த் தோன்றின இதின் மறைவிலே ஆச்சரியமானவிதமாய் அவனுக்குச் சொஸ்தம் நடந்தேறிற்று. (ஏசா. 38. 22.)

இந்த அற்புதத்தில் முக்கியமாய் நாம் கவனிக்கவேண்டியது அது கொஞ்சங்கொஞ்சமாய் நடந்தேறிவந்ததைத்தான். மற்ற சில அற்புதங்களும் இந்த விஷயத்தில் இதை ஒத்திருக்கிறது. அந்தப் பிறவிக்குருடன் சீலோவாம் குளத்திலே கழுவினபிற்பாடுதான் பார்வையடைந்தவனாய்த் திரும்பிவந்தான் (யோவா. 9. 7.). ஆகிலும் இவனுக்குள்ளே பார்வை வரவர அதிகரித்தது மிகவும் தெளிவாயிருக்கிறது. அவர் அவன் கண்களில் உமிழ்ந்து அவன்மேலே கைகளை வைத்து எதையாகிலும் காண்கிறாயா என்று கேட்டார். அவன் ஏறிட்டுப் பார்த்து நடக்கிற மனிதரை மரங்கள்போல் காண்கிறேன் என்றான். அதாவது, இங்குமங்கும் திரிந்துகொண்டிருக்கிற சில பொருட்களைக் கண்டான். அவைகளுடைய பருமன், உருவம் திட்டமாய்த் தெரியவில்லை. உயரத்தைப் பார்க்கும்போது மரங்களென்று நினைத்தான்; அசைந்துகொண்டிருந்தபடியால் மனிதர் என்று தீர்மானித்தான். நம்முடைய நல்ல வைத்தியன் தம்முடைய கிரியைகளைக் குறைவாய் விடுகிறதில்லை. அவர் மறுபடியும் அவன் கண்கள்மேல் கைகளை வைத்து அவனை ஏறிட்டுப் பார்க்கும்படி செய்தார். அப்பொழுது அவன் குணமடைந்து யாவையும் தெளிவாய்க் கண்டான்.

இந்தக் குருடனுடைய விசுவாசம் குறைவுள்ளதாயிருந்தபடியால் இவன் சுகமானது படிப்படியாய் நிறைவேறிற்று

என்று கிறிசொஸ்தமும் மற்றவர்களும் சொல்லுகிறார்கள். இவனைப்போலொத்த குருடர்கள் தாங்களாய் இரட்சகரண்டையில் வந்து தங்கள் கண்களைத் திறக்கவேண்டுமென்று கெஞ்சினார்கள். தான் சொஸ்தமாவேனென்ற நம்பிக்கை இந்தக் குருடனிடத்தில் இராதபடியால், மற்றவர்கள் இவனை இரட்சகரண்டை கொண்டுவரவேண்டியதாயிருந்தது. இப்படிப்பட்டவனுக்குச் சுகமளிக்கிறது வருத்தமானபடியால் கிருபைநிறைந்த நமது ஆண்டவர் அவனை முற்றிலும் தள்ளிவிட மனதில்லாமல் தாம் கொடுக்கப்போகிற நன்மையை மங்கலாய்க் காண்பித்து, தாம் மெய்யாகவே கண்களைத் திறக்கத்தக்க வல்லவரென்று ரூபித்து, அந்த நன்மையை முழுதும் பெற்றுக்கொள்ளத்தக்க ஆசையை அவனில் எழுப்பிவிடுகிறார். தேவன் தம்முடைய கிருபையை ஒரு வகையாயல்ல பலவகையாய்க் கொடுக்கிறாரென்றும், சிலருக்குக் கொஞ்சங்கொஞ்சமாயும் சிலருக்கோ ஒரே மட்டாயும் தம்முடைய தயவைத் தமது இஷ்டப்படியே கொடுக்கிறாரென்றும் இது தெளிவாய்க் காட்டுகிறது. இவ்விதமாகவே உலகத்தின் ஒளியாய் வந்த நமதாண்டவர் தம்மிடத்தில் வருகிற ஆத்துமாக்களுக்குத் தம்முடைய ஒளியை ஈகிறார். உடனே அவர்கள் அறிவீனமும் கலக்கமும் முழுவதும் போய்விடுகிறதில்லை; உடனே தெளிவாய்ப் பார்க்கிறதில்லை. பழைய குருட்டாட்டம் இன்னுமிருந்து அவர்களுடைய பார்வையை மங்கலாக்குகிறபடியால் மனிதரை விருட்சங்கள் நடக்கிறதுபோல காண்கிறார்கள். தகுந்த சமயத்தில் கிறிஸ்து தாம் தொடங்கின கிரியையை நிறைவேற்றுவார். அவர்கள் விசுவாசத்தை ஆரம்பித்தவர் முடிப்பார். மறுபடியும் தமது கைகளை அவர்கள்மேல் வைப்பார். அப்போது அவர்கள் சகலத்தையும் தெளிவாய்ப் பார்ப்பார்கள்.



## 27. சந்திரரோகியாயிருந்த பிள்ளையை சோஸ்தமாக்கினது.

மத்தேயு, 17. 14—21.

"அவர்கள் ஜனங்களிடத்தில் வந்தபோது, ஒரு மனுஷன் அவரிடத்தில் வந்து, அவர் முன்பாக முழங்கால்படியிட்டு: ஆண்டவரே, என் மகனுக்கு இரங்கும், அவன் சந்திரரோகியாய்க் கொடிய வேதனைப் படுகிறான்; அடிக்கடி தீயிலும், அடிக்கடி ஜலத்திலும் விழுகிறான். அவனை உம்முடைய சீஷர்களிடத்தில் கொண்டுவந்தேன்; அவனைச் சொஸ்தமாக்க அவர்களால் கூடாமற்போயிற்று என்றான்.

இயேசு பிரதியுத்தரமாக: விசுவாசமில்லாத மாறுபாடுள்ள சந்ததியே, எதுவரைக்கும் நான் உங்களோடு இருப்பேன்? எதுவரைக்கும் உங்களிடத்தில் பொறுமையாய் இருப்பேன்? அவனை என்னிடத்தில் கொண்டுவாருங்கள் என்றார். இயேசு பிசாசை அதட்டினார்; உடனே அது அவனைவிட்டுப் புறப்பட்டது; அந்நேரமே அந்த இளைஞன் சொஸ்தமானான்.

அப்பொழுது, சீஷர்கள் இயேசுவினிடத்தில் தனித்துவந்து: அதைத் துரத்திவிட எங்களால் ஏன் கூடாமற்போயிற்று என்று கேட்டார்கள். அதற்கு இயேசு: உங்கள் அவிசுவாசத்தினாலேதான்; கடுகுவிதையளவு விசுவாசம் உங்களுக்கு இருந்தால் நீங்கள் இந்த மலையைப்பார்த்து, இவ்விடம் விட்டு அப்புறம்போ என்று சொல்ல அது அப்புறம்போம்; உங்களால் கூடாதகாரியம் ஒன்றுமிராது என்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். இந்த ஜாதிப்பிசாசு ஜெபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தினாலும் புறப்பட்டுப் போகாது என்றார்.

மாற்கு, 9. 14—29.

"பின்பு அவர் சீஷரிடத்தில் வந்தபோது, அவர்களைச் சுற்றித் திரளான ஜனங்கள் நிற்கிறதையும், அவர்களோடே வேதபாரகர் தர்க்கிக்கிறதையும் கண்டார். ஜனங்களெல்லாரும் அவரைக் கண்டவுடனே மிகவும் ஆச்சரியப்பட்டு, ஓடிவந்து, அவருக்கு வந்தனஞ்செய்தார்கள். அவர் வேதபாரகரை நோக்கி: நீங்கள் இவர்களோடே என்னத்தைக்குறித்து தர்க்கம்பண்ணுகிறீர்கள் என்று கேட்டார். அப்பொழுது ஜனக்கூட்டத்தில் ஒருவன் அவரை நோக்கி: போதகரே, ஊமையான ஒரு ஆவி பிடித்த என் மகனை உம்மிடத்தில் கொண்டுவந்தேன். அது அவனை எங்கே பிடித்தாலும் அங்கே அவனை அலைக்கழிக்கிறது; அப்பொழுது அவன் நுரைதள்ளி, பல்லைக்கடித்து, சோர்ந்துபோகிறான். அதைத்

துரத்திவிடும்படி உம்முடைய சீஷரிடத்தில் கேட்டேன்; அவர்களால் கூடாமற்போயிற்று என்றான்.

அவர் பிரதியுத்தரமாக: விசுவாசமில்லாத சந்ததியே, எதுவரைக்கும் நான் உங்களோடு இருப்பேன்? எதுவரைக்கும் உங்களிடத்தில் பொறுமையாய் இருப்பேன்? அவனை என்னிடத்தில் கொண்டுவாருங்கள் என்றார். அவனை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். அவரைக் கண்டவுடனே, அந்த ஆவி அவனை அலைக்கழித்தது; அவன் தரையிலே விழுந்து, நுரைதள்ளிப் புரண்டான்.

அவர் அவனுடைய தகப்பனை நோக்கி: இது இவனுக்கு உண்டாகி எவ்வளவு காலமாயிற்று என்று கேட்டார். அதற்கு அவன்: சிறுவயது முதற்கொண்டே உண்டாயிருக்கிறது; இவனைக் கொல்லும்படிக்கு அது அநேகந்தரம் தீயிலும் தண்ணீரிலும் தள்ளிற்று. நீர் ஏதாகிலும் செய்யக்கூடுமானால், எங்கள்மேல் மனதிரங்கி, எங்களுக்கு உதவி செய்யவேண்டும் என்றான்.

இயேசு அவனை நோக்கி: நீ விசுவாசிக்கக்கூடுமானால் ஆகும், விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும் என்றார். உடனே பிள்ளையின் தகப்பன்: விசுவாசிக்கிறேன் ஆண்டவரே, என் அவிசுவாசம் நீங்கும்படி உதவிசெய்யுமென்று கண்ணீரோடே சத்தமிட்டுச் சொன்னான்.

அப்பொழுது ஜனங்கள் கூட்டமாய் ஓடிவருகிறதை இயேசு கண்டு, அந்த அசுத்த ஆவியை நோக்கி: ஊமையும் செவிடுமான ஆவியே, இவனை விட்டுப் புறப்பட்டுப்போ, இனி இவனுக்குள் போகாதே என்று நான் உனக்குக் கட்டளையிடுகிறேன் என்று அதை அதட்டினார். அப்பொழுது அது சத்தமிட்டு, அவனை மிகவும் அலைக்கழித்துப் புறப்பட்டுப்போயிற்று. அவன் செத்துப்போனான் என்று அநேகர் சொல்லத்தக்கதாகச் செத்தவன்போல் கிடந்தான். இயேசு அவன் கையைப் பிடித்து, அவனைத் தூக்கினார்; உடனே அவன் எழுந்திருந்தான்.

வீட்டில் அவர் பிரவேசித்தபொழுது, அவருடைய சீஷர்கள்: அதைத் துரத்திவிட எங்களால் ஏன் கூடாமற்போயிற்று என்று அவரிடத்தில் தனித்துக் கேட்டார்கள். அதற்கு அவர்: இவ்வகைப் பிசாசு ஜெபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி மற்றெவ்விதத்தினாலும் புறப்பட்டுப்போகாது என்றார்.''

லூக்கா, 9. 37—42.

"மறுநாளில் அவர்கள் மலையிலிருந்திறங்கினபோது, திரளான ஜனங்கள் அவருக்கு எதிர்கொண்டு வந்தார்கள். அவர்களில் ஒருவன் சத்தமிட்டு: போதகரே, என் மகனைக் கடாட்சித்தருளவேண்டுமென்று உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன், அவன் எனக்கு ஒரே பிள்ளையாயிருக்கிறான். ஒரு ஆவி அவனைப் பிடிக்கிறது, அப்பொழுது அலறுகிறான், அது அவனை நுரைதள்ள அலைக்கழித்து, அவனைக் கசக்கின பின்பும், அவனை விட்டு நீங்குவது அரிதாயிருக்கிறது. அதைத் துரத்திவிடும்படி உம்முடைய சீஷரை வேண்டிக்கொண்டேன், அவர்களால் கூடாமற்போயிற்று என்றான்.

இயேசு பிரதியுத்தரமாக: விசுவாசமில்லாத மாறுபாடான சந்ததியே, எதுவரைக்கும் நான் உங்களோடிருந்து, உங்களிடத்தில் பொறுமையாயிருப்பேன்? உன் மகனை இங்கே கொண்டுவா என்றார். அவன் சமீபித்துவருகையில், பிசாசு அவனைக் கீழேதள்ளி, அலைக்கழித்தது. இயேசு அந்த அசுத்தஆவியை அதட்டி, இளைஞனைக் குணமாக்கி, அவன் தகப்பனிடத்தில் அவனை ஒப்புக்கொடுத்தார்.''

நம்முடைய இரட்சகர் மறுரூபமான சமயம் பார்த்து அவருடைய சத்துருக்களாகிய வேதபாரகர் அவர் விட்டுப்போன சீஷர்களை ஒரு அற்புதஞ்செய்யச்சொல்லி அவர்களை மேற்கொண்டார்கள். மிகவும் பொல்லாத ஒரு அசுத்தஆவியைத் துரத்த அவர்கள் பிரயத்தனம்பண்ணினதில் அவர்களால் கூடாமற்போயிற்று. அவர்களுடைய எஜமானும் அவருடைய சீஷர்களில் முக்கியமான மூன்றுபேரும் அவர்களோடிராததால் அவர்களுடைய பெலன் குறைந்துபோயிற்று. இந்த மூன்று சீஷரும் எப்பொழுதும் அவரோடுகூடவே இருந்தபடியால் அவருடைய வல்லமை முக்கியமாய் அவர்களிடத்திலேதான் தங்கிற்றென்று எண்ணலாம். முன்னொரு சமயத்தில் மோசேயும் அவனுடைய பணிவிடைக்காரனாகிய யோசுவாவும் வேறொரு மலையில் மறுரூபமடைந்தபோது நடந்ததுபோல இந்தச் சமயத்திலும் நடந்தது. மோசே இல்லாத சமயம் பார்த்து சத்துரு ஜனங்களை இவ்விதமாகவே ஏய்த்துப் போடப் பார்த்தான். வேதபாரகர் இந்தச் சமயத்தில் சீஷர்களிடத்தில் காணப்பட்ட குறைவைத் தங்களுக்கு மிகவும் அனுகூலமானதென்றெண்ணி வெகுவாய் அழுத்திப் பேசினார்கள். கிறிஸ்துவின் ஊழியக்காரர் அடைந்த அபஜெயத்தைப் பார்க்க அதிகமான பேர் கூடிவந்தார்கள். வாக்குவாதம் வளர்ந்தது. சீஷர்களுடைய குறைவைக்கொண்டு அவர்களுடைய எஜமானும் குறைவுடையவர்தான் என்று வேதபாரகர் சொல்ல, சீஷர்கள் அப்படியில்லையென்று மறுக்க, இவ்விதமாய் வாக்குவாதம் வளர, யாரைக்குறித்து அவர்கள் தர்க்கித்தார்களோ அவரே அந்தப் பரிசுத்த பர்வதத்திலிருந்து புறப்பட்டு வந்தார். அவருடைய முகமும் உடலும் அவரை அங்கே மூடின

மகிமையால் இன்னும் பிரகாசித்தது. அது முற்றிலும் மங்கிப்போகவில்லை. மோசேயின் முகத்தைக் கண்டவர்களுக்கும் இவருடைய மகிமையைக் கண்டவர்களுக்கும் வித்தியாசமுண்டு. மோசே மலையிலிருந்து இறங்கினபோது அவனுடைய முகத்தின் தோல் பிரகாசித்ததைக் கண்ட ஜனங்கள் அவனிடத்தில் வரப் பயப்பட்டார்கள் (யாத். 34. 30.). அவன் முகத்தில் காணப்பட்ட அந்த மகிமை பயமுறுத்துகிற மகிமையாயிருந்தது. அது நியாயப்பிரமாணத்தின் மகிமையாயிருந்தபடியால் நம்மால் தாங்கக்கூடியதல்ல. கிறிஸ்து இயேசுவின் முகத்தில் பிரகாசிக்கிற தேவமகிமையோ பயங்கரமானதாயிருந்தாலும், தம்மிடத்தில் இழுத்துக்கொள்ளுகிற கிருபையும் அழகும் நிறைந்த மகிமையாயிருந்தது. அது மனுஷரைத் தம்மைவிட்டுத் துரத்தாமல் சகலரையும் தம்மண்டைக்கு இழுக்கத்தக்கது. ஜனங்களெல்லாரும் அவரைக் கண்டவுடனே மிகவும் ஆச்சரியப்பட்டார்கள். அவ்வளவாய் தேவமகிமை காணப்பட்டது. ஆகிலும் அவர்கள் அவரைவிட்டு ஓடிப்போகவில்லை. அந்த மகிமையைக் கண்டதினாலேயே ஓடிவந்து அவருக்கு வந்தனஞ்செய்தார்கள். (2 கொரி. 3. 18.)

நம்முடைய பாவம்நிறைந்த உலகத்திற்கு அவர் திரும்பினபோது அவர் கண்கள் கண்ட பார்வையும் அவர் காது கேட்ட சத்தமும் தாம் விட்ட பரிசுத்த பர்வதத்தில் கண்ட காட்சிக்கு எவ்வளவாய் வித்தியாசப்பட்டிருக்க வேண்டும். அங்கே மோக்ஷத்தின் அன்னியோன்னியம் காணப்பட்டது. இங்கேயோ பூமிக்குரிய கலகத்தைப் பார்க்கிறார். அங்கே பிதாவிடத்திலிருந்து மகிமையையும் கனத்தையும் பெற்றுக்கொண்டார். இங்கே அவர் இல்லாதவேளையில் அவருடைய ஊழியத்தைப் பார்த்துவந்த சீஷர்கள் தங்களால் கூடிய அளவில் அவருக்கு வெட்கத்தையும் நிந்தையையும் சம்பாதித்து வைத்தார்கள். போர்ச்சேவகருடைய புத்தியீனத்தால் அபஜெயமுண்டாவதைக் கவனிக்கிற சேனாபதி சடுதியாய்ப் போர்க்களத்துக்கு வந்து, அங்

தச் சமயத்திற்குச் செய்யவேண்டியது இன்னதென்று ஒரு நிமிஷத்தில் கண்டறிந்து, தன்னுடைய முகப்பார்வையினாலேயே காரியங்களைச் சரிப்படுத்தி, வெற்றியுண்டாக்குகிறதுபோல, நம்முடைய இரட்சகரும் இந்தச் சமயத்தில் செய்தார். வெற்றியடைந்தோமென்று எண்ணியிருந்த சத்துருக்களுக்கு எதிராய் வந்து, தம்முடைய சீஷர்களை ஆதரிக்க மனதுள்ளவர் என்று காட்டி, நீங்கள் இவர்களோடே என்னத்தைக்குறித்து தர்க்கம்பண்ணுகிறீர்கள் என்று கேட்டார். இனி அவர்கள் தர்க்கம்பண்ணுவது சீஷரோடல்ல, அவரோடேதான். ஊழியக்காரரோடு தர்க்கம்பண்ண ஆயத்தமாய் வந்தவர்கள் எஜமானோடு தர்க்கிக்க மனமற்றவர்களாய்க் கலங்கிநிற்கிறார்கள். ஜனக்கூட்டத்தில் ஒருவன் பிசாசு பிடித்திருந்து துரத்தப் பிரயாசப்பட்டும் கூடாமல்போன அந்த ஏழைப்பையனுடைய தகப்பன் முதலாவது பேசுகிறான். முழங்காற்படியிட்டு ஆண்டவரே! என் மகனுக்கு இரங்கும் என்று கெஞ்சுகிறான். மகனுடைய பரிதபிக்கப்படத்தக்க நிலைமையைச் சொல்லுகிறதோடுகூட அவருடைய சீஷர்கள் தனக்கு உதவிசெய்ய ஏலாதவர்களாய்ப் போனதையும் தெரிவிக்கிறான். மாற்கு இந்தச் சங்கதியை வெகு செவ்வையாய் எழுதியிருக்கிறான். அவன் எழுதியிருக்கிறதை மற்றச் சுவிசேஷகர் எழுதியிருக்கிறதோடு ஒத்துப்பார்த்தால் அவன் சுதாவாய் ஒன்றும் எழுதாமல், முதலாம் மூன்றும் சுவிசேஷங்களில் உள்ளதைச் சுருக்கிச் சொல்லியிருக்கிறான் என்று சிலர் எண்ணுகிறது தப்பிதமென்று தெரியவரும். தகப்பன் வியாதியைக்குறித்துச் சொல்லுகிறதாக சுவிசேஷகர்கள் எழுதியிருக்கிறதைப் பார்த்தால், அது ஒரு விதமான காக்காய் வலிப்பென்று தெரியவரும். இது ஒரு வலிப்பென்றுமாத்திரம் நான் சொல்லுகிறதில்லை. இதுவே வியாதியின் துவக்கமாயிருக்கவேண்டும். இதின்மேல் சாத்தான் பல கோரணிகளைக் கூட்டியிருக்கிறான். வலிப்புச் சடுதியாய் உண்டாகி நெடுநேரம் இருந்தது. பிசாசு அவனைவிட்டு நீங்குவது அரிதாயிருந்தது. இது ஊமையான ஆவியென்று மாற்கு சொல்லி

யிருக்கிறது அவன் அலறுகிருனென்று லூக்கா சொல்லியிருக்கிறதற்கு விகற்பமல்ல. அவன் வாயிலிருந்து வந்த வார்த்தைகளில் யாதொரு பொருள் இல்லையென்பதே மாற்குவினுடைய கருத்து. இது இயல்பாய் உண்டான வியாதியுமல்ல; மாற். 8. 7, 32ல் சொல்லியிருக்கிற மனுஷனைப்போல நாவின் கட்டுகள் அவிழ்க்கப்படாததினால் உண்டான வியாதியுமல்ல; அல்லது பேசுவதற்கு வேண்டிய அங்கம் குறைந்துபோனதினால் உண்டானதுமல்ல. அல்லது வழக்கமாய் அவனுக்கு உண்டாகிற வியாதியுமல்ல. பிசாசு பிடித்ததினாலேயே இந்தக் கோரணிகளெல்லாம் உண்டாயிற்று. பிசாசு அவனைப் பலமாய்ப் பிடித்தபோது வலிப்புண்டாகி அவனை அலக்கழித்து நுரைதள்ளவும் பற்கடிக்கவும் செய்தது. தன்னுடைய உயிர்போனதுபோல சோர்ந்து கிடக்கும்படி செய்தது. இந்தச் சந்திரரோகத்தைக்குறித்து மத். 4. 24ல் பிசாசு பிடித்தவர்கள் வேறே, சந்திரரோகிகள் வேறேயென்று கண்டிருக்கிறது. இரண்டையும் ஒன்றுபோல எண்ணினபடியால், அடிக்கடி வித்தியாசப்படுகிறதில்லை. சந்திரரோகம் என்னும் வார்த்தை சந்திரனுடைய பிரகாசம் ஒருவிதப் பைத்தியத்திற்குக் காரணமாயிருக்கிறதென்று காட்டுகிறது (சங். 121. 6.) இதற்கு இசைவாயிருக்கிறதாகக் காணலாம். இந்தக் கோரணிகள் எந்தநேரத்திலும் சடுதியாய்த் தோன்றினபடியால், அடிக்கடி ஜலத்திலும் அவனை விழப்பண்ணிற்று. மாற்கு சுவிசேஷத்தில் பிசாசுதான் அவனைத் தீயிலும் தண்ணீரிலும் தள்ளிற்றென்று சொல்லியிருக்கிறது. அவனுடைய பரிதாபமான நிலைமையினால் இவைகளெல்லாம் இயல்பாயுண்டாயிற்றென்று சொல்லலாம். அந்த ஒன்பது சீஷர் தனக்கு உதவி செய்ய ஏலாமற்போனதைச் சொல்லி, தகப்பன் தன் மகனைக்குறித்த துக்கமான சங்கதியை முடிக்கிருன். "அதைத் துரத்திவிடும்படி உம்முடைய சீஷரிடத்தில் கேட்டேன்; அவர்களால் கூடாமற்போயிற்று" என்ருன். இரட்சகர்இதைக் கேட்டு கோபமும் துக்கமுமுள்ளவராய் "விசுவாசமில்லாத சந்ததியே, எதுவரைக்கும் நான் உங்களோடு இருப்பேன்? எதுவரைக்கும் உங்க

ளிடத்தில் பொறுமையாயிருப்பேன்" என்றார். இந்த வார்த்தைகளை இரண்டுவகையாய் அர்த்தப்படுத்தலாம். ஓரிஜனும் இன்னும் சிலரும் சீஷரைப்பார்த்தே இப்படிச் சொன்னார் என்கிறார்கள். அவர்களுடைய பெலவீன விசுவாசத்தைக் கண்டு, அவர்களை விட்டுப்போன கொஞ்சநேரத்துக்குள்ளாக அவர்களுடைய பெலன் குறைந்து அந்தகாரத்தின் ராஜ்யத்தை எதிர்க்கத் திராணியற்றுப்போனதைப் பார்த்து துக்கப்பட்டு, இரக்ஷகர் இப்படிப் பேசினார் என்கிறார்கள். மத். 17. 20ல் இரக்ஷகர் அவர்களைப் பார்த்துச் சொன்னது இந்தக் கருத்துக்கு இசைவாயிருக்கிறது. கிறிசொஸ்தம் முதலியவர்கள் சீஷர்களைப் பார்த்தல்ல, சூழ நின்ற ஜனங்களைப் பார்த்தே இப்படிக் கடிந்துகொண்டார் என்கிறார்கள். "சந்ததியே" என்று இரக்ஷகர் சொன்னது இந்தக் கருத்துக்கு இசைவாயிருக்கிறது. அவரை விசுவாசியாத யூதஜன முழுமைக்கும் அங்கே நின்றவர்கள் மாதிரிபோல் இருந்தார்கள். அந்தத் தகப்பனும் விசுவாசியாத அந்தச் சந்ததியாருடைய குணம் இப்படிப்பட்டதென்று நன்றாய்க் காண்பித்தார் (மாற். 10. 22.); ஆதலால் அவனும் கடிந்துகொள்ளப்பட்டிருக்கவேண்டும். அவனைப் பார்த்துத் தான் இரட்சகர் சொன்னதாக மாற்கு சுவிசேஷத்தில் கண்டிருந்தாலும், அவனுக்குமாத்திரமல்ல, இன்னும் அநேகருக்கும் இது சொல்லப்பட்டது. மேற்சொல்லிய இரண்டு கருத்துகளையும் சேர்த்துச்சொல்வதே சரியான வியாக்கியானம். சீஷர்களைமாத்திரம் அல்லது சீஷர்களையே முக்கியமாய்க் கடிந்துகொண்டாரென்று சொல்லாமல், அந்தத் தகப்பனையும் ஜனங்களையுமே முக்கியமாய்க் கடிந்துகொண்டாரென்று சொல்லவேண்டும். சீஷர்களை விட்டுவிடவில்லை. அவர்களுடைய அவிசுவாசத்தினால் தாங்களும் அந்த ஜனங்களைப்போல கெட்டவர்களென்று காட்டினார்கள். ஆதலால் அவர்களோடு இவர்களும் கண்டிக்கப்பட்டார்கள். எதுவரைக்கும் உங்களோடிருப்பேன் என்று இரக்ஷகர் சொன்னபோது, மனுஷதேகத்தை விட்டுப் பிரியவேண்டுமென்று விரும்பினவரைப்போல பேசாமல், கற்றுக்கொள்ள மந்த இருதயமுடைய சீஷர்களைக் கடிந்து

கொள்ளுகிற பாவனையாய்ப் பேசுகிறார். "இவ்வளவுகாலம் நான் உங்களோடிருந்தும் இவ்வளவுதானு என்னிடத்தில் கற்றுக்கொண்டீர்கள்" என்று சொன்னபோதிலும், அவர்கள் படிக்கவேண்டியதைப் படிக்கும்வரையில் அவர்களோடு இருக்க வேண்டுமென்றே எண்ணினார். அவர் பிலிப்புவுக்குச் சொன்ன வார்த்தைகள் இதற்கு ஒத்திருக்கிறது. "பிலிப்புவே, இவ்வளவு காலம் நான் உங்களுடனேகூட இருந்தும் நீ என்னை அறியவில்லையா?" (யோவா. 14. 9.)

பூமியில் செய்யக்கூடிய உதவி யாவையும் தாமே செய்ய வேண்டியவரானபடியால் அவனை என்னிடத்தில் கொண்டு வாருங்கள் என்றார். கேயாசியின் கையிலிருந்த கோல் செத்துப் போன பிள்ளையை எழுப்பக்கூடாதிருந்தபோது, அந்தக் காரியத்தை முடிக்கிறதற்கு தீர்க்கதரிசியே வந்து அதைச் செய்ய வேண்டியிருந்ததுபோல இந்தச் சமயத்திலும் இருந்தது (2 இரா. 4. 31.). ஆகிலும் அவனை இயேசுவினிடத்தில் கொண்டுவந்த போதும் பிசாசு மறுபடியும் அவனை அலக்கழித்ததாகப் பார்க்கிறோம். அவன் தரையிலே விழுந்து நுரைதள்ளப் புரண்டான். பெரியவர்களிடத்திலாவது, சிறியவர்களிடத்திலாவது கிறிஸ்துவின் ராஜ்யம் சமீபமாய் வரும்போது, பிசாசின் ராஜ்யம் அதிக மூர்க்கத்தைக் காண்பிக்கும். தன் காலம் சுருக்கமென்று அறிகிற சாத்தான் அதிகமாய்க் கோபங்கொள்வான். வேறோர் சமயத்தில் இப்படிப்பட்ட ஒரு கெட்ட பிசாசைத் துரத்தினபோது பிசாசு பிடித்தவனோடே சம்பாஷித்து அவன் ஆத்துமாவில் நம்பிக்கையையும் அமரிக்கையையும் உண்டாக்கினதுபோல, அந்தப் பிள்ளையாண்டானோடே சம்பாஷிக்க இடமில்லாதபடியால் அவனுடைய தகப்பனோடே சம்பாஷிக்கத் தொடங்கினார். இது இவனுக்குண்டாகி எவ்வளவு காலமாயிற்றென்று கேட்டார். சிறுவயது முதற்கொண்டே உண்டாயிருக்கின்றது என்றான். இப்படிச் சொன்னபிறகு இந்தக் கோரணிகள் உண்டாவதினால், தன் பிள்ளைக்கு நேரிடுகிற மோசங்களை மறுபடியும் சொல்லி, சொஸ்தமாக்கப்படுமுன் ஏதாவது ஒரு அபாயம் நேரிடுமோவென்று பயந்து, சீஷர்கள்

சொஸ்தமாக்கத் திறமையில்லாததையும் நினைத்து, நீர் இவர்களைவிட அதிகமாய் ஏதாகிலும் செய்யக்கூடுமானால் எங்கள் மேல் மனதிரங்கி எங்களுக்கு உதவிசெய்யவேண்டும் என்றான். எங்களை என்று அவன் சொல்வதினால், தன் உயிர் பிள்ளையின் உயிரோடு எவ்வளவாய் ஒன்றுபட்டிருந்ததென்று காட்டுகிறான். அந்த கானானிய ஸ்திரீ தன் மகளுக்காகக் கெஞ்சினபோது என்மேல் இரங்கும் என்று கேட்டதுபோல (மத். 15. 22.), அப்படியிருந்தும் "செய்யக்கூடுமானால்" என்று சொன்னதினால், கிறிஸ்துவின் வல்லமையில் அவன் வைத்த விசுவாசம் அவ்வளவு உறுதியானதல்லவென்றும், அவனுடைய அவிசுவாசத்தினாலும் ஐயத்தினாலும் இரட்சகர் சொஸ்தமாக்குகிறதில் தாமதமாயிருந்தாரென்றும் காட்டுகிறது. இரட்சகர் சொன்ன மாறுத்தரவு மூலபாஷையில் தெளிவாய் விளங்காவிட்டாலும், "என்னால் செய்யக்கூடியதும் செய்யக்கூடாததும் என்னால் அல்ல, உன்னாலே தீர்மானிக்கப்படவேண்டும்" என்கிறதுபோல் சொல்லுகிறார். "இந்த உன் பிள்ளை சுகப்படவேண்டுமானால் ஒரு காரியம் செய்யவேண்டும். அது மற்றவர்களால் அல்ல, உன்னாலேயே ஆகும். இந்தப் பொல்லாத ஆவியின் வல்லமையல்ல, உன்னிடத்திலிருக்கும் விசுவாசக்குறைச்சலே என்னைத் தடைசெய்கிறது. இவன் சொஸ்தப்படுகிறதை வருத்தமாக்குகிறது நீதான். நீர் ஏதாகிலும் செய்யக்கூடுமானால் என்கிறாய். நீ விசுவாசிக்கக்கூடுமானால் என்று நான் சொல்லுகிறேன். எல்லாம் இதிலேதான் இருக்கிறது" என்று சொல்லி, சற்றே பொறுத்து, விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும் என்று முடித்தார். மற்றச் சமயங்களில் காணப்பட்டதுபோல இந்தச் சமயத்திலும் விசுவாசமே சொஸ்தமாக்குகிறதற்குக் கருவியாயிருந்தது. மற்றச் சமயங்களில் சொஸ்தமாக்கப்பட்டவனுடைய விசுவாசமே வேண்டியதாயிருந்தது. இந்தச் சமயத்தில் அது கூடாதிருந்தபடியால், தகப்பனுடைய விசுவாசத்தை அதற்குப் பதிலாக அங்கிகரித்துக்கொள்ளுகிறார். கானானிய ஸ்திரீயினுடைய விசுவாசம் அவளுடைய மகளுக்கு உதவியாயிருந்ததுபோல (மத். 15. 22.), வருத்தப்படுகிற அந்த

ஆத்துமாவில் விசுவாசம் பிறக்கும்படிக்கு இரட்சகர் ஒருவகையாய் உதவிசெய்தார். இப்பொழுது எவ்வளவோ வேதனையோடு விசுவாசம் தோன்றினபடியால், தகப்பன் "விசுவாசிக்கிறேன் ஆண்டவரே!" என்கிருன். ஆகிலும் அந்த விசுவாசத்தின் பொறி தன் ஆத்துமாவிலுள்ள அவிசுவாசத்தின் ஆழங்களை வெளிப்படுத்தினபடியால், "என் அவிசுவாசம் நீங்க உதவி செய்யும்" என்று கூட்டிச் சொன்னுன். எப்பொழுதும் இப்படித்தான் இருக்கிறது.

கிருபையால் உண்டாகும் வெளிச்சத்தினுலேமாத்திரம் அதற்கு எதிரிடையான தீமை எவ்வளவு பலமாய் விஸ்தாரமாய் ஆத்துமாவில் குடிகொண்டிருக்கிறதென்று அறிந்துகொள்ளலாம். அதுவரையில் தன்னுடைய குறைவை அறிந்துகொள்வதற்கேற்ற அளவு ஆத்துமாவுக்குக் கிடைக்கிறதில்லை. விசுவாசிக்கிறவனே தன் இருதயத்தின் அவிசுவாசத்தை நிதானிக்கிருன்.

சொஸ்தமாக்குதற்கு வேண்டிய இந்தக் காரியத்தை அவர் நிறைவேற்றினபிறகு அவன் விசுவாசத்தின் பலவீன ஆரம்பத்தை அவர் கண்டு, அதற்குப் பலனுக சுகத்தைக் கொடுக்கிருர். அந்த அசுத்தஆவியைப் பார்த்து, நான் உனக்குக் கட்டளையிடுகிறேன் என்று சொன்னதை நாம் கவனிக்கவேண்டும். "நான் யார் தெரியுமா? நீ கீழ்ப்படியாமல் இருக்கத்தக்கவன் என்று என்னை எண்ணுதே. என்னேடே போராடலாம் என்று நினையாதே. நான் ஒளியின் ராஜ்யத்திற்குப் பிரபு. உனக்குக் கட்டளையிடுகிறேன். இவனைவிட்டுப் புறப்பட்டுப் போ. அது மாத்திரமல்ல, இனி இவனுக்குள் போகாதே" என்ருர். அவன் மறுபடியும் பிரவேசியாதபடிக்குத் தடையும் போட்டார். அவன் அநேகநாள் அங்கே தங்கினவனுனபடியால், மறுபடியும் வந்து தன் ராஜ்யத்தை அங்கே ஸ்தாபியாதபடிக்கு என்றும் நிற்கத்தக்க சுகத்தைக் கொடுத்தார் (மத். 12. 45.). அந்தப் பொல்லாத ஆவிக்குப் போகச் சுத்தமாய் மனமில்லாதபடியால், தான் விட்டுவிடவேண்டியதை அழிக்கத் தேடுகிறது. வாடகைக்கிருந்த வீட்டைவிட்டுப் போகிற ஒரு மனு

ஷன் அதை விட்டுப் போகவேண்டியதாய் வரும்போது கவலையீனமாய் அதைப் பங்கப்படுத்துவதுபோல, இந்தச் சமயத்தில் பிசாசு அவனைக் கடைசியாய் தன்னால் ஆனமட்டும் அலைக்கழித்து அவனுடைய சத்துவத்தையெல்லாம் குறைத்துவிட்டபடியால், அவன் செத்துப்போனானென்று அநேகர் சொல்லத்தக்கதாக செத்தவன்போலக் கிடந்தான். இயேசு அவன் கையைப் பிடித்தார். ஜீவனின் அதிபதி அவனைத் தொட்டதினால் உயிர் அவனுக்குள் புதிதாய்ப் பாய்ந்தது. இவ்விதமாகவே இந்த இரட்சகர்மூலமாய் ஜீவன் அநேகருக்கு உண்டாகிறது. (தானி. 10. 8, 9. வெளி. 1. 17. மத். 17. 6—8.)

இதின் பிறகு சீஷர்கள் அவரிடத்தில் வந்து இரகசியமாய் தாங்கள் அபஜெயப்பட்டதற்குக் காரணம் என்னவென்று கேட்டார்கள். இரட்சகர் கொடுத்த உத்தரவின்படி நடந்தார்கள் (மத். 10. 8). இதற்குமுன் இப்படிப் பிசாசுகளைத் துரத்தவும் செய்தார்கள் (லூக். 10. 17.). கர்த்தர் அவர்களுக்கு மாறுத்தரமாக அவர்களுடைய அவிசுவாசமே காரணம் என்றார். எல்லாம் விசுவாசத்தினால்தான் முடியவேண்டும். அது குறைந்ததினாலேயே இவர்கள் ஜெயமும் குறைந்தது. விசுவாசத்தை எழுப்பிவிட்டு, அதை அதிகரித்துச் செய்யவேண்டிய முயற்சிகளில் தளர்ந்துபோனார்கள். அவர்களுடைய பெலன் தங்கின கூந்தல்கள் அறுபட்டுப்போயும் மற்றச் சமயங்களில் சத்துருவுக்கு விரோதமாய்ப் போனதுபோல யுத்தத்திற்குப் போனார்கள். அதிக வலுவான சத்துருக்களைக் கண்டபோதோ தோர்வை அடைவோமென்று அவர்களுக்குத் தெரியும். அப்படிப்பட்டவர்களோடேதான் இந்தச் சமயத்தில் யுத்தஞ்செய்தார்கள். இவ்வகைப் பிசாசு என்று இரட்சகர் சொன்னபடியால் பொல்லாத ஆவிகளில் பலவகைகளிருந்ததாகப் பார்க்கிறோம். மோட்சத்தில் பரமசேனையில் பல வகுப்புகள் இருக்கிறதுபோல, நரகத்தில் அதற்கு எதிரிடையான கூட்டத்திலும் அதற்கேற்ற பல வகுப்புகளுண்டு. பொல்லாதஆவி புறப்பட்டுப்போய் தன்னிலும் அதிகக் கெட்டதான ஏழு ஆவிகளைக் கொண்டுவந்ததாகச் சொல்லியிருக்கிறதிலும் இது தெளிவாகிறது. மத்.

12. 45. எபே. 6. 12ல் ஒன்றிலொன்று உயர்ந்ததும் கெட்டதுமான இப்படிப்பட்ட பல வகுப்புகளைக்குறித்துச் சொல்லியிருக்கிறதைப் பார்க்கலாம். இவ்வகைப் பிசாசு ஜெபத்தினாலும் உபவாசத்தினாலுமேயன்றி, மற்றெவ்விதத்தினாலும் புறப்பட்டுப் போகாதென்கிறார். இதைத் துரத்தத்தக்க விசுவாசம் ஜெபத்தோடு முயற்சிக்கப்பட்டதாய், உலகசிந்தைக்கிசைந்து தளர்ச்சியடையாததாய், கண்டிப்பினாலும் தன்னை வெறுத்தலினாலும் பெலனடைந்த விசுவாசமாய் இருக்கவேண்டும்.

எல்லாப் பெலவீனத்துக்கும் காரணம் அவிசுவாசமாயிருக்கிறதுபோல, எல்லாப் பெலனுக்கும் காரணம் விசுவாசந்தான். ஆகையினால்தான் இரட்சகர் ஒரு கடுகுவிதை அவ்வளவு விசுவாசம் உங்களுக்கு இருந்தால், நீங்கள் இந்த மலையைப்பார்த்து இவ்விடம்விட்டு அப்புறம்போ என்று சொல்ல அது அப்புறம் போம். உங்களால் கூடாதகாரியம் ஒன்றும் இராதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொன்னார். இந்த உவமானத்தை வேறுவகையாய் லூக். 17. 6ல் காணலாம். 1 கொரி. 13. 2லும், பவுல் இதை நினைத்தே பேசுகிறாரென்று சொல்லலாம். கடுகுவிதை அவ்வளவு விசுவாசம் என்று இரட்சகர் சொன்னதைச் சிலர் அந்த விதையைப்போல காரமுள்ள உயிருள்ள விசுவாசமென்று அர்த்தம்பண்ணுகிறார்கள். இதில் உபமானிக்கப்பட்டது இதல்ல, கடுகுவிதையைப் போல அத்தனை சிறிதான விசுவாசம் மலையைப்போன்ற அத்தனை பெரிய காரியத்தையும் அசைக்கும் என்பதே இதின் பொருள். இந்தப் பெரிய பொருளை அந்தச் சின்னப் பொருள் வெல்லும். ஆத்துமாவையடுத்த எந்தச் சின்ன சத்தும் உண்மையாகவே பலமுள்ளதாயிருக்குமானால், இவ்வுலகத்திற்குரிய எந்தப் பலத்த சத்துவத்தையும் அது கவிழ்த்துப்போடத்தக்க திறமையுள்ளதாயிருக்கும்.



# 28. மீன்வாயிலிருந்து வெள்ளிப்பணம் எடுத்தது.

*மத்தேயு, 17. 24—27.*

*"அவர்கள் கப்பர்நகூமில் வந்தபோது, வரிப்பணம் வாங்குகிறவர்கள் பேதுருவினிடத்தில் வந்து: உங்கள் போதகர் வரிப்பணம் செலுத்துகிறதில்லையா என்று கேட்டார்கள்; செலுத்துகிறார் என்றான்.*

*அவன் வீட்டிற்குள் வந்தபோது, அவன் பேசுகிறதற்கு முன்னமே இயேசு அவனை நோக்கி சீமோனே, உனக்கு எப்படித் தோன்றுகிறது? பூமியின் ராஜாக்கள் தீர்வையையும் வரியையும் தங்கள் பிள்ளைகளிடத்திலோ, அந்நியரிடத்திலோ, யாரிடத்தில் வாங்குகிறார்கள் என்று கேட்டார். அதற்குப் பேதுரு அந்நியரிடத்தில் வாங்குகிறார்கள் என்றான். இயேசு அவனை நோக்கி: அப்படியானால் பிள்ளைகள் அதைச் செலுத்தவேண்டியதில்லையே. ஆகிலும் நாம் அவர்களுக்கு இடறலாயிராதபடிக்கு, நீ கடலுக்குப் போய், தூண்டில்போட்டு, முதலாவது அகப்படுகிற மீனைப் பிடித்து, அதின் வாயைத் திறந்துபார்; ஒரு வெள்ளிப்பணத்தைக் காண்பாய்; அதையெடுத்து எனக்காகவும் உனக்காகவும் அவர்களிடத்தில் கொடு என்றார்."*

இந்த அற்புதம் ஒரு சுவிசேஷத்தில் மாத்திரந்தான் இருக்கிறது. இதின் விபரங்களைப் பார்த்தால் தேவஆளுகையைக் குறித்துப் பேசுகிற மத்தேயு சுவிசேஷத்திற்கே இது மிகவும் ஏற்றதென்று அறிந்துகொள்ளலாம். இதின் கருத்தைச் சரியானபடி அறியாததினால், இதின் உள்ளான பொருள் இன்னதென்று அநேகருக்குத் தெளிவாய் விளங்குகிறதில்லை. மத். 22. 19ல் கண்டிருக்கிற நாணயத்தைப்போல இது ரோமைராயனுக்குச் செல்லவேண்டிய ராஜாங்கத்துக்குரிய வரியென்று அநேகர் தப்பாய் எண்ணுகிறார்கள். தீர்வை அல்லது வரி என்கிற வார்த்தை அப்படி எண்ணுகிறதற்கு இசைவாயிருந்தாலும் இது ராஜாங்கத்துக்கு அல்ல, தேவாலயத்துக்கும் தேவாலயத்திலுள்ள தேவனுக்குமுரிய வரியென்பதை நாம் மறக்கக்கூடாது. பூர்வீகத்திலும் இப்பொழுதும் கல்வியில் சிறந்த அநேக வியாக்கியானிகள் இதைப்பற்றிச் சரியான

வியார்த்தியை அறியாமல் இந்த தப்பான எண்ணத்துக்குச் சாய்ந்தார்கள். அவர்களுக்குள் அலெக்சந்திரியா பட்டணத் துக் கிளேமெந்து, ஓரிஜன், ஏரோம் என்பவர்களுடைய பேரும் வருகிறது. இவர்கள் எல்லாரும் இது ராஜாங்கத்துக்குரிய வரியென்றே சொன்னார்கள். மேற்சொல்லப்பட்ட கிளேமெந் தும், அகுஸ்தீனும் தங்கள் வியாக்கியானத்துக்கு இசைவாய் ரோ. 13. 1—7வரையுமுள்ளதை எடுத்துச் சொல்லுகிறதுமல் லாமல், "எந்த மனிதனும் மேலான அதிகாரமுள்ளவர்களுக் குக் கீழ்ப்படியக்கடவன். யாவருக்கும் செலுத்தவேண்டிய கடமைகளைச் செலுத்துங்கள். எவனுக்கு வரியைச் செலுத்த வேண்டியதோ அவனுக்கு வரியைச் செலுத்துங்கள்" என்ற வார்த்தைகளைக்கொண்டு, விசுவாசிகள் தேசஅதிகாரிகளுக்குக் கீழடங்கி இருக்கவேண்டுமென்று போதித்தார்கள். இக்காலத் திலும் சிலர் அப்படியே வியாக்கியானம்பண்ணுகிறதுண்டு. கல்வின் என்பவரோ, இது ஆதியில் தேவாலயத்துக்குரிய வரி தானென்றும், இதை ரோமர் தங்களுக்குச் செலுத்தவேண்டு மென்று யூதர்களைக் கட்டாயப்படுத்தினார்களென்றும் சொல் லுகிறார். இதுவும் உள்ளபடியல்ல; இதற்குப் பிற்காலத்தில் தான் அப்படி கோவிலுக்குரியதை ரோமர் எடுத்துக்கொண் டார்கள். நம்முடைய வியாக்கியானத்துக்கு பலத்த நியாயங் கள் உண்டு.

முதலாவது: இந்தப் பணம் ஒரு ஆத்துமாவை மீட்கிறதற்கு இருபதுவயதுக்கு மேற்பட்ட எந்த இஸ்ரவேலனும் தேவா லயத்துக்குக் கொடுக்கவேண்டிய தொகைக்குச் சரியாயிருந் தது. (யாத். 30. 11—14). இந்த வாக்கியத்தில் அரைச் சேக்கல் என்று கண்டிருக்கிறது. பாபிலோன் சிறையிருப் புக்குமுன்னே சேக்கல் என்பது ஒரு நாணயமாகவல்ல, இவ் வளவு நிறையென்று கண்டிருந்தது. மக்கபேயர்காலத்தில் நாணயங்களாகத் தங்கள் பணத்தை முத்திரையிடும்படியான சலாக்கியத்தை சீரியா ராஜாக்களிடத்திலிருந்து யூதர்கள் பெற் றுக்கொண்டபோது, சேக்கல், அரைச்சேக்கல், கால்சேக்கல் என்கிற நாணயத்தை வழங்கினார்கள். இது அபூர்வமாய்ப்

போனபோது கோவிலுக்குச் செலுத்தவேண்டிய வரி இரண்டு திராகுமா என்று நிர்ணயித்துக்கொண்டார்கள். இதை நிறுத்துப்பார்க்கும்போது அரைச்சேக்கலுக்குச் சற்றே அதிகப்படும். இரண்டு பேருக்காக இந்த அற்புதம் செய்தபடியால் அவர்கள் செலுத்தவேண்டிய தொகை நாலு திராகுமா, அல்லது ஒரு சேக்கல். இது மீன்வாயில் கண்டெடுத்த ஸ்றேற்றீர் என்னும் நாணயத்துக்குச் சரியாயிருந்தது. இந்தப் பேர்கொண்ட தங்கநாணயம் ஒன்று உண்டு. அது இருபது திராகுமாவுக்குச் சரி. சுவிசேஷத்தில் கண்டிருக்கப்பட்ட இந்த வெள்ளிநாணயமோ நாலு திராகுமாதான். அந்தத் தங்க நாணயம் எட்டுரூபாய்க்கும், இந்த வெள்ளிநாணயம் ஒன்றரையேயரைக்கால் ரூபாய்க்கும் சரியாயிருக்கும். பூர்வீகத்திலிருந்த சிலர் இது சீரியாதேசத்தில் கண்டெடுக்கிற ஒரு இரத்தினக்கல் என்று தப்பாய்ச் சொன்னார்கள்.

யூதர்கள் பழைய ஏற்பாட்டின் காலத்தில் வருஷாந்தரம் இந்தத் தீர்வையைச் செலுத்தாமல், ஜனங்களை எண்ணின சமயத்தில் கொடுத்துவந்தார்கள் என்று பார்க்கிறோம். இது ஏற்படுத்தப்பட்ட நோக்கம் எப்படியிருந்தாலும், பாபிலோன் சிறையிருப்புக்குப் பிறகு இது வருஷாந்தரக் காணிக்கையாய்ப் போயிற்று. அதற்கு முந்தியும், இதைக்குறித்து (2 இரா. 12. 4. 2 நாளா. 24. 5, 6, 9.) இந்த வாக்கியங்களில் எழுதியிருக்கிறதாகச் சொல்லுகிறார்கள். கர்த்தரின் தாசனாகிய மோசே வனாந்தரத்தில் இஸ்ரவேலருக்குக் கற்பித்த வரி என்று சொல்லியிருக்கிறபடியால், அது அப்படியிருக்கலாம். கொஞ்சக்காலத்திற்குப் பிறகு நெகேமியாவின் காலத்தில் அரைசேக்கலல்ல, சேக்கலில் மூன்றிலொரு பங்கைச் செலுத்திவந்தபடியால், இது அந்த வரிதானோவென்று சந்தேகிக்க இடமுண்டு. ஏனெனில் கர்த்தரால் ஏற்படுத்தப்பட்ட வரியை மாற்றத் துணியமாட்டார்கள். ஆகிலும் இது வருஷந்தோறும் தேவாலயத்துக்கென்று செலுத்தப்பட்டுவந்தபடியால், அதுவாய்த்தான் இருக்குமென்று எண்ண இடமுண்டு. தங்கள் வறுமையிலே அதைக் குறைக்கிறதற்குப் போந்த முகாந்தரம் இருந்ததென்று எண்ணி

யிருப்பார்கள். யோசேப்புஸ் என்பவனும், பீலோ என்பவனும் தங்கள் காலத்தில் வருஷாந்தரம் இது செலுத்தப்பட்டதென்று சொல்லுகிறார்கள். யூதமாதமாகிய ஆதார் அல்லது மார்ச்சுமாதம் 15உ முதற்கொண்டு 25உக்குள்ளாக இதைச் செலுத்தவேண்டியதாம். இது பஸ்காபண்டிகையை அடுத்திருக்கும். ஆகிலும் இதினின்று நம்முடைய இரக்ஷகருடைய ஊழியத்தைக் காலக்கிரமப்படுத்தக்கூடாது. அவர் கப்பர் நகூமிலிருந்தபடியால் இதை உடனே செலுத்தவில்லை. மேலும் இப்பொழுது கூடாரப்பண்டிகை சமீபமாய் இருந்தது.

பீலோ என்பவன் பலஸ்தீனுவிலுள்ளவர்கள் மாத்திரமல்ல, மற்ற இடங்களிலுள்ள யூதரும் முறுமுறுக்காமல் இதைச் சந்தோஷமாய்ச் செலுத்திவந்ததாகச் சொல்லுகிறார். ரோமை ராஜ்யத்திற்கு உட்படாத ஊர்களிலும் இந்தத் காணிக்கையைச் சேர்க்கிறதற்கு பரிசுத்தமான ஒரு பெட்டியிருந்ததாகவும், அப்படிச் சேர்க்கப்பட்ட பணத்தை அந்தந்த சமயங்களில் தகுந்த மனுஷர்வசம் எருசலேமுக்கு அனுப்பினதாகவும் சொல்லுகிறார்கள். பவுல் அப்போஸ்தலன்மூலமாய் அகாயாபட்டணத்தார் எருசலேமுக்கு அனுப்பின காணிக்கையை இது நமக்கு ஞாபகப்படுத்துகிறது. அந்தப் பட்டணமும் தேவாலயமும் அழிந்துபோனபிறகு வெஸ்பாசியன் என்னும் இராயன் அதை ரோமைராஜ்யத்தின் பொக்கிஷத்தில் சேர்த்துப்போட்டான். பொம்பே என்பவனுடைய காலத்திலும் இந்த தேவாலயக் காணிக்கை ரோமைராஜ்யத்தோடு சேர்ந்துபோயிற்று என்றும், ஆகலால் இது கோவில்காணிக்கையல்லவென்றும் சிலர் சொல்லுகிறபடியால், யோசேப்புஸ் இதைப்பற்றிச் சொல்லுகிறதை நாம் திட்டமாய் விசாரித்தறிய வேண்டும். பொம்பே என்பவனைக்குறித்து அவன் ரோமருக்கு யூதர்களை கப்பங்கட்டச்சொல்லியிருக்கிறானேயொழிய, இந்த வரியை அவர்களிடத்திலிருந்து பிடுங்கிக்கொண்டதாகச் சொல்லவேயில்லை. வெஸ்பாசியன் யூதர்கள் எருசலேமிலுள்ள தேவாலயத்துக்குக் கொடுத்துவந்த இரண்டு திராகுமாவை தன் ராஜாங்கத்துக்குக் கொடுக்கும்படி செய்ததாகச்

சொல்லுகிறான். பொம்பேக்கு வெகுகாலத்துக்குப்பிறகும், இதை தேவாலயத்துக்கு யூதர்கள் செலுத்திவந்தார்களென்று சொல்லப் போந்த நியாயம் உண்டு. ஏனென்றால் தீத்துஸ் என்பவன் யூதர்கள் கலகம்செய்ய யாதொரு முகாந்தரமும் இல்லையென்று காட்டும்படிக்கு அவர்கள் தங்கள் சொந்த வரிகளைச் சேர்க்க இடம்பெற்றிருந்தார்கள் என்கிறார்.

மேலும் இந்த வரியைக் கேட்கவந்தவர்கள் யார் என்று பாருங்கள். ஆயக்காரர் அல்ல; சாதாரண வரியாயிருக்குமானால், அதை வாங்குகிறவர்களுக்கு ஆயக்காரர் என்கிற பேர் வருமே! கேட்கிறவிதத்தையும் நாம் கவனிக்கவேண்டும். வரியைக் கொடாமல் மோசம்செய்கிற ரோமரைச் சேர்ந்த தண்டற்காரன் கோபமாய்க் கேட்கிறவிதமாயல்ல; மனமிருந்தால் கொடுக்கட்டும், கட்டாயமாய்க் கேட்கக்கூடாதென்கிறவிதமாய்க் கேட்கிறான்.

இது இராயனுக்குச் செலுத்தவேண்டிய இராயனுடைய சொத்தல்ல, தேவனுக்குச் செலுத்தவேண்டிய தேவசொத்து என்று ரூபிக்கிறதற்கு மிகவும் பலத்த நியாயம் இன்னும் பின்னால் இருக்கிறது. இது தேவனுக்குச் செல்லவேண்டிய வரியாயிராவிட்டால், பிள்ளைகள் அதைச் செலுத்தவேண்டியதில்லையே என்று இரட்சகர் சொன்னவார்த்தையில் யாதொரு சலாக்கியமில்லை. இதினால்தான் தாம் அந்த வரி செலுத்தவேண்டியதில்லையென்று காட்டுகிறார். தன் சொந்த வீட்டிலுள்ள மகனைப் போல பிதாவுக்குச் செலுத்தவேண்டிய வரிக்கு தான் நீங்கலானவன் என்கிறார். இந்த நியாயத்தைக்கொண்டு அதாவது, வரிகேட்கிறவருக்கு தான் மகன் என்கிறதையிட்டு இராயனுக்குச் செலுத்தவேண்டிய வரிக்கு தாம் நீங்கலானவன் என்று சொல்லக்கூடாதே. ஏனெனில் அவர் இராயனுடைய மகன் அல்ல. வேறு நியாயங்களைக்கொண்டு அப்படிச் சொல்லலாம். பூமியிலிருக்குமளவும் மனிதன் ஏற்படுத்திய சகல ஏற்பாட்டுக்கும் தம்மைக் கீழ்ப்படுத்த மனமுள்ளவராயிருந்தபடியால், அவர் அப்படிச் செய்யவேமாட்டார். தேவனுக்குச் செலுத்தவேண்டிய வரியாயிருக்குமானால்தான், இங்கே அவர் சொல்

னுகிற நியாயம் உதவும். இதை வேறுவிதமாய் வியாக்கியானஞ் செய்கிறவர்கள் தாவீது ராஜாவினுடைய வம்சத்தில் பிறந்ததையிட்டு, இந்தச் சலாக்கியம் தனக்கு உண்டென்று அவர் சொன்னதாகச் சொல்லுகிறார்கள். இதுவும் உதவாது; அவர் ஒரு ராஜனுடைய குமாரனாயிருப்பதினால் அந்த ராஜனுக்கு விரோதமான வேறொரு ராஜாங்கத்தைச் சேர்ந்த ராஜனுடைய வரியைச் செலுத்தமாட்டேன் என்று சொல்லுகிறது சரியான நியாயமல்ல. வேதவசனத்திலுள்ள நியாயமும் இதல்ல. "பூமியின் ராஜாக்கள் தீர்வையையும் வரியையும் தங்கள் பிள்ளைகளிடத்திலோ, அந்நியரிடத்திலோ யாரிடத்தில் வாங்குகிறார்கள்" என்று கேட்க, பேதுரு அந்நியரிடத்தில் வாங்குகிறார்கள் என்றான். இயேசுவானவர் அவனுக்குச் சொன்னது, அப்படியானால் பிள்ளைகள் அதைச் செலுத்த வேண்டியதில்லையே என்றார்.

நம்முடைய இரட்சகரும், பேதுரு அப்போஸ்தலனும், மற்ற சீஷரோடு எவ்விடத்துக்கோ போயிருந்து, இப்போது அவருடைய ஊராகிய கப்பர்நகூமுக்கு வருகிறார்கள். இரட்சகரைப் பார்த்து வரிவாங்குகிறவர்கள் ஒன்றும் கேட்கவில்லை. அவரைப்பார்த்துக் கேட்கத்தக்க தைரியம் அவர்களுக்கு இருந்ததில்லை. அவருக்குச் சற்றுப் பிறகாலேபோன பேதுருவைப் பார்த்து உங்கள் போதகர் வரிப்பணம் செலுத்துகிறதில்லையா என்று கேட்டார்கள். பயமுறுத்தும் விதமாய் இந்தக் கேள்வி கேட்டதாக கிறிசொஸ்தம் சொல்லுகிறார். "உங்கள் போதகர் மாத்திரம் வரிகொடுக்கவேண்டியதில்லையோ? தான்மாத்திரம் அதற்கு நீங்கினவரென்று எண்ணுகிறாராக்கும்? இதிலேயா தம்முடைய சுயாதீனத்தைப் பாராட்டுகிறார்" என்று சொன்னது போல எண்ணுகிறார். தியோபிலாக்ற்று இதற்கு எதிரிடையாய், அவர் செய்த அதிசயமான கிரியையைக் கண்டும் கேட்டவர்களுமானபடியால், அவரைக்குறித்து திட்டமாய் நிதானிக்கக் கூடாமல், அவரிடத்தில் காணிக்கையைக் கேட்கலாமோ கேட்கக்கூடாதோ என்று சந்தேகித்து, பேதுருவினிடத்தில் இப்படிக் கேட்டார்களென்று சொல்லுகிறார். கேட்ட விதமும்

ஜாடையும் இன்னதென்றுநமக்குத் தெரியாததால், இதைப்பற்றி நிச்சயமாய்ச் சொல்ல ஏதுவில்லை. பேதுரு செலுத்துகிறு ரென்று மறுஉத்தரவு சொன்னுன். தன் எஜமானுடைய கண் யத்தைக்குறித்து கவலையுடையவனுய் கர்த்தர் ஏற்படுத்தினவை களில் பக்தியுள்ளவரானதால் கருராய்ச் செலுத்திப்போடுவா ரென்கிற தைரியத்தோடு அப்படிச் சொன்னுன். ஆகிலும் இதில் அவன் சற்றே படபடப்பைக் காண்பித்தான். தன்னு டைய எஜமானுடைய மேலான மகிமையை அறிந்துகொள்வ தில் குறைவுள்ளவனுய் இருந்தான். சற்றுமுன்னே நீர் தேவ னுடைய குமாரனுகிய கிறிஸ்து என்று அறிக்கையிட்டபோது, இப்படிப்பட்ட எண்ணமுடையவனுயிருந்ததில்லை. இந்தச் சமயத்தில் தன் எஜமானுடைய தன்மையையும் சலாக்கியத்தை யும் மறந்துவிட்டான். அவர் வேருெருவனுடைய வீட்டில் வேலைக்காரனுகவல்ல, தம்முடைய சொந்த வீட்டில் குமாரனு யும் திவ்யஆளுகையில் ஒரு கீழ் உத்தியோகஸ்தனுயல்ல, தலை மையானவராயும் இருந்தபடியால், மற்றவர்கள் அவருக்கு காணிக்கைகளைச் செலுத்தவேண்டுமேயொழிய, அவர் காணிக் கை செலுத்தவேண்டியவரல்ல என்பதை அவன் முற்றிலும் மறந்துவிட்டான். அவர் தேவாலயத்திலும் பெரியவர். ஞானக் கருத்தின்படி அவரே மெய்யான தேவாலயம். ஷெக்கைனு என்னும் திவ்ய மகிமை அவரிடத்திலேயே வாசம்பண்ணிற்று. இப்படிப்பட்டவர் கையினுல் செய்யப்பட்டதும், தன் மேன் மையை வரவர இழந்துபோகிறதுமான ஆலயத்திற்கு வரி கொடுக்கிறது ஏற்றதல்ல. மனுஷனல்ல, தேவனே ஏற்படுத்திய மெய்யான கூடாரம் அவருடைய மாம்சந்தானே.

பேதுருவுக்கும் மற்றச் சீஷர்களுக்கும் இருந்த அறிவீனத்தை நீக்கி, தம்முடைய தன்மையைச் சரியானபடி காண்பிக்கும் படிக்குப் பின்வரும் கேள்வியைக் கேட்கிறுர். இந்த நோக்கத் தோடேதான் பேதுரு படபடப்பாயும் புத்தியீனமாயும் சொன்ன வாக்கின்படி, தான் அந்த வரியைச் செலுத்தவேண் டியிருந்தபோதும், ஒரு அற்புதத்தின்மூலமாய் அப்படிச் செய் கிறுர். பெரிதும், சிறிதும், சகலமும், சமுத்திரத்தில் நடமாடும்

மச்சங்களுங்கூட தமக்கு ஊழியஞ்செய்யுமென்றும், சுபாவ முறைக்குத் தாம் ஆண்டவரென்றும், தம்முடைய கையில் ஒன்றும் இராவிட்டாலும் பிதாவின் வல்லமை தமக்கு நிறைவாயிருந்தபடியால் சகலமும் தமக்குச் சொந்தமென்றும் இந்த அற்புதத்தினால் நன்றாய் ரூபிக்கிறார். இந்தச் சமயத்தில் காணப்பட்டதுபோல அடிக்கடி அவருடைய வறுமையிலும் தாழ்மையிலும் அவருடைய மகிமை பிரகாசித்தது. கொடுத்த விதத்தில் அவருடைய சரியான மேன்மை இப்படிப்பட்டதென்று காண்பித்தார். இப்படிக் காண்பியாவிட்டால், சிலர் அவருடைய தன்மையைச் சரியானபடி அறியாமல் மோசம்போவதற்கு ஏதுவாயிருக்கும். இந்த அற்புதம் ஒரு விசேஷித்த காரியத்திற்கு மிகவும் உதவியாயிருந்தது. வெளிக்கு அது மிகவும் அற்பமாய்த் தோன்றினாலும், உட்கருத்தின்படி இது மிகவும் பிரயோஜனமானது. பணத்தை வேறுவிதமாய் இலேசாய்ச் சம்பாதிக்கலாம். பொய்யான அற்புதங்கள்போல் இதை அவர் விளையாட்டுக்கும், வீண் பெருமையைக் காட்டுகிறதற்கும் செய்யவில்லை. இதிலே தம்முடைய மேலான தன்மையை ரூபிக்கிறார். ஆதிதுவக்கி இரட்சகரிடத்தில் இந்த நோக்கமே இருந்தது. தான் செய்தது இன்னதென்று பேதுரு சொல்லுமட்டும் அவர் காத்திருக்கவில்லை. அவர் வீட்டுக்கு வந்தபோது அவன் பேசுவதற்கு முன்னமே அவனிடத்தில் கேட்ட கேள்வியினால் இருதயத்தின் தோற்றுதல்களையெல்லாம் தாம் பகுத்தறிகிறவரென்றும், தாம் அங்கே இராவிட்டாலும் நடந்த சமஸ்தமும் தமக்குத் தெரியுமென்றும் காண்பித்தார். "சீமோனே! உனக்கு எப்படித் தோன்றுகின்றது? என்ன முகாந்தரத்தையிட்டு நான் கொடுப்பேன் என்று சொன்னாய்? பூமியிலுண்டான வழக்கமே நான் கொடுக்கிறது நியாயமல்லவென்று உனக்குக் காண்பிக்கிறதில்லையா? பூமியின் ராஜாக்கள் தீர்வையையும் வரியையும் ஆரிடத்தில் வாங்குகிறார்கள்?" தீர்வையானது தலைவரியையும், வரியென்பது சாமான்கள்பேரில் வாங்கும் ஆயத்தையும் குறிக்கும். பூமியின் ராஜாக்களென்று சொல்லும்போது, பரம ராஜாவுக்கு எதிரிடையாகச் சொல்லி

யிருக்கிறது (சங். 2. 2.). சிறிதிலிருந்து பெரிதுக்கும், பூமியின் காரியங்களிலிருந்து பரமகாரியங்களுக்கும் நியாயஞ் சொல்லுகிருர். பூமியின் காரியங்களால் பரமகாரியங்களை ரூபிக்கலாமென்றல்ல, இவைகளெல்லாம் நிழலாட்டமானபடியால் அதினின்று பொருளின்னதென்று காட்டுகிருர். பிள்ளைகளிடத்திலல்ல, அந்நியரிடத்தில்தான் என்று பேதுரு மறுமொழி சொன்னபோது, தாம் இதுவரையில் காண்பிக்க நோக்கமாயிருந்த காரியத்தைத் தெளிவாய்ச் சொல்லுகிருர். அதாவது, பிள்ளைகள் அல்லது குமாரர் அதைச் செலுத்தவேண்டியதில்லை என்கிருர்.

பிள்ளைகள் என்று பன்மையிலிருப்பதால் தேவனுக்கு ஒரே பேருன குமாரனுகிய தம்மை இது குறிக்கமாட்டாதென்று, சிலர் தப்பிதமாய் எண்ணுகிருர்கள். உலகசம்பந்தமாய் பொதுப்பட பூமியில் அநேக ராஜாக்களிருக்கிறபடியால், அவர்களுக்கு அநேக குமாரர் இருக்கிறபடியால், தம்முடைய சீஷருக்குத் தெளிவாய் விளங்கும்படி இரட்சகர் இங்கே பன்மையில் பேசுகிருர். ஞானக்கருத்தின்படி நாம் அர்த்தம்பண்ணும்போது, குமாரன் என்று ஒருமையிலேயே அர்த்தம்பண்ணவேண்டும். பூமியின் ராஜாக்களுக்கு ராஜாவாயிருக்கப்பட்ட பரமராஜாவுக்கு, பிதாவுக்கு ஒரே பேருன ஒரே மகன் உண்டு. வேறு சிலர் இரட்சகர் பன்மையில் பேசுகிறபடியால், தம்மால் தேவனுடைய பிள்ளைகளாகிய யாவருக்கும் இந்த சலாக்கியம் உண்டென்று சொல்லுகிறதாக அர்த்தம்பண்ணுகிருர்கள். தேவனுக்குச் செலுத்தவேண்டிய காரியங்களில் இப்படிச் சொல்வது சரியல்ல. அவருடைய பிள்ளைகளே அவருக்கு காணிக்கை செலுத்தவேண்டியவர்கள். ராஜாங்கத்துக்குரிய வரியைக்குறித்தும் இப்படிச் சொல்வது சரியல்ல. குருமார்கள் ராஜாங்கத் தீர்வை செலுத்தவேண்டியதில்லையென்று சிலர் சொல்லுகிறதுண்டு. விசுவாசிகளில் சிலருக்கு இந்த சலாக்கியமுண்டானுல் எல்லாருக்குமுண்டென்று சொல்லவேண்டும். அநேகருக்குள் தாமும் ஒரு குமாரனென்றல்ல, அல்லது அநேக குமாரருக்குள் தாம் முதன்மையானவ

ருமென்றல்ல, தேவனுடைய ஒரே பேறான குமாரனாக இந்த சலாக்கியம் தமக்கு உண்டென்று சொல்லுகிறார். அவர் தேவ குமாரனாயிருக்கிறாரென்கிற சத்தியத்தையும், பிதாவுக்கு அவர் எவ்வகையாய் சம்பந்தப்பட்டிருக்கிறாரென்பதையும் இது தெளிவாக்குகிறது. இந்தப் போதனையை மறுக்கிறவர்கள் இந்த நியாயத்தை இலேசாய்த் தள்ளமாட்டார்கள். அந்தப் பொல்லாத தோட்டக்காரருடைய உவமையிலும் வேலைக்காரனுக்கும் குமாரனுக்கும் கண்டிருக்கிற வித்தியாசத்தைக்கொண்டு, கிறிஸ்துவுக்கும் தேவனுக்கும் இருக்கிற சம்பந்தத்திற்கும், தேவனுக்கும் மற்ற மனுஷருக்கும் இருக்கிற சம்பந்தத்திற்கும் உள்ள வித்தியாசத்தை இப்படியே தெளிவாய்க் காட்டியிருக்கிறது. இவ்வளவு ஆழமாய் இந்தப் போதனை ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறபடியால், இது பலமுள்ளதென்றும் இதினின்று இன்னும் மேலான போதனைகளை ஸ்தாபிக்கலாமென்றும் அறிந்துகொள்ளுகிறோம். அவிசுவாசிகளும் சத்தியத்தை ஏற்றுக்கொள்ள மனமில்லாதவர்களும், கள்ளவழியாய் தப்பியோடப் பார்ப்பார்கள். இந்தச் சங்கதியில் பிள்ளைகள் என்ற பன்மைச்சொல் அவர்களுச்கு இப்படிப்பட்ட ஒரு கள்ளவழியை உண்டாக்குகிறது.

நாம் அவர்களுக்கு இடறலாயிராதபடிக்கு அந்த வரியைச் செலுத்துவோமென்று செலுத்தினார். "நாம் தேவாலயத்தை அசட்டைசெய்கிறோம், நியாயப்பிரமாணத்தை அழிக்கவந்தோம்" என்று அவர்கள் சொல்லாதபடிக்கு, தம்முடைய பிறப்பின் இரகசியத்தை அறியாதவர்கள் தப்பிதமாய் இந்தச் சலாக்கியத்தைத் தேடுகிறாரென்று சொல்லாதபடிக்கு, தம்முடைய சீஷன் ஒத்துக்கொண்டபடி தான் கொடாவிட்டால் நன்றாயிராதென்று கண்டு, வரியைக் கொடுக்கச் சம்மதித்தார். யாவருடைய பார்வையிலும் யோக்கியமானதையே தேடினார். அவசியமிராவிட்டாலும், அப்படிச் செய்வது தகுதியென்று செய்தார். அவர் ஞானஸ்நானம்பெற அவசியமில்லையென்றாலும், தாமாய் அதற்கு மனதாரச் சம்மதித்தார். அவர் சுன்னத்து அடையவேண்டியதில்லை; ஆகிலும் நியாயப்பிரமாணத்திற்குக்

கிழானவர்களை விடுதலையாக்க நியாயப்பிரமாணத்திற்குத் தம்மைத் தாழ்த்தினார். இரக்ஷகர் தமக்காக மாத்திரமல்ல, பேதுருவுக்காகவும், "எனக்காகவும், உனக்காகவும்" என்று சொல்லி அதைச் செலுத்தினார். மற்றவர்களுக்காகத் தம்மை ஒப்புக்கொடுத்த ஆழ்ந்த கருத்தை இங்கே வெளியிட்டார். பேதுரு விசுவாசிகளெல்லாருக்கும் பதிலாக இருக்கிறான். தம்மைப்போல அவர்கள் சுயாதீனராகும்படியாக அவர்களோடு தம்மை நுகத்தடிக்குக் கீழ்ப்படுத்தினார். அவர் தேவாலயத்திற்குக் கொண்டுவரப்பட்டபோதும், ஞானஸ்நானம் பெற்றபோதும், இந்தச் சமயத்திலும் அவருடைய தன்மையை நன்றாய் விளக்கிக்காட்டத்தக்க அதிசயம் நடந்தது. தேவாலயத்தில் கொண்டுவரப்பட்டபோது, சிமியோன் பாடினான்; அன்னாள் தோத்திரஞ்செலுத்தினாள். ஞானஸ்நானம் பெற்றபோது யோவான் முதலாவது தடைசெய்தான்; பிறகு வானம் திறக்கப்பட்டது; அங்கிருந்து ஒரு சத்தமும் உண்டாயிற்று. அதுபோல இந்தச் சமயத்திலும் வரிகொடுக்க அவர் கட்டுப்பட்டவரல்லவென்று காட்ட, பிள்ளைகள் அதைச் செலுத்தவேண்டியதில்லையே என்று முந்திச் சொல்லி, பிறகு பேதுருவால் நேரிட்ட தெண்டத்துக்கு அதிசயமாய் வழியுண்டாக்குகிறார். பேதுருவை அவன் பார்த்த முந்தின அலுவலுக்கு அனுப்புகிறார். "நீ கடலுக்குப் போய் தூண்டில்போட்டு, முதலாவது அகப்படுகிற மீன்களைப் பிடித்து அதின் வாயைத் திறந்துபார், ஒரு வெள்ளிப்பணத்தைக் காண்பாய்." இந்த நாணயத்துக்கு "ஸ்றேற்றீர்" என்று பேர். இந்த ஒரு சமயத்திலேதான் இரக்ஷகர் கட்டளைகொடுத்தபிறகு நடந்ததைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் அவர் கட்டளையிட்டபடியே பேதுரு தன் முந்தின தொழிலைப்பார்க்க சமீபத்திலிருந்த கடலுக்குப் போய் தூண்டில்போட்டு, அதில் அகப்பட்ட முதல்மீனைப் பிடித்து, இரக்ஷகர் சொன்னபடியே அவசரத்துக்கு வேண்டிய அந்தப் பணத்தை அதில் கண்டிருப்பான் என்பதற்குச் சந்தேகம் இல்லை. அதை எடுத்து எனக்காகவும் உனக்காகவும் அவர்களிடத்தில் கொடு என்றார். நமக்காக என்று சேர்த்துச்சொல்லாமல், எனக்காகவும்

உனக்காகவும் என்று பிரித்துச் சொல்லுகிறார். இதைப்போல இன்னொரு சமயத்தில் "என் பிதாவினிடத்திற்கும் உங்கள் பிதாவினிடத்திற்கும், என் தேவனிடத்திற்கும் உங்கள் தேவனிடத்திற்கும் ஏறிப்போகிறேன் என்றார் (யோவா. 20. 17.). தம்முடைய சகோதரரோடு அவர் ஒன்றுபட்டவராயிருந்தபோதிலும் தம்முடைய அவசரத்தினாலேயல்ல, தாழ்மையினாலேயே அப்படி ஒன்றுபட்டார். அவர்கள் இதை அறிந்துகொள்வது அவசியம். சுபாவக்கண்ணுக்கு அவர் மனிதனானபடியால் இருவரும் சரிசமானமாய் மீட்கப்படத் தக்கவர்களென்று தோன்றினபோதிலும், விடுவிக்கிறவரும் விடுவிக்கப்பட்டவர்களும், மீட்கிறவரும் மீட்கப்பட்டவர்களும் வெவ்வேறு ஆட்கள் என்பதை நாம் மறக்கக்கூடாது. அதிசயமானவிதமாய் மீனைப்பிடித்த சங்கதியில் சொன்ன ஒரு காரியத்தை இங்கேயும் சொல்லலாம். அகப்பட்ட முதல் மீனில் பணமிருக்குமென்று முன் அறிந்ததுமாத்திரமல்ல, எங்கும் வியாபிக்கிற சர்வ வல்லமையினாலே அந்தச் சமயத்துக்குத் தக்கபடி அந்த இடத்தில் அந்த மீனை வரவழைத்து, அந்தத் தூண்டிலைக் கடிக்கும்படி செய்தது அற்புதம். இதோடு யோனா 1. 17ல் சொல்லியிருக்கிறதை ஒத்துப்பார்க்கலாம். யோனாவை விழுங்கப் பெரிய மீனைக் கர்த்தர் கட்டளையிட்டார். ஜீவஜெந்துக்குள் யாவும் தங்களுக்குந் தெரியாமல் அவருடைய சொல்லுக்குக் கீழ்ப்படிந்தன. சிருஷ்டிகளெல்லாம் அவருக்குள் அடக்கம். (1 இரா. 13. 24; 20. 36. ஆமோ. 9. 3.)

சிலர் இது ஒரு அற்புதமல்ல, சாதாரணமாய் நடந்த சங்கதி என்கிறார்கள். எப்படியெனில் மீனுடைய வாயில் பணம் இருந்ததாக அல்ல, அந்த மீனை அவ்வளவு கிரயத்துக்கு விற்கும்படி சொன்னதாகவும், வாயைத்திறவென்று சொன்னபோது மீன் வாயை அல்ல, விலைகூறும்படி இவன் வாயைத் திறக்கச் சொன்னதாகவும் தப்பாய் அர்த்தம்பண்ணுகிறார்கள். வேறு சிலரோ பேதுருவைப் பார்த்து, "நான் வரிகொடுப்பேனென்று சொன்னாயே, தூண்டிலைப்போட்டு, ஒரு மீனைப் பிடித்து, அதின் வாயில் வெள்ளிப்பணமிருந்தால் எடுத்துக்கொடு, ஒரு

காசும் நம்மிடத்தில் இல்லையே” என்று கடிந்துகொண்ட பாவனையாகச் சொல்லுகிறார்கள். வேறு சிலர் மீன்வாயில் பணமிருந்தால் தூண்டிலை விழுங்க வாயைத் திறக்கும்போது அது விழுந்துவிடுமே, இருந்தாலும் வாயிலல்ல, வயிற்றுக்குள் அல்லவோ இருக்கவேண்டுமென்று பரியாசமாய்ச் சொல்லுகிறார்கள். இது தானியேலைப் போட்ட சிங்கக் குகையின் வாசலில் கல்வைத்து அடைத்திருந்தபடியால், சிங்கங்கள் மூச்சு அடைத்துச் செத்துப்போமென்று ஒருவன் சொன்னது போல் இருக்கிறது. வேறு சிலர் சொல்லுகிறபடி அந்தச் சமயத்தில் அந்த வெள்ளிப்பணம் அற்புதமாய் உண்டாக்கப்பட்டதென்று சொல்வதும் சரியல்ல. இது அற்புதமல்ல, சிருஷ்டிப்பென்று சொல்லவேண்டும். இயல்போடு இணைக்கப்பட்டிருப்பது அற்புதம், இரக்ஷகர் தம்முடைய திவ்விய வல்லமையினால் வியாதியஸ்தரையும், சப்பாணிகளையும், குருடர்களையும் சொஸ்தமாக்கி; வனாந்தரத்தில் அப்பத்தைப் பெருகச்செய்து, கானாவில் தண்ணீரை இரசமாக மாற்றி, செத்துப்போன லாசருவை எழுப்பி, பல இடங்களில் கிடந்தவைகளை அதிசயமானவிதமாய் ஒன்றாய்ச் சேர்த்து இப்படி அதிசயங்களை நடப்பித்தாரேயொழிய, ஒன்றும் இல்லாமையிலிருந்து அப்பத்தையும் இரசத்தையும் உண்டாக்கவில்லை. நூதனமாய் மனுஷரைச் சிருஷ்டிக்கவில்லை; இப்படிச் சிருஷ்டித்ததாக நம்முடைய சுவிசேஷங்களில் எங்கும் சொல்லவுமில்லை. கரையில் கண்ட மீனைக்குறித்தும் இப்படியே சொல்லலாம் (யோவா. 21. 9.). இதில் ஞானக்கருத்து உண்டென்றும் சிலர் எண்ணிப் பேசுகிறதுண்டு. மனிதரைப் பிடிக்கிற ஒவ்வொரு போதகனும் உலகமாகிய சமுத்திரத்தினின்று சுவிசேஷமாகிய தூண்டில்மூலமாய் தான் பிடிக்கிற ஆத்துமாக்களுக்குள் காணப்படும் பெருமை, பொருளாசை, பணஇச்சை இவைகளை முற்றிலும் எடுத்துப்போடுவான் என்கிறார்கள். இப்படிப்பட்ட இல்லாத கருத்துகளை எடுத்துச்சொல்லவேண்டிய அவசியமில்லை. தெளிவான அநேக நல்ல போதனைகளை லேசாய் இந்த அற்புதத்திலிருந்து கற்றுக்கொள்ளலாமே.



# 29. லாசருவை உயிரோடு எழுப்பினது.

யோவான், 11. 1—54.

" மரியாளும் அவள் சகோதரியாகிய மார்த்தாளும் இருந்த பெத்தானியா கிராமத்திலுள்ளவனாகிய லாசரு என்னும் ஒருவன் வியாதிப்பட்டிருந்தான். கர்த்தருக்குப் பரிமளதைலம் பூசி, தன் தலைமயிரால் அவருடைய பாதங்களைத் துடைத்தவள் அந்த மரியாளே; அவளுடைய சகோதரனாகிய லாசரு வியாதியாயிருந்தான். அப்பொழுது அவனுடைய சகோதரிகள்: ஆண்டவரே, நீர் சிநேகிக்கிறவன் வியாதியாயிருக்கிறான் என்று சொல்ல, அவரிடத்திற்கு ஆள் அனுப்பினார்கள்.

இயேசு அதைக் கேட்டபொழுது: இந்த வியாதி மரணத்துக்கு ஏதுவாயிராமல் தேவனுடைய மகிமை விளங்குவதற்கு ஏதுவாயிருக்கிறது; தேவனுடைய குமாரனும் அதினால் மகிமைப்படுவார் என்றார்.

இயேசு மார்த்தாளிடத்திலும் அவளுடைய சகோதரியினிடத்திலும் லாசருவினிடத்திலும் அன்பாயிருந்தார். அவன் வியாதியாயிருக்கிறதாக அவர் கேள்விப்பட்டபொழுது, தாம் இருந்த இடத்திலே பின்னும் இரண்டுநாள் தங்கினார். அதன்பின்பு அவர் தம்முடைய சீஷரை நோக்கி: நாம் மறுபடியும் யூதேயாவுக்குப் போவோம் வாருங்கள் என்றார். அதற்குச் சீஷர்கள்: ரபீ, இப்பொழுதுதான் யூதர் உம்மைக் கல்லெறியத் தேடினார்களே, மறுபடியும் நீர் அவ்விடத்திற்குப் போகலாமா என்றார்கள்.

இயேசு பிரதியுத்தரமாக: பகலுக்குப் பன்னிரண்டு மணிநேரம் இல்லையா? ஒருவன் பகலிலே நடந்தால் அவன் இந்த உலகத்தின் வெளிச்சத்தைக் காண்கிறபடியினால் இடறமாட்டான். ஒருவன் இரவிலே நடந்தால் தன்னிடத்தில் வெளிச்சம் இல்லாதபடியினால் இடறுவான் என்றார்.

இவைகளை அவர் சொல்லியபின்பு அவர்களை நோக்கி: நம்முடைய சிநேகிதனாகிய லாசரு நித்திரையடைந்திருக்கிறான், நான் அவனை எழுப்பப்போகிறேன் என்றார். அதற்கு அவருடைய சீஷர்கள்: ஆண்டவரே, நித்திரையடைந்திருந்தால் சுகமடைவான் என்றார்கள். இயேசுவானவர் அவனுடைய மரணத்தைக்குறித்து அப்படிச் சொன்னார்; அவர்களோ நித்திரைசெய்து இளைப்பாறுகிறதைக்குறித்துச் சொன்னாரென்று நினைத்தார்கள். அப்பொழுது இயேசு அவர்களை நோக்கி: லாசரு மரித்துப்போனான் என்று வெளிப்படையாய்ச் சொல்லி; நான் அங்கே இராததினால் நீங்கள் விசுவாசமுள்ளவர்களாகிறதற்கு ஏது உண்டென்று உங்கள் நிமித்தம் சந்தோஷப்படுகிறேன்; இப்பொழுது அவனிடத்திற்குப் போவோம் வாருங்கள் என்றார்.

அப்பொழுது திதிமு என்னப்பட்ட தோமா மற்றச் சீஷர்களை நோக்கி: அவரோடேகூட மரிக்கும்படி நாமும் போவோம் வாருங்கள் என்றார்.

இயேசு வந்தபோது அவன் கல்லறையில் வைக்கப்பட்டு நாலுநாளாயிற்றென்று கண்டார்.

பெத்தானியா ஊர் எருசலேமுக்குச் சமீபமாய் ஏறக்குறைய இரண்டுமைல் தூரத்திலிருந்தது. யூதரில் அநேகர் மார்த்தாள் மரியாள் என்பவர்களுடைய சகோதரனைக்குறித்து அவர்களுக்கு ஆறுதல் சொல்லும்படி அவர்களிடத்தில் வந்திருந்தார்கள். இயேசு வருகிறார் என்று மார்த்தாள் கேள்விப்பட்டபோது, அவருக்கு எதிர்கொண்டுபோனாள், மரியாளோ வீட்டிலே உட்கார்ந்திருந்தாள்.

மார்த்தாள் இயேசுவினிடத்தில் வந்து: ஆண்டவரே, நீர்இங்கேயிருந்தீரானால் என் சகோதரன் மரிக்கமாட்டான். இப்பொழுதும் நீர் தேவனிடத்தில் கேட்டுக்கொள்வதெதுவோ அதை தேவன் உமக்குத் தந்தருளுவாரென்று அறிந்திருக்கிறேன் என்றாள்.

இயேசு அவளை நோக்கி: உன் சகோதரன் உயிர்த்தெழுந்திருப்பான் என்றார். அதற்கு மார்த்தாள்: உயிர்த்தெழுதல் நடக்கும் கடைசிநாளிலே அவனும் உயிர்த்தெழுந்திருப்பான் என்று அறிந்திருக்கிறேன் என்றாள்.

இயேசு அவளை நோக்கி: நானே உயிர்த்தெழுதலும் ஜீவனுமாயிருக்கிறேன், என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான்; உயிரோடிருந்து என்னை விசுவாசிக்கிறவனெவனும் என்றென்றைக்கும் மரியாமலும் இருப்பான்; இதை விசுவாசிக்கிறாயா என்றார். அதற்கு அவள்: ஆம், ஆண்டவரே, நீர் உலகத்தில் வருகிறவரான தேவகுமாரனாகிய கிறிஸ்து என்று நான் விசுவாசிக்கிறேன் என்றாள்.

இவைகளைச் சொன்னபின்பு, அவள் போய், தன் சகோதரியாகிய மரியாளை இரகசியமாய் அழைத்து: போதகர் வந்திருக்கிறார், உன்னை அழைக்கிறார் என்றாள். அவள் அதைக் கேட்டவுடனே, சீக்கிரமாய் எழுந்து, அவரிடத்தில் வந்தாள். இயேசு இன்னும் கிராமத்துக்குள் வராமல், மார்த்தாள் தம்மைச் சந்தித்த இடத்திலே இருந்தார். அப்பொழுது வீட்டிலே அவளுடனேகூட இருந்து அவளுக்கு ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்த யூதர்கள், மரியாள் சீக்கிரமாய் எழுந்துபோகிறதைக் கண்டு: அவள் கல்லறையினிடத்தில் அழுகிறதற்குப் போகிறாள் என்று சொல்லி, அவளுக்குப் பின்னே போனார்கள்.

இயேசு இருந்த இடத்தில் மரியாள் வந்து, அவரைக் கண்டவுடனே, அவர் பாதத்தில் விழுந்து: ஆண்டவரே, நீர் இங்கே இருந்தீரானால் என் சகோதரன் மரிக்கமாட்டான் என்றாள். அவள் அழுகிறதையும் அவளோடேகூட வந்த யூதர்கள் அழுகிறதையும் இயேசு கண்டபோது ஆவியிலே கலங்கித் துயரமடைந்து: அவனை எங்கே வைத்தீர்கள் என்றார். ஆண்டவரே, வந்து பாரும் என்றார்கள். இயேசு கண்ணீர் விட்டார்.

அப்பொழுது யூதர்கள்: இதோ, இவர் அவனை எவ்வளவாய்ச் சிநேகித்தார் என்றார்கள்! அவர்களில் சிலர்: குருடனுடைய கண்களைத் திறந்த இவர், இவனைச் சாகாமலிருக்கப்பண்ணவும் கூடாதா என்றார்கள்.

அப்பொழுது இயேசு மறுபடியும் தமக்குள்ளே கலங்கிக் கல்லறையினிடத்திற்கு வந்தார். அது ஒரு குகையாயிருந்தது; அதின்மேல் ஒரு கல் வைக்கப்பட்டிருந்தது. இயேசு: கல்லை எடுத்துப்போடுங்கள் என்றார். மரித்தவனுடைய சகோதரியாகிய மார்த்தாள் அவரை நோக்கி: ஆண்டவரே, இப்பொழுது நாறுமே, நாலுநாளாயிற்றே என்றாள்.

இயேசு அவளை நோக்கி: நீ விசுவாசித்தால் தேவனுடைய மகிமையைக் காண்பாய் என்று நான் உனக்குச் சொல்லவில்லையா என்றார். அப்பொழுது மரித்தவன் வைக்கப்பட்ட இடத்திலிருந்த கல்லை எடுத்துப்போட்டார்கள்.

இயேசு தம்முடைய கண்களை ஏறெடுத்து: பிதாவே, நீர் எனக்குச் செவிகொடுத்தபடியினால் உம்மை ஸ்தோத்திரிக்கிறேன். நீர் எப்பொழுதும் எனக்குச் செவிகொடுக்கிறீர் என்று நான் அறிந்திருக்கிறேன்; ஆனாலும் நீர் என்னை அனுப்பினதைச் சூழ்ந்துநிற்கும் ஜனங்கள் விசுவாசிக்கும்படியாக அவர்கள்நிமித்தம் இதைச் சொன்னேன் என்றார்.

இவைகளைச் சொன்னபின்பு; லாசருவே, வெளியே வா என்று, உரத்த சத்தமாய்க் கூப்பிட்டார். அப்பொழுது, மரித்தவன் வெளியே வந்தான். அவன் கால்களும் கைகளும் பிரேதச் சீலைகளினால் கட்டப்பட்டிருந்தது, அவன் முகமும் சீலையால் சுற்றப்பட்டிருந்தது. இயேசு அவர்களை நோக்கி: இவனைக் கட்டவிழ்த்துவிடுங்கள் என்றார்.

அப்பொழுது மரியாளிடத்தில் வந்திருந்து, இயேசு செய்தவைகளைக் கண்டவர்களாகிய யூதர்களில் அநேகர் அவரிடத்தில் விசுவாசமுள்ளவர்களானார்கள். அவர்களில் சிலர் பரிசேயரிடத்தில் போய், இயேசு செய்தவைகளை அவர்களுக்கு அறிவித்தார்கள்.

அப்பொழுது பிரதான ஆசாரியரும் பரிசேயரும் ஆலோசனைச் சங்கத்தைக் கூடிவரச்செய்து, நாம் என்னசெய்கிறது? இந்த மனுஷன் அநேக அற்புதங்களைச் செய்கிறானே. நாம் இவனை இப்படி விட்டுவிட்டால், எல்லாரும் இவனை விசுவாசிப்பார்கள்; அப்பொழுது ரோமர் வந்து நம்முடைய ஸ்தானத்தையும் ஜனத்தையும் அழித்துப்போடுவார்களே என்றார்கள்.

அப்பொழுது அவர்களில் ஒருவனும் அந்த வருஷத்துப் பிரதான ஆசாரியனுமாகிய காய்பா என்பவன் அவர்களை நோக்கி: உங்களுக்கு ஒன்றுந்தெரியாது; ஜனங்களெல்லாரும் கெட்டுப்போகாதபடிக்கு ஒரே மனுஷன் ஜனங்களுக்காக மரிப்பது நமக்கு நலமாயிருக்குமென்று நீங்கள் சிந்தியாமலிருக்கிறீர்கள் என்றான். இதை அவன் சுயமாய்ச் சொல்லாமல், அந்த வருஷத்துப் பிரதான ஆசாரியனானபடியினாலே இயேசு யூத ஜனங்களுக்காக மரிக்கப்போகிறாரென்றும், அந்த ஜனங்களுக்காகமாத்திரமல்ல, சிதறியிருக்கிற தேவனுடைய பிள்ளைகளை ஒன்றாகச் சேர்க்கிறதற்காகவும் மரிக்கப்போகிறாரென்றும், தீர்க்கதரிசனமாய்ச் சொன்னான்,

அந்நாள்முதல் அவரைக் கொலைசெய்யும்படிக்கு ஆலோசனைபண்ணினார்கள். ஆகையால் இயேசு அதன்பின்பு வெளியரங்கமாய் யூதருக்குள்ளே சஞ்சரியாமல், அவ்விடம்விட்டு வனாந்தரத்துக்குச் சமீபமான இடமாகிய எப்பிராயீம் என்னப்பட்ட ஊருக்குப் போய், அங்கே தம்முடைய சீஷருடனேகூடத் தங்கியிருந்தார்.''

---

இது விசேஷித்த ஒரு அற்புதம். இதினால் அநேக காரியங்கள் நடக்கிறதற்கு ஏதுவிருந்தது. இரட்சகரைக் கொல்வதற்கு இந்த அற்புதத்தினாலேயே கடைசியாகத் தீர்மானம் பண்ணினார்கள். முந்தின மூன்று சுவிசேஷகர்களும் இதைச் சொல்லாமல் விட்டது ஆச்சரியம். இதற்கு முகாந்தரங்களை நாம் வேறுவிதமாய் உத்தேசிக்கலாம். முதல் மூன்று சுவிசேஷகர்களும் பலஸ்தீனாவிலே லாசருவாவது, அவனுடைய குடும்பத்தில் யாராவது உயிரோடிருக்கும்போது தங்கள் சுவிசேஷங்களை எழுதினபடியால், இதினால் அவர்களுக்குத் துன்பம் நேரிடுமென்று பயந்து, இதை எழுதாமல் விட்டார்களென்றும், யோவான் அதிகக் காலத்துக்குப் பிறகு பலஸ்தீனாவிலல்ல, சின்ன ஆசியாவில் இதை எழுதினபடியால், இந்த அற்புதத்தை எழுதியிருக்கிறானென்றுஞ் சிலர் சொல்லுகிறார்கள். இந்த முகாந்தரத்தையிட்டே காதற வெட்டப்பட்ட பிரதான ஆசாரியனுக்கு வேலைக்காரனாயிருந்தவனுடைய பேரையும் அந்த மூன்றுபேரும் சொல்லவில்லை; யோவான் மாத்திரம் சொல்லியிருக்கிறான். பட்டயத்தைக்கொண்டு வெட்டினவன் பேதுரு என்று திட்டமாய்ச் சொல்லுகிறான் (யோவா. 18. 10.). இப்படிச் சொல்லுகிறவர்கள் கிறிஸ்துவின் வல்லமை லாசரு உயிரோடிருந்ததினால் விளங்கினதைக் கண்டு அவனுக்குத் துன்பம் வந்ததை (யோவா. 12. 10.) தங்கள் அபிப்பிராயத்துக்கு ஆதாரமாகச் சொல்லுகிறார்கள். ஆகிலும் இது சரியான முகாந்தரமல்ல. ஒருவேளை மத்தேயுவைக்குறித்துமாத்திரம் இப்படிச் சொல்லலாம். மாற்கு தன் சுவிசேஷத்தை ரோமாபுரியில் புறஜாதியாரான கிறிஸ்தவர்களுக்கு எழுதினான். பலஸ்தீனாவில் அவன் எழுதவில்லையென்பது

நிச்சயம். லூக்கா சுவிசேஷகனும் தன் சுவிசேஷத்தை தன் சிநேகிதனுகிய தேயோப்பிலுவுக்கு எழுதினுன். அதிலுள்ள பல குறிப்புகளால் அவன் இத்தாலியாவில் வாசம்பண்ணினுனென்று தெரியவரும். அற்புதம் நடந்த துவக்கத்தில் அவன் உயிருக்கு மோசம் நேரிட ஏதுவாயிருந்ததைக் கொண்டு அநேக வருஷங்களுக்குப்பிறகும் அப்படி இருந்ததென்று சொல்வது சரியல்ல. பிறகு எத்தனையோ காரியங்கள் நடந்தது. விரோதத்தை யெழுப்பத்தக்க பல காரியங்கள் சம்பவித்தது. அப்படி மோசமிருந்தாலும், அது அதிகரிக்கிறதற்கு ஏதுவாயிருந்தாலும், கிறிஸ்தவனுயிருந்த லாசரு அதினின்று பின்வாங்கவுமாட்டான்; அவனுடைய சிநேகிதர்களும் இப்படி கண்யமாக அவனை துன்பத்தை அனுபவிப்பதினின்று காப்பாற்ற விரும்பவும் மாட்டார்கள். தனக்கு மோசம்வராதபடிக்கு, கர்த்தருடைய மகிமையை வெளிப்படுத்தின அத்தனைபெரிய சங்கதியைச் சொல்லாமல் விடவேண்டுமென்று எண்ணுகிறது கிறிஸ்துவை அறிக்கையிடாமல் பின்வாங்குகிறதல்லவா! வேறுசிலர் முதல் மூன்று சுவிசேஷகர்களும் கலிலேயாவில் இரக்ஷகர் செய்த அற்புதங்களைக்குறித்துச் சொல்லுகிறுர்களேயொழிய, எருசலேமில் அவர் நடப்பித்தவைகளைக்குறித்து ஒன்றுஞ் சொல்லாததால் இந்த அற்புதத்தைச் சொல்லாமல் விட்டிருக்கிறுர்கள் என்கிறுர்கள். அவர்கள் அப்படி கலிலேயாவில் நடந்ததைக் குறித்து எழுதியிருக்கிறது நிஜந்தான். ஆகிலும் இது சரியான உத்தரவல்ல; ஏனெனில் ஏன் அவர்கள் அவைகளை மாத்திரம் சொன்னுர்கள் என்று பின்னும் விசாரிக்கவேண்டியதாயிருக்கிறது. இதற்கு திருப்திகரமான உத்தரவுகொடுக்கிறது இலேசல்ல. யோவான்மாத்திரம் சொல்லி மற்ற மூன்றுபேரும் இந்த அற்புதத்தைச் சொல்லாததைக்கொண்டு யோவானுவது, மற்ற மூன்றுபேராவது எழுதினது உண்மை அல்லவென்று சொல்லுகிறது வீண்.

பெத்தானியாவிலுள்ள மார்த்தாள் தன் வீட்டில் இரக்ஷகரை அடிக்கடி உபசரித்ததாக வாசிக்கிறேம். லூக்கா சொல்

லுகிறதைப் பார்த்தால், மார்த்தாள்தான் அந்த வீட்டுக்குத் தலைமையாயிருந்தாளென்று தோன்றும். அந்த வீட்டில் மாத்திரமல்ல, அந்த வீட்டில் குடியிருந்தவர்களுடைய இருதயங்களிலும் அவருக்கு இடங்கிடைத்தது. அவரும் மார்த்தாளையும், அவள் சகோதரியையும், லாசருவையும் வெகு பக்ஷமாய் நேசித்தார். அவருக்குப் பிரியமில்லாத அந்த எருசலேம்பட்டணத்தில் தன் வேலையைச் செய்துமுடித்தபிறகு இரவில் பெத்தானியாவில் போய்த் தங்கினுர் (மாற். 11. 11—19.). அது எருசலேமுக்குப் பதினைந்து ஸ்தாதி வழி தூரம் மாத்திரமிருந்தபடியால், காலையில் எழுந்திருந்து அங்கே லேசாய்ப் போகலாம். மரியாள் அவர் பாதத்தண்டையிலிருந்து அவர் சொல்லும் வசனத்தைக் கேட்டாள்; மார்த்தாள் தன் பரமவிருந்தாளிக்கு உபசரணைசெய்ய அதிகக் கவலையினுல் அப்படிச் செய்யாதபடி தடைப்பட்டாள்; லாசரு அவருக்குச் சிநேகிதனுயிருந்தான். விரோதம் பேசின பாவிகளோடு சம்பாஷித்து, தம்முடைய வார்த்தைகளைப் புரட்டப் பார்த்த ஜனங்களோடு ஒருநாள் முழுதும் தர்க்கித்தபிறகு இந்தக் குடும்பத்தில் இரவைப் பின்னிடுகிறது அவருக்கு மிகவும் ஆறுதலாயிருக்கும்.

கிறிஸ்துவினுல் நேசிக்கப்பட்டவர்கள் துன்பங்களுக்கு நீங்கலாயிருப்பார்களென்று எண்ணக்கூடாது. அநேக துன்பங்கள்மூலமாகவே அவர்கள் பரலோக ராஜ்யம் சேரவேண்டியது. இந்தக் குடும்பத்தில் துக்கமாத்திரமல்ல, அந்த துக்கம் அதிகரிக்கும் என்கிற பயமும் இருந்தது. லாசரு வியாதியாயிருக்கிறுன், அவனுடைய சகோதரிகள் வருத்தமான காலத்தில் தங்களுக்கும் மற்றவர்களுக்கும் உதவிசெய்தவரண்டைக்கு தங்கள் கண்களை ஏறெடுக்கிறுர்கள். அவர் சற்று தூரத்தில் யோர்தானுக்கு அப்புறத்தில் ஒருவேளை பெத்தாபரா என்னும் இடத்தில் சத்துருக்களுடைய விரோதத்திற்குப் பயந்து போயிருப்பார் (யோவா. 10. 39, 40; 1. 28.). அவர் தனிமையாய்ப் போயிருந்த இடம் அவருடைய சிநேகிதரான அவர்களுக்குத் தெரிந்திருந்தது. ஆதலால் ஒரு ஆள்வசம் ஆண்ட

வரே, நீர் சிநேகிக்கிறவன் வியாதியாயிருக்கிறான் என்று சொல்லியனுப்பினார்கள். அவர்பேரில் எவ்வளவாய் நம்பிக்கை வைத்தார்களென்று பாருங்கள். இந்தச் சுருக்கமான செய்தி போதும். அதிகம் சொல்லவேண்டியதில்லையென்று நினைத்தார்கள். அவர் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளவில்லை; தங்கள் அவசரத்தைமாத்திரம் அறிவித்தால் அதுவே போதும் என்கிற நிச்சயத்தோடிருந்தார்கள். தாம் சிநேகிக்கிறவர்களை அவர் கைவிடுகிறதில்லை. பெத்தாபராவிலிருந்து தங்கள் ஊர் ஒருநாள் பயணம்; ஆதலால் அதிக தாமதமின்றி உதவி செய்ய வருவாரென்று எண்ணியிருந்தார்கள்.

கர்த்தர் இந்தச் செய்தியைக் கேட்டவுடனே அப்போஸ்தலர்கள் அறிய, செய்திகொண்டுவந்த ஆளுக்கு நன்றாய் விளங்காத ஒரு உத்தரவு கொடுக்கிறார். இந்த வியாதி மரணத்துக்கேதுவாயிராது என்பதே அதின் பொருள். இது அந்த சகோதரிகளுடைய விசுவாசத்தை அதிகமாய்ச் சோதிக்கத்தக்கதாயிருந்தது. அந்த ஆள் திரும்பிப்போகிறதற்குள்ளாக லாசரு மரித்திருக்கவேண்டும். இந்த வியாதி மரணத்துக்கு ஏதுவானதல்லவென்று அவர் சொன்னது, இவர்களுக்கு அதிகத் திகைப்பாயிருந்திருக்கும். ஒருவேளை அந்தப் பரமசிநேகிதன் தங்களை மோசம்பண்ணிவிட்டாரோ, அல்லது தாமே மோசப்பட்டுப்போனாரோ என்று கலங்கியிருப்பார்கள். அவரே வந்து தாம் சொன்னதை உறுதிப்படுத்தவில்லை. அப்படி வரத் தடைபட்டால் மற்றவர்களை, தமக்கு அந்நியராய் இருந்தவர்களை, தூரத்திலிருந்து ஒரு வார்த்தையினால் சொஸ்தப்படுத்தினதுபோல் ஏன் இந்தச் சமயத்தில் செய்யவில்லை? இப்படித்தான் சில சமயங்களில் தேவனுடைய வாக்குத்தத்தங்கள் ஒன்றுக்கும் உதவாததுபோல் காணப்படுகிறது. தேவ அன்பின் ஊற்று நமக்குச் சுத்தமாய்த் தெரியாது. நம்முடைய மட்டான அறிவுக்குத்தக்கதாக இதையும் மட்டுத்திட்டப்படுத்துகிறோம். இரட்சகர் சொன்ன இந்த வார்த்தையும் காரியம் முடியும்வரையில் விளங்காத விடுகதையாயிருந்தது. ஆதிமுதல் அந்தம்வரையில் சகலத்தையும் பார்க்கிறவருடைய கண்

களுக்கு இப்போதும் அந்த வியாதி மரணத்துக்கேதுவான்தல்ல. அவர்களும் காரியத்தின்படி கடைசிமுடிவைப் பார்த்தபோது அது மரணமல்ல, லாசரு இதுவரையில் பிரவேசியாத ஜீவனுக்குள் அவனை நடத்துகிற ஒரு கடவு என்று அறிந்துகொண்டார்கள். தேவனுடைய மகிமை விளங்குகிறதற்கு ஏதுவாயிருக்கிறது என்று சொன்னபொழுது, தேவனுடைய மகிமையில் லாசருவினுடைய ஆத்துமா நிறைவடைவதையும் அடக்கியே பேசினார். இந்த அதிசயமான சங்கதிகளால் அவன் ஆத்துமாவும் மேலான நன்மையைப் பெற்றிருக்கும். ஆகிலும் அவனை ஜீவனுக்கு நடத்தின இந்தப் பாதை மிகவும் வருத்தமான பாதையாயிருந்தது. அவனுக்கு ஆத்துமலாபத்தை உண்டாக்கின இது கிறிஸ்துவின் மகிமையை வெளிப்படுத்துகிற ஒரு விசேஷித்த சமயமாயிருந்தது. தேவகுமாரன் லாசருவினால் மகிமைப்பட்டார், லாசருமூலமாய் உலகத்திலும் மகிமைப்பட்டார்; இதைப்போலொத்த வேறொரு சங்கதியை யோவா. 9. 2, 3ல் காணலாம்.

இயேசு மார்த்தாளிடத்திலும் அவளுடைய சகோதரியிடத்திலும் லாசருவினிடத்திலும் அன்பாயிருந்தாரென்று யோவா. 11. 5ல் சொல்லியிருக்கிறதை முந்தின வாக்கியங்களோடு சேர்த்து வாசித்தால், அவர்கள் அனுப்பின செய்தியும் அவர் உதவிசெய்வாரென்று அவர்கள் வைத்திருந்த நம்பிக்கையும் விளங்கும். பிந்தின வாக்கியங்களோடு சேர்த்து வாசித்தால் பெத்தானியாவில் துன்பப்பட்ட அந்தக் குடும்பத்தை அவ்வளவு நேசித்தபோதிலும், செய்தியைக் கேட்டபிறகும் இரண்டுநாள் தாமிருந்த இடத்திலேயே தங்கினார் என்று அர்த்தப்படுத்தவேண்டும். அவர்களுக்கு உதவிசெய்யுமுன் இவ்வளவு காலம் தாமதித்ததினாலே இந்தச் சிநேகம் எப்படிக்கொத்ததென்றும் சுவிசேஷகன் நமக்குக் காட்டுகிறதுபோல் இருக்கிறது. ஐந்தாம் வசனத்தைப் பின்வரும் இரண்டு வாக்கியங்களோடும் சேர்த்து வாசிக்கிறது நல்லதென்று நினைக்கிறேன். இயேசுவானவர் மார்த்தாளையும் மற்றவர்களையும் நேசித்தார். ஆதலால் லாசரு வியாதியாயிருக்கிறதைக் கேள்விப்பட்ட

போது, தாம் இருந்தவிடத்தில் இரண்டுநாள் தங்கினபின்பு தம் முடைய சீஷர்களை நோக்கி நாம் மறுபடியும் யூதேயாவுக்குப் போவோம் வாருங்கள் என்றார். அந்தப் பெரிய அற்புதத் தைச் செய்யும்படிக்கு காலஞ்செல்லவேண்டுமென்றே அவர் அங்கே இரண்டுநாள் தாமதித்தார். வேறெந்தக் காரணமும் இயல்புக்கு விரோதமானது. தாம் இருந்த இடத்தில் தேவனு டைய ராஜ்யத்துக்கடுத்த ஏதோ ஒரு பெரிய கிரியை செய் யவேண்டியிருந்ததென்றும், தாம் அதை விட்டுப்போனால் அது நஷ்டமடையுமென்றும், சிநேகிதருக்காக அதை விட்டுவிட் டுப் போவது சரியல்லவென்றும் எண்ணி தாமதித்தாரென்று சிலர் சொல்லுகிறார்கள். ஆகிலும் அவர் தூரத்திலிருந்து ஒரு வார்த்தையினாலே சொஸ்தப்படுத்தலாமே. இப்படித் தாமதித் தது தேவஅன்பின் தயவான நடத்துதல். பார்வைக்கு வருத் தமானதுதான். அவர் துன்பம் அதிகமாகும்வரையில் காத்தி ருந்து பிறகு உதவிசெய்கிறார். அடிக்கடி இப்படி நடக்கி றதுண்டு. மற்ற ஒத்தாசைகளெல்லாம் விருதாவாய்ப் போய்த் தேவவாக்குத்தத்தம் பலவீனமானதென்றும் அப்பிரயோஜன மானதென்றும் காணப்படும்போதுதான் பலத்த சகாயத்தோடு உதவிசெய்ய வருகிறார்.

எல்லாம் ஆயத்தமானபிறகு தம்முடைய சீஷரை நோக்கி, நாம் மறுபடியும் யூதேயாவுக்குப் போவோம் வாருங்கள் என் றார். சீஷர்கள் இதைக் கேட்டு ஆச்சரியப்பட்டு நடுங்கிக் கொண்டு, அதைத் தடுக்கத்தக்க மாறுத்தரஞ் சொல்லுகிறார்கள். யூதசத்துருக்கள் சற்றுமுன்தான் அவரைக் கொல்ல வகை பார்த்தார்கள். அவர்களுடைய கோபத்திற்குத் தம்மை மறைத் துக்கொள்ளும்படியாகவே இங்கே வந்தார்; மறுபடியும் அந்த மோசம் நிறைந்த இடத்துக்குப் போகலாமா? இப்படி அவரைத் தடைசெய்து அங்கே போகவேண்டாமென்று சொன்னதினால் அவரைத் தாங்கள் சிநேகித்தார்களென்று காட்டினார்கள். இந் தச் சிநேகத்தோடு தங்களுக்கு எங்கே அபாயம் நேரிடுமோ என்கிற பயமும் கலந்திருந்தது. தோமா சொல்லுகிறதைப் பார்த்தால் இது விளங்கும்; அவரோடேகூடப் போவதினால்

மரணம் சம்பவிக்கும் என்கிறுன் (யோவா. 11. 16.). இதை மனதில் வைத்துக்கொண்டாலொழிய, இரக்ஷகர் சொல்லுகிற வார்த்தைகள் விளங்கவேமாட்டாது. "பகலுக்குப் பன்னிரண்டு மணி நேரமில்லையா?" என்கிறுர். "பகலில் அந்தப் பன்னிரண்டு மணி நேரத்தை எந்த அந்தகாரமும் குறைத்துப் போடமாட்டாது. எவனும் இந்தப் பன்னிரண்டு மணி நேரத்தில் இடறுமல் நடக்கலாம்; எந்த வேலையும் செய்யலாம். ஆகாயத்திலுள்ள சூரியனுகிய ஒளி அவனுக்கு வேண்டிய வெளிச்சத்தைக் கொடுக்கும். என்னுடைய பகல் இன்னும் முடியவில்லை. தேவன் எனக்குக் கொடுத்த கிரியையை நான் செய்யலாம். கர்த்தர் எனக்கு பூமியில் நடமாடும்படி கொடுத்த நேரம் இருக்கும்பரியந்தம், நான் முடிக்கவேண்டிய வேலை இருக்கும்பரியந்தம் எனக்கு பயமில்லை; என்னேடு வருகிற உங்களுக்கும் பயமில்லை" என்கிறதுபோல சொல்லுகிறுர். யோவா. 9. 4ல் இதைப்போலொத்த மோசமான ஒரு சமயத்தில் இதற்கொப்பாய் இரக்ஷகர் சொன்ன வார்த்தைகள் இந்தக் கருத்தை விளக்கிக்காட்டும். யோவா. 11. 10ல் தம்மை முற்றிலும் விட்டுவிட்டு சீஷர்களைக்குறித்துமாத்திரம் பேசுகிறுர். மனுஷர்களுக்கு ஒளியாயிருக்கப்பட்டவரைப் பார்த்து நடக்கவேண்டுமென்றும், இரவில் நடக்கக்கூடாதென்றும், கர்த்தர் என் வெளிச்சமாயிருக்கிறுரென்று சொல்லி அவரைப் பார்த்து எந்த வேலையையும் செய்யவேண்டும், எந்த மோசத்தையும் ஜெயிக்கவேண்டும்; அப்படிச் செய்யாவிட்டால் நிச்சயமாகவே மோசத்திலும் சோதனையிலும் அகப்படுவீர்கள் என்றும் எச்சரிக்கிறுர். தன்னிடத்தில் வெளிச்சமில்லாதபடியினுலே என்கிற வார்த்தைகளில் உவமானத்தை விட்டுவிடுகிறுர். உவமானத்துக்கு இசைவாய்ச் சொல்லவேண்டுமானுல், ஆகாயத்தில் வெளிச்சம் இல்லாதபடியினுலே என்று சொல்லவேண்டும். ஆனுல் ஞானக்கருத்தின்படிக்கு மேலே வெளிச்சத்தைக் காணுமலிருக்கிறதும், தனக்குள்ளே வெளிச்சமில்லாமலிருக்கிறதுமான இரண்டும் ஒன்றே. உள்ளே வெளிச்சமிருந்தால் மேலேயும் வெளிச்சத்தைக் காணலாமல்லவா?

இறந்துபோனபிறகு வேறு ஆளை அவர்கள் இரக்ஷகரிடத்தில் அனுப்பவில்லை. லாசருவைப்பற்றி யோவா. 11. 11ல் சொல்லியிருக்கிறது. அவன் மரித்ததைத் தம்முடைய ஆவியின் வல்லமையினால் அறிந்துகொண்டாரென்று காட்டும். லாசரு மரித்துப்போனான், அல்லது பரம பாஷையின் கருத்துக்கிசைவாக அவர் முந்திச் சொன்னபடி "நம்முடைய சிநேகிதனாகிய லாசரு நித்திரையடைந்திருக்கிறான், நான் அவனை எழுப்பப்போகிறேன்" என்றார். தாம் செய்யப் போகிற பலத்த அற்புதத்தைக்குறித்து இவ்வளவு அற்பமாய்ப் பேசுகிறார். தம்முடைய கிரியையின் மேன்மையைக் காட்டாமல் அதைத் தணிக்கப்பார்க்கிறார். தூங்குகிறவனை எழுப்புகிற பாவனையாய்ப் பேசுகிறார். சீஷர்களோ கருத்தை அறியாமல் சாதாரணமான தூக்கமென்று எண்ணினார்கள். வியாதிஸ்தரிடத்தில் அப்படிப்பட்ட நல்ல குறிப்பு சுகத்துக்கு ஏற்றது. சீஷர்கள் அப்படியே சொன்னார்கள். "ஆண்டவரே, நித்திரை அடைந்திருந்தால் சுகமடைவான்" என்றார்கள். ஆதலால் எல்லாம் செம்மையாயிருக்கும்போது, தம்மையும் தம்முடைய சீஷர்களையும் மோசமான இடத்துக்குக் கொண்டுபோவது அவசியமில்லையே என்று யோசித்திருக்கவேண்டும். இரக்ஷகரோ மரணமாகிய தூக்கத்தைக்குறித்துப் பேசினதாகவும், அதினின்று அவனை எழுப்பப்போகிறதாகவும் சொல்லுகிறார். சகல தேசத்தாருக்குள்ளும் மரணத்தை இப்படித் தூக்கத்துக்கு ஒப்பிட்டுப் பேசுகிறது சாதாரண காரியமானபடியால, அறிவீனத்தினாலே இப்படி அர்த்தம்பண்ணினார்களென்று சொல்லக்கூடாது. இருவகையாயும் அர்த்தம்பண்ணலாம். அவர்களோ தப்பான இந்த வகையைப் பிடித்துக்கொண்டார்கள். மரணத்தை நித்திரைக்கு ஒப்பிட்டுச் சொல்லுகிற வாக்கியங்கள் பழைய ஏற்பாட்டிலும் புதிய ஏற்பாட்டிலும் அநேகமுண்டு. புதிய ஏற்பாட்டில் பின்வரும் வாக்கியங்களைப் பார் (மத். 27. 52. அப். 7. 60; 13. 36. 1 கொரி. 7. 39; 11. 30; 15. 6, 18, 20, 51. 1 தெச. 4. 13—15. 2 பேது. 3. 4.). இதைப்போல வேறொரு சமயத்தில் இரக்ஷ

கருடைய கருத்தை அறியாமல் தங்கள் குருட்டாட்டத்தை வெளிப்படுத்தினார்கள் (மத். 16. 5—12.). அப்பொழுது இயேசு அவர்களை நோக்கி: லாசரு மரித்துப்போனான் என்று தெளிவாய்ச் சொன்னார். அந்தச் சமயத்தில் அவனைக் காப்பாற்ற ஏன் இவர் போகவில்லையென்று அவர்கள் தங்கள் மனதில் யோசிப்பார்களென்பதும் இவருக்குத் தெரிந்தது. அவர் போகாமலிருந்ததினால் தேவமகிமை அதிகமாய் விளங்குவதற்கு ஏதுவிருந்தது; போயிருப்பாரானால் அவ்வளவாய் அதைப் பார்த்திருக்கமாட்டார்கள். இப்பொழுது இவர்களும் இவர்கள் மூலமாய் சபை முழுவதும் பலத்த விசுவாசத்தினால் ஜீவனுக்கும் மரணத்துக்கும் இவரே ஆண்டவரென்று அறிந்துகொள்ள ஏதுவிருந்தது. நான் அங்கே இராததினால் நீங்கள் விசுவாசமுள்ளவர்களாகிறதற்கு உங்கள் நிமித்தம் சந்தோஷப்படுகிறேன் என்றார். அங்கே இராததற்காக சந்தோஷப்படுகிறார். அங்கே இருந்திருப்பாரானால் அவ்வளவு தூரம் அவர்கள் வருத்தப்படும்படிக்கு இடங்கொடாமல், துவக்கத்திலேயே வியாதியைச் சொஸ்தமாக்கிப்போடுவார். இப்பொழுது அவனிடத்திற்குப் போவோம் வாருங்கள் என்றபோது, சீஷர்களில் ஒருவன் அவரோடு போகிறதினால் மோசம் சம்பவிக்கும், உயிருக்கு அபாயம் நேரிடுமென்று எண்ணினதாகப் பார்க்கிறோம். தோமா தன் உடன்சீஷர்களைப் பார்த்து, அவரோடேகூட மரிக்கும்படி நாமும் போவோம் வாருங்கள் என்றான். இதில் விசுவாசமும் அவிசுவாசமும் கலந்திருக்கிறது. அவரை விட்டுப் பிரிந்து உயிரோடிருக்கிறதிலும், அவரோடுகூட மரிக்கிறதே உத்தமம் என்று எண்ணினதில் விசுவாசமும், தன் எஜமான் செய்யவேண்டிய வேலை இன்னும் இருக்கக்கொள்ள, அவருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் மோசம் நேரிடும் என்று எண்ணினதில் அவிசுவாசமும் காணப்படுகிறது. தோமா என்பவன் எப்பொழுதும் துக்கமுடையவனாய்க் காணப்படுகிறான். தன் எஜமானுக்கு உண்மையுள்ளவனாய் இருந்தபோதிலும், எதையும் சோர்புள்ள மனதோடே பார்க்கிற குணமுடையவன். விசுவாசத்தில் அதிகமாய்த் தேறினவன்

அல்ல; கண்ணுக்குத் தோன்றுகிறபடியே பூமியில் நடக்கிற காரியங்களையே பார்த்து யோசிக்கிறவன் (யோவா. 14. 5; 20. 25.). பலவித குணமுடையவர்களும், பலவித நடக்கையுடையவர்களும் இரக்ஷகருடைய சீஷருக்குள் இருந்தார்கள். பலவித விசுவாசிகளுடைய தன்மையை இவர்கள் காட்டுகிறதுபோல இவர்களுடைய சரித்திரம் அவர்களுடைய வருத்தங்களில் உதவியாயிருக்கிறதுமல்லாமல், விசுவாசத்தின் நிச்சயத்தை அவர்கள் அடைகிறதற்கு மிகவும் பிரயோஜனமுள்ளது. கிறிசொஸ்தம் இந்தச் சீஷனைக்குறித்து பெத்தானியாவரையில் இரக்ஷகரோடே போகப் பயந்த இவன், பிறகு தனியே தூரதேசங்ளுக்கும் இந்தியாவின் கொடுமுடிக்கும் பயணஞ்செய்து, கிறிஸ்துவினிமித்தம் அநேக மோசங்களுக்குட்படச் சம்மதித்தான் என்கிறார்.

மார்த்தாளும், மரியாளும் தங்கள் சகோதரனுடைய வியாதி மோசத்துக்கேதுவானதென்று அறிகிறவரையில், இரக்ஷகரண்டைக்குச் செய்தி அனுப்பியிருக்கமாட்டார்கள். அந்தச் செய்தி கொண்டுவந்தவன் இரக்ஷகரண்டையில் வந்த நாளிலே தானே அவன் மரித்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் இரக்ஷகர் வந்தபோது கல்லறையில் நாலுநாள் இருந்திருக்கமாட்டான். செய்திகொண்டுவந்தவன் இரக்ஷகரிடத்தில் சேர்ந்த நாளொன்று, அவனை அனுப்பினபிறகு பெரேயாவில் அவர் தங்கினநாள் இரண்டு; அவர் மறுபடியும் பெத்தானியாவுக்குப் போன நாளொன்று, ஏனெனில், பெத்தானியாவுக்கும் அவர் இருந்த இடத்துக்கும் ஒருநாள் பயணத்துக்கு அதிகம் இல்லை. யூதர்களுடைய வழக்கத்தின்படி மரித்த நாளிலேயே அவன் அடக்கம்பண்ணப்பட்டிருக்கவேண்டும். மரித்தவுடனே கூடிய சீக்கிரத்தில் அடக்கம்பண்ணுகிறது யூதர்களுடைய வழக்கம் (யோவா. 11. 39. அப். 5. 6—10.). சீக்கிரம் அடக்கம்பண்ணுவதினால், மரித்தோரைக் கனம்பண்ணினதாக எண்ணின கிரேக்கரும் அவ்வளவு ஜாக்கிரதையாய் அடக்கம்பண்ணாமல், இரண்டு மூன்று நாள் பொறுத்து அடக்கம்பண்ணினதாக அவர்களுடைய புராதன சரித்திரங்களினால் அறிந்துகொள்ளுகிறோம்.

மெய்யாகவே தேற்றரவுசெய்கிறவர் வந்து சேருமுன்னே பெலவீனமான வேறு தேற்றரவாளிகள் வந்தார்கள். பெத்தானியா எருசலேமுக்குச் சமீபமாயிருந்தபடியால், அநேகர் அங்கிருந்து வந்திருப்பார்கள். அதுவுமல்லாமல் பெத்தானியாவிலிருந்த அவர்கள் இனத்தாரும் அவர்களுக்கு ஆறுதல் சொல்ல வந்திருக்கலாம். தெய்வச்செயலால் தேவகுமாரன் செய்யப்போகிற அற்புதங்களைப் பார்க்கிறதற்கு சாக்ஷிகளாகவும் அநேகர் அங்கே வந்து சேர்ந்திருக்கலாம். துக்கம் கேட்க அநேகர் வருகிறதும், இனத்தாரும் சிநேகிதரும் ஆறுதல் சொல்லக் கூடி வருகிறதும் யூதருக்குள் வழக்கமாயிருந்தது (1 நாளா. 7. 22.). இனத்தார்களானல் பத்துப்பேருக்குக் குறையாமல் இப்படிப்பட்ட சமயங்களில் வந்து, முப்பதுநாள் துக்கம் கொண்டாடுவார்களாம். அதில் முதல் மூன்றுநாளை அழுகையிலும், பிறகு ஏழுநாளை புலம்பலிலும், மீந்த இருபதுநாளையும் துக்கங்கொண்டாடுதலிலுமாகப் பின்னிடுகிறது வழக்கமாம். அநேகர் உண்மையாகவல்ல, பேருக்குமாத்திரம் துக்கங்கொண்டாட வருவார்கள். யோபுக்கு ஆறுதல்சொல்லவந்த சிநேகிதர்கள் எவ்வளவு கொஞ்சமாய் அவனுக்காக பரிதபித்தார்களென்று நமக்குத் தெரியுமே. துக்கத்துக்குக் காரணரானவர்களும் பரியாசமாக ஆறுதல்சொல்ல வருகிறது உண்டு (ஆதி. 37. 35.). மெய்யாகவே துயரப்படுகிறவர்களுக்கு ஆறுதல் அளிக்கிறவரும், கண்ணீர் யாவையும் துடைக்கிறவருமானவர் இந்தச் சமயத்தில் வந்துசேர்ந்தார். ஆனாலும் அவர் வீட்டுக்கு வரவில்லை. அவருக்கு விரோதிகளான யூதர்கள் வீடுநிறைய இருந்தார்கள். யூதர்களென்னும் வார்த்தை பொதுவாக இரக்ஷகருடைய விரோதிகளையே குறிக்கும். தமக்குப் பிரியமில்லாத அந்தச் சனக்கூட்டத்தின் நடுவிலே துக்கப்படுகிற சகோதரிகளைக் கண்டுபேச அவருக்கு மனமில்லை. ஊருக்கு வெளியே, ஒருவேளை லாசரு புதைக்கப்பட்ட இடத்துக்குச் சமீபமாய்க் கொஞ்சம் நேரம் தாமதித்திருந்தார். மரியாள் அவரைச் சந்திக்கப்போனபோது, கல்லறைக்குப் போகிறாளாக்கும் என்று யூதர்கள் சொன்னார்கள் (யோவா. 11. 31.). அங்கே

இருந்துகொண்டு, தாம் சமீபமாய் வந்திருக்கிறதைத் தெரிவிக்க ஆளனுப்பியிருப்பார். மார்த்தாள் அதைக் கேள்விப்பட்டபோது அவருக்கு எதிர்கொண்டுபோனுள்; மரியாளோ வீட்டில் உட்கார்ந்துகொண்டு இருந்தாள். இந்த வார்த்தைகளைக் கொண்டு லூக். 10. 39ல் சொல்லியிருக்கிறதுபோல, அவர்களுடைய குணங்கள் நமக்குத் தெரியவருகிறதென்று நாம் சொல்லக்கூடாது. அந்தச் சமயத்தில் மரியாள் உட்கார்ந்துகொண்டிருந்தாளென்று நாம் வாசிக்கும்போது, இயேசுவின் பாதத்தண்டையிலேயே உட்கார்ந்திருந்தாளென்று நாம் அர்த்தம்பண்ணவேண்டும். அவர் உட்கார்ந்திருந்ததையல்ல, இரக்ஷகருக்குச் சமீபமாயிருந்ததையே நாம் அங்கே கவனிக்கவேண்டியது. அங்கே அமைதலாய் உட்கார்ந்திருந்ததுபோல, இப்பொழுதும் இரக்ஷகர்பேரிலிருந்த அன்பினுல் அவர் இருந்த இடத்துக்கு அவள் ஓடிவரவேண்டும். அப்படியே போதகர் வந்திருக்கிறுர் என்று அவள் கேட்டவுடனே சீக்கிரமாய் எழுந்து அவரிடத்தில் வந்தாள் (யோவா. 11. 29.). போதகர் வந்திருக்கிறுர், உன்னை அழைக்கிறுரென்று மார்த்தாள் சொன்னபோதுதான் பரம சிநேகிதன் வந்தது அவளுக்குத் தெரிந்தது (யோவா. 11. 28.). கிறிசொஸ்தமென்பவர் சொல்லுகிறபடி, மார்த்தாள் மரியாளைவிட இரக்ஷகர்பேரில் அதிக அன்புள்ளவளாய் இருந்தாள் என்றல்ல, மரியாளுக்கு அவர் வந்த செய்தி தெரியாமலிருந்ததென்றே நாம் சொல்லவேண்டும். ஆனுல் சரித்திரத்தினின்று இந்த இரண்டுபேருடைய குணங்களைச் சற்றே நிதானித்து அறியலாம். மார்த்தாள் தன் துக்கத்திலேயும் சுறுசுறுப்புள்ளவளாயிருந்தபடியால், வெளியே நடந்த சங்கதிகளை அப்போதைக்கப்போது அறிந்துகொண்டாள். மரியாளோ துயரத்தில் அமிழ்ந்திருந்தபடியால் வீட்டிற்குள்ளிருந்து, வெளியே நடந்ததைக் கவனியாமல்போனுள், மரியாள் அவரைக் கண்டவுடனே அவர் பாதத்தில் விழுந்தாள். மார்த்தாள் அப்படிச் செய்ததாகச் சொல்லாமல்விட்டது சுவிசேஷகனுடைய குறைவோ, வேறெந்தக் காரணமோ தெரியவில்லை. மார்த்தாளும் இரக்ஷகரோடு சம்பாஷித்தாள், அதிகமாய்ப்

பேசினுள். மரியாள் தன் உள்ளத்திலிருந்த துக்கத்தையெல்லாம், "ஆண்டவரே, நீர் இங்கே இருந்தீரானுல் என் சகோதரன் மரிக்கமாட்டான்" என்கிற சுருக்கமான வாக்கியத்தில் அடக்கிச் சொன்னுள். பிறகு மவுனமாயிருக்கிருள். காரியம் வேறுவிதமாய் முடியக்கூடும் என்பதே அவளுடைய துக்கத்தை அதிகமாக்கிற்று. "இரக்ஷகர் சமீபமாய் இருக்கிறபோது இந்த வியாதி உண்டாகி, அவருக்கு ஆள் அனுப்பினவுடனே அவர் வந்திருப்பாரானுல், இந்த துக்கம் நேரிடமாட்டாதே. இறந்துபோன சகோதரனுக்கு துக்கங்கொண்டாடுகிறதற்குப் பதிலாக, உயிரோடிருக்கிற சகோதரனைப் பார்த்துச் சந்தோஷப்படலாமே" என்றுதான் அவர்கள் அதிகமாய்த் துக்கப்பட்டார்கள். ஆகிலும் மார்த்தாள் தன் நம்பிக்கையை முற்றிலும் விட்டுவிடவில்லை. அதிகக் காலஞ் சென்றபிற்பாடும் தன் நம்பிக்கை நிறைவேறும் என்பதுபோல பேசுகிருள். "இப்பொழுது என் சகோதரனை கல்லறை மூடிக்கொண்டாலும், நீர் தேவனிடத்தில் கேட்டுக்கொள்வது எதுவோ அதை தேவன் உமக்குத் தந்தருளுவாரென்று அறிந்திருக்கிறேன்" என்றுள். கிறிஸ்துவைக்குறித்து அவளுக்கிருந்த உயர்ந்த எண்ணங்களும் தாழ்ந்த எண்ணங்களும் இதில் காணப்படுகிறது. அவருடைய ஜெபம் அவ்வளவாய்க் கேட்கப்படுமென்று அவள் நினைத்தபடியால் உயர்ந்த எண்ணங்களும், தேவனோடு ஒன்றுயிருக்கப்பட்டவரால் சகலமும் ஆகக்கூடியதாயிருக்க அவர் ஜெபத்திலே கேட்டு வாங்கவேண்டுமென்று நினைத்ததினுல் தாழ்ந்த எண்ணமும் வெளிப்படுகிறது.

இரக்ஷகர் தெளிவாய் மாறுத்தரவு சொல்லாமல் அவள் விசுவாசத்தைச் சோதிக்கும்படிக்கு அவள் ஜாடையாய் வெளியிட்ட அவள் இருதயத்தின் விருப்பம் நிறைவேறும் என்று காட்டும்படி உன் சகோதரன் உயிர்த்தெழுந்திருப்பான் என்றுர். அது அவளுடைய இருதயத்துக்குச் சந்தோஷமாய் இருந்தபோதிலும், இரட்சகர் அந்தச் சமயத்திலேயே இந்த நன்மையை அளிப்பாரென்று விசுவாசியாமல், கடைசிநாளில் மற்ற உண்மையுள்ள இஸ்ரவேலரோடு அவனும் எழுந்திருப்

பான் என்கிறதுதான் அவருடைய கருத்தென்று எண்ணி, தன்னுடைய இருதயத்தின் விருப்பம் திருத்தியடையாததினால் சற்றே சடைவாய் உயிர்த்தெழுதல் நடக்கும் கடைசிநாளிலே அவனும் உயிர்த்தெழுந்திருப்பானென்று அறிந்திருக்கிறேன் என்றாள். அவளுடைய அன்பு பூமிக்குரியதானபடியால் பரத்துக்குரிய காரியங்கள்பேரிலேயே நாட்டங்கொண்டு மேன்மையும் சுத்தமுமுள்ளதாகவேண்டியதாயிருந்தது. அப். 12–ம் அதிகாரத்தில் இதைப்போல ஒரு திருஷ்டாந்தத்தைப் பார்க்கிறோம். சபையார் பேதுருவின் விடுதலைக்காக ஜெபம்பண்ணினார்கள். அவர்கள் ஜெபம் கேட்கப்பட்டது. ஆனாலும் பேதுரு விடுதலையானான் என்று விசுவாசியாமல்போனார்கள். கர்த்தர் அவர்களுடைய எண்ணங்களை மேலோகத்திற்கேற்றதாக உயர்த்தாவிட்டால், அவர்களுடைய ஆத்துமாவின் விருப்பத்தை நிறைவேற்றுவதினால் யாதொரு பிரயோஜனமுமில்லை. அவர்களுடைய சகோதரன் உயிரோடே வந்தாலும் அவளாவது, அவனாவது மரிக்கும்போது ஒருவரைவிட்டு ஒருவர் பிரியவேண்டியிருக்குமே. அப்பொழுது என்ன செய்வார்கள்? அவர்கள் இருவரும் கிறிஸ்துவின் மேலான ஜீவனுக்குப் பங்காளிகளானால்தான் இரட்சகர் செய்யப்போகிற நன்மை அவர்களுக்குப் பிரயோஜனமாயிருக்கும். அப்பொழுது மரணம் அவர்கள்பேரில் யாதொரு வல்லமையும் செலுத்தமாட்டாது. அப்போது அவர்கள் என்றென்றைக்கும் ஒருவருக்கொருவர் பிரயோஜனமுள்ளவர்களாய் இருப்பார்கள். இதைப் போதிக்கும்படிக்காகவே இரக்ஷகர் அவர்களுக்கு தம்முடைய தன்மையையும் காண்பிக்கிறார். தற்கால பிரயோஜனத்துக்கு உதவாத சத்தியங்களையல்ல, அவர்களுடைய ஆத்துமாவுக்கு மிகவும் அவசியமானதையே அவர்களுக்குப் போதிக்கிறார். இறந்துபோன சகோதரனைக்கொண்டு எப்பொழுதுமிருக்கிற இரட்சகனை அறிந்துகொள்ளும்படி செய்கிறார். அந்தச் சகோதரனை எப்பொழுதும் அவர்கள் அந்த இரட்சகரிடத்தில்தான் உண்மையாய்க் கண்டுபிடிக்கலாம். "நானே உயிர்த்தெழுதலும் ஜீவனுமாயிருக்கிறேன். மெய்யான ஜீவனும் மெய்யான உயிர்த்

தெழுதலும் மரணத்தின்மேலுள்ள நித்தியமான ஜெயமும் என்னிலேதான் உண்டு. நீ இப்பொழுது சொல்லுகிறபடி அது உலகத்தின் கடைசியில் நடக்கப்போகிற தூரமான காரியமல்ல. என்னிடத்திலேயே இருக்கிறதை நான் வேறொருவரிடத்தில் கேட்டுப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்று நீ சற்று முன்னே சொன்னாயே; அப்படி எந்த வல்லமையும் என்னிலிருந்து பிரிந்திருக்கிறதுமில்லை, என்னைவிட்டுப் பிரிந்திருக்கத்தக்கதுமல்ல. பாதாளத்தை மேற்கொள்ளும் ஜெயம் என்னில் உண்டு. நித்தியஜீவனும் என்னில் உண்டு. என்னில் வைக்கும் விசுவாசத்தினால் மரணத்தை மரணமல்லாதபடிக்கு அனுபவிக்கிற சலாக்கியம் உங்களுடையதாகிறது. மரணம் உங்களை மேலான ஜீவனுக்கு நடத்துகிறதாயிருக்கும்."

இந்த விசேஷித்த வார்த்தைகளின் கருத்து இதுதானென்று நினைக்கிறேன். இவைகளை இன்னும் சற்று விபரமாய்க் கவனிக்கிறது நல்லது. கிறிஸ்து தம்மை உயிர்த்தெழுதல் என்று அழைத்துக்கொள்ளும்போது அது தாம் சொல்லுகிற ஜீவனுக்கு ஒரு விதத்தில் சற்று அதிகப்பட்டதாயும், வேறுவிதத்தில் சற்று குறைந்ததாயும் இருக்கிறது. அது ஜீவனைவிட அதிகம், எனெனில் அது மரணத்தோடு போராடி ஜெயம்கொள்ளுகிறது. தேகமானது அழிந்து தானாய் நாசமடையும்போது அதற்குக் காரணமாகிய மரணத்தை நாசஞ்செய்கிற ஜீவனாயிருக்கிறது. அது ஜீவனைவிட சற்றே குறைந்ததென்று சொன்னேன். உயிர்த்தெழுதல் என்னும் பேர் அவருக்கு இருக்கும்வரையில் இன்னும் முடியாத ஒரு காரியம், ஜீவனால் முற்றிலும் விழுங்கப்படாத மரணம், முற்றிலும் கொல்லப்படாமல் காலின்கீழ் அகப்படாத கடைசிச் சத்துரு ஒன்று இன்னுமுண்டென்று காட்டுகிறது (1 கொரி. 15. 25, 26.). அவர் மரித்தோரின் உயிர்த்தெழுதலாயிருக்கிறதுபோல ஜீவனுள்ளோரின் ஜீவனுமாயிருக்கிறார். அவரே ஜீவன். அவரில் ஜீவனுண்டு. அப்படியிருக்கும்படிக்கு பிதா அவருக்குக் கொடுத்திருக்கிறார் (யோவா. 5. 26.). ஜீவ ஊற்று அவர் ஒருவரே (வெளி. 1. 8. ரோ. 4. 17. கொலோ. 3. 4. சங். 35. 9. 1 தீமோ. 6. 16.). அவரிடத்

திலிருந்து ஜீவனைப் பெருத யாவரும் மரணத்துக்குப் போகிறார்கள். முதலாவது ஆத்துமமரணமும் பிறகு அவர்கள் மரணத்தை நிறைவாக்குகிற சரீரமரணமுமாம். "என்னை விசுவாசிக்கிறவன் மரித்தாலும் பிழைப்பான். உயிரோடிருக்கையில் என்னை விசுவாசிக்கிறவன் எவனே அவன் ஒருக்காலும் மரிக்கமாட்டான்." இந்த வார்த்தைகளின் மொத்தக் கருத்து தெளிவாயிருக்கிறது. ஆகிலும் இந்த இரண்டு வெவ்வேறான வாக்கியங்களின் கருத்தைப் பிரித்தெடுக்கிறதும், ஒன்றைவிட ஒன்றின் கருத்து எப்படி அதிகப்படுகிறதென்று காட்டுகிறதும் இலேசல்ல. இந்த வாக்கியத்தை யோவா. 6. 32—59லுள்ள வாக்கியங்களோடு ஒத்துப்பார்த்து கடைசிநாளில் உயிரோடு எழுப்புகிறதே தேவகுமாரனுடைய விசேஷித்த வேலையென்று அடிக்கடி அங்கே சொல்லியிருக்கிறதை நாம் கவனித்தால் (39. 40, 44, 54.) பிழைப்பான் என்கிற முந்தின வாக்கியத்திலுள்ள வார்த்தையானது அங்கே நான் அவனைக் கடைசிநாளில் உயிரோடு எழுப்புவேன் என்கிற வார்த்தைக்குச் சரியாயிருக்கிறதென்றும், முந்தின வாக்கிய முழுவதிலும் நானே உயிர்த்தெழுதல் ஆகையால் என்னை விசுவாசிக்கிற ஒவ்வொருவனையும் மரணத்தினின்றும் பாதாளத்தினின்றும் நான் விடுவிப்பேன் என்று இரட்சகர் சொல்லுகிறாரென்றும் நினைக்கலாம். அப்படியே 2-ம் வாக்கியம். நான் ஜீவன் என்கிற வார்த்தைகளின் பொருளென்று சொல்லலாம். அதாவது உயிரோடிருக்கிறவன் எவனே, சுவாசமிடுகிறவன் எவனே, அவன் என்னை விசுவாசித்தால் நித்தியஜீவனின் வல்லமையை அறிவான். மெய்யாகவே அவன் என்றைக்கும் சாகான் என்கிறதுபோல இரட்சகர் சொல்லுகிறார். இரக்ஷகருடைய வார்த்தைகளில் நாம் அடிக்கடி காண்கிறபடி இங்கேயும் அவர் தேகமரணத்தை ஒரு பொருட்டாய் எண்ணிப் பேசவில்லை. அவரில் விசுவாசமாயிருக்கிறவன் மரணத்தின்மேல் இப்போதே உயர்த்தப்பட்டு நித்தியஜீவனுக்குப் பங்காளியாக எண்ணப்படுகிறான். (யோவா. 6. 47.)

இவ்வளவு தூரம் இரட்சகர் தம்மைக்குறித்துப் பேசினபிறகு அவர் மார்த்தாளைப் பார்த்து, இதை விசுவாசிக்கிறாயா என்று

கேட்கிறார். நான் ஜீவனுக்கும் மரணத்துக்கும் அதிபதியென்று நீ விசுவாசிக்கிறாயா? உயிர்த்தெழுதலும், மரணத்துக்குப்பின் நித்தியஜீவனும் என்னிலுண்டென்று உன் விசுவாசம் உனக்குச் சொல்லுகிறதா என்று கேட்கிறார். ஆம் ஆண்டவரே, நீர் உலகத்தில் வருகிறவரான தேவகுமாரனாகிய கிறிஸ்து என்று நான் விசுவாசிக்கிறேன் என்றாள். இந்த அவள் மாறுத்தரவு நமக்கு முந்தி வெகு நேரானதாய்த் தோன்றும். ஏனெனில் மரித்தோரை உயிரோடு எழுப்புகிறது மேசியாவாகிய கிறிஸ்துவின் அலுவல்களில் ஒன்றென்று யூதர்கள் எதிர்பார்த்திருந்தபடியால் அவர் கிறிஸ்து என்று அவள் அறிக்கையிட்டபோது மரித்தோரை உயிர்ப்பிக்கிறவராகவும் அவள் ஒப்புக்கொண்டதாகத் தோன்றும். அல்லது உம்மைக்குறித்துச் சொல்லப்பட்ட மகிமையான காரியங்களெல்லாவற்றையும் நான் விசுவாசிக்கிறேன். இவ்வுலகுக்குண்டாகும் எந்த மகிமையான ஈவும் உம்மிலிருக்கிறதென்று நான் விசுவாசிக்கிறபடியால், உம்மைக்குறித்து நான் விசுவாசியாதது ஒன்றுமில்லையென்று சொன்னதுபோல அர்த்தம்பண்ணலாம். வெளியரங்கமான விசுவாசத்தோடல்ல, உள்ளான விசுவாசத்தோடு பேசுகிறவர்களைப்போல பேசுகிறாள். அந்த நாமத்தில் அடங்கியிருந்த கருத்தெல்லாம் அவள் அறியவில்லை. அடங்கியிருந்ததெல்லாவற்றையும் விசுவாசிக்க மனதுள்ளவள்போலப் பேசுகிறாள். அநேகருடைய விசுவாசம் எக்காலத்திலும் இப்படித்தான் இருக்கும்.

இவ்வளவு சொல்லிப்போட்டு அதிகநேரம் காத்திருந்து வாஞ்சையோடு அவர்கள் எதிர்பார்த்திருந்தவர் வந்து சேர்ந்தார் என்கிற சந்தோஷமான செய்தியைத் தன் சகோதரிக்குச் சொல்லப்போகிறாள். அவர் சொன்ன அதிசயமான வார்த்தைகளிலே ஏதோ ஒரு விசேஷமிருக்கிறதென்றும் அறிந்துகொண்டாள். இன்னதென்று திட்டமாய்த் தெரியாவிட்டாலும், அவள் இருதயத்தில் ஆறுதலைக் கொடுக்கத்தக்க ஏதோ ஒரு காரியம் தனக்குக் கிடைத்ததென்று எண்ணினபடியால், தன் சகோதரிக்கு அதைச் சொல்ல சந்தோஷத்தோடு போகிறாள். ஆகிலும் எருசலேமிலிருந்து தங்களைப் பார்க்கவந்த சிலர் இரட்சகருக்கு

விரோதிகளாயிருப்பார்களென்று பயந்து, அந்தச் செய்தியை வெளியரங்கமாய்ச் சொல்லவில்லை. அவள் அப்படிச் சந்தேகப்பட்டதும் நியாயமாய்த்தான் இருந்ததென்று பின் நடந்த சங்கதியால் அறிந்துகொள்ளுகிறோம் (யோவா. 11. 46.). தன் சகோதரி மரியாளை இரகசியமாய் அழைத்து: போதகர் வந்திருக்கிறார், உன்னை அழைக்கிறார் என்றாள். இரக்ஷகர் மரியாளை அழைத்ததைப்பற்றி முந்தின வாக்கியங்களில் ஒன்றும் காணோம். அவளுடனே எழுந்திருந்து போகிறாள். அவளைச் சூழ இருந்தவர்கள் தன் துக்கத்தின் அகோரத்தினால் கல்லறையண்டையில் அழப்போகிறாள் என்றெண்ணி, அவளைப் பின்சென்றார்கள். யூதஸ்திரீகள் தங்கள் இனத்தாருடைய கல்லறைக்கு அடக்கம்பண்ணின துவக்கத்தில் அடிக்கடி போகிறது வழக்கமாயிருந்தது. அவர்களெல்லாரும் அவளோடு போனது தெய்வச் செயலாயுமிருந்தது. ஏனெனில் இவ்வகையாய் அந்த அற்புதம் நடந்ததற்கு அநேகர் சாக்ஷிகளானார்கள். இயேசு இருந்த இடத்தில் மரியாள் வந்து, அவரைக் கண்டவுடனே, அவர் பாதத்தில் விழுந்து: ஆண்டவரே, நீர் இங்கே இருந்தீரானால் என் சகோதரன் மரிக்கமாட்டான் என்றாள். இரக்ஷகரைக் கண்டவுடனே தன் சகோதரி சொன்ன வார்த்தைகளையே இவள் சொன்னபடியால், தங்கள் அருமையான சகோதரனை மண்ணுக் கொப்புக்கொடுத்தபிறகு அந்த துக்கவீட்டில் நடந்த சம்பாஷணையின் மொத்தப்பொருளை நாம் நன்றாய் அறிந்துகொள்ளலாம். அந்த நாலுநாளாக அந்தச் சகோதரிகள் ஒருவரோடொருவர் நம்முடைய பரமசிநேகிதர் நம்மோடிருந்திருப்பாரானால் காரியம் இப்படி முடிந்திராதேயென்று அடிக்கடி சொல்லியிருப்பார்கள். அவர்களுடைய இருதயங்களில் இந்த ஒரு எண்ணந்தான் இருந்தது; அவர்களுடைய வாயில் இந்த ஒரு வார்த்தை தான் இருந்தது. ஆதலால்தான் ஒருவரையொருவர் அறியாமல் இந்த வார்த்தைகளையே இயல்பாய் முந்திச் சொன்னார்கள். இந்தச் சரித்திரத்தில் நாம் கவனிக்கிற விசேஷங்களில் இது ஒன்று.

சகோதரிகள் அழுதார்கள், எருசலேமிலிருந்து வந்த சிநேகிதரும் கண்ணீர்விட்டார்கள், இயேசுவானவரும் கலங்கித்

துயரமடைந்தார். கலங்கினார் என்று திருப்பியிருக்கிற வார்த்தை கோபத்தையும் மன எரிச்சலையும் முக்கியமாய்க் காண்பிக்கும். ஆனால் இயேசுவானவர் யாரோடே கோபமாயிருந்தார் என்று திட்டமாய்ச் சொல்ல ஏதுவில்லை. தானே துயரப்பட்டுக் கண்ணீர்விட்டதற்காக தம்முடைய மனப் பெலவீனத்தைக்குறித்து தம்மோடு தாமே கோபமாயிருந்தார் என்று சிலர் சொல்லுகிறது உதவாது. கிறிஸ்துமார்க்கம் இப்படிப்பட்ட குணங்களை மட்டுத்திட்டப்படுத்துமேயொழிய, முற்றிலும் நீக்கிப்போடமாட்டாது. அழுகிறவர்களோடே அழுங்கள் என்று சொல்லியிருக்கிறது. துக்கத்தின் ஊற்று வற்றிப்போகவேண்டும் என்றல்ல, அதைச் சுற்றிக் கரைபோட்டு மட்டுத்திட்டப்படுத்தவேண்டும் என்பதே அதின் நோக்கம். அங்கிருந்த பொல்லாத யூதர்களைப்பார்த்து: தாம் செய்யப்போகிற அற்புதத்தை விசுவாசிக்கமாட்டார்கள் என்று அறிந்து, அவர்கள்பேரில் மனஸ்தாபப்பட்டார் என்று சிலர் எண்ணுகிறார்கள். வேறு சிலர் மார்த்தாளும், மற்றவர்களும் அழுததினால் தாம் உயிரோடே எழுப்ப வல்லவரென்று விசுவாசிக்கவில்லையே என்று அவர்கள்பேரில் மனஸ்தாபப்பட்டதாகச் சொல்லுகிறார்கள். இதுவும் சரியல்ல. ஏனென்றால் சற்றுப்பிறகு அவரே கண்ணீர்விட்டார். ஆதலால் அவர்கள் அழுததில் யாதொரு தப்பிதம் இல்லை.

ஜீவனின் அதிபதியாகிய இவர், பாவத்தாலுண்டான கேட்டைப் பார்த்து கோபமடைந்தார் என்று சொல்வதே சரி. மரணம் எவ்வளவு பயங்கரமானதென்றும், அது பாவத்தின் சம்பளந்தான் என்றும் அவர் கண்டார். உலகம் முழுவதும் பரவியிருக்கும் தீங்கு அவர் முன்னாலே நின்றது. உலகத்தாரெல்லாரும் கண்ணீர்விடுகிறதுபோலவும், அவர்கள் எல்லாரும் கல்லறைக்குள் போக ஏதுவாயிருக்கிறதாகவும் அவர் பார்த்தார். கண்ணீர் யாவையும் துடைக்கப்போகிறவராய் இருந்தபோதிலும், அவருக்குள் இருந்த துக்கமும் கோபமும் கொஞ்சமல்ல. லாசரு உயிரோடெழுந்திருந்தான்; ஆகிலும் மரணத்தின் கசப்பை அவன் மறுபடியும் ருசிக்கவேண்டியிருந்தது. துக்

கப்பட்டுக்கொண்டிருந்த இவர்களை அவர் கொஞ்சநேரமாத் திரம் ஆறுதல்படுத்தலாம். அவர்களுடைய கண்ணீரை அவர் இப்போது துடைத்தபோதிலும், பின்னும் அவைகள் ஓடவே செய்யும். எத்தனைபேர் கொஞ்சநேரத்துக்காவது அவைகளைத் தடுக்கத்தக்க தேற்றரவாளனில்லாமல் கண்ணீர்விட்டார்கள். இன்னும் கண்ணீர்விடவேண்டியதிருக்கும். இவைகளெல்லா வற்றையும் அவர் பார்த்தார்; இவைகளுக்குக் காரணமாகிய பாவத்தின்பேரில் எரிச்சலானார். கண்டவுடனே தாமதியாமல் அதோடு போர்செய்து இனி தாம் அடையப்போகிற நிறை வான ஜெயத்துக்கு முன்குறிப்பாக இப்பொழுது மரணத்தை வெல்லப்போகிறார். இந்த எண்ணத்தோடே அவனை எங்கே வைத்தீர்கள் என்றார். ஆண்டவரே, வந்துபாரும் என்றார்கள். இயேசு கண்ணீர்விட்டார். லூக். 19. 41ல் அழுததாகச் சொல்லியிருக்கிறது. அவரையும் துயரம் பிடித்தது. அங்கே யிருந்த சில யூதர் மற்றவர்கள் துக்கத்தைக் கண்டு, இரக்ஷகர் கண்ணீர்விட்டதைப் பார்த்து, இதோ இவர் அவனை எவ்வள வாய்ச் சிநேகித்தார் என்றார்கள். வேறு சிலர் வஞ்சகமாய்க் குருடனுடைய கண்களைத் திறந்த இவர், அவனைச் சாகாமலிரு க்கப்பண்ணவும் கூடாதா என்றார்கள். இப்பொழுது இந்தத் துன்பத்தைக்குறித்துக் கண்ணீர்விடுகிறாரே, இது நடவாத படி தடுக்கக்கூடாதா? குருடனுடைய கண்களைத் திறக்கக் கூடிய இவர், தேவனை நோக்கிப் பிரார்த்தித்து இந்த மனு ஷனை மரியாமலிருக்கப்பண்ணக்கூடாதா என்றார்கள். யோ வான் 9-ம் அதிகாரத்தில் சொல்லியிருக்கிற குருடனைப்பற்றிப் பேசுகிறார்கள். இப்படி அவர்கள் சொல்லுகிற ஆட்சேபனை யில் வழக்கமாய்த் தோன்றுகிற ஒரு விகற்பம் காணப்படுகிறது. மரணத்தை நிறுத்தத்தக்கதாக அவ்வளவு வல்லமையும் தயவும் அவரிடத்திலிருக்குமானால், செய்யக்கூடிய உதவியை தாராள மாய் மனதாரச் செய்வாரென்று அவர்கள் எண்ணாமல்போனார் கள். முந்தி அவர் உயிரோடெழுப்பினவர்களைக்குறித்து பே சாமல், அந்தக் குருடனைச் சுகமாக்கின சங்கதியைக்குறித்து அவர்கள் பேசினபடியால் அதின் உண்மை அவர்கள் மனதில்

பட்டிருந்ததென்று பார்க்கிறோம். செத்தவர்களை உயிரோடெழுப்பின சங்கதியைக்குறித்துப் பேசினார்களானால் காரியத்துக்கிசைவாயிருக்கும். ஆகிலும் தூரமான கலிலேயாவில் அநேக நாளுக்குமுன் நடந்த சங்கதிகள் அவர்களுக்கு அத்தனை நன்றாய்த் தெரிந்திருக்கமாட்டாது. குருடனுக்குப் பார்வையளித்த இந்த அற்புதமோ, யாவருக்கும் நன்றாய்த் தெரிந்தகாரியம். அதினால் அதிக வருத்தங்களும் விசாரணைகளும் தர்க்கங்களும் நேரிட்டது யாவருக்கும் தெரியும். ஆகிலும் இந்தச் சங்கதி நடவாமலிருக்க, கட்டுமானமாய் ஒருவன் இப்படி எழுதியிருப்பானாகில், செத்தவர்களை எழுப்பின அற்புதங்களை இரட்சகருடைய வல்லமையைக் காட்டுகிறதற்கான திருஷ்டாந்தரங்களாக எடுத்துச்சொல்வானேயொழிய, இந்த அற்புதத்தைச் சொல்லமாட்டான்.

இப்படிப் பேசிக்கொண்டே கல்லறைக்கு வந்தார்கள். அதற்குள்ளாக இரட்சகர் இன்னொரு விசை கலங்கினதாகச் சொல்லியிருக்கிறது. மரணம் எவ்வளவு கொடியதென்று நம்மைவிட அவருக்கு நன்றாய்த் தெரியும். மரணத்துக்குக் காரணமாகிய வியாதிமுதலியவைகளை அவர் பாராமல், பாவத்தையே அதின் ஆதிகாரணமாகக் கண்டார். சாவாமையுள்ளவர்களாய்ச் சிருஷ்டிக்கப்பட்ட மனுஷஜாதிக்கு மரணம் வந்தது அவருக்கு அவ்வளவு விகற்பமாய்த் தோன்றிற்று. சரித்திரத்தில் தெரியவருகிறபடி கல்லறை ஊருக்கு வெளியேயிருந்தது (யோவா. 11. 30.). கிழ்த்திசை தேசங்களில் இதுதான் வழக்கம் (லூக். 7. 12.). மரித்தோரை உயிரோடிருக்கிறவர்கள் நடுவில் வைக்கிறதேயில்லை. அது ஒரு குகையாயிருந்தது. யூதர்கள் தங்கள் சவங்களை இப்படிப்பட்ட குகைகளிலேயே வைப்பார்கள். இந்தக் குகைகள் அப்படியே மலைகளிலிருக்கிறதுமுண்டு (ஆதி. 33. 9.); அல்லது மனுஷர்கள் பிரயாசப்பட்டு வெட்டுகிறதுமுண்டு (எசா. 22. 16. மத். 27. 60.). சிலவேளை தோட்டத்திலும் (யோவா. 19. 41.), சிலவேளை ஒரு குடும்பத்தைச் சேர்ந்த வயலிலும் அதைக் காணலாம் (ஆதி. 23. 9, 17—20; 35. 18. 2 இரா. 21. 18.). சிலவேளைகளில் அது அறையறையாக வகுத்திருக்கும். அதற்கு

வாசல் நிலமட்டத்துக்குச் சரியாயிருந்தாலும் இருக்கும். படிகளால் இறங்கிப்போகவேண்டியதாயுமிருக்கும். கல்லறையின்மேல் கல்லிருந்தபடியால், இதற்குள் இறங்கிப்போகப் படிகள் இருந்ததாகத் தோன்றுகிறது. துஷ்டமிருகங்கள் உட்பிரவேசியாதபடிதான் அப்படி அடைப்பார்கள். அடைக்காவிட்டால் நரிகள் ஏராளமாய் வந்து சரீரங்களைப் பீறித் தின்றுபோடும். மனுஷர் தள்ளக்கூடாத அத்தனை பெரிய கல்லை வைப்பார்கள் (மாற். 16. 3.). நம்முடைய இரட்சகருடைய கல்லறையிலும் வாசலில் பெரிய கல் இருந்ததாகச் சொல்லியிருக்கிறது.

இவர்களுக்கு இப்படிப்பட்ட கல்லறைகள் இருந்தபடியால் மார்த்தாளும் மரியாளும் அத்தனை ஏழைகளல்லவென்று காணப்படுகிறது. ஏழைகளுக்கு இப்படிப்பட்ட கல்லறை கட்டத்தக்க இடங்களிராது; ஐசுவரியவான்களுக்கே இந்த சலாக்கியம் உண்டு. அவர்கள்தான் தங்கள் பிதாக்களோடு கல்லறையில் வைக்கப்பட்டார்கள். மேலும் இவர்களுக்கு ஆறுதல் சொல்லவந்த திரளான ஜனங்களையும் அவர்கள் சற்றே உயர்ந்த அந்தஸ்துடையவர்கள் என்பதையும் நாம் கவனிக்கும்போது, அவர்கள் ஐசுவரியவான்கள் என்று நன்றாய்ச் சொல்லலாம். யூதர்கள் என்று யோவான் சொல்லும்பொழுது இரட்சகருக்கு விரோதிகளான உயர்ந்த அந்தஸ்துடையவர்களையே குறிக்கிறான் (யோவா. 1. 19; 7. 13; 8. 22; 9. 22; 20. 19.). துக்கமான சமயங்களிலும் சாலொமோன் சொல்லுகிறபடி செல்வம் அநேக சிநேகிதரைச் சேர்க்கும்; தரித்திரனோ தன் சிநேகிதனாலும் நெகிழப்படுவான் (நீதி. 19. 4.). பின்னும் யோவா. 12. 3ல் மரியாள் இரட்சகருடைய பாதங்களின்பேரில் ஊற்றின தைலம் விலையேறப்பெற்றதாயிருந்ததென்பதைக்கொண்டும் அவர்கள் ஐசுவரியவான்களென்று நிதானிக்கலாம். பூர்வீகத் திருச்சபையாரும் அவர்களைக்குறித்து அப்படியே எண்ணினார்கள். கிறிசொஸ்தம் என்பவர் அவர்கள் பிறப்பின்படி உயர்ந்த அந்தஸ்துடையவர்கள் என்கிறார். அப்படியிருந்தாலும், யோவா. 11. 1ல் அவர்களைக்குறித்துச் சொல்லியிருக்கிறதைக்கொண்டு பெத்தானியா ஊர் அவர்களுக்குச் சொந்தமான கிராமமென்று

சிலர் எண்ணுகிறது சரியல்ல. ஒருவர் இரண்டுபேருடைய வசத்தில் அவ்வளவு பூஸ்திதியிருப்பது லேவியருடைய சட்டங்களுக்கு விரோதம். அந்தப்படி அர்த்தம்பண்ணவேண்டுமானால் பெத்சாயிதா என்ற ஊர் அந்திரேயாவுக்கும் பேதுருவுக்கும் சொந்தமாயிருக்கவேண்டும். அவர்களைக்குறித்தும் இப்படியே சொல்லியிருக்கிறது. (யோவா. 1. 45.)

யோவா. 11. 39ல் மரித்தவனுடைய சகோதரியென்று மார்த்தாளைக்குறித்துச் சொல்லவேண்டியதென்ன? இது சரித்திரத்தில் தெளிவாய் விளங்குகிறதே. கல்லையெடுக்க மனமில்லாமல் இருந்ததற்குக் காரணமாக இப்படிச் சொல்லியிருக்கலாம். மரித்தவனுடைய சகோதரியானபடியால், உடல் உலைந்துபோயிருக்குமே, மற்றவர்கள் வேடிக்கையாகப் பார்ப்பார்களே, அவன் உயிரோடிருக்கும்போது அவனைச் சிநேகித்தவர்களுக்கே அவன் உடல் இப்போ பயங்கரமாயிருக்குமே என்று பதறுவது இயல்புதான். ஆகிலும் ஆண்டவரே, இப்பொழுது நாறுமே, நாலுநாளாயிற்றே என்று அவள் அநுபவத்தினால் சொல்லாமல், நாலுநாளாயிருந்ததைக்கொண்டு அப்படியிருக்கும் என்று சொல்லுகிறாள். காங்கையான தேசங்களில் சவங்கள் சீக்கிரம் உலைந்துபோகும்; ஆனதினால் சீக்கிரம் அடக்கம் பண்ணுவது வழக்கம். நாலுநாளானபிறகு எவ்வளவாய்க் கெட்டுப்போயிருக்குமென்று பயந்தாள். இதினால் அற்புதத்தின் வல்லமை விசேஷமுள்ளதாயிற்று. ஏனெனில் செத்துப்போனதைமாத்திரமல்ல, செத்துக் கெட்டு நாற்றமெடுத்ததையே உயிரோடெழுப்பினார். ஆதிமுதல் அந்தம்வரையில் பார்க்கிறவர், லாசருவை மறுபடியும் உயிரோடெழுப்பவேண்டுமென்று எண்ணினவர், அது கெட்டுப்போகாதபடி பாதுகாத்திருப்பார். தமது ஊழியக்காரரில் ஒருவன் தங்கவேண்டிய அந்த இடத்தை அவர் கவலையோடு பத்திரப்படுத்தியிருப்பாரென்று நன்றாய்ச் சொல்லலாம். மார்த்தாள் சொன்ன வார்த்தைகளில் இதற்கு விரோதமானது ஒன்றுமில்லை. ஏனெனில், கல்லறையினிடத்திலிருந்து கல்லைப் புரட்டுமுன்னமே அவள் அப்படிச் சொன்னாள்.

தன் சகோதரன் இன்னும் உயிர்த்தெழுந்திருப்பானென்று அவள் முன் பிடித்திருந்த விசுவாசத்தை இப்பொழுது தளர விட்டுவிட்டாள். இப்படியே விசுவாசம் சிலவேளை ஏற்றமும் வற்றமுமாய் இருக்கும். தாம் சிநேகித்தவனுடைய முகத்தைப் பார்த்துக்கொள்ள கல்லையெடுக்கச் சொன்னாரென்று நினைத்தாள். தேகம் இப்பொழுதே அழுகியிருக்குமே என்று சொல்லி இரட்சகருடைய எண்ணத்தைத் தவிர்க்கும்படி பார்த்தாள், மரித்து நாலுநாளாயிற்றே என்றாள். இயேசு அவளை நோக்கி: நீ விசுவாசித்தால் தேவனுடைய மகிமையைக் காண்பாய் என்று நான் உனக்குச் சொல்லவில்லையா என்று அவளைக் கடிந்துகொண்டார். இது எப்பொழுது சொன்னார்? எந்தச் சம்பாஷணையில் இது வருகிறதென்று பார்த்தால், அவளை முதலாவது கண்டுசெய்த சம்பாஷணையில்தான். இந்த வார்த்தைகளே அதில் இல்லாவிட்டாலும் விசுவாசத்தின் வல்லமையைக்குறித்தும் அதின்மூலமாய் கிறிஸ்துவின் வல்லமை நமக்குள் பரிபூரணமாகிறதைக்குறித்துமே அவர்கள் சம்பாஷித்தார்கள். ஆதலால் அந்த சம்பாஷணையைச் சுவிசேஷகன் சொல்லாமல் விட்டதை இங்கே இரட்சகர் சொல்லுகிறதாக நாம் எண்ணவேண்டியதில்லை. மார்த்தாள் இப்பொழுது ஒத்துக்கொள்ளுகிறாள், விசுவாசிக்கிறாள், இரட்சகர் செய்யப்போகிறதை தன் அவிசுவாசத்தினால் தடைசெய்யாதபடி இடங்கொடுக்கிறாள். நெருங்கின இந்த இனத்தார் சம்மதித்தபோது கல்லைத் தள்ளினார்கள். அந்தச் சமயத்தில் இரட்சகர் தேவனை இவ்விதமாய்த் தோத்திரிக்கிறார். இயேசு தம்முடைய கண்களை ஏறெடுத்து "பிதாவே, நீர் எனக்குச் செவிகொடுத்தபடியினால் உம்மை ஸ்தோத்திரிக்கிறேன்." செவிகொடுத்ததினால் தேவனை ஸ்தோத்திரித்ததைக்கொண்டு, அவர்களுடைய சீஷர்களும் இந்த வார்த்தைகளை வாசிக்கிற மற்றவர்களும், பிதா ஒருவேளை அவருக்குச் செவிகொடுக்கமாட்டாரென்றும் ஜெபம்பண்ணின பிறகு, எலிசாவைப்போல போன உயிரைத் திருப்பவும் கல்லறையிலிருந்து லாசருவை எழுப்பவும் அதிகாரம் பெற்றுக்கொண்டாரென்றும் தப்பிதமாய் எண்ணுகிறதற்கு இடமிருந்

ததே (1 இரா. 4. 33—35.). ஆகிலும் அந்த வல்லமை அவருக்குள் இருந்தது. பிதாவினிடத்திலிருந்து பிரிந்தல்ல, பிதா என்னத்தைச் செய்யக்கண்டாரோ அதைத்தான் அவரும் செய்தார். பிதாவோடு அவர் ஒன்றாயிருந்தபடியால் யாதொரு அட்டியில்லாமல் இந்த அதிசயமான கிரியைகளை நிறைவேற்றினார். ஆதலால் பிதாவே, உம்மைத் தோத்திரிக்கிறேன் என்ற வார்த்தைகளின் கருத்தையும் அப்படிச் சொன்ன முகாந்தரத்தையும் ஜனங்களெல்லாரும் கேட்கும்படி உரத்தசத்தமாயல்ல, தமது சீஷர் மாத்திரம் கேட்கத்தக்கதாகச் சொல்லுகிறார். நீர் எப்பொழுதும் எனக்குச் செவிகொடுக்கிறீரென்று நான் அறிந்திருக்கிறேன்; ஆனாலும் நீர் என்னை அனுப்பினதைச் சூழ்ந்துநிற்கும் ஜனங்கள் விசுவாசிக்கும்படியாக அவர்களினிமித்தம் இதைச் சொன்னேன் என்றார். அவர்களுக்கு அது பிரயோஜனமுள்ளது. கீழ் இருந்தல்ல மேலிருந்தும், மந்திர தந்திர உபாயத்தினாலும் சூனியத்தினாலுமல்ல தேவனிடத்திலிருந்தே இதைப் பெற்றுக்கொண்டாரென்று அவர்கள் அறிவதற்கு இது மிகவும் ஏற்றது. தேவனுக்குத் தோத்திரஞ்செலுத்தினபடியால் தேவனிடத்திலிருந்தே வல்லமை வந்ததென்று ஒத்துக்கொண்டதற்கு திருஷ்டாந்தரம். இப்படித் தோத்திரஞ்செலுத்தினவுடனே லாசரு உயிரடைந்தானென்றும், அவன் உயிரடைந்தவுடனே கல்லறையிலிருந்து வர கட்டளைபெற்றானென்றும் கிறிசொஸ்தம் சொல்லுகிறார். இது சரியல்ல. உரத்தசத்தமாய்ப் பேசி இல்லாத காரியங்களை இருக்கிறதாக அழைத்து லாசருவே, வெளியே வா என்று சொன்னபொழுது மரித்தவன் உயிரடைந்தான். தேவகுமாரனுடைய சத்தத்தினாலேயே மரித்தோர் உயிரடையவேண்டும்; அவர்களைக் கல்லறையிலிருந்து வரவழைக்கவேண்டும். பிரேதக்குழிகளிலுள்ள அனைவரும் அவருடைய சத்தத்தைக் கேட்குங்காலம் வருகிறது (யோவா. 5. 28, 29.). கர்த்தர் ஆரவாரத்தோடு இறங்கும்போது கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் உயிரோடே எழுந்திருப்பார்கள் (1 தெச. 4. 16.). கடைசி எக்காளமென்று சொல்லப்படுகிறது, மரணம் ஆளுகைசெய்யும் இடங்களிலெல்லாம் தொனிக்கும் தேவசத்தந்தான் (1 கொரி. 15. 52).

அற்புதங்களைப் பெருகப்பண்ண விரும்புகிறவர்கள் கால்களும் கைகளும் பிரேதச்சீலைகளினால் கட்டப்பட்டிருந்தும் அவன் வெளியே வந்தது ஒரு அற்புதம் என்கிறார்கள் (யோவா. 19. 40.). அப்படியானால் இவனைக் கட்டவிழ்த்துவிடுங்கள் என்று ஏன் சொன்னார்? அவன் இந்தச் சீலைகளால் சுற்றப்பட்டிருந்தபடியால் தாராளமாய் நடந்துவர ஏதுவில்லாவிட்டாலும், வருத்தத்தோடு நடக்கக்கூடியவனாயிருந்தான். அல்லது எகிப்தியருடைய வழக்கப்படி ஒவ்வொரு அவயவமும் வெவ்வேறாக சுற்றப்பட்டிருந்தது. எகிப்தியர் மும்மிகளின் ஒவ்வொரு விரலையும் அப்படித் தனிமையாய்ச் சுற்றுவார்களாம்.

லாசருவைக்குறித்து இன்னொரு இடத்தில்மாத்திரம் வாசிக்கிறோம் (யோவா. 12. 2.). அது அந்தப் பெண்ணுக்குச் சாப்பாடு கொடுக்கச்சொன்னதுபோலவும் (மாற். 5. 43.), உயிர்த்தெழுந்தபிறகு இரட்சகர் சாப்பிட்டதுபோலவும் (லூக். 24. 42. யோவா. 21. 13.), அவன் மெய்யாய் உயிர்த்தெழுந்ததற்கு அத்தாட்சிகள். அவன் தன் சகோதரிகளுக்கு மெத்த இளையவனென்றும் சாகும்போது அவனுக்கு வயது முப்பதென்றும் உயிர்த்தெழுந்த பிறகும் முப்பது வருஷம் உயிரோடிருந்தானென்றும் சொல்லுகிறார்கள். அவன் மார்ஷேல்ஸ் பட்டணத்துக்குக் கண்காணியாயிருந்தானென்று சொல்வது உறுதியான பேச்சல்ல. அவன் உயிர்த்தெழுந்தவுடனே இரட்சகரைப்பார்த்து தான் மறுபடியும் சாகவேண்டியதாயிருக்குமோ என்று கேட்டானும். இரட்சகர் ஆம் என்று சொன்னபடியால் பிறகு அவன் ஒருபோதும் நகைக்கவே இல்லையாம்.

இவ்விடத்தில் யோவான் அற்புதத்தை நிறுத்திவிட்டு மரித்தோரிலிருந்து வந்தவனுக்கு இனமானவர்கள் எவ்வளவாய்ச் சந்தோஷப்பட்டிருப்பார்களென்று நாமே உத்தேசித்துக்கொள்ளும்படி அதைப்பற்றி ஒன்றுஞ் சொல்லவில்லை. ஆனால் இந்த அற்புதம் இரட்சகருடைய சரித்திரத்தோடு பிறகு எப்படி சம்பந்தப்பட்டிருக்கிறதென்பதை மாத்திரம் காட்டுகிறார். கர்த்தருடைய மாறாத தீர்மானத்தின்படி தேவகுமாரன் சிலுவையில் அறையப்பட்ட சங்கதியோடு சேர்ந்திருக்கிற காரியங்களில்

இதுவும் ஒன்ருய் இருந்ததென்றுமாத்திரம் காண்பிக்கிருர். இயேசு செய்தவைகளை பரிசேயரிடத்தில் அறிவித்தவர்கள் என்ன நோக்கத்தோடு அப்படிச் செய்தார்கள்? இதைப்பற்றி பல அபிப்பிராயங்கள் உண்டு. சிலர் ஓரிஜன் என்கிறவர் சொல்லுகிறபடி தாங்கள் கண்டவைகளை மறுக்கக்கூடாதென்று இவரே கிறிஸ்து என்று அவர்களையும் அறிக்கையிடும்படி செய்ய, நல்லநோக்கத்தோடே இப்படி அறிவித்திருப்பார்கள் என்கிருர்கள். சுவிசேஷகர்கள் இதைச் சொல்லுகிற வகையைப் பார்த்தால் அப்படி எண்ண இடமில்லை. மரியாளிடத்தில் வந்திருந்து இயேசு செய்தவைகளைக் கண்டவர்களாகிய யூதர்களில் அநேகர் அவரிடத்தில் விசுவாசமுள்ளவர்களாருர்கள். அவர்களில் சிலர் என்று சொல்லியிருப்பதால் இவர்கள் விசுவாசித்தவர்களல்ல; யூதர்களில் சிலர், இரட்சகருக்கு விரோதிகளானவர்கள் அப்படிச் சொன்ஞர்கள். அவர்கள் அற்புதத்தை விசுவாசிக்கவில்லை (லூக். 16. 31.). அவர்கள் அதைச் செய்தவருக்கு விரோதமாய்க் கோபத்தை எழுப்பிவிடவும், இவ்வளவுபெரிய அற்புதத்தைச் செய்தவருக்குக் கெடுதியுண்டாக தங்களால் இயன்றமட்டும் செய்யவேண்டியதைச் செய்யும்படி அவர்களை ஏவிவிடவும், அவர் சத்துருக்களிடத்தில் போய் நடந்ததைச் சொன்ஞர்கள். யோவான் சுவிசேஷகனும் அவர்கள் அறிவித்தார்களென்று சொன்னபிறகு, கிறிஸ்துவுக்கு விரோதமாக பரிசேயர் அதிக மூர்க்கங்கொண்டு அவரைக் கெடுக்க யோசனைபண்ணினதாகச் சொல்லுகிருர்.

அவர்கள் நடந்ததைக் கேட்டு பயந்தார்கள். இவ்வளவு பெரிய அற்புதத்தை அவர் செய்தபடியால், ஜனங்கள் எங்கே அவரைச் சேர்ந்துகொள்வார்களோ என்று பயந்தார்கள். பின் நடந்ததைப் பார்க்கும்போது அப்படியேயிருந்தது (யோவா. 12. 10; 11. 17—19.). கர்த்தருக்கு விரோதமாகவும் அவர் அபிஷேகம்பண்ணினவருக்கு விரோதமாகவும் அவர்கள் சங்கம் கூடிஞர்கள். அவரைத் தீட்பாக இந்த மனிதன் என்று பேசுகிருர்கள். அவர்கள் பார்த்தபடி அநேக அற்புதங்களைச் செய்தவர் தேவவல்லமையிஞலே செய்தாரோ, அவர் வாக்குத்தத்தம்பண்

ணப்பட்ட இஸ்ரவேலின் ராஜாவாயிருக்கலாமோ என்று அவர்கள் சற்றுவது யோசிக்கவில்லை. அவர் சொன்னது மெய்யோ, பொய்யோவென்று விசாரிக்கவே இல்லை. அதினால் தங்களுடைய உலகமேன்மை போய்விடுமே என்றுமாத்திரம் கவலைப்பட்டார்கள். "நாம் இவனை இப்படி விட்டுவிட்டால், எல்லாரும் இவனை விசுவாசிப்பார்கள்; அப்பொழுது ரோமர் வந்து நம்முடைய ஸ்தானத்தையும் ஜனத்தையும் அழித்துப் போடுவார்களே" என்று நூதனவகையாய் யோசித்தார்கள். இயேசுவானவரைக் கிறிஸ்து என்று அறிக்கையிடுவதினால் ரோமர் அவர்களுக்கு எப்படி விரோதமாய் வருவார்களென்பது முதலாவது அவ்வளவு தெளிவாய் விளங்கமாட்டாது. ஒருவேளை இப்படியிருக்கலாம். ஜனங்கள் அவரை மேசியா என்று அழைப்பார்கள், அவர் அவர்களுக்குத் தலைவராவார். ஒருவேளை பலவந்தமாயாவது அவரை ராஜாவாக்குவார்கள் (யோவா. 6. 15.). பிறகு அந்நியர் தங்கள்பேரில் ஆளுகைசெய்யாதபடிக்கு அவர்களை எதிர்க்கப்பார்ப்பார்கள். அப்போது ரோமர் தங்கள் ராணுவங்களோடு வந்து நம்மை அழித்துப்போடுவார்கள். குற்றமுள்ளவர்கள் இன்னார், குற்றமில்லாதவர்கள் இன்னாரென்று விசாரியாமல் எல்லாரையும் ஒன்றுபோல அழித்து, நம்முடைய அதிகாரத்தையும் சுயாதீனத்தையும் குலைத்து, நம்முடைய ஸ்தானத்தையும் ஜனத்தையும் அழித்துப்போடுவார்கள் என்று நினைத்திருக்கலாம். ஸ்தானம் என்பது தேவாலயத்தைக் குறிக்கும் (அப். 6. 13, 14; 21. 18.). இதின் மேலேயே அவர்கள் தங்கள் நம்பிக்கையெல்லாம் வைத்தார்கள். சிலர் எருசலேம் பட்டணத்தைக்குறித்து இங்கே ஸ்தானம் என்று சொல்லியிருக்கிறது என்கிறார்கள். அல்லது கலகம் எழுப்பாவிட்டாலும் அவரை மேசியா என்று சொல்வதினாலேயே ரோமர் சந்தேகங்கொண்டு கலகஞ்செய்து நம்மை அழித்துப் போடுவார்களென்று பயந்திருப்பார்கள். பிறகு ஒரு சமயத்தில் ரோமதுரை இந்தக் காரியத்தையே நினைத்து நீ யூதருடைய ராஜாவா என்று கேட்டான் (யோவா. 18. 33.). இன்னும் சில வாக்கியங்களால் ரோமருடைய வைராக்கியம் தெரியவரும்

(அப். 16. 21; 17. 7, 8.). அகுஸ்தீன் என்பவர் இதை வேறுவிதமாய் அர்த்தம்பண்ணுகிறார். பிறகு நடந்தபடி ரோமர் கலகஞ் செய்ய எத்தனிப்பார்களென்றும், சமாதானத்தின் பிரபு போதித்த போதனையின்படி ஜனங்கள் அந்தக் கலகத்துக்குட்பட மாட்டார்களென்றும், அதினால் தங்கள் நோக்கம் நிறைவேற மாட்டாதென்றும் எண்ணி பயந்ததாக நினைக்கிறார். இப்படி ரோமருடைய அதிகாரத்தை எதிர்க்கக்கூடாதபடியால், அவர்கள் இஷ்டமானபோது தங்களுக்குரிய நன்மைகளெல்லாவற்றையும் பறித்துக்கொள்வார்களென்றும் எண்ணியிருப்பார்கள். அகுஸ்தீன் ஒருவர்தான் இந்த அபிப்பிராயமுடையவர். இதைவிட முந்தினதே சரியானதென்று தோன்றுகிறது. ஆகிலும் இப்படி பயந்தவர்கள் உண்மையாக அப்படி பயந்தார்களோ, அல்லது அப்படி பயப்படுகிறதாக சும்மா காண்பித்தார்களோ என்பதும் சந்தேகமாய்த்தான் இருக்கிறது. ஏனெனில், சனகிரீம் சங்கத்தைச் சேர்ந்த சிலர் இப்படிப்பட்ட பயத்தைப் போட்டால்தான் ஜனங்கள் தங்கள் பட்சஞ் சேருவார்களென்று எண்ணியிருக்கலாம் (யோவா. 9. 16). கிறிசொஸ்தம் என்பவரும், கிரேக்குச் சபையைச் சேர்ந்த வேறு சிலரும் பயந்ததாகக் காண்பித்தார்களேயொழிய, உண்மையாகவே அப்படி பயப்படவில்லை என்கிறார்கள். என் கருத்துக்கு அவர்கள் உண்மையாக பயந்தார்களென்றே தோன்றுகிறது. ஜனங்கள் அவரைக் கிறிஸ்து என்று அறிக்கையிடாதபடிக்கு சங்கத்தைச் சேர்ந்தவர்கள் பலவிதமாய்ப் பல யோசனை சொல்லியிருப்பார்கள். அவரிடத்தில் போய் அவர் சொல்லுகிறதைக் கேளாதபடி தடுக்கவேண்டுமென்று யோசித்திருப்பார்கள்; அல்லது முன் செய்ததுபோல அவரைக் கிறிஸ்து என்று அறிக்கையிடுகிறவனை ஜெபஆலயத்துக்குப் புறம்பாக்குவோமென்று பிரசித்தப்படுத்தலாமாவென்று யோசித்திருப்பார்கள் (யோவா. 9. 22.). இவைகளெல்லாம் உதவாதென்று அறிந்த காய்பா என்பவன் மற்றவர்களைவிட கெட்டவனும் தைரியமுள்ளவனுமானபடியால் அவர்களைச் சும்மாவிருக்கச் சொல்லி அவர்கள் சொல்ல பயந்திருந்த நல்ல உபாயத்தைச் சொல்ல, 'உங்களுக்கொன்றும்

தெரியாது' என்று தொடங்குகிறான். "நம்முடைய ஜனத்தை யெல்லாம் மோசப்படுத்துகிறதற்கும், அறிந்தோ அறியாமலோ நம்மை ரோமர்கையிலே ஒப்புக்கொடுக்கிறதற்கும் காரணமா யிருக்கிற இந்த மனுஷனை நாம் வைத்துவைக்கக்கூடாது. ஜனங்களெல்லாரும் கெட்டுப்போகாதபடிக்கு ஒரேமனுஷன் ஜனங்களுக்காக மரிப்பது நமக்கு நலமாயிருக்கும்" என்றான். இப்படிக் காரியத்தைச் சுருக்கமாய்ச் சொல்லி சங்கத்திலிருந்த அநேகர் மனதில் வைத்திருந்ததை வெளியிட்ட இந்தக் காய்பா ஒரு சதுசேயன் (அப். 5. 17.); பத்துவருஷங்களாகப் பிரதான ஆசாரியனாயிருந்தவன். யோவான் அவனை அந்த வருஷத்துப் பிரதான ஆசாரியனென்று அழைத்ததைப் பார்க்கும் போது, பிரதான ஆசாரியன் வருஷாவருஷம் தெரிந்துகொள்ளப்பட்டானென்று தோன்றும். சரியானபடி சாகும்வரையில் பிரதான ஆசாரியனிருந்து பிறகு அவன் பின்னடியாருக்கு அந்த உத்தியோகம் தொடர்ச்சியாய்ச் செல்லும். ரோமருடைய கொடுமையினால் மற்றக் காரியங்களைப்போல இதுவும் பலவித மாறுதல்களுக்குட்பட்டு ஒருவன் பார்த்த அலுவலை வேறொருவனுக்குச் சரியான காலத்துக்குமுன்னே அவர்கள் பிடுங்கிக் கொடுத்தாலும், அது ஏற்படுத்தப்பட்ட விதத்தைப் பார்க்கும் போது, மரணம்வரைக்கும் அதை ஒருவன் பார்த்துவரவேண்டுமென்பதே ஆதியிலிருந்த நோக்கம். இந்த மனுஷன் சாகும் வரையில் அந்த உத்தியோகத்திலிராவிட்டாலும் ஒருவருஷத்துக்கு அதிகமாயிருந்திருப்பான். ஆதலால் யோவான் சொல்லுகிறதை அவன் அந்த வருஷத்துப் பிரதான ஆசாரியன், அதாவது அந்த விசேஷித்த வருஷத்தில், தீர்க்கதரிசனமும் தரிசனையும் ஒய்ந்துபோகும் அந்தக்காலத்தில், தேவகுமாரன் சிலுவையில் அறையப்பட்ட அந்த வருஷத்தில், அவன்தான் பிரதான ஆசாரியனாயிருந்தான் என்று அர்த்தப்படுத்தலாம். அவன் முன்னும் பின்னும் ஆசாரியனாயிருந்தாலும் அதைப்பற்றி நமக்குக் கவையில்லை. அந்தச் சமயத்தில் அவன்தான் பிரதான ஆசாரியன். இதுவே வாக்கியத்தின் பொருள். இந்த வார்த்தைகளை அவன் சொன்னபொழுது அவன் பிரதான ஆசாரிய

ஞயிருந்தபடியால் அந்த வார்த்தைகள் விசேஷித்தவைகள். மற்றப்படி அவைகளை அப்படி எண்ணவேண்டிய அவசிய மில்லை. ஏன் அது விசேஷித்ததென்றால், பின்னாலே சொல்லியிருக்கிறார். இதை அவன் சுயமாய்ச் சொல்லாமல், அந்த வருஷத்துப் பிரதான ஆசாரியனானபடியால் இயேசு யூத ஜனங்களுக்காக மரிக்கப்போகிறாரென்று தீர்க்கதரிசனமாகச் சொன்னான் என்கிறார். தான் சொல்லுகிற கருத்தை விளக்கிக் காட்டுகிறதும், மற்றவர்கள் தப்பிதமாய் அர்த்தங்கொள்ளாதபடிக்கும் இப்படிச் சுருக்கமான வியாக்கியானத்தைக் கூட்டுகிறதும் யோவான் சுவிசேஷகனுடைய வழக்கம் (யோவா. 11. 11; 21. 23.). யோவான் இங்கே சொல்லியிருக்கிற வியாக்கியானத்தினால் காய்பா சொன்ன வார்த்தைகளுக்கும் அவனுடைய உத்தியோகத்திற்கும் சம்பந்தமிருந்ததை அறியலாம். இதை அறிந்தால்தான் நமக்கு வாக்கியம் தெளிவாகும். ஏனெனில், இவன் கெட்ட மனுஷன். தேவனால் ஆளப்பட்டு இப்படிப்பட்ட வார்த்தைகளை தீர்க்கதரிசனமாக உரைக்கிறது வருத்தமல்ல. யாக்கோபிலிருந்து ஒரு நட்சத்திரமும் இஸ்ரவேலிலிருந்து ஒரு செங்கோலும் வருமென்பதை பிலேயாமைக் கொண்டு உரைத்த தேவன் தமது ராஜ்யத்துக்கடுத்த வேறு சத்தியங்களை காய்பாவைக்கொண்டு உரைக்கலாமே. தனக்கும் தெரியாமல் உரைத்த இப்படிப்பட்ட அநேக தீர்க்கதரிசனங்களை சிலுவையில் அறையப்பட்ட சரித்திரங்களில் காணலாம். வார்த்தையினால் காணாவிட்டாலும் செய்கையில் காணலாம். நம்முடைய இரட்சகரை அழைத்த பேர் (யூதரின் ராஜாவாகிய நாசரேத்தூரானான இயேசு) நிந்தனையாயிருந்தாலும் ஒரு உண்மையான தீர்க்கதரிசனந்தான். அவர் உடுத்தின சட்டையும், அவருக்குச் செய்த வணக்கமும், கையில் கொடுத்த கோலும், தலையில் வைத்த முடியும் இவைகளெல்லாம் அப்படிப்பட்டவைகள்தான். திவ்விய செயல் உலகத்தில் நடக்கும் பெரிய வர்த்தமானங்களில் எத்தனையோ நிம்ரோத், பார்வோன் என்பவர்கள் தங்களுக்கும் தெரியாதபடிக்குத் தீர்க்கதரிசனங்களை நிறைவேற்றியிருக்கிறார்கள்.

காய்பா என்கிற பேர் கேபா என்பதைப்போல கன்மலை யென்று அர்த்தங்கொள்ளும். ஆனால் கிறிஸ்துவின் சபை கட்டப்படும் கன்மலையல்ல; சாத்தானுடைய ஆலயம் கட்டப் படும் கன்மலையாயிருந்தான். தன்னைக்குறித்துப் பேசினதற் கும், தீர்க்கதரிசனமாக உரைத்ததற்கும் இருக்கும் எதிரிடை யை முற்றிலும் நீக்கப் பார்க்கிறது வீண். பிரதான ஆசாரிய ருக்கு எப்பொழுதும் தீர்க்கதரிசனம் சொல்லுகிற வரம் இருந்த தென்று சொல்லக்கூடாது. பிரதான ஆசாரியன் தேவ ஒத்தா சையைக்கொண்டு தீர்க்கதரிசனம் சொல்லுகிறதுண்டு. அவ னுக்கு மார்ப்பதக்கமிருந்தது. ஊரீம், தம்மீம் என்னும் தேவ சித்தத்தைக் காட்டின கருவிகளும் அவனுக்கிருந்தது. ஆகிலும் இதினால் இதை அறிந்துகொண்டானென்று நாம் சொல்லாமல், தேவனே அவன் வாயிலிருந்து அவனுக்கும் தெரியாமல் இதை தீர்க்கதரிசனமாக உரைக்கும்படி செய்தார்.

அந்த ஜனங்களுக்காக மரிக்கிறதுமல்லாமல் சிதறியிருக்கிற தேவனுடைய பிள்ளைகளை ஒன்றாகச் சேர்க்கிறதற்காகவும் மரிக்கப்போகிறாரென்கிறவைகள் காய்பாவினுடைய வார்த்தை களாகவல்ல, கருத்தை விளக்கிக்காட்டத்தக்கதாக சுவிசேஷ கன் கூட்டின வார்த்தைகளாக எண்ணவேண்டும். இரட்சக ருடைய ரத்தத்தினாலுண்டாகும் பலனைக்குறித்து தப்பிதமான எண்ணமுண்டாகாதபடிக்கு இதைக் கூட்டுவது மிகவும் அவ சியம். அந்த ஜனத்தாருக்காக இயேசு மரிப்பாரென்று காய்பா தீர்க்கதரிசனமாகச் சொன்னான். யோவான் அந்த ஜனத் தாருக்காக மாத்திரமல்ல, உலகமெங்கும் சிதறியிருக்கிற தேவ னுடைய பிள்ளைகளெல்லாரையும் ஒன்றாய்ச் சேர்க்கும்படி மரிப்பாரென்று கூட்டிச் சொல்லுகிறார். 1 யோவா. 2. 2ல் இதைப்போலொத்த வாக்கியத்தைப் பார்க்கிறோம். நம்மு டைய பாவங்களை நிவிர்த்திசெய்கிற கிருபாதார பலி அவரே. நம்முடைய பாவங்களை மாத்திரமல்ல, சர்வலோகத்தின் பாவங்களையும் நிவிர்த்திசெய்கிற பலியாயிருக்கிறார். யூதர்கள் நினைத்தபடி நியாயப்பிரமாணம் மனுஷரெல்லாரையும் ஒன்றாக ஐக்கியப்படுத்தமாட்டாது. கிறிஸ்துவின் பிராயச்சித்தக் கிரி

யையே அப்படிச் செய்யும். நான் பூமியிலே உயர்த்தப்பட்டேனேயாகில் சகல மனிதரையும் என்னண்டைக்கு இழுத்துக்கொள்வேன். நியாயப்பிரமாணம் பிரிவினையை உண்டாக்குகிற குறுக்குச் சுவர். கிறிஸ்துவின் மரணமே நம்மை ஒன்றாய்ச் சேர்க்கும். யோவானுடைய வார்த்தைகளுக்கு பவுல் அப்போஸ்தலன் எபேசியருக்கு எழுதின நிருபத்தில் 2. 13—22 வரையுமுள்ள வாக்கியங்கள் நல்ல வியாக்கியானமாயிருக்கிறது. தேவனுடைய பிள்ளைகளென்று சொல்லும்பொழுது அவருடைய அழைப்புக்குச் செவிகொடுத்து இதற்கென்று தெரிந்துகொள்ளப்பட்டபடி அவருடைய வார்த்தைக்கு இனிமேல் கீழ்ப்படியப்போகிறவர்களை முன்னறிந்து சொல்லுகிறார். இதைப்போல் நம்முடைய இரக்ஷகரும் இந்தத் தொழுவத்திலுள்ளவைகளல்லாமல் வேறே ஆடுகளும் எனக்குண்டு என்று இனி தம்முடைய ஆடுகளாகப்போகிறவர்களைக்குறித்துப் பேசுகிறார். அவர்களை இப்பொழுதே தேவனுடைய பிள்ளைகளென்று சொல்லலாம். அஞ்ஞானிகளுக்குள் அவர்கள் எவ்வளவு கெட்டவர்களாகத் தோன்றினாலும், அவர்கள் மேலான சுபாவமுடையவர்கள். சமாதானத்தின் புத்திரரானபடியால், சமாதான செய்தியை ஏற்றுக்கொள்ளத்தக்கவர்கள். ஒருவகையில் தங்களைச் சூழ்ந்திருந்த அபத்தத்தினால் அவர்கள் தீட்டுப்பட்டிருந்தாலும் சத்தியத்தின் புத்திரரென்று அவர்களை அழைக்கலாம். சத்தியமுள்ள ராஜன் வந்து சத்தியமாகிய தம்முடைய கொடியைத் தூக்கி நிலைநிறுத்துகிறபோது அதற்குக் கீழாகத் தங்களை நிறுத்துகிறவர்கள்; அவ்வளவு தூரம் சத்தியத்திற்குக் கீழ்ப்படிகிறவர்கள். (யோவா. 18. 37. லூக். 8. 15. யோவா. 3. 19—21.)

சனதிரீம் சங்கத்தார் இயேசுவானவரை மரணத்துக்குள்ளாக்க வேண்டுமென்று இப்பொழுது தீர்த்துப்போட்டார்கள். அந்த நாள்முதல் எவ்விதமாய் அவரைக் கொல்லலாமென்று அடிக்கடி யோசனைபண்ணினார்கள். அவருடைய நேரம் இன்னும் வராதபடியால் அவர்களுடைய எரிச்சலுக்குத் தப்ப எருசலேமுக்கு வடக்கேயிருக்கும் வனாந்தர திசைக்குப் போய் பஸ்காபண்டி

கைக்கு மறுபடியும் பட்டணத்துக்கு வந்து, மெய்யான பஸ்கா ஆட்டுக்குட்டியாகத் தம்மை ஒப்புக்கொடுக்கும்வரையில் அங்கே தங்கினார். இதற்கு முந்தி நடந்தவைகளெல்லாம் இதற்கே குறிப்பாயிருந்தது.

இந்த அற்புதத்தைப்பற்றியும், இதைப்போலொத்த இன்னும் இரண்டு அற்புதங்களைப்பற்றியும் பூர்வீக திருச்சபையில் ஞானக் கருத்தின்படி வேறே வியாக்கியானமுண்டு. சுபாவமாய் மரித்தவர்களைக் கிறிஸ்துவானவர் எழுப்பினதுபோல ஆத்துமாவின்படி மரித்தவர்களையும் அவர் எழுப்புகிறார். இந்தப் பொதுவான சத்தியத்தை இந்த மூன்று அற்புதங்களும் போதிக்கிறது மாத்திரமல்ல, படிப்படியாய் அவர் எவ்வகையாய் எத்தன்மையுடையவர்களை மரித்தோரிலிருந்து எழுப்பத்தக்கவரென்று இவைகளால் அறிகிறோம். முதலாவது, யவீர் என்பவனுடைய குமாரத்தியை படுக்கையினின்று உயிரோடே எழுப்பினார். இரண்டாவது, கைம்பெண்ணின் மகனை பாடையிலிருந்து உயிரோடே எழுப்பினார். கடைசியாக லாசருவை கல்லறையிலிருந்து உயிரோடே எழுப்பினார். இதைப் பார்க்கும்போது கிறிஸ்துவானவர் எப்படிப்பட்ட பாவிகளையும் புதுஜீவனுக்கு உயிரோடெழுப்புவாரென்று அறிந்துகொள்ளுகிறோம். நூதனமாய் சத்தியத்திலிருந்தும் பரிசுத்தத்திலிருந்தும் விழுந்தவர்களை அணைந்துபோன திரியை உடனே கொளுத்துவதுபோல, சீக்கிரத்தில் உயிர்ப்பிக்கப்பட்ட அந்த வாலிபனைப்போல, புதைக்கிறதற்குக் கொண்டுபோகப்பட்டவனை எழுப்புகிறதுபோல, தங்கள் அக்கிரமங்களிலும் பாவங்களிலும் கொஞ்சக்காலம் செத்துக்கிடந்தவர்களையும் உயிரோடே எழுப்புகிறார். இதற்கு மிஞ்சின வல்லமையும் அவரிடத்திலுண்டு. லாசருவைப்போல எவ்வளவோ காலம் பாவச்சேற்றிலும் அசுத்தத்திலும் உழன்று கிடந்த பாவிகளை பாவத்தில் மரித்தது மாத்திரமல்ல, பாவத்தில் அடக்கம்பண்ணப்பட்டுக் கிடந்தவர்களையும் அவர் எழுப்புகிறார். அவர்கள் வெளியே வராதபடிக்கு அடைத்திருக்கிற கல்லாகிய பாவ வழக்கங்கள், துன்மார்க்கமான செய்கைகள் இவைகளையும் அவர் புரட்டிப்போட்டு,

அக்கிரமக் கயிறுகளை அறுத்து அவர்களை வெளியே வரும்படி செய்கிறார். அப்படி உயிர்ப்பிக்கப்பட்டவர்கள் கர்த்தரோடு பந்தியில் உட்கார்ந்து சாப்பிடுகிறார்கள். அங்கே கல்லறையும் துர்க்கந்தமுமல்ல, பரிமளதைலத்தின் வாசனையால் அவர்கள் இருக்கும் வீடு நிறைந்திருக்கிறது.



# 30. எரிகோவுக்குச் சமீபமாய் இரண்டு குருடருடைய கண்களைத் திறந்தது.

மத்தேயு, 20. 29—34.

"அவர்கள் எரிகோவிலிருந்து புறப்பட்டுப் போகையில், திரளான ஜனங்கள் அவருக்குப் பின்சென்றார்கள்.

அப்பொழுது வழியருகே உட்கார்ந்திருந்த இரண்டு குருடர், இயேசு அவ்வழியே வருகிறார் என்று கேள்விப்பட்டு: ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும் என்று கூப்பிட்டார்கள். அவர்கள் பேசாதிருக்கும்படி ஜனங்கள் அவர்களை அதட்டினார்கள். அவர்களோ: ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும் என்று அதிகமாய்க் கூப்பிட்டார்கள்.

இயேசு நின்று, அவர்களைத் தம்மிடத்தில் அழைத்து: நான் உங்களுக்கு என்னசெய்யவேண்டும் என்றிருக்கிறீர்கள் என்றார். அதற்கு அவர்கள்: ஆண்டவரே, எங்கள் கண்களைத் திறக்கவேண்டும் என்றார்கள். இயேசு மனதுருகி அவர்கள் கண்களைத் தொட்டார்; உடனே அவர்கள் பார்வையடைந்து, அவருக்குப் பின்சென்றார்கள்."

மாற்கு, 10. 46—52.

"பின்பு அவர்கள் எரிகோவுக்கு வந்தார்கள். அவரும் அவருடைய சீஷர்களும் திரளான ஜனங்களும் எரிகோவைவிட்டுப் புறப்படுகிறபோது, திமேயுவின் மகனாகிய பர்திமேயு என்கிற ஒரு குருடன், வழியருகே உட்கார்ந்து பிச்சைகேட்டுக்கொண்டிருந்தான். அவன் நசரேயனாகிய இயேசு வருகிறாரென்று கேள்விப்பட்டு: இயேசுவே, தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும் என்று கூப்பிடத்தொடங்கினான். அவன் பேசாதிருக்கும்படி அநேகர் அவனை அதட்டினார்கள். அவனோ: தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும் என்று, முன்னிலும் அதிகமாய்க் கூப்பிட்டான்.

இயேசு நின்று, அவனை அழைத்துவரச்சொன்னார். அவர்கள் அந்தக் குருடனை அழைத்து: திடன்கொள், எழுந்திரு உன்னை அழைக்கிறார் என்றார்கள். உடனே அவன் தன் மேல்வஸ்திரத்தை எறிந்துவிட்டு, எழுந்து, இயேசுவினிடத்தில் வந்தான். இயேசு அவனை நோக்கி: நான் உனக்கு என்னசெய்யவேண்டும் என்றிருக்கிறாய் என்றார். அதற்கு அந்தக் குருடன்: ஆண்டவரே, நான் பார்வையடையவேண்டும் என்றான். இயேசு அவனை நோக்கி; நீ போகலாம், உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்றார். உடனே அவன் பார்வையடைந்து, வழியிலே இயேசுவுக்குப் பின்சென்றான்."

லூக்கா, 18. 35—43.

"பின்பு அவர் எரிகோவுக்குச் சமீபமாய் வரும்போது, ஒரு குருடன் வழியருகே உட்கார்ந்து பிச்சைகேட்டுக்கொண்டிருந்தான். ஜனங்கள் நடக்கிற சத்தத்தை அவன் கேட்டு, இதென்ன என்று விசாரித்தான். நசரேயனாகிய இயேசு போகிறார் என்று அவனுக்கு அறிவித்தார்கள். அப்பொழுது அவன்: இயேசுவே, தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும் என்று கூப்பிட்டான். முன்நடப்பவர்கள் அவன் பேசாமலிருக்கும்படி அவனை அதட்டினார்கள். அவனோ: தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும் என்று மிகவும் அதிகமாய்க் கூப்பிட்டான். இயேசு நின்று அவனைத் தம்மிடத்தில் கொண்டுவரும்படி சொன்னார். அவன் கிட்டவந்தபோது, அவர் அவனை நோக்கி: நான் உனக்கு என்னசெய்யவேண்டும் என்றிருக்கிறாய் என்று கேட்டார். அதற்கு அவன்: ஆண்டவரே, நான் பார்வையடையவேண்டும் என்றான். இயேசு அவனை நோக்கி: நீ பார்வையடைவாயாக, உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்றார். உடனே, அவன் பார்வையடைந்து, தேவனை மகிமைப்படுத்திக்கொண்டே, அவருக்குப் பின்சென்றான். ஜனங்களெல்லாரும் அதைக் கண்டு, தேவனைப் புகழ்ந்தார்கள்."

---

**நா**ன்கு சுவிசேஷங்களையும் ஒன்றுபடுத்த விரும்புகிறவர்கள் முதல் மூன்று சுவிசேஷகரும் சொல்லியிருக்கிற இந்த அற்புதத்தின் விசேஷங்களை ஒருமைப்படுத்த வெகுவாய்ப் பிரயாசப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் ஒன்றுபடுத்த விரும்புகிற விகற்பங்களெவையென்றால்: மத்தேயு இரண்டு குருடருக்குப் பார்வையளித்தாரென்றும், எரிகோவை விட்டுப் போகும்போது அப்படிச் செய்தாரென்றும் சொல்லியிருக்கிறார். லூக்காவோ இவ்விரண்டிற்கும் வித்தியாசமாய், ஒருவனுக்கு பார்வையளித்தாரென்றும், பட்டணத்தில் பிரவேசிக்கும் தருணத்தில் அப்படிச் செய்தாரென்றும் சொல்லுகிறார். மாற்கு இரண்டுபேருக்குமிடையிலே ஒருவனுடைய கண்களைத் திறந்தாரென்று லூக்காவுக்கு இசைவாயும், பட்டணத்தை விட்டுப் புறப்படும்போது செய்தாரென்று மத்தேயுவுக்கு இசைவாயும் எழுதியிருக்கிறார். ஆகையால் இம்மூவரும் எழுதினது ஒன்றுக்கொன்று விகற்பமாயிருக்கிறது. இதை நீக்கும்பொருட்டு சிலர், சுவிசேஷகர் வெவ்வேறு அற்புதங்களை எழுதியிருக்கிறார்களென்றும் விகற்பங்கள் யாதொன்றுமில்லையென்றும் சொல்லி, தப்பு

வித்துக்கொள்ளப் பார்க்கிறார்கள். இப்படிச் சொல்வதினால் வேறுவகையான சங்கடங்கள் நேரிடும். எப்படியென்றால், இந்த மூன்றும் வெவ்வேறான அற்புதங்களானால், குருடரா யிருந்த பிச்சைக்காரர் மனுஷர் நடக்கிற வழியில் மூன்று விசை உட்கார்ந்திருந்து, மூன்றுவிசை ஒரேவிதமான வார்த்தைகள் சொல்லி இரக்ஷகரை நோக்கிக் கெஞ்சினார்களென்றும், ஒவ்வொரு விசையும் அவரோடேகூட ஜனக்கூட்டமிருந்ததென்றும், கூடவிருந்தவர்கள் ஒவ்வொரு விசையும் சத்தமிடாதபடி தடைசெய்தும் அவர்கள் அதிகமாய்ச் சத்தமிட்டார்களென்றும், ஒவ்வொருவிசையும் இரக்ஷகர் நின்று அவர்களுக்கு என்ன தேவையென்று கேட்டாரென்றும், ஒவ்வொருவிசையும் ஒரே விதமான வார்த்தைகளைச் சொல்லி ஒரேகாரியத்தைக் கேட்டார்களென்றும், இன்னும் இப்படி அநேககாரியங்கள் இந்த மூன்று சமயங்களிலும் நடந்ததென்றும் சொல்லவேண்டியதாய் நேரிடும். இப்படிச் சொல்வது இயல்புக்குமாத்திரமல்ல, சுவிசேஷத்திலுள்ள சங்கதிகளின் தன்மைக்கும் விரோதமாயிருக்கிறது. அவைகள் பலவிதமானதென்று நாம் அறிவோமே.

இங்கே ஒன்றுக்கொன்று ஒத்துவராத மூன்றுசங்கதிகள் இருக்கிறது. இவைகளை ஒன்றுபடுத்த விரும்புகிற நாம் ஒரு சட்டத்தை எப்போதும் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். 'ஒருவர் சொல்லாமல் விட்டிருக்கிறது இன்னொருவர் சொல்லியிருக்கிறதற்கு விகற்பமல்ல.' இந்தச் சட்டத்தின்படி மத்தேயு, இரண்டு குருடர் என்று சொல்லியிருக்கிறது மாற்கும் லூக்காவும் ஒரு குருடனென்று சொல்லியிருக்கிறதற்கு விரோதமல்ல. இவ்விதமாய் இந்த மூன்று விகற்பங்களையும் இரண்டாக்கலாம். ஒரு சுவிசேஷகன் இரட்சகர் பட்டணத்திற் பிரவேசிக்கும்போது அது நடந்ததென்று சொல்லியிருக்கிறது, அதைவிட்டுப் புறப்படும்போது நடந்ததென்று சொல்லியிருக்கிறதற்கு விகற்பந்தான். ஆகிலும் இந்த விகற்பத்தைக்கொண்டு இவைகள் இரண்டு வெவ்வேறான சங்கதிகளென்று சொல்லவுங்கூடாது. இவ்விரண்டும் ஒன்றே. எப்படியென்றால், அவர் பட்டணத்திற்குள் பிரவேசிக்கும் சமயத்தில் ஒரு குருடன் அவரைப்

பார்த்துக் கெஞ்சியிருக்கவேண்டும். இரட்சகர் அத்தருணத்தில் அவனுக்குப் பார்வையளிக்கவில்லை. மறுநாள் இரட்சகர் பட்டணத்தை விட்டுப் புறப்படும்போது இவனும் இன்னொரு குருடனும் சேர்ந்துகொண்டு அவரைப் பார்த்துப் பார்வையடையக் கெஞ்சினார்கள். சுவிசேஷகன் இப்படி பிரித்துக் காரியத்தை விரிவாய்ச் சொல்லாமல், சரித்திரக்காரருடைய வழக்கப்படி காரியத்தை தொடங்கின இடத்திலேயே முடித்துப்போடுகிறார். மாற்கு சொல்லியிருக்கிற பர்திமேயு என்பவன் (லூக்காவும் இவனைக்குறித்துத்தான் சொல்லுகிறார்.) மற்றவனைவிட சற்று பேரெடுப்புள்ளவனாய் இருந்திருக்க வேண்டும்.

"அப்பொழுது வழியருகே உட்கார்ந்திருந்த இரண்டு குருடர் இயேசு அவ்வழியே வருகிறாரென்று கேள்விப்பட்டு ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும் என்று கூப்பிட்டார்கள்." இரட்சகருடைய உருக்கத்தை எழுப்பிவிட அவர்கள் சொன்ன வார்த்தைகள் அவர் மேசியா என்பதை அறிந்திருந்தார்களென்று காட்டுகிறது. அவர்கள் எதிர்பார்த்திருந்த மேசியாவுக்கு தாவீதின் குமாரன் என்கிற பெயர் மிகவும் உரித்தானது. அவர்கள் இங்கே இரண்டுகாரியங்களை அறிக்கையிடுகிறார்கள். முதலாவது, தங்களுக்குச் சுகமளிக்க அவரால் கூடுமென்பதும்; இரண்டாவது, அவர் சாதாரணமான ஒரு தீர்க்கதரிசியல்ல, ஏசாயா சொல்லியிருக்கிறபடி குருடருக்குப் பார்வையளிக்கிறதற்கு வருகிற மேசியாவாகிய தீர்க்கதரிசியென்பதுமாம். யோவான் 9-ம் அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிற பிறவிக்குருடன் இப்படியே அறிக்கையிட்டான். சொஸ்தமடையுமுன்னல்ல; அடைந்தபிறகு, முதலாவது தீர்க்கதரிசியென்றும் (யோவா. 11. 17.) கடைசியில் கிறிஸ்து என்றும் அறிக்கையிட்டான். (யோவா. 11. 38.)

பின்வரும் வார்த்தைகளின் கருத்தென்ன? 'அவர்கள் பேசாதிருக்கும்படி ஜனங்கள் அவர்களை அதட்டினார்கள்.' இயேசுவுக்கு அந்தக் கனமான பேரை அவர்கள் கொடுத்தது ஜனங்களுக்குப் பிரியமில்லாமையினாலே பொறாமையால் அப்படிச்

செய்தார்களென்று சிலர் சொல்லுகிறார்கள். அப்படியிருக்குமானால், லூக். 19. 39ல் சொல்லியிருக்கிற சங்கதிக்கு இது ஒத்திருக்கும். இதிலும் ஒரு வித்தியாசம் உண்டு. அங்கே பரிசேயர் கிறிஸ்துவைப் பார்த்து, அவரைக் கனப்படுத்தி அவருக்கு மகிமைசெலுத்தினவர்களைக் கண்டிக்கச் சொன்னார்கள்; இங்கே ஜனங்களே அப்படி கண்டிக்கிறார்கள். ஜனங்கள் பொறாமையால் இப்படிச் செய்தார்களென்று சொல்லக்கூடாது. பரிசேயர், கர்த்தருடைய நாமத்தினாலே வருகிற ராஜா ஆசீர்வதிக்கப்பட்டவர் என்று மேசியாவைப்போல அவரை வாழ்த்தினதைக் கேட்டுப் பொறாமையடைகிறது அவர்கள் குணத்திற்கு இசைவானதுதான். இந்த அறிவீனமுள்ள ஜனங்களிடத்தில் இந்தப் பொறாமை இருந்திராது. அவர்கள் இரக்ஷகர் பட்சமிருந்து அவருடைய கிரியைகளில் சந்தோஷப்பட்டார்கள். பெயெல்செபூலினுடைய அதிகாரத்தைக்கொண்டு அற்புதம் செய்கிறாரென்று மற்றவர்கள் சொன்னபோது, அந்த அற்புதங்களைப் பார்த்த இவர்கள், தேவனைத் துதித்தார்கள். இந்தச் சமயத்திலும் கிறிஸ்துவைக் கனப்படுத்தவேண்டுமென்கிற நோக்கத்தோடேயே இப்படி அவர்கள் வீணாய்ச் சத்தம் போடாதபடி அவர்களை அதட்டினதாகத் தோன்றுகிறது. அவர் வழியிலே போதித்துக்கொண்டுபோயிருக்கலாம். இவர்களுடைய சத்தம் அவர் போதித்ததைத் தடுக்காதபடிக்கு அவர்கள் இப்படிக் கண்டித்திருக்கலாம்.

அவர்கள் பேசாமலிருக்கும்படி ஜனங்கள் செய்த பிரயத்தனம் வாய்க்கவில்லை. ‘ஆண்டவரே, தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்குமென்று அதிகமாய்க் கூப்பிட்டார்கள். இதில் அநேக ஞானக்கருத்துகளுண்டு. ஒரு மனிதன் தன் ஆத்துமாவைக்குறித்துக் கவலைப்படத் தொடங்கி தன் கண் தெளிவடைந்து உலகத்திற்கு ஒளியாயிருக்கப்பட்டவருடைய வெளிச்சத்தில் நடக்க ஆரம்பிக்கும்போது, உலகத்தை வெறுத்து அதின் ஐசுவரியத்தை அற்பமாக எண்ணும்போது, அவனுக்கு அநேக தடைகள் நேரிடும். கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்கு விரோதிகளாயிருக்கப்பட்டவர்களாலல்ல, இந்த ஜனங்களைப்போல

கிறிஸ்துவின் பாரிசமானவர்களாய்த் தோன்றுகிறவர்களால் தான். இவர்களும் அவன் வாயை அடைத்து கர்த்தரை நோக்கி அவன் கெஞ்சாதபடி பார்ப்பார்கள். பின்வரும் வார்த்தைகளிலும் ஓர் ஞானக்கருத்துண்டு. மாற்கு சொல்லுகிறபடி இயேசு நின்று, அவனை அழைத்துவரச்சொன்னார். அவர்கள் அந்தக் குருடனை அழைத்து: திடன்கொள், எழுந்திரு, உன்னை அழைக்கிறார் என்றார்கள். அகுஸ்தீன் சொல்லுகிறபடி, பேருக்கு கிறிஸ்தவர்களென்று தங்களை அழைத்துக்கொள்ளுகிற உலகத்தாரால் நேரிடும் தடைகளை ஒருவன் மேற்கொண்டு அவர்கள் எவ்வளவாய் விரோதித்தாலும், கிறிஸ்துவானவர் தனக்குச் சொந்தமாகுமட்டும் விடாமுயற்சியோடு அவரைப் பற்றிக்கொள்ளும்போது, முன்னே கோபித்து இகழ்ந்தவர்கள் பிறகு துதித்துப் புகழுவார்கள். அவனை பைத்தியக்காரனென்று முன் சொன்னவர்கள், பிறகு பரிசுத்தவான் என்பார்கள்.

இப்படி அவர்கள் கெஞ்சினபோது, இயேசுவானவர் நின்று அவர்களை அழைத்தார். கெஞ்சுதலின் சத்தத்திற்கு அவர் எப்பொழுதும் செவிகொடுப்பார். மாற்கு ஒரு குருடனைக்குறித்துச் சொல்லியிருக்கிறபடியால் 'அவனை அழைத்துவரச்சொன்னார்' என்கிறார். தாமதமின்றி அவரிடத்தில் போகும்படிக்கு உடனே அவன் மேல்வஸ்திரத்தை எறிந்துவிட்டு, எழுந்திருந்து இயேசுவினிடத்தில் வந்தான். தனக்குத் தடையாயிருக்கிறதை நீக்கினதிலிருந்து நாம் ஒரு படிப்பனையைக் கற்றுக்கொள்ளலாம். இயேசுவானவர் ஒரு ஆத்துமாவை அழைக்கும்போது, அது தன்னை ஒட்டியிருக்கும் எந்தப் பாரத்தையும், அவரிடத்தில் துரிதமாய்ச் செல்லாதபடி, நேரிடும் எந்தத் தடையையும் இவ்விதமாகவே எறிந்துவிடவேண்டும் (மத். 13. 44, 46. பிலி. 3. 7.). கர்த்தர் அவனைப்பார்த்து: நான் உனக்கு என்னசெய்ய வேண்டும் என்றிருக்கிறாய் என்றார். இந்தக் கேள்வியிலே அவர் உதவிசெய்ய மனமுள்ளவராயிருந்தாரென்று விளங்குகிறது. மனிதகுமாரன் ஊழியங்கொள்ளும்படி வராமல் ஊழியஞ் செய்யும்படி வந்தாரென்று அதற்குச் சற்றுமுன்னமே சொன்ன வார்த்தைகளுக்கு இது நல்ல வியாக்கியானம்போல் இருக்கிறது

(மத். 20. 28.). மேலும் அந்தக் குருடனுடைய விசுவாசத்தையும் அவன் ஆசையையும் இது அதிகமாய் எழுப்பிவிட ஏதுவாயுமிருந்தது (மத். 9. 28.). இதுவரையில் பொதுவாக இரங்கவேண்டுமென்று கெஞ்சினவன் இப்போது தனக்கு வேண்டியதின்னதென்று குறிப்பாய்ச் சொல்வதுமல்லாமல், அந்த நன்மை தன்னிடத்திற்கு எவ்வகையாய்ச் செல்லுமென்றும் சொல்லுகிறான். 'ஆண்டவரே! நான் பார்வையடைய வேண்டும்' என்றான். கண்களைத் தொட்டதாக மத்தேயும் மாற்கும் சொல்லுகிறார்கள். நீ பார்வையடைவாயாக என்கிற வல்லமையுள்ள வார்த்தைகளைச் சொல்லிச் சொஸ்தப்படுத்தினதாக லூக்காமாத்திரம் சொல்லுகிறார். லூக்காவும் மாற்குமோ, மத்தேயு சொல்லாத வார்த்தைகளைக் கூட்டியிருக்கிறார்கள். 'உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது' என்றார். இதுவரையில் ஒரே இடத்தில் உட்கார்ந்திருந்த இந்தக் குருடன் இப்போது தனக்குக் கிடைத்த பார்வையைச் செவ்வையாய்ப் பிரயோகிக்கிறான்; அவருக்குப் பின்சென்றான்; நன்றியறிதலோடே அப்படிச் செய்தான். தேவனை மகிமைப்படுத்திக்கொண்டே பின்சென்றதுமல்லாமல் அதைக் கண்ட ஜனங்களெல்லாரும் தேவனைப் புகழும்படிக்கு ஏதுவாயிருந்தான். (அப். 3. 8—10.)



# 31. கனியற்ற அத்திமரம் பட்டுப்போனது.

மத்தேயு, 21. 17—22.

"அவர்களை விட்டு நகரத்திலிருந்து புறப்பட்டு, பெத்தானியாவுக்குப் போய், அங்கே இராத்தங்கினார்.

காலையிலே அவர் நகரத்துக்குத் திரும்பிவருகையில், அவருக்குப் பசியுண்டாயிற்று. அப்பொழுது வழியருகே ஒரு அத்திமரத்தைக் கண்டு, அதினிடத்திற்போய், அதிலே இலைகளையன்றி வேறொன்றையுங் காணாமல்: இனி ஒருக்காலும் உன்னிடத்தில் கனி உண்டாகாதிருக்கக் கடவது என்றார்; உடனே அத்திமரம் பட்டுப்போயிற்று. சீஷர்கள் அதைக் கண்டு: இந்த அத்திமரம் எத்தனை சீக்கிரமாய்ப் பட்டுப்போயிற்று! என்று சொல்லி ஆச்சரியப்பட்டார்கள்.

இயேசு அவர்களை நோக்கி: நீங்கள் சந்தேகப்படாமல் விசுவாசமுள்ளவர்களாயிருந்தால், இந்த அத்திமரத்திற்குச் செய்ததை நீங்கள் செய்வதும் அல்லாமல், இந்த மலையைப்பார்த்து: நீ பெயர்ந்து சமுத்திரத்திலே தள்ளுண்டுபோ என்று சொன்னாலும் அப்படியாகும் என்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். மேலும், நீங்கள் விசுவாசமுள்ளவர்களாய் ஜெபத்திலே எவைகளைக் கேட்பீர்களோ அவைகளையெல்லாம் பெறுவீர்கள் என்றார்."

மாற்கு, 11. 12—14, 20—24.

"மறுநாளிலே அவர்கள் பெத்தானியாவிலிருந்து புறப்பட்டுவருகையில், அவருக்குப் பசியுண்டாயிற்று. அப்பொழுது இலைகளுள்ள ஒரு அத்திமரத்தைத் தூரத்திலே கண்டு, அதில் ஏதாகிலும் அகப்படுமோ என்று பார்க்கவந்தார். அத்திப்பழக் காலமாயிராதபடியால், அவர் அதினிடத்தில் வந்தபோது அதில் இலைகளையல்லாமல், வேறொன்றையும் காணவில்லை. அப்பொழுது இயேசு அதைப்பார்த்து: இதுமுதல் ஒருக்காலும் ஒருவனும் உன்னிடத்தில் கனியைப் புசியாதிருக்கக்கடவன் என்றார்; அதை அவருடைய சீஷர்கள் கேட்டார்கள்.

மறுநாள் காலையிலே அவர்கள் அவ்வழியாய்ப் போகும்போது, அந்த அத்திமரம் வேரோடே பட்டுப்போயிருக்கிறதைக் கண்டார்கள். பேதுரு நினைவுகூர்ந்து, அவரை நோக்கி: ரபீ, இதோ, நீர் சபித்த அத்திமரம் பட்டுப்போயிற்று என்றான்.

இயேசு அவர்களை நோக்கி: தேவனிடத்தில் விசுவாசமுள்ளவர்களாயிருங்கள். எவனாகிலும் இந்த மலையைப் பார்த்து: நீ பெயர்ந்து, சமுத்திரத்திலே தள்ளுண்டுபோ என்று சொல்லி, தான் சொன்னபடியே நடக்கும் என்று தன் இருதயத்தில் சந்தேகப்படாமல் விசுவாசித்தால், அவன்

சொன்னபடியே ஆகும் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆதலால், நீங்கள் ஜெபம்பண்ணும்போது எவைகளைக் கேட்டுக்கொள்வீர்களோ, அவைகளைப் பெற்றுக்கொள்வோம் என்று விசுவாசியுங்கள், அப்பொழுது அவைகள் உங்களுக்கு உண்டாகும் என்று சொல்லுகிறேன்.''

---

இந்த அற்புதம் இரக்ஷகர் பாடுபட்ட வாரத்தின் திங்கள் கிழமை நடந்தது. குருத்தோலை ஞாயிறு என்று சொல்லப்பட்ட முந்தின ஞாயிற்றுக்கிழமையில் நமது இரக்ஷகர் எருசலேமுக்குள் ஜெயவீரனாய்ப் பிரவேசித்தார். அவருடைய நேரம் எவ்வளவோ சமீபித்திருந்தும் இன்னும் சரியானபடி வராதபடியால், யாதொரு சேதமுமின்றி பட்டணத்தைவிட்டுப் பெத்தானியாவுக்குப் போய், மரித்த சகோதரனை எழுப்பினதால் சொல்லிமுடியாத சந்தோஷத்தை உண்டாக்கின அந்தச் சகோதரிகளுடைய வீட்டில் இரவைப் பின்னிட்டிருப்பார். திங்கள் கிழமை காலையில் அருணோதயத்தில் பெத்தானியாவை விட்டு பட்டணத்தில் தமது ஊழியத்தை நிறைவேற்றப்போன சமயத்தில் அத்திமரத்திற்கு விரோதமாய் இவ்வார்த்தையைச் சொன்னார். அன்று சாயங்காலமும் தமது சீஷரோடு பெத்தானியாவுக்குத் திரும்பினபோது, அத்திமரத்திற்குச் சம்பவித்ததைப் பார்க்கிறதற்கு இருட்டிப்போனபடியால் கூடாதேபோயிற்று. செவ்வாய்க்கிழமை காலையில் அந்த அத்திமரம் வேரோடே பட்டுப்போயிருக்கிறதைக் கண்டார்கள். சங்கதிகள் இந்த ஒழுங்காய்த்தான் நடந்தது. இவைகளை எழுதுகிறதில் மத்தேயுவைவிட மாற்கு காலக்கிரமத்தைக் கவனித்திருக்கிறாரென்று சொல்லலாம். அவர் எழுதினதைவிட இவர் எழுதினது செவ்வையாயிருக்கிறதென்றல்ல, இருவர் எழுதினதும் நமக்கு கிடைத்திருப்பதே நல்லது. காரியத்தைமாத்திரம் சொல்ல வேண்டுமென்று இருந்த மத்தேயு சரித்திரமுறையாய் இடையில் நடந்ததை விட்டு ஒரே சமயத்தில் சங்கதி முழுவதையும் சொல்லுகிறார். அவருக்கு தேவன் கொடுத்த வரமும் அவர் நோக்கத்திற்கு இசைவாயிருந்தது. மாற்குவின் நோக்கமும் அவருக்கிருந்த வரமும் வேறுவகையானபடியால் இந்தச் சங்

கதியோடு சம்பந்தப்பட்ட எல்லாவற்றையும், இடங்கள், காலங்கள் முதலிய விசேஷங்களேயும் மனிதருடைய கண்களுக்கு முன் நடந்தவிதமாய் எழுதியிருக்கிருர். இருசரித்திரங்களிலும் இருக்கும் அற்பவிகற்பங்களேப் பெரியதாய் எண்ணுபவர்கள் கொசுகை வடிகட்டி ஒட்டையை விழுங்குகிறவர்கள் போல் அணுவை மேருவாக்கப் பார்க்கிருர்கள். என்ருலும் நாம் வியார்த்திபண்ணவேண்டிய சில விஷயங்கள் இதிலுண்டு. நமது இரக்ஷகர் தேவனுனபடியால், சகலத்தையும் அறிந்திருந்ததுபோல அந்த மரத்தில் கனிகள் இல்லேயென்பதையும் அறிந்திருக்கவேண்டுமே. அப்படியிருக்க கனியைத் தேடி அங்கே போகவேண்டியதென்ன? கனியிருக்கிறதாக தாம் எண்ணிப் போனதுபோல சீஷருக்குக் காட்டவேண்டியதென்ன? குறைவற்ற சத்தியத்திற்கு இது விரோதப்படுகிறதே. சத்தியத்திற்கு நாதனுயிருக்கப்பட்டவரிடத்தில் அசத்தியமென்னும் கல்மஷம் கொஞ்சமாகிலும் இருக்கக்கூடாதே. மேலும் அவர் ஓர் மரத்தை மனுஷனுகப் பாவித்து, கனியில்லாதே போனது அதின் குற்றமென்பதாக அதை தண்டித்தது அநியாயமல்லவா? அது அத்திமரம் பழுக்கிற காலமல்லவென்று மாற்கு சொல்லியிருக்கிறது இந்த அநியாயத்தை எவ்வளவோ பெரிதாக்குகிறது. மாற்கு இதைச் சொல்லாவிட்டாலும், அந்த மரம் பழுக்கிற பருவகாலத்தை அறிந்திருக்கிற நமக்கு இது நன்ருய்த் தெரிந்தகாரியந்தானே. கனிகிடையாத காலத்திலே கனியைத் தேடினுர். கனிகிடையாததால் கோபத்திற்கு இடங்கொடுத்தார். மரத்தை மனுஷனுக எண்ணி நடத்தினதற்கு எவ்வித முகாந்தரம் இருந்தபோதிலும், என்னநியாயம் இருந்தபோதிலும், கனியில்லாமலிருந்தது காலத்திற்குரிய தன்மையாயிருக்க, அதை மரத்தின் மேல் குற்றமாகச் சாற்றுவதெப்படி? உவமானம் சங்கதி முழுதுக்கும் செல்லவேண்டியது. கனியில்லாததை உவமானமாய் மரத்தின்மேல் குற்றமாகப் பாவிப்போமானுல், அச்சமயத்தில் அங்கே கனியிருப்பதற்கும் யாதொரு தடையுமில்லேயென்றும் காட்டுவது அவசியம்.

முதலாவது காரியம்: கர்த்தர் அந்த மரத்தில் கனியைக்

கண்டுபிடிக்கலாமென்று எதிர்பார்த்து அதினிடத்தில் போன போது, அதில் ஒரு கனியும் இல்லையென்று அவர் நன்ருய் அறிந்திருந்தபடியால், அவர் எதிர்பார்த்ததாகக் காட்டின கனியை எவ்விதமும் கண்டுபிடிக்கலாமென்று எண்ணின சேஷ்டை வஞ்சித்ததுபோலிருக்கும். இதற்கு எதிரிடையாக நாம் கவனிக்க வேண்டியதென்னவென்ருல், வார்த்தையினுலாவது செய்கையினுலாவது உவமானமாய்ப் போதிக்கிற எவற்றையுங்குறித்து இப்படியே சொல்லவேண்டியது வரும். அப்படிச் செய்யும் பொழுதெல்லாம் வெளியின் தோற்றத்திற்கு இசைவாயல்ல, உள்ளான காரியத்திற்கு இசைவாகவே சகலத்தையும் நடத்தும் படியாய் நேரிடும். உட்கருத்தைத் தெளிவாக்கவும் ஸ்தாபிக்கவும், வெளியின் தோற்றத்தை மறந்துபோகவேண்டியதாயும் வரும். ஒரு உவமையைச் சொல்லும்போது மெய்யாய் நடவாத சங்கதியை நடந்ததுபோல் காட்டுகிருேம். ஆகிலும் உள்ளான சத்தியம் வெளியாகும்போது நாம் சொன்னது ஓர்வகையில் மெய்யென்றே சொல்லவேண்டும். சத்தியம் அதற்குள் இருக்கிறதுமாத்திரமல்ல, அதின்மூலமாய் அது வெளிப்படவும் எதுவுண்டு. உவமானமாய் நடப்பிக்கிற செய்கையும் இப்படித்தான். வெளித்தோற்றத்திற்கு அது நடக்கிறபிரகாரமாய்த் தோன்ருவிட்டாலும் அது வஞ்சகமல்ல. உயர்ந்ததும் ஆழமுமான கருத்து அதிலுண்டு. அதற்கு வெளியரங்கமான அந்தச் செய்கை ஒரு குறிப்பாகமாத்திரம் இருக்கிறது. மேலான அந்தக் கருத்தை வெளியாக்குகிறதற்கு இந்தச் செய்கை எத்தனமாகமாத்திரம் இருக்கிறது. அதிலே கனி ஒன்றுமில்லையென்பதை இரக்ஷகர் அறிந்திருந்தார். உண்மையாகவே, அதில் கனியிருக்கிறதென்று தேடிப்போகவில்லை. பின்னை என் இவர் இப்படிச் செய்தார்? ஒரு மனிதனுவது வேறெந்த ஜனக்கூட்டமாவது கர்த்தர் நீதியின் கனியைத் தேடிவரும்போது அப்படிப்பட்டது ஒன்றுமிராமல், வீண் வேடிக்கையான இலைகளையும், வெறுமையான பெயர்களையும் மாத்திரம் உடையவர்களாயிருந்தால், அப்படிப்பட்டவர்களைத் தாம் தண்டிக்கிற விதத்தைக் காட்டும்படியாகவே அதில் கனியைத் தேடுகிறவராகப் போனுர்.

இரண்டாம் காரியம்: அவர் மரத்தின்மேல் தமது கோபத்தைக் காட்டினது நியாயமல்லவென்று ஆக்ஷேபிக்கிறவர்கள் அவர் எந்தவிதத்திலும் கோபத்தைப் பாராட்டினதே சரியல்ல, தேவன் எவ்விதத்திலும் தண்டிக்கிறது நன்றாயில்லை. "ஆட்டுக்குட்டியானவருடைய கோபம்" "நாம் பெற்றுக்கொண்ட சலாக்கியங்களுக்குக் கணக்கு" "ஆக்கினைத்தீர்ப்பின் நாள்" இப்படிப்பட்டவையொன்றும் இருக்கவேகூடாது என்கிற நோக்கமுடையவர்களாகத்தான் இப்படி ஆக்ஷேபிக்கிறார்கள். ஆனால் தேவகோபம், நியாயத்தீர்ப்பின் நாள், இப்படிக்கொத்தவைகள் இருப்பது உண்மையானபடியால், மனிதர் அவைகளை மறந்துவிடாமலிருப்பது மிகவும் அவசியம். அற்புதங்களில் இது ஒன்று இராவிட்டால் மனிதர் இதை லேசாய் மறந்துபோவார்கள். மற்ற அற்புதங்களோ இரக்கத்தைப் போதிக்கிறவைகள். தேவகோபத்தைக் காட்டுகிற இந்த அற்புதத்திலும் எவ்வளவு இரக்கம் கலந்திருந்ததென்று பாருங்கள். தேவனுடைய பரிசுத்தத்தையும் அவர் பாவத்தைப் பகைக்கிற பகையையும் பார்க்கும்படிக்கு, கிறிஸ்துவானவர் மோசே எலியா என்பவர்களைப்போல திரள்ஜனங்களைக் கொல்லாமல் உணர்ச்சியற்ற இந்த மரத்தைத்தான் சபித்தார். இரக்கத்தைக் காட்டும் எண்ணிறந்த அற்புதங்களை மனிதரிடத்தில் செய்தார். கோபாக்கினியைக் காட்டும் இந்த ஒரு அற்புதத்தை இந்த மரத்தினிடத்தில் செய்தார்.

நன்மை தீமை இன்னதென்று உணராத மரம், புகழ்ச்சிக்கும் இகழ்ச்சிக்கும் பயனுக்கும் தண்டனைக்கும் ஏற்றதல்லாதபடியால், இதை இப்படிச் சபிப்பது நியாயமல்லவென்று சிலர் சொல்லுவார்கள். இப்படி ஆக்ஷேபிக்கிறவர்களே இது அநியாயமல்லவென்றும், மரம் ஒரு வஸ்துவானபடியால் மேலான நோக்கங்களுக்காக அதைப் பிரயோகிக்கலாமென்றும் காண்பிக்கிறார்கள். மனிதன் சிருஷ்டிகளில் சிறந்தவன், மற்றவைகளெல்லாம் அவனுக்குப் பணிவிடை செய்யவேண்டியவைகள். அவைகள் வாழ்வடையும்போதாவது, தாழ்வடையும்போதாவது, தங்கள் பலனைக் கொடுக்கும்போதாவது, பலனில்லாமல் போவதினால் குற்

றத்தையும் தண்டனையையும் அடையும்போதாவது இந்த வகையாய்த்தான் மனிதனுக்குச் சரியானபடி அவைகள் பணிவிடை செய்கின்றது. இரக்ஷகர் பலனில்லாமையினாலே அதைச் சபித்தபோது நன்மை தீமைக்கு பாத்தியப்பட்ட குணம் அதிலுண்டென்று சொல்லவில்லை. நன்மை தீமைக்குரிய குணங்களுக்குக் குறிப்பாக அதைப் பிரயோகிக்கலாமென்று மாத்திரம் காட்டினார். நாம் மரங்களைக்குறித்துப் பேசும்போதெல்லாம் சன்மார்க்கத்திற்குரிய குணங்களெல்லாம் அதிலுண்டென்பது போல பேசுகிறோம். 'நல்ல மரம்' 'கெட்டமரம்' என்கிறோம், கனிகொடுக்கவேண்டும் என்கிறோம்; இவ்வகையாய் இரக்ஷகர் செய்தது இயல்புக்குரியதுதானென்று நாமே சாக்ஷியிடுகிறோம். இரக்ஷகர் முன்செய்த காரியத்தினால் தமது செய்கையை இவ்வகையாய் அர்த்தம்பண்ணும்படி சீஷர்களுக்குப் படித்துக் கொடுத்தார் (லூக். 13. 6—9.). பழைய ஏற்பாட்டிலும் பல வாக்கியங்களைக்கொண்டு அவர்கள் இதை லேசாய்க் கற்றுக் கொள்ளலாம் (ஓசி. 9. 10. யோவே. 1. 7.). புதிய ஏற்பாட்டில் இரண்டு இடங்களில்தான் அத்திமரத்தைக்குறித்து வாசிக்கிறோம். இந்த அற்புதத்திலும் லூக்கா 13லிருக்கிற உவமையிலுந்தான். இந்த இரண்டு சமயங்களிலும் அது தீமைக்கு உவமானமாகவே சொல்லப்பட்டிருக்கின்றது. பரதீசில் நமது ஆதித்தாய் தகப்பன்மாரை சோதனைக்குள்ளாக்கின விருக்ஷம் இந்த அத்திமரந்தான் என்று சிலர் பாரம்பரையாய்ச் சொல்லி வந்தார்களாம்.

இவ்வளவும் சரியென்று ஒத்துக்கொண்டபோதிலும், அது அத்திப்பழக்காலமல்ல என்று மாற்கு சொல்லுகிறது உவமானமாகவுங்கூட, அந்த மரத்தின்மேல் குற்றஞ்சாட்டுவது சரியல்லவென்று காட்டுகிறதில்லையா? இந்த ஒரு சங்கதி உவமானத்தையும் கெடுத்து இரக்ஷகருடைய நோக்கத்தையும் வியர்த்தமாக்கிப்போடாதா? பழங்கிடையாத காலத்திலே பழங்களுக்காக எதிர்பார்த்ததும், அதைக் காணாதேபோனபோது கோபத்திற்கு இடங்கொடுத்ததும் நமக்கே திகைப்பையுண்டாக்குகிறதில்லையா? பின்வரும் நியாயம் இந்தத் திகைப்பை முற்றிலும்

நீக்கிப்போடுமென்று எண்ணுகிறேன். வருஷத்தின் துவக்கத்தில் நம்முடைய பங்குனி—சித்திரைமாதங்களில் அத்திமரத்தில் பழமும் கிடையாது, இலையும் கிடையாது. எந்த மனிதனும் அத்திஇலைகளை முதலாய் மரங்களில் காணலாமென்று எண்ணமாட்டான். இந்த மரமோ மற்ற மரங்களைவிடத் தான் விசேஷித்ததென்றும், இலைகளுக்கு முன்னே அத்திமரங்களில் பழம் காணப்படுகிறது வழக்கமானபடியால் தன்னில் பழமுண்டென்றும் சொல்லுகிறதுபோலிருந்தது. மற்ற மரங்களுக்கு தான் கனிகொடுக்கிற விஷயத்தில் முந்திக்கொள்ளுகிறதென்று காட்டி, விடாய்த்துத் திரிகிற பிரயாணிகளைத் தன் கனிகளைச் சாப்பிட்டு விடாய் தீர்த்துக்கொள்ள அழைக்கிறதுபோலிருந்தது. இது அப்படிக்கொத்ததுதானோ என்று பார்க்க இரக்ஷகர் சமீபித்தபோது, மற்ற மரங்களைப்போல இதுவும் கனியற்றதென்றே காணப்பட்டது. சுவிசேஷகன் சொல்வதுபோல அது அத்திப்பழக்காலமல்ல. இந்த மரத்தினிடத்தில் காணப்பட்ட குற்றமென்னவென்றால், மற்ற மரங்களைப்போல கனியற்றதாயிருந்தும், மற்ற மரங்களுக்குத் தான் வித்தியாசப்பட்டதென்றும், வெளித்தோற்றத்தினால் தான் விசேஷித்ததென்றும் எண்ணும்படி செய்ததுதான். கனியில்லாததினால் இரக்ஷகர் அதைச் சபிக்கவில்லை. கனியில்லாமலிருந்தும் இலைகள் அது நிறையக் காணப்பட்டதையிட்டே அதைச் சபித்தார். ஏனென்றால், மரங்களுடைய தன்மைக்கேற்றவிதமாய்ச் சொல்லவேண்டுமானால், இலைகளிருந்தபடியால் கனிகளும் அதிலிருக்குமென்று எண்ணத்தக்கதாயிருந்தது.

இந்த மரம் இஸ்ரவேலருக்கு உவமானமாயிருக்கிறது. அவர்களுடைய பாவம் இன்னதென்று இரக்ஷகர் இதிலே காண்பிக்கிறார். நீதியின் கனிகள் அவர்களிடத்தில் இல்லாதிருந்தும், நீதிமான்களென்று தங்களைக் காண்பிக்கப் பிரயாசப்பட்டார்கள். கிறிஸ்துவானவர் வருமுன்னே எவர்களும் ஒருவகையாய்த்தான் கனிகொடுக்கத்தக்கவர்கள். இரக்ஷகரில்லாமல் அவருடைய ஒத்தாசையின்றி தாங்கள் ஏதுமற்றவர்கள், எந்தச் சிறுநன்மையும் செய்யத் திராணியற்றவர்கள், வெறுமை

யும் நிருவாணமுமானவர்கள் என்கிற அந்த ஒரு கனியையே கொடுக்கத்தக்கவர்கள். இதுவே இஸ்ரவேலில் சுத்தமாய்க் காணப்படவில்லை. மற்ற ஜனத்தாரிடத்தில் யாதொரு நன்மையும் காணப்படாதிருந்தபோது, தாங்கள் மகா நல்லவர்களென்று பெருமைபாராட்டினார்கள். நன்றாய் விசாரித்துப் பார்க்கும் சமயத்தில் நீதியின் கனிகள் மற்றவர்களிடத்தில் காணப்படாமலிருந்ததுபோல இவர்களிடத்திலும் காணக் கிடைக்கவேயில்லை (ரோ. 2.). ஆதாம் தன் நிருவாணத்தை மறைக்கும்படிக்கு அத்திஇலைகளைக்கொண்டு தன்னை மூடிக் கொள்ளப் பார்த்தது இந்த மரத்தின் தன்மைக்கு எவ்வளவோ இசைவாயிருக்கிறது. அத்திப்பழக்காலம் அல்லாத சமயத்தில் பழங்கள் எங்கிருந்து வரும்? மெய்யான மனிதனாகிய இரக்ஷகராலேதான் மனுஷனிடத்தில் இலையும் பூவும் காயும் கனியும் உண்டாகும். அவரையல்லாமல் தானாய்க் கனிகொடுக்கக்கூடுமென்று சொல்லுகிறவன் மோசக்காரனாயும், பருவத்திற்குமுன் பெருமைபாராட்டுகிறவனாயும் இருக்கிறான். மற்ற மரங்களில் கனி யாதொன்றுமில்லை; கனியுண்டென்று அவைகள் காட்டவுமில்லை. இந்த மரமோ ஒரு கனியுமில்லாதிருந்தும் தன்னிடத்தில் அதிகம் உண்டென்று பெருமைபாராட்டிற்று. புறஜாதியாரும் யூதரும் இப்படித்தான் இருக்கிறார்கள். புறஜாதியாரிடத்தில் யாதொரு நீதியின் கனிகளுமில்லை. அவர்களே அதை ஒத்துக்கொண்டார்கள். யூதர்களோ வெறுமையாயிருந்தும் நிறைவுள்ளவர்களென்று வீம்புபேசினார்கள். புறஜாதிகள் பாவிகள்தான். இவர்களோ மாயக்காரராய் தாங்கள் நல்லவர்களென்று மற்றவர்களை வஞ்சித்தபடியால், தேவனுடைய ராஜ்யத்திற்கு அதிக தூரமானவர்களாயும், சாபத்திற்கு அதிக சமீபமானவர்களாயும் இருந்தார்கள். விசுவாசத்தின் கனிகள் அவர்களிடத்தில் காணப்படாமலிருந்தது அவர்கள்பேரில் குற்றமல்ல. அந்தக் கனிகளின் காலம் இன்னும் வரவில்லை. ஏதுமற்றவர்களாயிருந்தும், தங்களுக்குச் சகலமுமுண்டென்று ஆக்கிரமித்ததுதான் அவர்கள்பேரில் குற்றம். சுகமற்றவர்களாயிருந்ததல்ல, சுகமற்ற

வர்களாயிருந்தும் தாங்கள் சுகமுள்ளவர்களாயிருக்கிறோமெ ன்று சொல்லிக்கொண்டதே அவர்களுக்கு ஆக்கினையாயிருந் தது. இந்த வீண் இலைகளை அவர்களைவிட்டுப் பறித்து, அல் லது இந்த வீண் இலைகள் புறப்படாதபடி தடைசெய்து, இவ் விதமாய் நியாயப்பிரமாணம் தன் கிரியையை அவர்களிடத்தில் நடத்தியிருக்குமானால், தேவன் நியாயப்பிரமாணத்தைக் கொ டுத்த நோக்கம் அவர்களிடத்தில் நிறைவேறியிருக்கும்.

காரியம் இப்படியிருக்கிறபடியால் அந்த அகாலத்தில் கர்த்தர் அந்த மரத்தண்டை போனதும் அவருடைய இலக்ஷணத்திற்கு விகற்பமல்ல. கனி உண்டென்பதுபோல அந்த வீண் இலைகள் காட்டாவிடில் அவர் அங்கே போகவேமாட்டார். அந்தக் காலத்தில் இயல்பாகவே அதில் கனிகிடையாத சமயத்தில் அதைச் சபித்ததும் விகற்பமல்ல. கனி அதில் இல்லாமையால் அல்ல, கனியுண்டென்று இலைகளின்மூலமாய்க் காட்டினபடி யால் அதை தண்டித்தார். அது கனியற்றதாயிருந்ததல்ல, வஞ் சகமுள்ளதாயிருந்ததே அதின் குற்றம். இஸ்ரவேலின் குற்ற மும் இதுதான். இதினால்தான் அவர்கள் மற்றவர்களைவிட தேவனுடைய பார்வையில் அதிக குற்றவாளிகளானார்கள். ரோமருக்கு எழுதின நிருபத்தை நன்றாய் அறிந்துகொண்டோ மானால் இந்த அற்புதம் நமக்குச் செவ்வையாய் விளங்கும் (ரோ. 2. 3, 17—27; 10. 3, 4, 21; 11. 7, 10.). எசேக்கியேலிலும் இதற்கேற்ற ஒரு வாக்கியமுண்டு. ‘அப்படியே கர்த்தராகிய நான் பச்சையான விருட்சத்தைப் பட்டுப்போகப் பண்ணி, பட்டுப்போன விருட்சத்தைத் தழைக்கப்பண்ணினேன் என்று வெளியின் விருட்சங்களுக்கு எல்லாம் தெரியவரும்’ (எசே. 17. 24). லூக். 23. 31ல் இரட்சகர் சொல்லும் வாக்கியமும் இதற் கொத்திருக்கிறது. ‘பச்சைமரத்திற்கு இவைகளைச் செய்திருக்க, பட்டமரத்திற்கு என்னசெய்யமாட்டார்கள்’ என்றார். பசுமை யும் சாரமுமுள்ள பச்சைமரம்போன்ற தன்னை தேவன் இப்படி நொறுக்குவாரானால், தேவசாபத்தால் பட்டுப்போன மரமாகிய குணப்படாத இஸ்ரவேலை என்னசெய்யமாட்டார்? ‘இதுமுதல் ஒருக்காலும் ஒருவனும் உன்னிடத்தில் கனியைப் புசியாதிருக்

கக்கடவன்' என்கிற சாபம் 'உன்னில் பூமியின் வம்சங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்படும்' என்ற ஆசீர்வாதத்திற்கு நேர்விரோதமாயிருந்தது. ஆரோனின் கோல் ஒரே இராத்திரியில் தளிர்த்து இலைகளை விட்டதினால் ஸ்தாபிக்கப்பட்ட லேவியின் ஆசாரிய முறைமை இங்கே தகர்க்கப்பட்டது (எண். 17. 8.). யூதருடைய சூனகோகு என்றென்றைக்கும் கனியற்றதாய்ச் சபிக்கப்பட்டது. முன்னே உலகத்திற்குச் சகலமுமாயிருந்தது, இப்பொழுது ஏதுமற்றதாய்ப் போயிற்று. விலக்கப்பட்டதாகப் பிரித்துவைக்கப்பட்டிருக்கிற அதில் ஏதாவது கொஞ்சமிருந்தாலும் அதினால் யாதாமொரு பிரயோஜனமும் இல்லை. ஒருவனும் ஒருக்காலும் அதில் கனியைப் புசியாதிருப்பானாக என்கிற சாபம் அதின்மேல் வந்துவிட்டது.

'ஒருக்காலும்' என்கிற வார்த்தையில் உவமானமாய் குறிக்கப்பட்ட ஜனத்தாரைப் பார்க்கும்பொழுது இரக்கம் வெளிப்படுகிறதைப் பார்க்கலாம். அது அந்த வார்த்தையில் மறைந்திருக்கிறது. சரியான வேளையில் வெளிப்படும். இந்தக் காலத்தின் முடிவுவரையில், புறச்சாதியாருடைய காலம் நிறைவேறும்வரையில், ஒருக்காலும் ஒருவனும் உன்னிடத்தில் கனி புசியாதிருப்பானாக. நாம் பட்டுப்போன மரமென்று இப்பொழுது சொல்லுகிற இஸ்ரவேல், முன் சொன்னதற்கு விரோதமாய் என்னில் உம்முடைய கனி கண்டுபிடிக்கப்படும் என்று சொல்லும் நாள் வரும் (ஓசி. 14. 8.). பசுமையான இலைகளாலும் வயல்வெளியின் சகல விருட்சத்தின் கனிகளாலும் அது நிறைந்திருக்கும். மத். 24ல் இரட்சகர் கடைசிநாளில் நடக்கிற சங்கதிகளைக்குறித்துப் பேசியிருக்கிறதில் இதைக் குறிப்பாய்க் காட்டுகிறார். யூதர்கள் குணப்படுகிறதைப் பட்டுப்போன அத்திமரத்தில் இலையும் தளிரும் உண்டாவதற்கு உவமானமாய்ச் சொல்லுகிறார். "அத்திமரத்தினால் ஒரு உவமையைக் கற்றுக்கொள்ளுங்கள். அதிலே இளங்கிளை தோன்றி துளிர்விடும்போது வசந்தகாலம் சமீபமாயிற்றென்று அறிவீர்கள். அப்படியே இவைகளையெல்லாம் நீங்கள் காணும்பொழுது அவர் சமீபமாகி வாசலருகே வந்திருக்கிறாரென்று அறியுங்கள்." (மத். 24. 32, 33.).

மத்தேயு எழுதியிருக்கிறதைப் பார்க்கும்பொழுது இரட்சகர் சபித்தவுடனே அது பட்டுப்போனதாகத் தோன்றும். உடனே உயிர்பட்டு சாரம் நின்று பசுமை மாறி அடியிலிருந்து இலையின் நுனிவரையில் சாபம் பரவினதுபோலிருந்தது. மறுநாள் காலையில் சீஷர் திரும்பினபோதுதான் இரட்சகருடைய வார்த்தையால் அது வேரோடு பட்டுப்போயிருக்கிறதைக் கண்டு அவருக்கு அதைச் சொன்னார்கள். "ரபீ, இதோ நீர் சபித்த அத்திமரம் பட்டுப்போயிற்று என்றான்." எத்தனை சீக்கிரம் பட்டுப்போயிற்றென்று ஆச்சரியத்தோடு கேட்டதாகவும் இதை அர்த்தப்படுத்தலாம். மத்தேயுவும் அப்படியே சொல்லுகிறார். இதினின்று இரட்சகர் அவர்களுக்கு ஒரு படிப்பனையைப் போதிக்கிறார். தாம் செய்ததுமாத்திரமல்ல இன்னும் அதிகமாகவும் செய்யக்கூடுமென்பதுபோல சொல்லுகிறார். தேவனிடத்தில் அவர்களுக்கு விசுவாசமிருக்குமானல் தாம் பிரயோகித்த வல்லமையும் அவர்களுக்குக் கிடைக்கும். இப்பொழுது அவர்கள் ஆச்சரியப்படுகிற இதைவிட, இன்னும் அதிக ஆச்சரியமான காரியங்களையும் அவர்கள் செய்யக்கூடுமென்பதுபோல சொல்லுகிறார்.



## 32. மல்குஸின் காதைச் சொஸ்தமாக்கினது.

லூக்கா, 22. 49—51.

"அவரைச் சூழநின்றவர்கள் நடக்கப்போகிறதைக் கண்டு: ஆண்டவரே, பட்டயத்தினாலே வெட்டுவோமா என்றார்கள். அந்தப்படியே அவர்களில் ஒருவன் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனை வலது காதற வெட்டினான். அப்பொழுது இயேசு: இம்மட்டில் நிறுத்துங்கள் என்று சொல்லி, அவனுடைய காதைத் தொட்டு, அவனைச் சொஸ்தப் படுத்தினார்."

தன் எஜமான் யூதர்கையில் அகப்படாதபடிக்கு இந்தச் சீஷன் பட்டயத்தைப் பிரயோகித்த சங்கதி நாலு சுவிசேஷங்களிலும் சொல்லியிருந்தாலும் (மத். 26. 51. மாற். 14. 47. லூக். 22. 50. யோவா. 18. 10.), இந்த அற்புதம் நடந்த விசேஷத்தை லூக்காமாத்திரமே சொல்லுகிறார். இவர்தான், அந்தச் சீஷனால் நேரிட்ட அபாயத்தை இரட்சகர் கண்டு வெட்டப்பட்ட காதை சுகப்படுத்தினாரென்று சொல்லுகிறார். இரட்சகருடைய கிருபையையும் வல்லமையையும் வெளிப்படுத்தின இந்த அற்புதத்தை லூக்கா எழுதுவதற்கு ஒரு விசேஷித்த முகாந்தரமிருந்திருக்கலாம். அவர் வைத்தியனானபடியால் காயத்தைச் சுகப்படுத்தினதாக நம்முடைய இரட்சகருடைய சரித்திரத்தில் வருகிற இந்த ஒரு சங்கதி அவருக்கு விசேஷித்ததாகக் காணப்பட்டது. மேலும் இரட்சகருடைய சாந்தகுணத்தையும், தயவையும், இரக்கத்தையும் இந்த அற்புதம் வெளியாக்கினபடியால், தன் சுவிசேஷம் எழுதப்பட்ட நோக்கத்திற்கும் தன் சொந்த மனதுக்கும் இது மிகவும் இசைவாயிருந்திருக்கலாம். இயேசுநாதர் தம்மைக் கொல்லவந்தவர்களில் ஒருவனுக்கு இந்த உபகாரம் செய்தது அவருடைய நற்குணத்தை அதிகமாய் துலக்குகிறதாயிருக்கிறது.

இப்படி வெட்டினவன் யாரென்று சுவிசேஷகனுக்கு நன்றாய்த் தெரிந்திருந்தாலும் அவனுக்கு அதினால் ஏதாவது

வருத்தம் நேரிடுமென்பதினுலோ, வேறெந்தக்காரணத்தினுலோ அவன் பேரைச் சொல்லாமல் விட்டிருக்கிறுர். லூக்காமாத்திர மல்ல, மத்தேயும் மாற்கும்கூட அவன் பெயரைச் சொல்லக் காணும். மத்தேயு இயேசுவோடிருந்தவர்களில் ஒருவன் என்கிறுர், மாற்குகூட நின்றவர்களில் ஒருவன் என்கிறுர். இப்படி தன் எஜமானுக்காக வைராக்கியம்பாராட்டினது பேதுருதான் என்று யோவான் ஒருவரே சொல்லுகிறுர். இவர் சொல்லியிராவிட்டாலும் இப்படிச் செய்யத்தக்கவன் இன்னுன்தான் என்று நாம் லேசாய் உத்தேசித்துக்கொள்ளலாம். வெட்டினவனுடைய பேரைமாத்திரமல்ல, வெட்டப்பட்ட பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரன் இன்னுனென்றும் சொல்லுகிறுர். அவனுக்கு மல்குஸ் என்று பெயர். இது மற்றவர்களுக்குத் தெரியாமல் யோவானுக்குமாத்திரம் தெரிந்திருந்தது. அவரைக் குறித்து நாம் வாசிக்கிற மற்றக் காரியங்களோடு நன்றுய் இசைந்திருக்கிறது. எந்தவிதத்தாலேயோ அவர் பிரதான ஆசாரியனுக்கு அறிமுகமாயிருந்தார் (யோவா. 18. 15.). கொஞ்சநேரத்திற்குப்பிறகு பேதுரு கிறிஸ்துவை மறுதலிக்கிறதற்குக் காரணமாயிருந்த வேலைக்காரரில் ஒருவன் காது வெட்டுண்டவனுக்கு இனத்தானென்று சொல்லத்தக்கதாய் பிரதான ஆசாரியனுடைய வீட்டுக்காரியங்களை அறிந்திருந்தாரென்று பார்க்கிறேம். (யோவா. 18. 26.)

இந்தச் சங்கதி முழுவதும் நாம் எண்ணத்தக்கவிதமாகவே நடந்திருக்கிறது. அப்போஸ்தலமாரில் பேச்சில் முந்திக்கொள்ளுகிற பேதுருதான் இச்சமயத்தில் பட்டயத்தை உருவிச் செய்கையிலும் தான் துணிவுள்ளவன் என்று காட்டுகிறுன். "ஆண்டவரே, பட்டயத்தினுல் வெட்டுவோமா" என்று அவர்கள் கேட்டபோது ஒரு பக்கத்தில் இரட்சகர்பேரில் இருந்த அன்பினுல் அவருக்கு வந்த மோசத்தை விலக்கவேண்டுமென்கிற ஆசையும், மறுபக்கத்தில் பொல்லாங்குக்கு எதிர்த்துநிற்கக் கூடாதென்று தன் எஜமான் போதித்த போதனையும் அவனை நெருக்கினபடியால், அவருடைய உத்தரவுக்குக் காத்திராமல் தன்னுடைய தைரியத்தினுல் ஏவப்பட்டு என்னநடக்குமென்று

யோசியாமல், தன் இரட்சகருடையபேரில் கைபோடவந்தவர்களில் முந்தினவனுகக் காணப்பட்டவனைப் பட்டயத்தினுல் வெட்டினுன். இவன் பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரரில் ஒருவன். ஒருவேளை "எஜமானைப்போல வேலைக்காரன்" என்கிற பழமொழியின்படி காய்பாவைப்போல் இவன் இந்த துர்ச்செய்கையில் முந்திக்கொள்ளுகிறவனுய் இருந்திருப்பான். பேதுரு அவனை வெட்டவேண்டுமென்றே பட்டயத்தை ஓங்கியிருப்பான். தெய்வச்செயலாய் அந்த அடி தலையின்மேல் பட்டு காதைமாத்திரம் அறுத்துக்கொண்டுபோயிற்று. லூக்காவும் யோவானும் சொல்லுகிறபடி அது வலதுகாது. இவ்விதமாய் அந்த மனுஷன் உயிர்தப்பி ஓடினுன். நமது இரட்சகர் தமது சீஷனைக் கண்டித்த வார்த்தைகள் பல சுவிசேஷங்களிலும் பலவிதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அல்லது நான்குபேரும் வெவ்வேறு பங்குகளைச் சொல்லியிருப்பார்கள். அவைகள் சொல்லப்பட்ட நோக்கம் நாலிலும் ஒன்றுபோலத்தான் காணப்படுகிறது. மத்தேயுதான் அதை விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறுர் (மத். 26. 52—54.). லூக்கா சுத்தமாய்ச் சொல்லாமல் விட்டுவிடுகிறுர். அந்தக் கலக்கமான சமயத்தில் அதிகமாய்ப் பேச சமயம் நேரிடமாட்டாது. ஓர்வேளை அவர் மல்குவின் காதை சொஸ்தமாக்கிக்கொண்டிருந்தபோது, மற்றவர்களெல்லாரும் அதைப்பார்த்து ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்த சமயத்தில் இரட்சகர் இந்த அமைதலான வார்த்தைகளைச் சொல்ல ஏதுவிருந்திருக்கலாம். அவரைப் பிடிக்கவந்தவர்களும், அவருடைய சீஷர்கள் எதிர்த்துப் போராடுவார்களென்று முந்தி பயந்தவர்கள், அப்படிப்பட்டது ஒன்றும் செய்யாதபடிக்கு இரட்சகர்சொன்ன வார்த்தைகளைக் கேட்டு அவர் பேசும்படி தடையின்றி இடங்கொடுத்திருக்கலாம். பேதுருவுக்குமாத்திரமல்ல, மற்றச் சீஷருக்கும் அவர் இந்த வார்த்தைகளைச் சொன்னுர். "உன் பட்டயத்தைத் திரும்ப அதின் உறையிலே போடு; பட்டயத்தை எடுக்கிற யாவரும் பட்டயத்தால் மடிந்துபோவார்கள்." பட்டயத்தை எடுக்கிறதையும் பட்டயத்தால் மடிகிறதையும் இரட்சகர் ஒன்றுய்ச் சேர்த்தபடியால், எவன் மனிதனுடைய

ரத்தத்தைச் சிந்துகிருனே மனிதனுல் அவன் ரத்தம் சிந்தப்படும் என்று ஆதியில் கொடுக்கப்பட்ட பிரமாணத்தை நினைத்து இப்படிச் சொல்லியிருக்கலாம் (ஆதி. 9. 6.) வெளி. 13. 10லும், இந்தக் கருத்துக்கு இசைவான வார்த்தைகள் அடங்கியிருக்கிறது. இந்த வார்த்தைகளைச் சிலர் தப்பாய் அர்த்தம்பண்ணுகிருர்கள். இந்த துஷ்ட மனிதனை தண்டிக்கிறது உன் கடமையல்ல, அவர்கள் பட்டயத்தை எடுத்தபடியால் தேவனுடைய நீதியான ஆக்கினையின்படி பட்டயத்தால் அழிந்துபோவார்கள் என்று சொல்லிப் பேதுருவை அமர்த்தினதாக சிலர் அர்த்தம்பண்ணிஞர்கள். ஆனுல் பட்டயத்தை எடுக்கிறதைக்குறித்த வார்த்தைகள் "உன் பட்டயத்தைத் திரும்ப அதின் உறையிலே போடு" என்கிற வார்த்தையோடு சேர்ந்திருப்பதால், இதுவே அதின் கருத்தென்று சொல்லக்கூடாது. பின்வரும் வாக்கியத்தின் பொருள் வெகு தெளிவாயிருக்கிறது. உன்னுடைய உதவி இந்தச் சமயத்தில் எனக்கு வேண்டுமென்ரு நினைக்கிருய்? என்னுடைய சீஷராகிய நீங்கள் பன்னிருவரும் பெலவீனமுள்ளவர்கள் (மத். 19. 28. லூக். 22. 30.); யுத்தத்தில் பழகாதவர்கள். மிஞ்சிப்போன இந்த நேரத்திலும் நான் என் பிதாவை நோக்கி விண்ணப்பம்பண்ணுவேனேயாகில் பன்னிரண்டு லேகியோனுக்கு அதிகமான பலத்த தூதர்களை இந்த நிமிஷத்திலே எனக்காகப் போர்ச்செய்ய அனுப்புவாரே" (மத். 26. 53.). தேவதூதர் எத்தனை ஏராளமாயிருந்தார்களென்றும், எத்தனை ஒழுங்காய் அணிவகுக்கப்பட்டிருந்தார்களென்றும் இதிஞல் அறிந்துகொள்ளலாம் (லூக். 2. 13.). பன்னிரண்டு லேகியோன் தேவதூதரை அழைப்பிக்க தம்மால் கூடுமென்று இரட்சகர் சொன்னது, 2 இரா. 6. 17ஐ நமக்கு ஞாபகப்படுத்துகிறது. எலிசாவைவிட பெரியவர் இப்படிச் சொல்லுகிறபடியால், அவர் பயந்திருந்த தம்முடைய சீஷன் கண்களைத் திறந்து, தேவனுடைய பருவதத்தைக் காண்பித்து, தன் எஜமானைச் சூழ்ந்திருந்த பரமசேனையாகிய அக்கினிரதங்களையும் குதிரைகளையும் அவன் பார்க்கச்செய்து, ஒரு இமைப்பொழுதில் அவர்களைக்கொண்டு தமது சத்துருக்களை முறியடிக்கக்கூடும்

என்பதைத் தெரியப்படுத்தினார். அப்படிச் செய்வாரானால் இவ்விதமாய்ச் சம்பவிக்கவேண்டுமென்கிற வேதவாக்கியங்கள் எப்படி நிறைவேறும்? பரமசேனையை தமக்கு ஒத்தாசைக்கு வருத்தவேண்டுமென்று அவர்கள் எண்ணியிருந்தாலும், அந்த எண்ணத்தை இங்கே ஒரு நிமிஷத்தில் தகர்த்துப்போடுகிறார். அப்படிச் செய்தால் தேவனுடைய அநாதிதீர்மானம், அவருடைய சித்தம், இப்படி நடக்கவேண்டுமென்று வேதவசனத்தில் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது எப்படி நிறைவேறும் (சகரி. 13. 7.)? தம்முடைய சித்தம் பிதாவின் சித்தத்திற்குக் கீழடங்கியிருக்கவேண்டியபடியால், இப்படிப்பட்ட உதவியைத் தேடுகிறது சரியல்லவென்பதை யோவான் சுவிசேஷத்தில் வேறு விதமாய்ச் சொல்லுகிறார். பிதா எனக்குக் கொடுத்த பாத்திரத்தில் நான் பானம்பண்ணாமலிருப்பேனா என்றார். பாத்திரத்தைப்பற்றின இவ்வித உவமானம் வேதவசனத்தில் அநேக இடங்களில் வருகிறது. தேவன் நமது கைகளில் ஒரு பாத்திரம் கொடுத்திருப்பதுபோலவும், அதிலுள்ளது எவ்வளவோ கசப்பாயிருந்தாலும் அதை முழுதும் குடிப்பது அவருடைய சித்தமென்பதுபோலவும் காட்டுகிறார் (மத். 20. 22, 23; 26. 39.). இந்த இடங்களில் பாத்திரமென்று வருகிறது துன்பங்களைக் குறிக்கும். பழைய ஏற்பாட்டில் முக்கியமாய் தேவ கோபமாகிய பாத்திரத்தைக்குறித்து வாசிக்கிறோம் (எசா. 51. 17, 22. சங். 11. 6; 75. 8. எரே. 25. 15, 17; 49. 12. புல. 4. 21. வெளி. 14. 10; 16. 19.). எப்படி அர்த்தப்படுத்தினாலும் மாம்ச ரத்தத்திற்கு இது பிரியமானதல்ல. மனுஷன் இதைவிட்டுப் பின்வாங்கவே பார்ப்பான். தேவபக்தர்கள் தங்கள் ஆத்தும நன்மைக்காக இதற்குத் தப்பக்கூடாது. பாவிகள் தண்டனையாக இதை எவ்விதமும் சகிக்கவேண்டியது.

'இம்மட்டில் பொறுங்கள்' என்னும் வார்த்தை சீஷருக்கே சொல்லப்பட்டது. அதாவது, இவ்வளவில் நிறுத்துங்கள்; இவ்வளவு தூரம் நீங்கள் எதிர்த்துப் போர்செய்தது போதும், இனி வேண்டாம் என்பதுபோல் சொன்னார். சிலர் இரட்சகர் இந்த வார்த்தைகளை தம்மைப் பிடிக்கவந்தவர்களோடு பேசி,

காதைச் சொஸ்தமாக்கும்வரையில் சற்றே பொறுங்களென்று சொன்ன பாவனையாய் அநுத்தப்படுத்துகிறார்கள். இது உதவாது. தமது சீஷருடைய வீண் வைராக்கியத்தைக் கடிந்துகொண்டபிறகு, தாம் இட்ட சட்டத்தின்படி தாம் சத்துருக்களை நேசித்துப் பகைக்கிறவர்களுக்கு நன்மைசெய்கிறவரென்று காண்பிக்கும்படி, காயப்பட்டவனுடைய காதைத் தொட்டு அவனைச் சொஸ்தப்படுத்தினார். பேதுருவும் மற்றச் சீஷர்களும் மாம்சத்திற்குரியவர்களாக இந்தத் தைரியத்தைக் காட்டினபோதிலும், சத்துருக்கள் கையில் அவரைவிட்டு ஓடிப்போனார்கள். இரட்சகர் செய்த இரக்கமான கிரியையை ஜனங்கள் ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண்டிருந்தபடியாலும், கலகமும் இருட்டும் அதிகமாயிருந்தபடியாலும் அவர்கள் ஓடித் தப்பிக்கொள்ள அது நல்ல சமயமாயிருந்தது.

பேதுரு செய்த இந்தத் துணிகரமான செய்கையை ரோமான் மார்க்க வியாக்கியானிகள் அதிகமாய்ப் புகழ்ந்து, இது பினெகாசினுடைய செய்கைக்கு (எண். 25. 7.) ஒத்திருக்கிறதென்று சொல்லுகிறதுமல்லாமல், உன் கத்தியைத் தூர எறிந்துவிடு என்று சொல்லாமல் அதை உறையிலே போடென்று இரட்சகர் சொன்னபடியால், வேண்டியபோது மறுபடியும் எடுத்துக்கொள் என்று உத்தரவு கொடுத்தாரென்றும், சபையின் அதிகாரிகள் அவசியமான தருணத்தில் பட்டயத்தைப் பிரயோகிக்கலாம் என்றும் அர்த்தப்படுத்துவது மெத்த ஆச்சரியமாயிருக்கிறது. கல்வின் முதலிய புரோட்டெஸ்றென்று வியாக்கியானிகள் பேதுரு செய்தது அதிக புத்தியீனமென்று அதிகமாய்க் கண்டித்து எழுதியிருக்கிறார்கள். இந்தத் துணிகரமான செய்கைக்கு ஒத்ததை பழைய ஏற்பாட்டில் யாத். 2. 12ல் காணலாம்.



## 33. இரண்டாம்விசை ஆச்சரியமாய் மீன்பிடித்தது.

யோவான், 21. 1—23.

"இவைகளுக்குப் பின்பு இயேசு திபேரியா கடற்கரையிலே மறுபடியும் சீஷருக்குத் தம்மை வெளிப்படுத்தினார்; வெளிப்படுத்தின விவரமாவது; சீமோன்பேதுருவும், திதிமு என்னப்பட்ட தோமாவும், கலிலேயா நாட்டிலுள்ள கானாஊரானாகிய நாத்தான்வேலும், செபதேயுவின் குமாரரும், அவருடைய சீஷரில் வேறு இரண்டுபேரும் கூடியிருக்கும்போது, சீமோன்பேதுரு மற்றவர்களை நோக்கி: மீன்பிடிக்கப்போகிறேன் என்றான். அதற்கு அவர்கள்: நாங்களும் உம்முடனே கூடவருகிறோம் என்றார்கள். அவர்கள் புறப்பட்டுப் போய், உடனே படவேறினார்கள். அந்த ராத்திரியிலே அவர்கள் ஒன்றும் பிடிக்கவில்லை.

விடியற்காலமானபோது, இயேசு கரையிலே நின்றார்; அவரை இயேசு என்று சீஷர்கள் அறியாதிருந்தார்கள். இயேசு அவர்களை நோக்கி: பிள்ளைகளே, புசிக்கிறதற்கு ஏதாகிலும் உங்களிடத்தில் உண்டா என்றார். அதற்கு அவர்கள்: ஒன்றுமில்லை என்றார்கள். அப்பொழுது அவர்: நீங்கள் படவுக்கு வலதுபுறமாக வலையைப் போடுங்கள், அப்பொழுது உங்களுக்கு அகப்படும் என்றார். அப்படியே அவர்கள் போட்டு, திரளான மீன்கள் அகப்பட்டதினால், அதை இழுக்கமாட்டாதிருந்தார்கள். ஆதலால் இயேசுவுக்கு அன்பாயிருந்த சீஷன் பேதுருவைப் பார்த்து: அவர் கர்த்தர் என்றான். அவர் கர்த்தர் என்று சீமோன்பேதுரு கேட்டவுடனே, தான் வஸ்திரமில்லாதவனாயிருந்தபடியினால், தன் மேற்சட்டையைக் கட்டிக்கொண்டு கடலிலே குதித்தான். மற்றச் சீஷர்கள் கரைக்கு ஏறக்குறைய இருநூறுமுழ தூரத்தில் இருந்தபடியினால் படவிலிருந்துகொண்டே மீன்களுள்ள வலையை இழுத்துக்கொண்டு வந்தார்கள்.

அவர்கள் கரையிலே வந்திறங்கினபோது, கரிநெருப்புப் போட்டிருக்கிறதையும், அதின்மேல் மீன் வைத்திருக்கிறதையும், அப்பத்தையும் கண்டார்கள். இயேசு அவர்களை நோக்கி: நீங்கள் இப்பொழுது பிடித்த மீன்களில் சிலவற்றைக் கொண்டுவாருங்கள் என்றார். சீமோன்பேதுரு படவில் ஏறி, நூற்றைம்பத்துமூன்று பெரிய மீன்களால் நிறைந்த வலையைக் கரையில் இழுத்தான்; இத்தனை மீன்கள் இருந்தும் வலை கிழியவில்லை. இயேசு அவர்களை நோக்கி: வாருங்கள், போஜனம்பண்ணுங்கள் என்றார். அவரைக் கர்த்தரென்று சீஷர்கள் அறிந்தபடியினால் அவர்களில் ஒருவனும்: நீர் யார் என்று கேட்கத் துணியவில்லை. அப்பொழுது இயேசு வந்து, அப்பத்தையும் மீனையும் எடுத்து, அவர்களுக்குக் கொடுத்தார். இயேசு மரித்தோரிலிருந்தெழுந்தபின்பு தம்முடைய சீஷருக்கு அருளின தரிசனங்களில் இது மூன்றாவது தரிசனம்.

அவர்கள் போஜனம்பண்ணினபின்பு, இயேசு சீமோன்பேதுருவை நோக்கி: யோனாவின் குமாரனாகிய சீமோனே, இவர்களிலும் அதிகமாய் நீ என்னிடத்தில் அன்பாயிருக்கிறாயா என்றார். அதற்கு அவன்: ஆம் ஆண்டவரே, உம்மை நேசிக்கிறேன் என்பதை நீர் அறிவீர் என்றான். அவர்: என் ஆட்டுக்குட்டிகளை மேய்ப்பாயாக என்றார்.

இரண்டாந்தரம் அவர் அவனை நோக்கி: யோனாவின் குமாரனாகிய சீமோனே, நீ என்னிடத்தில் அன்பாயிருக்கிறாயா என்றார். அதற்கு அவன்: ஆம் ஆண்டவரே, உம்மை நேசிக்கிறேன் என்பதை நீர் அறிவீர் என்றான். அவர்: என் ஆடுகளை மேய்ப்பாயாக என்றார்.

மூன்றாந்தரம் அவர் அவனை நோக்கி: யோனாவின் குமாரனாகிய சீமோனே, நீ என்னை நேசிக்கிறாயா என்றார். என்னை நேசிக்கிறாயா என்று அவர் மூன்றாந்தரம் தன்னைக் கேட்டபடியினாலே, பேதுரு துக்கப்பட்டு: ஆண்டவரே, நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர், நான் உம்மை நேசிக்கிறேன் என்பதையும் நீர் அறிவீர் என்றான். இயேசு: என் ஆடுகளை மேய்ப்பாயாக என்றார். நீ இளவயதுள்ளவனாயிருந்தபோது உன்னை நீயே அரைகட்டிக்கொண்டு, உனக்கு இஷ்டமான இடங்களிலே நடந்து திரிந்தாய்; நீ முதிர்வயதுள்ளவனாகும்போது உன் கைகளை நீட்டுவாய், வேறொருவன் உன் அரையைக் கட்டி, உனக்கு இஷ்டமில்லாத இடத்துக்கு உன்னைக் கொண்டுபோவான் என்று, மெய்யாகவே மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார். இன்னவிதமான மரணத்தினாலே அவன் தேவனை மகிமைப்படுத்தப்போகிறானென்பதைக் குறிக்கும்படியாக இப்படிச் சொன்னார். அவர் இதைச் சொல்லியபின்பு, அவனை நோக்கி: என்னைப் பின்பற்றிவா என்றார்.

பேதுரு திரும்பிப்பார்த்து, இயேசுவுக்கு அன்பாயிருந்தவனும், இராப்போஜனம்பண்ணுகையில் அவர் மார்பிலே சாய்ந்து, ஆண்டவரே, உம்மைக் காட்டிக்கொடுக்கிறவன் யார் என்று கேட்டவனுமாகிய சீஷன் பின்னே வருகிறதைக் கண்டான். அவனைக் கண்டு, பேதுரு இயேசுவை நோக்கி: ஆண்டவரே, இவன் காரியம் என்ன என்றான். அதற்கு இயேசு: நான் வருமளவும் இவனிருக்க எனக்குச் சித்தமானால், உனக்கென்ன, நீ என்னைப் பின்பற்றிவா என்றார்.

ஆகையால் அந்தச் சீஷன் மரிப்பதில்லை என்கிற பேச்சு சகோதரருக்குள்ளே பரம்பிற்று. ஆனாலும், அவன் மரிப்பதில்லையென்று இயேசு சொல்லாமல், நான் வருமளவும் இவனிருக்க எனக்குச் சித்தமானால் உனக்கென்னவென்று சொன்னார்.''

---

யோவான் சுவிசேஷம் முந்தின அதிகாரத்தின் கடைசி வசனங்களோடு முடிந்துபோனதுபோல் தோன்றும். புஸ்தகத்தை முடித்தபிறகு இந்தச் சங்கதியைச் சொல்லாமல் விடுவது நல்லதல்லவென்று எண்ணி இதை பிறகு கூட்டியிருக்கலாம்.

அல்லது யோவான் தானே இந்தச் சங்கதியைச் சொல்லக் கேட்ட சீஷர்கள் இது எவ்விதத்திலும் கிறிஸ்துசபைக்கு பிற்காலத்திற்குப் பிரயோஜனமாயிருக்குமென்று எண்ணிக் கேட்டுக்கொண்டதின்மேல் இதைக் கூட்டியிருக்கலாம். சிலர் இது சரியானபடி யோவானுடையதல்ல என்கிறார்கள். ஆனால் புற அத்தாக்ஷியைப் பார்த்தாலும், அக அத்தாக்ஷியைப் பார்த்தாலும் இப்படிச் சொல்ல ஏதுவிராது. எல்லாப் பிரதிகளிலும் திருப்புதலிலும் இதைக் காணலாம். பூர்வீகத்தில் இப்படிப்பட்ட சந்தேகங்கள் இருந்ததேயில்லை. பாஷைநடையைப் பார்த்தாலும் இதை எழுதினது யோவான்தானென்று திட்டமாய்ச் சொல்லத்தக்க குறிப்புகளுண்டு. அவருக்கு மாத்திரமுரிய வார்த்தைகளையும் வாசகங்களையும் இதில் ஏராளமாய்க் காணலாம். 'திபேரியாக்கடல்' என்றும் 'பிள்ளைகளே' என்றும் அழைக்கிற வாடிக்கை இவர் எழுதினதில் மாத்திரம் உண்டு. யோவா. 21. 18ல் 'மெய்யாகவே' என்று இரட்டித்துச் சொல்லும் வழக்கம் இவருக்குமாத்திரம் உரியது. இவர் சுவிசேஷத்தில்மாத்திரம் மேற்படி வார்த்தை இருபத்தைந்துதரம் வருகிறது. புதிய ஏற்பாட்டின் வேறெந்த இடத்திலும் இதைக் காணமாட்டோம். திதிமு என்னப்பட்ட தோமா என்னும் வாசகம் இவருக்குமாத்திரம் உரியது. 19-ம் வசனத்தை 2-ம் அதி. 21-ம் வசனத்தோடும், 6-ம் அதி. 6-ம் வசனத்தோடும், 7-ம் அதி. 39-ம் வசனத்தோடும், 12-ம் அதி. 23-ம் வசனத்தோடும், ஒத்துப்பார்த்தாலும் நான் சொல்லுகிறது நன்றாய் விளங்கும். மூலபாஷை அறிந்தவர்களுக்கு நான் சொல்லுகிறது வெகு தெளிவாயிருக்கும். யோவா. 1. 1—14 வரையுமுள்ள வாக்கியங்களை இந்தச் சுவிசேஷத்திற்கு முகவுரையாகவும் இந்த அதிகாரத்தை முடிவுரையாகவும் வைத்துக்கொள்ளலாம். முந்தினது இயேசு பிதாவினிடத்திலிருந்து வருமுன்னே தேவகுமாரனாய் அவருக்கிருந்த மகிமையை வெளிப்படுத்துகிறதுபோல, பிந்தினது பிதாவினிடத்திற்குப் போனபிறகு அவர் உலகத்தை ஆளப்போகிற விதத்தை ஞானக்கருத்தின்படி தீர்க்கதரிசனமாய் விளக்கிக்காட்டுகிறது.

இந்த அற்புதம் கலிலேயாக்கடலருகே நடந்தது. அங்கே மறுபடியும் சீஷருக்குத் தம்மை வெளிப்படுத்தினார். முதலாம் அற்புதத்தைச் செய்து தமது மகிமையை வெளிப்படுத்தினதுபோல (யோவா. 2. 11.) இந்தக் கடைசி அற்புதத்திலேயும் தம்மை வெளிப்படுத்தினார். 'வெளிப்படுத்தினார்' என்பதில் ஓர் விசேஷித்த கருத்துண்டு. உயிர்த்தெழுந்தபிறகு தமது சரீரத்தை தமக்கு இஷ்டமானபோதுமாத்திரந்தான் வெளிப்படுத்தக்கூடும் என்பது இதின் பொருள். அதுமுதல் சீஷர்கள் இயேசுவானவரைப் பார்த்தார்களென்று சொல்லாமல் இயேசுவானவர் தம்மை அவர்களுக்கு வெளிப்படுத்தினார், அல்லது காணப்பட்டாரென்றுதான் சொல்லியிருக்கிறது. இந்த வித்தியாசமான வார்த்தைகளில் விசேஷித்த கருத்தில்லையென்று சொல்லக்கூடாது. உயிர்த்தெழுந்தபிறகு அவர் காணப்பட்ட சமயங்களில் எல்லாம் இப்படியே சொல்லியிருக்கிறது (லூக். 25. 34. அப். 13. 31. 1 கொரி. 15. 5—8.). தேவதூதர்கள் காணப்பட்டதைக் குறித்தும், மற்றப் பரமகாட்சிகளைக்குறித்தும், மனிதர்கள் அவர்களை தங்கள் இஷ்டப்படி பார்க்கத்தக்கதுபோல, மனிதர்கள் பார்த்தார்களென்று சொல்லாமல், அப்படிச் சொல்லக்கூடாதென்கிறதுபோல, மனிதர்களுக்கு அவர்கள் காணப்படுகிறதாகச் சொல்லியிருக்கிறது (நியா. 6. 12; 13. 3, 10, 21. மத். 17. 3. லூக். 1. 11; 22. 43. அப். 2. 3; 7. 2; 16. 9; 26. 16). யாருக்குத் தம்மை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, யாருக்காக அவர்கள் அனுப்பப்படுகிறார்களோ அவர்களுக்குமாத்திரமே தரிசனை கிடைக்கும். இந்தச் சங்கதியில் சொல்லப்பட்டிருக்கிற தரிசனை சீமோன்பேதுரு, தோமா, நாத்தானுவேல், யாக்கோபு, யோவான் இவர்களுக்கும் பேர்சொல்லப்படாத வேறு இரண்டு சீஷர்களுக்குமாத்திரம் காணப்பட்டது. நாத்தானுவேல் என்னும் பேர் பிரதான அப்போஸ்தலர் நடுவில் வருகிறபடியால், மற்றச் சீஷர்கள் பர்த்தலொமேயு என்று அழைக்கிறவனைத்தான் யோவான் இங்கே நாத்தானுவேல் என்று அழைக்கிறாரென்று நினைக்க நியாயமுண்டு. பேர்சொல்லப்படாத அந்த இருவரும் யாரென்று சொல்ல ஏதுவில்லா

விட்டாலும், அவர்கள் அப்போஸ்தலராகவே இருக்கவேணு மென்று சொல்லலாம். இவர்கள்தான் சரியானபடி அவருடைய சீஷர்கள். 'அப்போஸ்தலர்' என்னும் கிரேக்கவார்த்தை பன்னிருவரைக் குறிக்கிறதாக யோவான் வழங்குகிறதில்லை. இந்தச் சுவிசேஷத்தில் ஒருவிசை மாத்திரந்தான் அந்த வார்த்தை வருகிறது (யோவா. 13. 16.); அந்த இடத்திலும் பொதுவாய் அனுப்பப்பட்டவன் என்கிற அர்த்தத்தையே தரும். இந்த இருவரும் அந்திரேயாவும் பிலிப்பும் என்று சில கல்விமான்கள் நினைக்கிறார்கள்.

பேதுரு மீன்பிடிக்கப்போகிறேன் என்று சொன்னபோது இயேசுவை மேசியா என்று தான் நம்பியிருந்த நம்பிக்கை அற்றுப்போனபடியால்தான் அப்போஸ்தல ஊழியத்தை விட்டுவிட்டு, வேறு நல்ல அலுவல் தனக்குக் கிடையாமல், தன் பழைய அலுவலைச் செய்ய மனமுள்ளவனைப்போல பேசினாரென்று அர்த்தப்படுத்தக்கூடாது. தன் எஜமான் ஸ்தாபித்த ராஜ்யத்தில் அவர் போதகனாயிருந்தாலும் அவசரகாலத்தில் மற்றவர்களுடைய உதவியைத் தேடாமல் தானே செய்யத்தக்க கைத்தொழில் ஒன்றைப் படித்திருப்பது யூதரபிமார்களுக்குள்ளே நல்லகாரியமாக எண்ணப்பட்டது. பவுல் கூடாரம் தைக்கும் தொழிலைப் படித்திருந்தது அவருக்கு எவ்வளவோ பிரயோஜனமாயிருந்ததென்று நமக்குத் தெரியுமே (2 தெச. 3. 8.). ஆத்துமகாரியங்களைச் செய்துமுடித்தபிறகு, சில சமயங்களில் இப்படிப்பட்ட கைத்தொழில்களை நடப்பிக்கிறதும் அவர்கள் மனதுக்கு ஓர்விதமான சுவாத்தியத்தைக் கொடுக்கத்தக்க காரியந்தானே. மீன்பிடிக்கப்போகிறேன் என்று பேதுரு சொன்னது தான் செய்யப்போகிறதைமாத்திரம் காட்டாமல், மனமானால் அவர்களும் தன்னோடு வரலாமென்று அழைத்ததுபோலிருந்தது. அவர் அப்படிச் சொன்னமாத்திரத்தில் நாங்கள் உம்முடனேகூட வருகிறோம் என்கிறார்கள். எவ்வளவோ பிரயாசப்பட்டும் அந்த ராத்திரியிலே அவர்கள் ஒன்றும் பிடிக்கவில்லை. முன்னொரு சமயத்தில் அவர்களில் பிரதானமானவனுக்கு நடந்ததுபோல இவர்களுக்கும் நடந்தது

(லூக். 5. 5.). அந்தச் சமயத்தைப்போல இந்தச் சமயத்திலும் தங்கள் காரியம் மாறிச் சித்திக்குமோவென்று ஞானக்கருத்தாய் எதிர்பார்த்திருந்தாலும் இருக்கலாம். முந்தின சமயத்தில் இரவுக்குப் பிறகு சூரியோதயமுண்டானதுபோல, அவர்கள் மனிதர்களைப் பிடிக்கிற அந்த அலுவலில் ஏற்படுத்தப்பட்ட வண்ணமாய், இச்சமயத்திலும் அவர்கள் காரியம் சித்தியடையாமல் போனது அவர்கள் ஏற்படுத்தப்பட்ட அந்த மகிமையான அலுவலின் தன்மையையும், அதில் அவர்களுக்குக் கிடைக்கப்போகிற பலனையும் எதிர்பார்க்கும்படி அவர்களை ஆயத்தப்படுத்தியிருந்தாலும் இருக்கலாம். ஆயினும் அப்படியேயிருக்குமானால் விடியற்காலமானபோது கரையிலே நின்ற அவரைத் தங்கள் எஜமானென்று அறிந்துகொள்ளலாமே. அவர்களுடைய கண்கள் மூடப்பட்டிருந்தது. அவர் அவர்களுக்கு ஒரு அந்நியனைப் போல கடலோரத்தில் அதிகாலையில் பிரயாணம்பண்ணுகிற வழிப்போக்கனைப்போல் காணப்பட்டார். அவ்விதமாகவே அவரும் அவர்களைப் பார்த்து: பிள்ளைகளே, புசிக்கிறதற்கு ஏதாகிலும் உங்களிடத்தில் உண்டா என்றார். இராத்திரியில் அவர்கள் பிடித்ததை விற்பார்களென்று எண்ணி, வாங்க மனமுள்ளவர்போல கேட்டாரென்று கிறிசொஸ்தம் சொல்லுகிறது நன்றாயில்லை. ஏதாவது பிடித்தார்களோ, ஒன்றும் அகப்படாமல் போச்சுதோ என்கிற சந்தேகமுடையவர்கள் ஆசையோடு விசாரிக்கிற வண்ணமாகத்தான் இந்தக் கேள்வியைக் கேட்டிருப்பார்; அவர்கள் ஒன்றும் அகப்படவில்லையென்றார்கள். இப்படி அவர்கள் வாயினால் சொல்லவேணுமென்றே அவர் அந்தக் கேள்வியைக் கேட்டார். ஏனெனில், பெரியகாரியங்களில் மாத்திரமல்ல சிறியவைகளிலும், பரத்துக்குரிய காரியங்களில் மாத்திரமல்ல இவ்வுலககாரியங்களிலும், தேவன் தமது கிருபையின் ஐசுவரியத்தை வெளிப்படுத்துமுன்னே மனிதன் தன் எளிமைத்தனத்தை அறிக்கையிடுவது நல்லது.

அவர் சொன்னது, 'நீங்கள் படவுக்கு வலதுபுறமாக வலையைப் போடுங்கள், அப்பொழுது உங்களுக்கு அகப்படுமென்றார். இதை அவர்கள் பட்சமும் யோசனையுமுள்ள ஒரு அந்

ஙியன் சொன்னதுபோல் எண்ணினபோதிலும், அதற்குக் கீழ்ப்படிந்து அப்படியே போட்டு திரளான மீன்கள் அகப்பட்டதினலே அதை இழுக்கமாட்டாதிருந்தார்கள். இதற்குள்ளாக சீஷரில் ஒருவன் இயேசுவுக்கு அன்பாயிருந்தவன், அவர் இன்னுரென்று திட்டமாய் அறிந்துகொண்டான். முன்னெருவிசை அவருடைய வார்த்தையைக் கேட்டு வலை கிழிந்துபோகத்தக்கதாக திரளான மீன்களைப் பிடித்த அந்தச் சங்கதி அவன் ஞாபகத்தில் வந்தது. அந்தக் கர்த்தருக்கு முன்பாகத்தான் இப்போதிருக்கிறேமென்று அறிந்து, மற்றவர்களுக்குச் சொல்லாவிட்டாலும், பேதுருவைப்பார்த்து: அவர் கர்த்தர் என்றுன். பேதுருவோடுதான் அவன் அதிகப் பழக்கமானவன். ஆதலால் அவன் அறிந்ததை பேதுருவுக்குத்தான் சொல்லவேண்டியவன். ஒவ்வொரு அப்போஸ்தலனுக்கு ஒவ்வொரு விசேஷித்த குணமிருந்தது. அவர் தனக்கு அன்பானவர் என்று லேசாய் அறிந்துகொள்ளத்தக்க பார்வை யோவானுக்கிருந்ததுபோல, செய்கையில் முந்திக்கொள்ளத்தக்க சுறுசுறுப்பு பேதுருவுக்கு இருந்தபடியால், படகு கரைசேரும்வரையில் காத்திராமல் கடலில் விழுந்து தன் எஜமானிடத்தில் கிட்டிச் சேருகிறுன் (மத். 14. 28.). முன்னே வஸ்திரமில்லாதவனுய் இருந்திருக்கிறுன். அதாவது, மேல்வஸ்திரங்களையெல்லாம் கழற்றிப்போட்டு வேலைக்கேற்ற வஸ்திரங்களைமாத்திரம் உடுத்தியிருந்தான் (மத். 24. 18. 1 சாமு. 19. 24. ஏசா. 20. 3.). வஸ்திரமில்லாதவன் என்பதின் பொருள் இதுதான். இப்பொழுது தன் மேல்வஸ்திரத்தை (1 சாமு. 18. 4.) அதாவது மீன்பிடிக்கிறவர்கள் போடும் அங்கியைப் போட்டுக்கொண்டு நீந்துகிறதற்குத் தடையில்லாமல் அதை நன்ருய்க் கட்டிக்கொண்டு, தன் எஜமானிடத்திற்கு மரியாதையோடு போகிறுன். இந்தச் சமயத்தில் கடலின்மேல் நடந்தானென்று சிலர் எண்ணுகிறுர்கள். இப்படிச் சொல்லி அற்புதங்களின் தொகையைப் பெருக்குகிறது நல்லதல்ல. கடலில் குதித்தானென்கிற வார்த்தைகளில் அந்தக் கருத்தும் இல்லை. அவன் நீந்திக் கரைசேர்ந்திருக்கவேண்டும். அது இருநூறுமுழதூரம் அல்லது கெஜமாயிருக்கும். மற்றச் சீஷர்க

ளோ மெதுவாய் வந்தார்கள். ஏனென்றால் வலைகளும் மீன்களும் அதிக பாரமாயிருந்தது. வலை நிறைய மீன்களிருந்தபடியால் அதைப் படகில் தூக்கிவைக்கக்கூடாமல் தண்ணீரிலே இழுத்துவந்து கரைசேர்த்தார்கள். கரையிலே கரிநெருப்புப் போட்டிருக்கிறதையும் அதின்மேல் மீன் வைத்திருக்கிறதையும் அப்பத்தையும் கண்டார்கள். இது இயல்பாய் அங்கே வைக்கப்பட்டிருந்ததோ, அல்லவென்று அற்புதமாய் வந்ததோ என்று திட்டமாய்ச் சொல்ல ஏதுவில்லை. அவர்கள் பிடித்த மீனைக் கொண்டுவந்து இங்கே ஆயத்தமாயிருந்த மீன்களோடு சாப்பிடச்சொன்னார். சகலத்திலும் முந்திக்கொள்ள மனமுள்ள பேதுரு படவோடு கட்டப்பட்டிருந்த வலையை இழுத்தான். அதில் இருந்த மீன் தொகையும் கண்டிருக்கிறது. நூற்றைம்பத்துமூன்று பெரிய மீன்கள். அத்தனை பெரிய மீன்களிருந்தும் பாரத்தினாலாவது, மீன்கள் வலையைவிட்டு தப்ப வேண்டுமென்று செய்த பிரயத்தனங்களினாலாவது வலை கிழியவில்லை. முன்னொருசமயத்தில் இப்படிப்பட்ட அற்புதம் நடந்தபொழுது வலை கிழிந்துபோனதாக வாசிக்கிறோம். (லூக். 5. 6.)

இவ்வளவு விரிவாயும் தெளிவாயும் சொல்லப்பட்டிருக்கிற இந்தச் சங்கதியில் உள்ளான வேறோர் கருத்துமில்லையென்று நாம் சொல்லக்கூடாது. முன் நாம் அடிக்கடி பார்த்தபடி இந்தச் சமயத்திலும் கர்த்தர் செய்கையின்மூலமாய் நம்மோடு பேசுகிறார். அகுஸ்தீன் இந்த உட்கருத்தைச் சரியானபடி கண்டுபிடித்திருக்கிறதாக எனக்குத் தோன்றுகிறது. அவர் சொல்லுகிறதெல்லாவற்றையும் நாம் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் அதிலுள்ள விசேஷித்த குறிப்புகளை நாம் சரியானதென்று ஏற்றுக்கொள்ளலாம். இந்த அற்புதத்தையும் உயிர்த்தெழுதலுக்குமுன் நடந்த இதைப்போலொத்த அற்புதத்தையும் நாம் ஒத்துப்பார்த்து, அதில் உலகத்தார் சபையில் வந்து சேருகிற வகையும், இதில் ஆத்துமாக்கள் கடைசியில் இரக்ஷிக்கப்படுகிற வகையும் காட்டப்பட்டிருக்கிறது என்கிறார். அந்தச் சமயத்தில் இரக்ஷகர் வலையை வலதுபக்கத்தில் போடுங்களென்று

சொல்லவில்லை. வலதுபக்கமென்று சொல்லியிருப்பாராகுல் நல்லவர்களைமாத்திரம் குறிக்கும்; இடதுபக்கம் கெட்டவர்களைக் குறிக்கும். சபையின் தற்கால நிலைமையோ, நல்லவர்களும் பொல்லாதவர்களும் ஒன்ருய்க் கலந்திருக்கிற நிலைமை. இது வலையில் மீனிருந்ததுபோல காட்டப்பட்டிருக்கிறது. இச்சமயத்தில் வலதுபுறமாக வலையைப் போடுங்கள் என்ருர். அதாவது, ஒருவரும் கெட்டுப்போகாமல் யாவரும் இரக்ஷிக்கப் படுவார்கள், கலப்பில்லை என்கிறதைக் காட்டிஞர். முந்தின சமயத்தில் மீன்கள் அதிகமாயிருந்தபடியால் வலைகள் கிழிந்து அநேக மீன்கள் மறுபடியும் தண்ணீருக்குள் போய்விட்டது. சபையில் உண்டாயிருக்கிற பேதங்களையும் பிரிவினையையும் இது குறிக்கும். இவைகளால் அநேகர் வலைகளை விட்டோடிப் போகும் மீன்களைப்போல சபையைவிட்டு மறுபடியும் உலகத்தைச் சேர்ந்துகொள்ளுகிருர்கள். இந்தச் சமயத்திலோ எத்தனையோ மீன்களிருந்தும் வலை கிழியவில்லை. அந்தச் சமயத்தில் கடலின்மேலிருந்த கப்பலுக்கு மீனைக் கொண்டுவந்தார்கள். அதுபோல சபையிலே சேருகிற ஆத்துமாக்கள் உலகத்திலுண்டாகிற பல துன்பங்களுக்கு ஏதுவாயிருக்கிருர்கள். இந்தச் சமயத்திலோ வலைகளைக் கரைக்கிழுத்தார்கள். இது ஆத்துமாக்கள் நித்தியமாய் யாதொரு சேதமின்றி காக்கப்படுகிற வகையைக் குறிக்கும். முந்தின சமயத்தில் படகு அமிழ்ந்துபோகத் தக்கதாயிருந்தது. சபையாகிய கப்பலும் துஷ்ட மனிதராகிய பேர்கிறிஸ்தவர்களால் சேதமடைய ஏதுவாயிருக்கிறதை இதில் பார்க்கிறேம். அந்தச் சமயத்தில் அகப்பட்டது இத்தனை என்று காணவில்லை; திரளான மீன்கள் அகப்பட்டது என்று மாத்திரம் சொல்லியிருக்கிறது. இதிலோ தொகை இத்தனையென்று சொல்லியிருக்கிறது. அளவும் நிறையும் தேவ இலக்ஷணத்தை நன்ருய்க் காட்டும் (யோபு 28. 25; 35. 5. ஏசா. 40. 12.). தெரிந்துகொள்ளப்பட்டவர்கள்மாத்திரம் இரக்ஷிக்கப்படுகிறதை இது குறிக்கும். இந்தத் தொகை ரக்ஷிக்கப்படுகிறவர்களுடைய தொகையைக் குறிக்குமென்று நான் சொல்லுகிறதில்லை. அவைகள் இத்தனை பேரென்று ஒரு தொகையுண்

டென்பதைமாத்திரம் இது காட்டுகிறதாக பாவிக்கலாம். அந்தச் சமயத்தில் சிறிதும் பெரிதுமான மீன்கள் இருந்திருக்கலாம். அப்படியில்லையென்று சொல்ல யாதொரு முகாந்தரமுமில்லை. இங்கே அகப்பட்டதெல்லாம் பெரிய மீன்கள். ஏனெனில், சபையில் சேர்ந்து ரக்ஷிக்கப்படுகிறவர்கள் தேவதூதரைப்போல் இருப்பார்கள்.

இதற்குப்பின் சொல்லியிருக்கிறது அத்தனைக்குத் தெளிவாயில்லை. கரையின்மேல் அப்பமும் மீனும் ஆயத்தமாய் வைக்கப்பட்டிருந்ததாகவும், அதைப் புசிக்கும்படி இரக்ஷகர் அவர்களை அழைத்ததாகவும் சொல்லியிருக்கிறதே. இதின் பொருள் என்ன? உயிர்த்தெழுந்த அவருடைய தேகத்திற்கு இந்தப் போஜனம் வேண்டியதில்லை. அவர்களுடைய வீடு சமீபமாயிருந்தபடியால் அவர்களுக்கும் இது அவசியமில்லை. இதிலே ஒரு ஆழ்ந்த கருத்துண்டு. திரளான மீன் அகப்பட்டதில் அவர்கள் பிரயாசம் வீணாகவில்லையென்று காட்டினதுபோல, தரையில் இரக்ஷகர் ஆயத்தமாய் வைத்த இந்த போஜனம், அவர்களுடைய பிரயாசமெல்லாம் முடிந்தபிறகு தேவனுடைய ராஜ்யத்தில் ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களோடு அவர்கள் பந்தியிருந்து சாப்பிடப்போகிற விருந்தைக் குறிக்கும். அவர்கள் பிடித்த மீன்களையும் கொண்டுவர இரக்ஷகர் சொன்னது, அந்தக் கடைசிநாளிலே இவர்கள்மூலமாய் ரக்ஷிக்கப்பட்ட ஆத்துமாக்கள் அவர்களுக்குக் கிரீடமாயும் மகிழ்ச்சியாயும் இருப்பார்களென்பதைக் காட்டுகிறது. இரக்ஷகரோடு அச்சமயத்தில் சாப்பிட்டவர்கள் ஏழு பேர். 'ஏழு' என்பது நிறைவைக் காட்டும் இலக்கமென்பதை நாம் மறக்கக்கூடாது. அவரைக் கர்த்தரென்று சீஷர் அறிந்திருந்தபடியினாலே அவர்களில் ஒருவனும் நீர் யாரென்று கேட்கத் துணியவில்லை என்று சுவிசேஷகன் சொல்லியிருப்பது நன்றாய் விளங்கத்தக்கதல்ல. அவர்கள் அறிந்திருந்தார்களானால் கேட்கவேண்டிய அவசியமில்லையே. ஆயினும் சங்கதியைப் பார்க்கும்போது அப்படிப்பட்ட கேள்வி கேட்க அவர்கள் விரும்பினார்களென்றும், பயத்தினாலேதான் அப்படி அவர்கள் கேளாமற்போனார்க

ளென்றும் விளங்குகிறது. நீர் யாரென்று கேட்கத்தக்கதாக அவ்வளவு அவிசுவாசமும் சந்தேகமும் அவர்களிடத்தில் இல்லையென்பதுதான் சரியான காரணம். தங்கள் எஜமானைப் பார்த்தபோது அவர் வழக்கம்போல காணப்படாவிட்டாலும், அவர் தங்கள் எஜமான்தானென்று ஓர்விதமான அச்சமும் பயமும் அவர்கள் உள்ளத்தில் சாக்ஷிசொன்னபடியால், அவர்தான் என்று திட்டமாய் அறியும்படிக்கு தெளிவான அத்தாக்ஷி வேணுமென்று அவர்கள் தேடவில்லை. அவர் தமது சொந்த வாயினால் சொல்லியிருப்பாரானால் அவர்களுக்கு அதிக திருப்திகரமாயிருக்கும்.

பிந்தின சம்பாஷணை அற்புதத்தோடு சேர்ந்திருக்கிறபடியால் அதையும் வியாக்கியானப்படுத்துவது அவசியம். அற்புதத்திலிருந்து உண்டான வேறொரு சங்கதிக்காகவே முக்கியமாக யோவான் அற்புதத்தை எழுதுகிறது வழக்கம். அவர்கள் இனிச் செய்யப்போகிற அலுவலின் தன்மையையும், அதில் அவர்கள் அடையப்போகிற விருத்தியையும், அவர்களுக்குக் கிடைக்கும் பலனையும் அவர்களுக்குக் காட்டினபிறகு இந்த அலுவலை நிறைவேற்றும் இந்தப் பலனைப் பெறவும் அவர்கள் செய்யவேண்டியதின்னதென்று போதிக்கிறார். கிறிஸ்துவை நேசிக்கிற நேசம், தேவனுக்குத் தங்களை முற்றும் ஒப்புக்கொடுக்கிற விசுவாசம், இவைகள் எத்தனை அவசியமென்று காண்பிக்கிறார். ஆதலால் இவ்வதிகாரத்தின் இரண்டு பங்குகளும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருக்கிறதென்று நன்றாய்ச் சொல்லலாம். போஜனம் முடிந்தபிறகு இயேசு சீமோன் பேதுருவை நோக்கி: யோனாவின் குமாரனாகிய சீமோனே, இவர்களிலும் அதிகமாய் நீ என்னிடத்தில் அன்பாயிருக்கிறாயா? என்றார். யோனாவின் குமாரனாகிய சீமோனே என்று அழைத்தது அவனுடைய மனதில் நன்றாய்ப் பட்டிருக்கவேண்டும். "உன்னைப் பேதுரு என்று அழைத்தேனே, அந்தப் பெயரெங்கே? (மத். 14. 18. யோவா. 1. 42.) அந்தக் கன்மலையும் அந்தக் கன்மலையைப்போலொத்த பெலனும் எங்கே? வேண்டிய சமயத்தில் அது காணாமற்போச்சுதே (மத். 26.

69—75.). ஆதலால் அந்தப் பெயரைக்கொண்டு நான் உன்னை அழைக்கமாட்டேன். மாம்சமும் இரத்தமுமுள்ள மனுஷனாக எண்ணி நான் உன்னுடனே பேசுகிறேன். அதற்கதிகமானது உன்னைவிட்டுப் போய்விட்டது” என்பதுபோல சொல்லுகிறார். காலிபுகளில் ஒருவன் தன் உத்தியோகஸ்தருக்கு அவர்களுடைய குணங்களுக்குத் தக்கதான பெயர்களைக் கொடுத்து, அவர்கள்மேல் பிரியமில்லாதபோது அதைச் சொல்லாமல் அவர்களுடைய சரியான பெயரைக்கொண்டு கூப்பிடுவானாம். இது அவர்களுக்கு வெகு துக்கத்தைக் கொடுக்கும். மறுபடியும் அந்தக் கனமான பெயரைக்கொண்டு அழைத்தால், மறுபடியும் அவன் தங்கள்பேரில் தயவாயிருக்கிறானென்று அறிந்துகொள்வார்களாம். ‘யோனாவின் குமாரனாகிய சீமோனே’ என்று அழைத்ததின் பொருளை இது விளக்குவிக்கும்.

‘உமது நிமித்தம் எல்லாரும் இடறலடைந்தாலும், நான் ஒருக்காலும் இடறலடையேன்’ என்று பேதுரு சொன்னதை (மத். 26. 33.) இரட்சகர் மனதில் வைத்துக்கொண்டுதான் இவர்களிலும் நீ அதிகமாய் என்னிடத்தில் அன்பாயிருக்கிறாயா என்று கேட்டார். இருதயத்தை ஆராய்கிறவருக்குச் சகலமும் தெரியுமென்று சொல்லி தான் அவரை நேசிக்கிறதாக மறுமொழி சொன்னபோதிலும், மற்றச் சீஷர்களுடைய சிநேகத்தைக்குறித்து அவர் ஒன்றும் சொல்லவில்லை. இவர்களிலும் என்கிற வார்த்தைக்குப் பதிலாக இவைகளிலும் என்று சிலர் திருத்தி, வலைகள் படகுமுதலானவைகளைவிட என்னைச் சிநேகிக்கிறாயா என்று கேட்டதாக அர்த்தப்படுத்துகிறார்கள். அது சரியான கருத்தென்று நான் நினைக்கிறதில்லை. என் ஆட்டுக்குட்டிகளை மேய்ப்பாயாக, என் ஆடுகளை மேய்ப்பாயாக என்று இரக்ஷகர் சொன்னபோது உன் செய்கையினால் உன் அன்பைக் காண்பி என்றல்ல, “உன் அப்போஸ்தல உத்தியோகத்தை உனக்கு மறுபடியும் தருகிறேன். என் மந்தையில் ஒரு பிரதான மேய்ப்பனாக இருக்கத்தக்க கிருபையை நீ பெற்றுக்கொள்” என்கிற கருத்தாய்ப் பேசினார். இரக்ஷகர் அன்பாயிருக்கிறாயா என்று கேட்கிறார். பேதுரு அதற்கு அன்பா

யிருக்கிறேன் என்றல்ல, நேசிக்கிறேன் என்று உத்தரவுசொல்லு கிறார். அன்பாயிருக்கிறேன் என்கிற வார்த்தையைவிட நேசம் என்னும் வார்த்தை அதிகப் பாசத்தைக் காட்டும். இரக்ஷகர் மூன்றாம்விசை அன்பாயிருக்கிறாயா என்று கேளாமல், பேதுரு சொன்ன வார்த்தையை ஒப்புக்கொண்டவர்போல என்னை நேசிக்கிறாயா என்று கேட்கிறார். புது திருத்தலில் இந்த வித்தியாசத்தைக் காட்டாமல் விட்டுவிட்டார்கள். [மூலபாஷையைப் பார்.] இரக்ஷகர் சொன்ன மறுமொழி முற்றிலும் அவர் மன்னித்துப்போட்டதாகக் காட்டுகிறது. மன்னிப்புப் பெறாதவன் தேவனுடைய மன்னிப்பை மற்றவர்களுக்குக் கூறுவதெப்படி? அவன் மூன்றுதரம் மறுதலித்த குற்றத்தை நீக்கும்படிக்கு மூன்றுதரம் அந்தக் கேள்வியைக் கேட்டார். மூன்றாம் விசை அவர் தன் வார்த்தையைக்குறித்துச் சந்தேகமடைகிறார் என்று பேதுரு அறிந்து, முன்னைவிட தான் அதிக கவலையும் துக்கமும் கொண்டவனாகி, சகலத்தையும் ஆராய்ந்தறிகிற அவருக்கு 'தான் நேசிக்கிறது உண்மையோ அல்லவோ என்கிறது தெரியும் என்று காட்ட, நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர், நான் உம்மை நேசிக்கிறேன் என்கிறதை நீர் அறிவீர்' என்றான்.

இரக்ஷகர் ஆடுகளை போஷிப்பாயாக என்றும், ஆட்டுக்குட்டிகளைப் போஷிப்பாயாக என்றும் காரணமில்லாமல் பேசினார் என்று நாம் சொல்லக்கூடாது. ஆட்டுக்குட்டிகள், தேறாத குழந்தைகளைப்போலொத்த கிறிஸ்தவர்களைக் குறிக்கும்; ஆடுகள் புருஷர்களைப்போலொத்த தேர்ந்த கிறிஸ்தவர்களைக் குறிக்கும். ரோமான்மார்க்கத்தார் ஆட்டுக்குட்டிகள் என்பது சபையாரையும், ஆடுகள் குருமாரையும் குறிக்கிறதென்றும், இரக்ஷகர் இந்த வார்த்தைகள்மூலமாய் பேதுருவுக்கும் அவருக்குப் பிறகுவந்த ரோமாபுரிக் கண்காணிமார்களாகிய பாப்புகளுக்கும், சபைகளையும் குருக்கள் எல்லாரையும் நடத்தத்தக்க அதிகாரம் கொடுத்திருக்கிறாரென்றும் சொல்லுகிறார்கள். அப்படியானால் என்னுடைய ஆடுகளையும், என்னுடைய ஆட்டு மேய்ப்பனையும் போஷிப்பாயாக என்றிருக்கவேண்டும். இரக்ஷ

கருடைய கருத்து இதல்லவென்று திட்டமாய்ச் சொல்ல லாம்.

ஆடுகளை மேய்க்கிறதுமாத்திரம் போதாது; இப்படிப் பிரயா சப்பட்டபிறகு வருத்தமான மரணமும் அடையவேண்டும். இப்படிப்பட்ட நெருக்கமும் இடுக்கமுமான வாசலின் வழி யாய்த்தான் பேதுருவும் நித்தியஜீவனில் பிரவேசிக்கவேண்டும். தம்முடைய நிமித்தம் அவன் எவ்வளவு பெரிய காரியங்களைச் சகிக்கவேண்டுமென்று இங்கே சொல்லுகிறார். தமது விசே ஷித்த ஊழியக்காரரை இப்படித்தான் நடத்துகிறார். எசேக்கி யேல் இதற்கு திருஷ்டாந்தம் (எசே. 3. 25.); பவுல் அப்போஸ்த லனும் இதற்கு திருஷ்டாந்தம் (அப். 21. 11.). பேதுருவோடும் இப்படியே பேசுகிறார். 'நீ இளவயதுள்ளவனாயிருந்தபொழுது உன்னை நீயே அரைகட்டிக்கொண்டு உனக்கு இஷ்டமான இடங்களிலே நடந்துதிரிந்தாய்; நீ முதிர்வயதுள்ளவனாகும் போது உன் கைகளை நீட்டுவாய், வேறொருவன் உன் அரை யைக் கட்டி, உனக்கு இஷ்டமில்லாத இடத்திற்கு உன்னைக் கொண்டுபோவான்' என்றார். பேதுரு சிலுவையில் அறையப் படப்போகிறதை இரக்ஷகர் இங்கே தீர்க்கதரிசனமாகச் சொல்லு கிறார். யோவான் இப்படித் தெளிவாய்ச் சொல்லியிருக்கிறார். 'இன்னவிதமான மரணத்தினாலே பேதுரு தேவனை மகிமைப் படுத்தப்போகிறான் என்பதைக் குறிக்கும்படியாக இப்படிச் சொன்னார்.' பேதுரு இப்படியே இரத்தச்சாக்ஷியாய் மரித்தா ரென்று சபைச் சரித்திரத்தில் சொல்லியிருக்கிறதைக்குறித்து நாம் சந்தேகிக்கவேண்டியதில்லை. தீர்க்கதரிசனங்கள் கருகலா யிருக்கிறதுபோல, இரக்ஷகர் சொன்ன இதுவும் இருக்கிறது. 'கைகளை நீட்டுவாய்' என்பது சிலுவையில் குறுக்கேயிருக்கிற மரத்தில் கையைவைத்து ஆணி கடாவுதலைக் குறிக்கும். 'வே றொருவன் உன் அரையைக் கட்டுவான் என்பது, சிலுவையில் கட்டப்படுவதைக் குறிக்கும். ஆணிகளால் அறைகிறதுமாத்தி ரமல்ல, கயிற்றைக்கொண்டு இடுப்பை மரத்தோடு சேர்த்துக் கட்டுவதும் வழக்கமாம். 'உனக்கு இஷ்டமில்லாத இடத்திற்கு உன்னைக் கொண்டுபோவான்' என்று சொல்வதினால் இப்படிப்

பட்ட மரணத்தினுலே தேவனை மகிமைப்படுத்த பேதுருவுக்கு மனமிராதென்றல்ல, துன்பத்தையும் வருத்தத்தையும் சகிக்க மனிதன் இயல்பாகவே பின்வாங்குவதைக் காட்டுகிறது. இரக்ஷகனைப்போலவே பேதுருவும் இந்த விஷயத்தில் இயல்புக்கு மிஞ்சி தேவசித்தத்தின்படி சகலத்தையும் செய்யவும், சகிக்கவும் சம்மதித்தார் (மத். 26. 39.). இது மிகவும் வருத்தமான மரணம். மற்றவர்கள் இவனை இதற்கு உட்படுத்தினுர்கள். மாம்சமும் இரத்தமும் இஷ்டமில்லாத காரியங்களில் பின்வாங்கிப்போகிறது இயல்பே. இந்தக் கருத்தாய்த்தான் அவருக்கு இஷ்டமில்லாத இடமென்று சொல்லியிருக்கிறது. வேறொரு வகையில் இது அவருக்கு இஷ்டமுள்ளதுதான். தேவசந்நிதிக்கு அவனைச் சீக்கிரம் கொண்டுபோகத் தக்கது. தன் ஜீவநாள் முழுவதும் இதற்கு ஆயத்தப்பட்டவனுய் இருந்தார். இவ்விதமாய் அது அவருக்கு மிகவும் இஷ்டமானது. வேறொரு அப்போஸ்தலன் இரத்தச்சாக்ஷியாய் மரிக்கச் சற்றுநேரத்திற்குமுன்னே சொன்ன வார்த்தைகளை இவரும் நன்றுய்ச் சொல்லத்தக்கதே. (2 தீமோ. 4. 6—8.)

‘அரையைக் கட்டி’ என்கிறது தன் அலுவலை ஜாக்கிரதையாயும் சுறுசுறுப்பாயும் பார்க்க ஆயத்தப்படுதலைக் குறிக்கும். அதிகாரத்தின் முந்தினபங்கில் இந்தக் கருத்தைக் காணலாம் (யாத். 12. 11. லூக். 12. 35. 1 பேது. 1. 13. எபே. 6. 14.). இந்தக் கருத்தின்படி சொல்லவேண்டுமானுல் “நீ இளமையாயிருந்தபோது உனக்குப் பிரியமான இடங்களுக்குப் போய் உனக்குப் பிரியமான வேலையில் நீயாய்த் திரிந்துகொண்டு உனக்கிஷ்டமானபடி வேலைசெய்து எனக்காக உழைத்தாய். நீ முதிர்வயதுள்ளவனுகும்போது சற்றே வருத்தமான மேலான வேறொரு பாடத்தைப் படித்துக்கொள்வாய்; நீ எனக்காக துன்பப்படுவாய். உனக்கு இஷ்டமான அலுவலை அல்ல, மற்றவர்கள் உனக்கு இடும் அலுவலைச்செய்வாய்; உழைக்கிற அலுவலல்ல, சகிக்கிற அலுவல் உனக்குக் கிடைக்கும் என்று சொன்னதாக அர்த்தப்படுத்தலாம். ஒவ்வொரு கிறிஸ்தவனுடைய ஜீவியசரித்திரமும் இப்படித்தான் இருக்கிறது. பேதுருவுக்குமாத்திரமல்ல, தமது

ஊழியக்காரரில் அநேகருக்கு தேவன் இப்படியே சொல்லு கிறார். கிறிஸ்துவுக்காக வேலைசெய்யத் தொடங்கி அவருக்காகப் பாடுபடுகிறதில் தங்கள் ஜீவநாட்களை முடிக்கிறார்கள்; முந்திப் படியாத பாடங்களை பிந்திப் படிக்கிறார்கள். முதலாவது காணப் படுகிற கிருபைகள் பாடுபடுகிறதினால் அப்பியாசப்பட்டு பெலன டையும். இல்லாவிட்டால் பெலவீனப்பட்டுத்தான் இருக்கும். யோவான்ஸ்நானகனைப் பாருங்கள். அவர் பிரசங்கித்தபோது எருசலேம், யூதேயா, இந்த இடங்களிலுள்ள ஜனமெல்லாம் அவரிடத்தில் ஓடிவந்தது. அவர் தமது கடைசிக்காலத்தையோ மக்கிரஸ் என்னும் சிறைச்சாலையில் மறக்கப்பட்ட கைதியாய்ப் பின்னிட்டார். கிறிசொஸ்தம் என்பவருடைய சரித்திரமும் இப் படித்தான். அவர் இளமையாயிருந்தபோது, ஆசியா ஐரோப்பா விலுள்ள பிரதான பட்டணத்தாரும் அந்தியோகியா, கொனஸ் தந்திநோபுரியிலுள்ளவர்களும் அவரை எவ்வளவோ மரியா தைசெய்து அவரிடத்தில் காத்திருந்தார்கள். தமக்கு இஷ்டமான இடத்திற்குத் தாராளமாய்ப் போனார். முதிர்வயதானபோது துன்பமும் வியாதியுமுடையவராய் தமது ஊரைவிட்டுத் துரத் துண்டு, தமக்குப் பிரியமில்லாத இடத்திற்கு கொண்டுபோகப் பட்டார். பேதுருவினுடைய கடைசிக்காலமும் இப்படித் தான் இருக்குமென்று இரக்ஷகர் சொல்லுகிறார். இவ்விதமாய்த் தான் பேதுருவினிடத்தில் இன்னுமிருந்த தற்சிநேகமும் சுய சித்தமும் முற்றிலும் எடுபட்டு, அவர் தம்மை முற்றிலும் வெறு மையாக்கி, தேவசித்தத்திற்கு கீழ்ப்படியவேண்டியிருந்தது.

இப்படி பேதுரு அடையவேண்டிய முடிவைக் காட்டின இரக்ஷகர் அதற்கு வழியின்னதென்றும் சொல்லுகிறார். 'இதைச் சொல்லியபின்பு அவனை நோக்கி: என் பின்னே வா என்றார்.' என்னைப்போல் இரு என்றுமாத்திரம் சொன்னாரென்று நினைக் கக்கூடாது. அப்படியானால் கெனேசரேத்துக் கடற்கரை ஓரத்தில் நடந்த இந்தச் சங்கதி நமக்கு இன்னும் நன்றாய்ப் பிடிபடவில்லையென்று காட்டுவோம். இந்தச் சங்கதியில் வார்த் தைமாத்திரமல்ல, செய்கையும் கலந்திருக்கிறது. இவர் இப்ப டிச்சொல்லிக்கொண்டே கற்பாறையில் கரடுமுரடமான அந்தக்

கடற்கரையிலே 'நீயும் என்னைப்போல் நட' என்று சொன்னதுபோலிருந்தது. இவ்விதமாய் பேதுரு பிற்காலத்தில் தன் பரம எஜமானைப்போல வருத்தமான பாதையில் நடந்து தம்மை மகிமைப்படுத்தவேண்டுமென்று காட்டினார். இவ்வளவையும் முக்கியமாய் வார்த்தையினாலல்ல, செய்கையினால் காட்டினாரென்று அர்த்தப்படுத்தினால்தான் இது நமக்கு நன்றாய் விளங்கும். பின்வருவதைப் பாருங்கள். பேதுரு திரும்பிப்பார்த்து அதாவது, தனக்குப் பின்னாகப் பார்த்து, இயேசுவுக்கு அன்பாயிருந்த சீஷனைக் கண்டார். "இயேசுவுக்கு அன்பாயிருந்தவன் என்றும், இராப்போஜனம்பண்ணுகையில் அவருடைய மார்பில் சாய்ந்தவன் என்றும்" இருக்கிற வார்த்தைகள் இங்கே சும்மா சொல்லியிருக்கவில்லை. கூப்பிடாமலிருக்க, இவனுக்குப் பின்னே தைரியம் வந்தவிதமென்னவென்று காட்டும்படிக்காகவே இப்படிச் சொல்லியிருக்கிறது. அவன் பின்னே வருகிறதைக் கண்டபோது, "பேதுரு ஆண்டவரே, இவன் காரியமென்ன என்று விசாரித்தான்." இவனுக்கு வைத்த பங்கென்ன? இவன் முடிவு என்னவாயிருக்கும்? இவனும் இந்தக் கரடுமுரடான வழியிலேதான் நடக்கவேண்டியிருக்குமோ என்பதுபோல விசாரித்தார். என்ன நோக்கத்தோடு இந்தக் கேள்வியைக் கேட்டார். இப்படிக் கேட்கவேண்டிய முகாந்தரமின்னதென்று சொல்ல ஏதுவில்லை. சும்மா அறிந்துகொள்ளவேண்டுமென்கிற நோக்கத்தோடுமாத்திரம் கேட்டாரென்று சொல்லக்கூடாது. தன் சிநேகிதனைக்குறித்து ஒன்றும் சொல்லவில்லையே, அவனும் இப்படித் தன்னைப்போல இரக்ஷகரைப் பின்சென்று இந்தக் கனத்தைப் பெறவேண்டுமே என்கிற கவலையோடு கேட்டிருப்பாரென்று அகுஸ்தீன் சொல்லுகிறார். மற்றவர்களோ இப்படி எண்ணுகிறதில்லை. மார்த்தாள் இரக்ஷகரண்டையில் வந்து மரியாளைக்குறித்து முறையிட்டு "ஆண்டவரே, நான் தனியே வேலைசெய்யும்படி என் சகோதரி என்னைவிட்டு வந்திருக்கிறதைக்குறித்து உமக்குக் கவையில்லையா" என்று கேட்டதுபோல பேதுருவும் கேட்டதாகச் சிலர் நினைக்கிறார்கள் (லூக். 10. 40.). தான் அவருக்காக வேலைசெய்துகொண்டிருக்

கும்போது மரியாள் இரக்ஷகருடைய பாதத்தண்டையிலே உட்கார்ந்திருந்தது அவளுக்குப் பிரியமில்லை. 'என் பின்னே வா' என்பதின் கருத்தை நன்ருய் அறிந்துகொண்ட பேதுரு, யோவானுக்கு அவ்வளவு வருத்தமான வேலை கிடையாததினிமித்தம் அந்த வேளையில் பொருமைகொண்டு இப்படிக் கேட்டாலும் கேட்டிருக்கலாம். பொருமையினுல் கேட்டாலும் அன்பினுலே கேட்டாலும், அடிக்கடி நமக்கு அன்பானவர்களுக்காக நாம் கவலைப்பட்டு இப்படிப்பட்ட வீணுன பயங்களுக்கு இடங்கொடுக்கிறதுண்டு. எந்த முகாந்தரத்தினுலே கேட்டபோதிலும் பேதுருவினுடைய நோக்கம் அத்தனை நல்லதல்லவென்று இரக்ஷகர் கொடுத்த மாறுத்தரம் காட்டும். கர்த்தருக்குமாத்திரந் தெரிந்திருக்கும் நேரங்களையும் காலங்களையுங்குறித்துப் பேதுரு விசாரிக்கவேண்டிய அவசியமில்லை. தமது ஊழியக்காரருடைய பங்கின்னதென்று ஏற்படுத்துகிறவர் அவர்தான். அதைக்குறித்து அவர் மற்றவர்களுக்குக் கணக்குக் கொடுக்கவேண்டியவரல்ல. 'நான் வருமளவும் இவனிருக்க எனக்குச் சித்தமானுல் உனக்கென்ன? நீ என்னைப் பின்பற்றி வா என்ருர்.' இதினுல் அவர் அவன் கேளாதபடி தடுத்தாரென்றுமாத்திரம் சொல்லக்கூடாது. அவனுடைய தகாத கேள்விக்கு உத்தரவுகொடாதபோதிலும், அந்த உத்தரவிலேயே ஏதோ ஒரு காரியத்தை வெளிப்படுத்துகிருர். இல்லையென்று மறுக்கிறதிலேயே உண்டென்று சொல்லுகிறதுபோல் இருக்கிறது. இந்த வார்த்தைகளின் கருத்தைப் பார்த்தால் இது நன்ருய் விளங்கும். அந்தச் சீஷன் மரிப்பதில்லையென்று தப்பாய் அருத்தம்பண்ணினவர்கள் 'எனக்குச் சித்தமானுல்' என்கிற ஈரடியான சொல்லை, இனி நடக்கப்போகிற காரியமாக அர்த்தம் பண்ணினதால் அந்தத் தப்பிதத்திற்குள் அகப்பட்டார்களென்று சொல்லக்கூடாது. அது ஈரடியாகச் சொல்லப்படவுமில்லை. இரக்ஷகர் அவனைப் பார்த்து, அவன் மரியாமல் நான் நியாயந்தீர்க்கவரும்வரையில் அவன் உயிரோடிருக்கவேண்டுமென்பது என் சித்தமானுல் என்று சொல்லவில்லை. தாம் வருமளவும் இவனிருப்பது தமது சித்தந்தானென்று சொல்லுகிருர். இதை

விகற்பமாய் அர்த்தப்படுத்தினவர்களுடைய குற்றம் இதிலல்ல. 'நான் வருமளவும்' என்கிற வார்த்தையை உலகத்தின் முடிவென்று அர்த்தம்பண்ணினபடியினாலேதான் இப்படிப்பட்ட தப்பிதத்திற்குள்ளானார்கள். இந்த வார்த்தையின் பொருளைக் கொண்டே இந்த வாக்கியத்தின் பொருளை அறியலாம். இந்த வார்த்தையின் பொருளைக்கொண்டே ஆதியில் சகோதரருக்குள்ளே உண்டான எண்ணம் தப்பிதமென்று தள்ளலாம். 'இவனிருக்கிறது' என்கிற வார்த்தையை உயிரோடு உலகத்தில் இருக்கிறதாகவல்ல, பேதுரு அப்போஸ்தலன் சுவிசேஷத்தை உலகமெங்கும் பிரசங்கம்பண்ணிக்கொண்டிருந்தபோது, யோவான் எருசலேம் அழியுமட்டும் கலிலேயாவிலாவது எருசலேமிலாவது தங்குவானென்று சொன்னதாக சிலர் அர்த்தம்பண்ணுகிறது எனக்குச் சுத்தமாய்ப் பிடிக்கவில்லை. இவை யாவையும் தள்ளிப்போட்டு 'இருக்கிறது' என்னும் வார்த்தையை உலகத்திலிருக்கிறதாக வைத்துக்கொண்டால் இந்த வாக்கியத்தை இருவகையாய் அர்த்தப்படுத்தலாம். 'நான் வருமளவும்' அதாவது, நான் அவனை அழைத்துக்கொள்ள சமாதானமான மரணத்தின்மூலமாய் என்னிடத்தில் சேர்த்துக்கொள்ள, நான்வரும்பொழுதென்று அகுஸ்தீன் முதலானவர்கள் சொல்லுகிறதுபோல சொன்னால் பேதுருவுக்கும் யோவானுக்கும் வித்தியாசமில்லையே. பேதுரு கொரேமாய் வாதையடைந்து மரித்தபோதிலும்அப்பொழுது இரக்ஷகர் அவரிடத்தில் அவரைச் சேர்த்துக்கொள்ள வந்ததாகத்தானே சொல்லவேண்டும். எந்தப் பரிசுத்தவானும் மரிக்கும்போது அவன் மரணம் எப்படிப்பட்டதாயிருந்தாலும் அது இரக்ஷகர் அவனிடத்தில் வருகிறதல்லவா? இதைத் தெளிவாய்ச் சொல்லவேண்டுமானால் இந்தக் கருத்தின்படி 'அவன் சாகிறவரையில் உயிரோடிருக்கவேண்டுமென்பது சித்தமானால்' என்று அர்த்தப்படுத்தவேண்டும். இதிலே விசேஷம் ஒன்றும் இல்லையே. சாதாரணமாய்த் தோன்றுகிற நமது இரக்ஷகருடைய வார்த்தைகளில் பிறகு விசேஷித்த கருத்து வெளிப்படுகிறதுண்டு. முந்தி ஆழ்ந்த கருத்துள்ளதாகத் தோன்றி, பிறகு பயனற்றதாய் முற்றிலும் காணப்படுகிறதை நாம் கண்டதில்லை.

ஆதலால் இந்த வாக்கியத்தை மத். 16. 28ஒடு ஒத்துப்பார்த்து அதைக்கொண்டு அர்த்தப்படுத்தினொலொழிய மற்றப்படி இதின் சரியான கருத்து விளங்கமாட்டாது. பன்னிரண்டு அப்போஸ்தலரில், மத்தேயுவில் கண்டிருக்கிறபடி மனிதகுமாரன் தமது ராஜ்யத்தில் வருவதைக் காணுமுன் மரணத்தை ருசிபாராமலிருந்தது யோவான் ஒருவர்தான். பூமி மாத்திரமல்ல வானமும் கூட அசைக்கப்பட்டபோது; யூதரின் பூர்வ முறைமை மிகுந்த சத்தத்தோடு ஒழிந்து அதற்குப் பதிலாக புதிய வானமும் புதிய பூமியுமுண்டாவதை இவர்தான் கண்டார். மனிதகுமாரன் கண்ணுக்குத் தோற்றுவிட்டாலும், அவர் மெய்யாகவே தமது சத்துருக்கள்மேல் ஆக்கினைசெலுத்தினதை இவர்தான் பார்த்தார். உலகத்தில் நடந்த அந்தப் பெரிய அழிவைக் கண்டு அதற்குப் பின்வந்த மகிமைபொருந்திய சுவிசேஷ ராஜ்யத்தின் காலத்தில் இருப்பான் என்கிறதாய்த்தான் இரக்ஷகர் இங்கே முன்னறிவித்தார். இதுமாத்திரமல்ல, யோவான் திருச்சபையில் நீடிய காலமிருந்து உழைத்தது அவர் அடைந்த சமாதான மரணத்தோடு ஒத்திருக்கிறது என்றும் காட்டுகிறார். திருச்சபையின் உள்ளான உயிரை ஸ்திரப்படுத்துவதில் யோவான் நெடுகிலும் அமைதலாய் உழைத்தார். அதைப் பிரபலப்படுத்துவதில் அவர் அதிகமாய் முயற்சிசெய்யவில்லை. இவருடைய பாதை கடினமாயிராமல் வேறுவகையாய் இவர் மோக்ஷத்திற்குப் பயிற்றுவிக்கப்பட்டார். இரத்தச்சாக்ஷிகளைப்போல் வருத்தமாய் பாடுபட்டு பூமியிலிருந்து அக்கினிரதத்தில் கொண்டு போகப்படாமல் நெடுநாள் உயிரோடிருந்து கீர்த்தியடைந்து சமாதானமாய் மரித்தார். அகுஸ்தீனும் மற்றவர்களும் சொன்ன கருத்து இந்தவிதமாய் நம்முடைய கருத்துக்கு இசைகிறது. யோவானாவது மற்றெந்தப் பரிசுத்தவானாவது, தங்களுக்கு வைக்கப்பட்ட துன்பத்திற்குத் தப்புவார்களென்று இரக்ஷகர் இங்கே சொல்லவில்லை. எல்லாரைப்போல் இவரும் மற்ற எவரும் இடுக்கமான வாசலின் வழியாய்த்தான் பிரவேசிக்க வேண்டும் (வெளி. 1. 9.). ஆயினும் இதிலே பலவித அளவுகளுண்டு. இதை நாம் தினந்தோறும் பார்க்கிறோம். சிலருக்

குத் துன்பம் கொஞ்சம் அற்பசொற்பமாய்த்தான் வரும். சிலரோ தங்கள் ஜீவநாள் முழுவதும் இடைவிடாமல் துன்பத்தையே சகித்துவருகிறார்கள்.

இரட்சகர் சொன்ன வார்த்தையினின்று அந்தச் சீஷன் மரிப்பதில்லையென்று ஒரு வீணான எண்ணம் உண்டாயிற்றென்றும், அதுவும் தப்பிதமென்றும் யோவான் சொல்வதைப் பார்க்கும்போது அவருடைய தாழ்மை வெளிப்படுகிறது. அவர் கடைசிவரையில் மரியாமலிருந்தால், மரணம் ஜீவனால் விழுங்கப்பட்டு மரணத்தை ருசிபாராமல் கர்த்தருடைய ராஜ்யத்தில் பிரவேசித்திருப்பார். அது தப்பிதமானதென்று காட்டுவதில் அவருடைய தாழ்மைமாத்திரமல்ல, தன் எஜமானைவிட்டு அவ்வளவு காலம் பிரிந்திருக்கலாமா என்கிற கவலையும் துக்கமும் அதில் இருக்கிறது. சந்தோஷங்களின் பரிபூரணம் நிறைந்த தேவசந்நிதியிலிருந்துதான் அவ்வளவு காலம் பிரிந்திருக்கிறதைக் குறித்து பயப்பட்டார். யூதரின்மேல் சாபம் வந்திருக்கிறபடியால் அவர்கள் தேவசந்நிதியைவிட்டுப் பிரிந்தலைகிறார்கள். யோவான் சாபத்தையல்ல, தேவாசீர்வாதத்தைப் பெற்றவர். தான் மரிப்பதில்லையென்பதை இயேசு சொல்லவில்லை என்று யோவான்தானே இவ்வளவு திட்டமாய்ச் சொல்லியிருந்தாலும், அந்த வீண் எண்ணம் சபையைவிட்டு முற்றிலும் அற்றுப்போகவில்லை. அது நெடுநாளிருந்தது. அவர் மரித்து அடக்கம்பண்ணப்பட்டதை மனிதர் கண்டும் அந்த எண்ணத்தை முற்றிலும் விட்டார்களில்லை. அது சரியான மரணமல்ல, தோற்றத்திற்குமாத்திரமே மரணம்; கல்லறையிலும் சுவாசித்துக்கொண்டுதான் இருக்கிறார் என்றார்கள். அவருடைய கல்லறை அவர் மூச்சுவிட்டதினாலே வெடிக்கிறதென்றும், அதின்மேலுள்ள மண் கிளம்புகிறதென்றும் மற்றவர்கள் சொன்னதைக் கேட்டு அகுஸ்தீனும் நம்பினாராம். அவர் இன்னம் உயிரோடிருக்கிறாரென்றல்ல, அப்படிப்பட்ட அற்புதமான செய்கைகள் எப்பொழுதும் நடந்துவரலாம் என்று எண்ணியிருக்கலாம். சின்ன ஆசியாவிலிருந்த பிரஸ்பிடர் யோவான் என்பவர் இவர்தானென்று சிலர் எண்ணினார்கள். பதினாறும்

நூற்றாண்டில் தன்னை யோவான் என்று சொல்லிக்கொண்ட ஒருவன் துரூஸ் பட்டணத்திலே தகனிக்கப்பட்டான். இங்கிலாந்திலும் பொது அரசாக்ஷியுண்டானபோது யோவான் தோன்றி சபையைச் சீர்திருத்துவாரென்று மருள்பிடித்த சிலர் எதிர்பார்த்திருந்தார்கள்.





C. K. S. Press, Vepery, Madras, 1884.

# TRENCH'S NOTES

ON THE

# MIRACLES OF OUR LORD.

ADAPTED TO THE USE OF TAMIL CHRISTIANS.

BY

THE REV. J. CORNELIUS, C. M. S.

Second Edition, 1,000—Total Copies, 2,000.

MADRAS:

THE RELIGIOUS TRACT AND BOOK SOCIETY.

C. K. S. PRESS, VEPERY.

1884.

